| பொருளடக்கம் | |
|---|---|
| முன்னுரை | 4 |
| பதினெண் சித்தர் பாடல்கள் | 6 |
| 1. சிவவாக்கியர் பாடல் | 8 |
| 2. பட்டினத்தார் பாடல் | 87 |
| 3. பாம்பாட்டிச் சித்தர்பாடல் | 161 |
| 4. இடைக்காட்டுச் சித்தர் பாடல் | 189 |
| 5. அகப்பேய்ச் சித்தர் பாடல் | 208 |
| 6. குதம்பைச்சித்தர் பாடல் | 227 |
| 7. கடுவெளிச் சித்தர் பாடல் | 255 |
| 8. அழுகணிச் சித்தர் பாடல் | 266 |
| 9. பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் | 295 |
| 10. கொங்கணச் சித்தர் பாடல் | 316 |
| 11. சட்டை முனி ஞானம் - 4 | 331 |
| 12. அகஸ்தியர் ஞானம் - 9 | 333 |
| 13. உரோம ரிஷி ஞானம் | 346 |
| 14. திருமூல நாயனார் ஞானம் | 350 |
| 15. வால்மீகர் சூத்திர ஞானம் | 354 |
| 16. திருவள்ளுவர் ஞானம் | 359 |
| 17. கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார் பாடல் | 362 |
| 18. காகபுசுண்டர் ஞானம் 80 | 410 |
| 19. பட்டினச் சித்தர் ஞானம் - 100 | 451 |
| 20. கஞ்சமலைச் சித்தர் பாடல் | 464 |
| 21. கல்லுளிச் சித்தர் பாடல் | 469 |
| 22. சங்கிலிச் சித்தர் பாடல் | 479 |
| 23. சத்திய நாதர் என்ற ஞானச் சித்தர் பாடல் | 484 |
| 24. திரிகோணச் சித்தர் பாடல் | 488 |

| | |
|---|---|
| 25. மச்சேந்திர நாதர் என்ற நொண்டிச் சித்தர் பாடல் | 495 |
| 26. ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர் பாடல் | 501 |
| 27. புண்ணாக்குச் சித்தர் பாடல் | 506 |
| 28. வகுளிநாதரென்னும் மௌனச்சித்தர் பாடல் | 510 |
| 29. கடேந்திர நாதர் என்ற விளையாட்டுச் சித்தர் பாடல் | 512 |
| 30. ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர் பாடல் | 521 |
| 31. சதோக நாதர் என்ற யோகச் சித்தர் பாடல் | 526 |
| 32. காரைச் சித்தர் பாடல்கள் | 530 |
| 33. தடங்கண் சித்தர் பாடல்கள் | 537 |
| 34. காயக்கப்பல் | 540 |

# முன்னுரை

சித்தர் பாடல்கள் பெரிய இலக்கிய சாகரம். இந்த சாகரத்தில் நமக்குக் கிடைத்திருப்பவை கையளவு தண்ணீரே. இந்தக் கையளவுத் தண்ணீரும் சிறுகச் சிறுகத் துளித் துளியாய் சேமித்தவையே. இதற்கே இத்துணை சிறப்பு
என்றால் முழுவதையும் சுவைக்கும் சந்தர்ப்பம் ஏற்படுமானால் எத்துணை
அகப்பெரு இன்பமாயிருக்கும், ஒரே மலைப்பாக இருக்கிறதல்லவா?

சித்தர் பாடல்கள் அனைத்தும் கரடுமுரடான சொற்களைக் கொண்டவை.
மறைபொருள் நிறைந்தவை. பாடல்கள் தங்கு தடையின்றிப் படிப்பதற்கே பெரும் சிரமமாயிருக்க இதில் அவர்கள் கூறும் கருத்துக்களை உணர்ந்து கொள்வது சாதாரணச் செயலா என்ன?

நண்பர் கோமதிநாயகம் சித்தர் பாடல்கள் முழுமையும் உரையுடன் வெளியிட வேண்டும் என்ற தணியாத விருப்பத்துடன் தகுந்த சான்றோர்களை
அணுகிக் கொண்டிருந்த வேளையில் தற்செயலாக என்னிடமும் இதுபற்றிக்
கூறினார்.

சித்தர் பாடல்களுக்கு உரை காண்பது என்பது அவ்வளவு எளிதான செயலா என்ன? அதுவும் சரியான பொருளுடன். அப்படி உண்மையிலேயே
உண்மையான பொருளை உணர்த்த வேண்டுமென்றால் அவரும் ஒரு சித்தராக வல்லவோ இருக்க வேண்டும். நான் என் இயலாமையைக் கூறினேன். சித்தர் பாடல்கள் எல்லாவற்றையும் உரையுடன் வெளியிடுவது
என்பது தற்போதுள்ள சூழ்நிலையில் இயலாத காரியம் என்றும், சில ஆய்வியல் அறிஞர்கள் இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளனர் என்றும் நான் தெரிவிக்கவே, ஒவ்வொரு சித்தர் பாடல்களுக்கும் ஓர் அறிமுக உரையேனும்
செய்து வெளியிட

வேண்டும். அதுவும் சித்தர் நூல்களில் பயிற்சியுடைய நீங்கள் செய்து தந்தால்

இன்னும் சிறப்பாயிருக்கும் என்று இந்தப் பெரும் பொறுப்பினை என்னிடம்
ஒப்படைத்து விட்டார்.

அவரது அன்புக்குக் கட்டுப்பட்ட நான் கிடைத்த சித்தர் பாடல்களைப் பல தொகுப்புகளாகப் பிரித்து அறிமுக உரை செய்யத் தொடங்கினேன். வேலையை ஆரம்பித்த பிறகுதான் அதன் சிரமங்கள் முழுமையாகத் தெரிய
ஆரம்பித்தது.

சித்தர் பாடல்களில் இலக்கிய மரபுகளை மீறிய நடைமுறைகளும், வட்டார வழக்கு சொலவங்களும் நிறையக் கலந்துள்ளன. இதுவேயன்றிப் பாடல்கள் முழுக்க மறை பொருள் செய்திகளே காணப்படுகின்றன. இதனால்
தான் சித்தர் பாடல்களுக்கு உரை செய்ய யாரும் முன்வருவதில்லை. ஆயினும், அறிஞர்களின் பெரும் முயற்சியால் திருமந்திரம், சிவவாக்கியர்
பாடல் முதலான ஒருசில பாடல் தொகுப்புகள் உரையுடன் வெளிவந்துள்ளன.
மீதியிருக்கும் பாடல்களுக்கு முழுவதும் உரை செய்ய இயலாவிடினும் ஓர்
அறிமுக உரையேனும் என்னால் வழங்க முடிந்ததே என்ற ஆத்ம திருப்தி
யுடன் இந்த பதினெண் சித்தர் பாடல்களை உங்கள் முன் படைக்கிறேன்.

இந்நூலைத் தொடர்ந்து ஏனைய சித்தர் பாடல் தொகுப்புகள் அறிமுக உரையுடன் உங்கள் முன் அறிமுகமாக உள்ளன. இந்தப் பெரிய இலக்கியப்
பணியில் எனக்கு வாய்ப்பளித்த நண்பருக்கு அநேக நன்றிகள் உரித்தாகும்.

இந்தச் சித்தர் பாடல் தொகுப்புகளை இலக்கிய உலகு வரவேற்குமாக.

# பதினெண் சித்தர் பாடல்கள்

சித்தர்களின் எண்ணிக்கையைப் பொதுவாகக் குறிக்குமிடத்துப் பதினெண்
சித்தர் என்று குறிப்பிடுவர். பதினெண் சித்தர் யார் யார்?

1. திருமூலர், 2. இராமதேவர், 3. கும்பமுனி, 4. இடைக்காடர், 5. தன்வந்திரி, 6. வான்மீகி, 7. கமலமுனி, 8. போகநாதர், 9. குதம்பைச் சித்தர்,
10. மச்சமுனி, 11. கொங்கணர், 12, பதஞ்சலி, 13. நந்திதேவர், 14. போதகுரு,
15. பாம்பாட்டிச் சித்தர். 16. சட்டைமுனி, 17. சுந்தரானந்த தேவர், 18. கோரக்கர்.

இது ஒரு பட்டியல்.

1. அகப்பேய் சித்தர், 2. அழுகணிச் சித்தர், 3. ஆதிநாதர் வேதாந்தச் சித்தர், 4. சதோகநாதர், 5. இடைக்காட்டுச் சித்தர், 6. குதம்பைச் சித்தர், 7.
புண்ணாக்குச் சித்தர். 8. ஞானச்சித்தர், 9. மௌனச் சித்தர், 10. பாம்பாட்டிச்
சித்தர், 11. கல்லுளி சித்தர், 12, கஞ்சமலைச் சித்தர். 13. நொண்டிச் சித்தர், 14.
விளையாட்டுச் சித்தர், 15. பிரமானந்த சித்தர், 16. கடுவெளிச் சித்தர், 17.
சங்கிலிச் சித்தர், 18. திரிகோணச்சித்தர்.

இது மற்றொரு பட்டியல். இந்தப் பட்டியலில் நவநாத சித்தர்களும் அடங்குவர்.

1. வான்மீகர், 2. பதஞ்சலியார், 3. துர்வாசர், 4. ஊர்வசி, 5. சூதமுனி,
6. வரரிஷி, 7. வேதமுனி, 8. கஞ்சமுனி, 9. வியாசர், 10. கௌதமர் - இது இன்னொரு பட்டியல். பெரிய ஞானக்கோவை சித்தர்கள் நாற்பத்தெண்மர்
என்று இதனிலும் மாறுபட்ட ஒரு பட்டியலைத் தருகின்றது.

1. காலாங்கி, 2. கமலநாதர், 3. கலசநாதர், 4. யூகி, 5. கருணானந்தர், 6. போகர், 7. சட்டைநாதர், 8. பதஞ்சலியார், 9. கோரக்கர், 10. பவணந்தி, 11. புலிப்பாணி, 12, அழுகணி,

13. பாம்பாட்டி, 14. இடைக்காட்டுச் சித்தர், 15. கௌசிகர், 16. வசிட்டர், 17. பிரம்மமுனி, 18. வியாகர், 19. தன்வந்திரி, 20. சட்டைமுனி, 21. புண்ணாக்கீசர்,
22. நந்தீசர், 23, அகப்பேய், 24. கொங்கணவர், 25. மச்சமுனி, 26. குருபாத நாதர், 27. பரத்துவாசர், 28. கூன் தண்ணீர், 29. கடுவெளி, 30. ரோமரிஷி, 31. காகபுசுண்டர், 32. பராசரர். 33. தேரையர், 34. புலத்தியர், 35. சுந்தரானந்தர், 36. திருமூலர், 37. கருவூரார், 38, சிவவாக்கியர், 39. தொழுகண், 40. நவநாதர்
(அ. சத்ய நாதர், ஆ. சதோக நாதர், இ. ஆதி நாதர், ஈ. அனாதி நாதர், உ.
வகுளி நாதர், ஊ. மதங்க நாதர், எ. மச்சேந்திர நாதர், ஏ. கஜேந்திர நாதர்,
ஐ. கோரக்க நாதர்) 41. அஷ்டவசுக்கள், 42. சப்த ரிஷிகள்.

இப்படி சித்தர்கள் பட்டியல் கணக்கில்லாமல் பெருகிக்கொண்டே செல்கிறது. ஆயினும் பதினெட்டுப் புராணங்கள், பதினெட்டுப் படிகள், பதினெண் குடிமை, பதினெண் பாஷை என்று வரையறை செய்தது போல்
சித்தர்களையும் பதினெண் சித்தர்களாக ஒரு வரையறை செய்தனர். சங்கப்
புலவர்கள் செய்த நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று எண்ணிக்கையில் தொகுத்தது போலவே இப்பதினெண்
சித்தர் பாடல்களும் பெரிய ஞானக்கோவை என்ற நூலாகத் தொகுத்தனர்.
ஏனைய சித்தர் பாடல்கள் அவரவர் பெயராலேயே தொகுக்கப்பட்டன.

இந்தப் பதினெண் சித்தர் பாடல் தொகுதியினுள் அகப்பேய், அழுகணி,
கடுவெளி, குதம்பை, பாம்பாட்டி, சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார்,
காகபுசுண்டர், ஞானசித்தர், கந்துளிச் சித்தர், கஞ்சமலைச் சித்தர், இடைக்
காட்டுச் சித்தர், புண்ணாக்குச் சித்தர், குதம்பைச் சித்தர், விளையாட்டுச்
சித்தர், ஆகிய பாடல்கள் தொகுக்கப்பட்டு உங்கள்முன் அறிமுகமாகின்றன.

# 1. சிவவாக்கியர் பாடல்

சித்தர் இலக்கியத்தில் சிவவாக்கியர் பாடலுக்குத் தனி மரியாதை தரப்படுவதுண்டு, காரணம், இவர் பாடல்களில் வழக்கமான சித்தர் கருத்துக்கான யோகம், குண்டலினி, நிலையாமை. வாசி கருத்துக்களுடன் புரட்சிகரமான கருத்துக்களையும் கூறுவதால் இவர் புரட்சிச் சித்தர் என்றும் கூறப்படுகின்றார். சமுதாயப் புரட்சி செய்த இந்தச் சித்தர் ஆரம்ப காலங்களில் நாத்திகராக இருந்து ஆத்திகராக மாறினார் என்பதை இவரின் பாடல் கருத்துக்கள் புலப்படுத்துகின்றன. இதனையொட்டி இவர் முதலில் நாத்திகராக இருந்து பிறகு சைவராகி சிவவாக்கியரானார் என்றும்; பிறகு வீர வைணவராக மாறி திருமழிசை ஆழ்வாரானார் என்றும் கூறுவதுண்டு.

சிவவாக்கியரின் பாடல்களும் திருமழிசை ஆழ்வார் பாடல்களும் சந்தத்தில் மட்டுமே ஓரளவு ஒத்துப் போவதாலும் இவர் பாடல் சாயலில் ஏனைய சித்தர் பாடல்களும் இருப்பதால் இக்கருத்து ஏற்றுக்கொள்ளுமாறு இல்லை.

### விக்கிரக ஆராதனை

சிவவாக்கியர் பாடல்களில் விக்கிரக ஆராதனை வெகுவாகப் பழிக்கப் படுகின்றது.

**நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுஷ்பந் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று சொல்லு மந்திரம் ஏதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ**

சுவை மிகுந்த உணவுப் பதார்த்தங்களைச் சமைத்த சட்டியானது. அந்த உணவின் ருசியை உணர்ந்து கொள்ளாதது போலவே மனக்கோயிலினுள் இறைவன் இருப்பதை அறியாமல் வெறும் கல்லை நட்டு வைத்து தெய்வ மென்று பெயரிட்டு பூக்களாலும் மந்திரங்களாலும் வழிபாடு செய்வது அறியாமையே யாகும் என்கிறார்.

**“ஓசையுள்ள கல்லைநீ உடைத்திரண்டாய் செய்துமே
வாசலிற் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கின்றீர்
பூசனைக்கு வைத்த கல்லில் பூவும் நீரும் சாத்து கிறீர்
ஈசனுக்குகந்த கல்லெந்தக் கல்லு சொல்லுமே”**

நட்டு வைத்த கல்லை தெய்வம் என்று நினைத்து அக்கல்லின் மேல் மலர்களைச் சாத்திவிட்டு அதைச் சுற்றிச் சுற்றி வருகிறீர்கள். மொண மொண என்று ஏதோ மந்திரங்களையும் சொல்லுகிறீர்கள். அந்த மந்திரத்தால் என்ன பயன் என்று யோசித்துப் பார்த்தீர்களா? அட மூடர்களே, கடவுள் என்பவர் தனியாக வெளியில் இல்லை, உள்ளத்திலே இருக்கிறான். அப்படி இருக்கையில் நட்ட கல்லைச் சுற்றி வந்தால் அது பேசுமோ?

அடுப்பில் வைத்துச் சுடப்பட்ட சட்டியும் அதனுள்ளே இருக்கும் அகப்பையும் அதில் சமைக்கும் உணவின் ருசியை அறியாதது போலவே நீர் செய்யும் புற வழிபாட்டினால் இறைவன் வெளித்தோன்ற மாட்டார். இறைவனை உள்ளத்தால் மட்டுமே காண இயலும். அவனை கல்லில் காண முடியும் என்று சொல்லுவது வெறும் பிதற்றலே என்கிறார்.

கடவுளின் பெயரால் விக்கிரகங்கள் செய்து வைத்து வணங்குவதும், அவைகளுக்குத் தினசரி பூசைகள், திருவிழாக்கள் செய்வதும் தொன்று தொட்டு நடந்து வருபவை. இவைகளையெல்லாம் மூடப்பழக்கங்கள் என்று சாடுவதென்றால் எவ்வளவு துணிவு வேண்டும்? புனிதமான அடிப்படைக் கொள்கையையே ஆட்டிப் பார்ப்பதென்றால் அதனை அறிந்து சொல்லும் பக்குவமும் வேண்டுமல்லவா?

இங்கு உருவ வழிபாடு தவறா என்ற வினாவுக்கும் ஒரு விளக்கம் தேவைப்படுகின்றது.

ஆழ்ந்த அறிவில்லாத பாமர மக்களை ஒரு கட்டுக்கோப்பிற்குள் கொண்டுவர, நல்வழிப்படுத்த உருவ வழிபாடு தேவைப்படுகின்றது. சட்டத்துக்கும், சான்றோர் உரைகளுக்கும் கட்டுப்படாத சிந்தைத் தெளிவில்லாத மனிதர்களுக்கு, ஒரு வடிவத்தைக் காட்டி இதுதான் கடவுள், இவர் உனது பாவச் செயல்களைக் கண்காணித்து தண்டனை தரக் காத்திருக்கின்றார். ஆகவே தவறு செய்யாதே என்று கண்டிப் போமானால் அந்தக் கட்டளைக்கு அவர்கள் பணிகிறார்கள். மனதில் கடவுள் கட்டளையை மீறி நடக்கக் கூடாது என்றும் நினைக்கிறார்கள்; கடவுளின் கட்டளை என்று சொல்லப்படும் வார்த்தைகளுக்குக் கட்டுப் படுகிறார்கள். அதனால் உருவ வழிபாடும் ஒரு வகையில் பயனாகிறது. பலரை நல்வழிப்படுத்த உதவுகிறது. இதனால் உருவ வழிபாடு தவறல்ல என்று ஆத்திகர்கள் வாதிடுவர்.

ஆனால், அறிவார்ந்த சித்தர்களோ இக்கருத்தை ஏற்றுக்கொள்வதில்லை. உருவ வழிபாடு ஒரு மூட நம்பிக்கை. அதனால் மக்களிடம் அறிவு மயக்கம் ஏற்படுகின்றது. எங்கும் நிறைந்த கடவுளைக் கல்லில் இருப்பதாகவும், செம்பில் இருப்பதாகவும், மண்ணில் இருப்பதாகவும், மரத்தில் இருப்பதாகவும், உருவமைத்துக் காட்டுவது கடவுளையே அவமதிப்பதாகும் என்று வாதிடுகின்றனர்.

சித்தர்களின் இந்தக் கருத்தையொட்டியே சிவவாக்கியரும் மேற்கண்ட வாறு உருவ வழிபாட்டை எள்ளி நகையாடினார். கல்லில் கடவுளின் வடிவம் செய்து அதைப் பல பெயர்களால் அழைப்பது அறிவின்மை; அறிவற்ற மூடர்கள்தாம் இவ்விதம் செய்வார்கள். உலகைப் படைத்துக் காத்து, அழிக்கவும் வல்ல ஒரு பொருள் கல்லிலா இருக்கிறது? இல்லை அந்தக் கடவுளின் வடிவம் உள்ளத்தில் மட்டுமே இருக்கிறது. அதனை உள்ளத்தால் அல்லவோ வழிபட வேண்டும் என்று அறிவுரை கூறுகின்றார்.

பண்ணிவைத்த கல்லையும் பழம் பொருளது என்றுநீர்
எண்ணம் உற்றும் என்னபேர் உரைக்கின்றீர்கள் ஏழைகாள்
பண்ணவும் படைக்கவும் படைத்துவைத்து அளிக்கவும்
ஒண்ணும் ஆகி உலகு அளித்த ஒன்றை நெஞ்சில் உன்னுமே

கல்லுருவம் நம்மால் செய்து வைக்கப்பட்டது. அதைப் பழமையான பொருள், அழியாத இறை என்று எண்ணுகிறீர்கள். அதற்கு என்னென்னமோ பேர் சொல்லுகிறீர்கள். உங்கள் மனதில் தோன்றும் பெயர்களையெல்லாம் இட்டு அழைக்கின்றீர்கள். உங்களின் அறியாமை காரணமாகத்தான் இப்படி யெல்லாம் கடவுளின் பெயரைக் கல்லுக்கு வைத்து

அழைக்கின்றீர்கள். இந்த உலகைப் படைத்த ஒன்று எல்லாவற்றையும் செய்ய வல்லது; உலகையும், உலகப் பொருள்களையும் படைக்க வல்லது. தாம் படைத்த பொருளை அறியாமல் வைத்திருக்கவும் காப்பாற்றவும் வல்லது. அதுமட்டுமல்ல; அவைகளைத் தேவைப்படாத பொழுது அழிக்கவும் வல்லது. இப்படி படைத்து, காத்து, அழிக்கும் பரம்பொருளை நீங்கள் கல்லிலே காண இயலாது. உங்கள் நெஞ்சினில் மட்டுமே உணர முடியும். மனதில் மட்டுமே உணர முடியும் என்று உண்மையை உரைக்கின்றார் சிவவாக்கியர்.

இதில் எங்கும் நிறைந்த கடவுளை உருவ வழிபாட்டின் மூலம் வழி படுவது தவறு என்றும், அப்படி வழிபடுபவர்கள் அறியாமையை உடைய ஏழைகள் என்றும் சாடுகின்றார்.

உருவ வழிபாட்டையே மறுக்கும் சிவவாக்கியர் அவ்வுருவ வழிபாட்டின் பெயரால் நடைபெறும் திருவிழாக்களை மட்டும் ஏற்றுக்கொள்வாரா என்ன?

"ஊரில் உள்ள மனிதர்காள் ஒருமனதாய்க் கூடியே
தேரிலே வடத்தை விட்டு செம்பை வைத்து இழுக்கின்றீர்
ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரை
பேதையான மனிதர் பண்ணும் புரளி பாரும் பாருமே"

ஊரிலே வாழும் பெரிய மனிதர்களே, நீங்கள் உங்களுக்குள் உள்ள கருத்து வேற்றுமைகளைக் களைந்து ஒரே மனதாக நின்று பெரிய தேரினை அலங்காரம் செய்து அதில் செப்புச் சிலையை வைத்து, அத்தேரின் வடத்தை இழுக்கிறீர்கள். ஒரு சிறிய உருவத்திற்கு இவ்வளவு பெரிய தேரா? நூற்றுக்கணக்கான மக்கள் உடல் வியர்வை சிந்தி, உள்ளம் வருந்தி இப்படி இருப்பது அறிவுடையமையாகுமா? இதனால் எவ்வளவு பொருள் விரயம்? எவ்வளவு நேரம் வீணாகிறது?

யாருக்கும் புலனாகாத கடவுள் அறிவின் வடிவானவர். அவரே ஆதிசித்தநாதர், அவரை சித்தத்தினால் மட்டுமே அறிதல் கூடும். அப்படி யிருக்கையில் அவரை வழிபட என்னவெல்லாமோ செய்கிறீர்களே! தேராம், திருவிழாவாம், கொட்டாம், முழக்காம் - இவையெல்லாம் வெறும் புரளி. அறிவற்றவர் செய்யும் புரளி. இதனை அறிவுடைய மக்களே ஏற்றுக் கொள்ளுங்கள் என்று அழைக்கிறார்.

ஆனால் அவரது கொள்கையை இவ்வுலக மக்கள் ஏற்றுக் கொண்டார்களா என்பதுதான் விளங்காத புதிர்.

## மூடப்பழக்கங்களைச் சாடுதல்

சமுதாயத்தில் புரையோடி விட்டிருக்கும் மூடப் பழக்கங்களைச் சாடும் வித்தியாசமான சித்தராக சிவவாக்கியர் காட்சி தருகின்றார். ஆசார, அனுஷ்டானங்களைக் கடைபிடிக்கிறேன் பேர்வழி என்று தேவையற்ற மூடப் பழக்கங்களில் மூழ்கித் தவிக்கும் மூடர்களைக் கரையேறி உய்யுமாறு சிவவாக்கியர் அறிவுறுத்துகின்றார்.

"பூசைபூசை யென்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுன்ன தன்னிலே பூசைகொண்ட தெவ்விடம்

ஆதிபூசை கொண்டதோ வனாதிபூசை கொண்டதோ
ஏதுபூசை கொண்டதோ வின்னதென் றியம்புமே" (37)

என்று உண்மை பூசை பற்றியும்,

"வாயிலே குடித்தநீரை எச்சிலென்று சொல்லுறீர்
வாயிலே குதப்புவேத மெனப்படக் கடவதோ
வாயிலெச்சில் போக வென்று நீர்தனைக் குடிப்பீர்காள்
வாயிலெடச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே"

என்று எச்சில் படாமல் பூசை செய்ய வேண்டும் என்று மடிசாமிதனமாகப் பேசும் அறிவிலிக்கு எச்சிலைப் பற்றி விளக்கம் தருகின்றார்.

வாயினால் ஓதப்படுவதால் வேதத்திலுள்ள மந்திரங்களும் எச்சில், பசு மடியில் கன்று குடித்த பால் எச்சில், மாதிருந்த விந்து எச்சில், மதியுமெச்சி லொளியுமெச்சில் மோதகங்களான தெச்சில் பூதலங்களேழும் எச்சில் எதில் எச்சிலில்லை? என்று கேள்வி எழுப்புகின்றார்.

புலால்புலால் புலாலதென்று பேதமைகள் பேசுறீர்
புலாலைவிட்டு மெம்பிரான் பிரிந்திருந்த தெங்ஙனே
புலாலுமாய் பிதற்றுமாய் பேருலாவுந் தானுமாய்
புலாலிலே முளைத் தெழுந்த பித்தர்காணு மத்தனே" (149)

என்று புலால் மறுத்தலை எள்ளி நகையாடுகின்றார். இன்னும்,

"மீனிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மீனிருக்கு நீரலோ மூழ்வதுங் குடிப்பதும்
மானிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மானுரித்த தோலலோ மார்புநூல ணிவதும்" (159)

"மாட்டிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்" (160)

என்ற பாடலில் மாட்டிறைச்சி தின்பது பாவம் என்று அருவறுக்கும் வேதியர்களே மாட்டிறைச்சிதான் உரமாக காய்கறிக்கிடுவதை அறிவீர்களா? ஆட்டிறைச்சி தின்றதில்லை என்கிறீரே, உங்கள் யாக வேள்வியில் ஆகுதி செய்யப் படுவதும், நெய்யாய் இடுவதும் எது என்பதை யோசிப் பீர்களாக என்கிறார்.

## சாதி வேற்றுமைகளைக் கடிதல்

சிவவாக்கியர் தம் பாடல்களில் சாதி வேற்றுமைகளை மிகவும் ஆணித்தரமாகக் கண்டிக்கிறார்.

"சாதியாவ தேதடா சலந்திரண்ட நீரெலோ
பூதவாச லொன்றலோ பூதமைந்து மொன்றலோ

காதில்வாளி காரைக்கம்பி பாடகம்பொ னொன்றலோ
சாதிபேத மோதுகின்ற தன்மையென்ன தன்மையே" (47)

என்று சாதி பேதம் பார்க்கின்றவர்களைப் பார்த்துக் கேட்கின்றார். அது மட்டுமல்ல, மணமுடிக்க மணப் பெண்ணை குணம் பார்த்துதான் தேர்வு செய்ய வேண்டுமே தவிர குலம் பார்த்தல்ல என்று இளைஞர்களையும் கேட்டுக் கொள்கிறார்.

பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பினு மிலக்கமிட் டிருக்கிதோ
பறைச்சி போகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுத்துபாடு மும்முளே" (40)

கீழ் குலத்தைச் சேர்ந்த பறைச்சியும் மேல் குலத்தைச் சேர்ந்த பார்ப்பனத்தியும் போகம் செய்யும்போது ஒரே சுகத்தைத்தான் அளிக்கிறார்கள். இதில் பறைச்சி என்ன? பாப்பாத்தி என்ன? இரண்டும் ஒன்றுதான். ஆகவே சாதிபேதம் பார்க்காமல் இல்லறத்திற்கேற்ற பெண்ணை என்று தேர்வு செய்து மணம் முடிப்பதே பெருமைக்குரியது என்று கூறியதுமல்லாது தாமே இல்லறத்திற்கேற்ற குலப்பெண் ஒருத்தியை மணந்து வாழ்ந்து காட்டினார்.

சிவவாக்கியரின் புரட்சிக் கருத்துக்கள் ஜாதி மதத்தில் காணப்படுவதற்கு இன்னுமொரு சான்றாக, இவர் சைவராயிருந்தும் வைணவக் கடவுளான ராமரையும் தம் பாடல்களிலே புகழ்ந்து பாடியதுடன் இராம நாமத்தின் பெருமையையும் பாங்குற எடுத்தியம்புகிறார்.

ராம! ராம! என்று செபித்துக் கொண்டிருந்தால் போதும்; வேறு எந்த பூசையோ, சந்தி, ஜெப, தபங்களோ செய்ய வேண்டியதில்லை. எல்லா நன்மைகளும், கிடைக்க வேண்டிய எல்லாப் பலன்களும் இராம நாம

உச்சரிப்பில் கிடைத்து விடும் என்று கூறுகின்றது சிவவாக்கியரின் பாடல்.

"அந்தி காலம் உச்சி மூன்றும் ஆடுகின்ற தீர்த்தமும்
சந்தி தர்ப் பணங்களும் தபங்களும், செபங்களும்
சிந்தைமேவு ஞானமும் தினம் செபிக்கும் மந்திரம்
சிந்தை ராம ! ராம ! ராம ! ராம என்னும் நாமமே"

என்ற பாடலில் ராம நாமத்தின் பெருமையைச் சொல்லுகின்றார் சிவவாக்கியர்.

அந்தி, காலை, நடுப்பகல் ஆகிய மூன்று வேளைகளும் புண்ணிய தீர்த்தமாடுகின்ற பலன் இராம நாம உச்சரிப்பில் கிடைக்கும் என்கிறார்.

சந்தியாவந்தனம், முன்னோரை நோக்கிச் செய்யும் தர்ப்பணம், தவங்கள், செபங்கள் இவற்றால் கிடைக்கும் பயனும், இராம நாம உச்சரிப்பில் கிடைக்கும். உள்ளத்தில் உருப்பெரும் அறிவும் இராம நாமத்தால் மிகுந்த வளர்ச்சி யடையும். இவ்வாறு இராம நாமத்தின் பெருமையை எடுத்துரைக்கின்றார் சிவவாக்கியர்.

நன்மையும் செல்வமும் நாலும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராமவென்று இரண்டெழுத்தினால்

என்ற கம்பரின் தனிப்பாடல் கருத்து சிவவாக்கியரின் கருத்தோடு ஒத்து விளங்குவதைக் காணலாம்.

வைணவத் தெய்வமான இராமனின் பெருமைமிகு மந்திரத்தைப் போலவே சைவர்களின் தெய்வமான சிவபிரானின் சிவமந்திரமும் பெருமைக் குரியது என்று சிவநாமப் பெருமையையும் தம் பாடலில் பேசுகின்றார்.

சிவாய மென்ற அட்சரம் சிவனிருக்கு மட்சரம்
உபாய மென்று நம்புவதற்கு உண்மையான அட்சரம்
கபாடமுற்ற வாசலைக் கடந்துபோன வாயுவை
உபாயம் இட்டு அழைக்குமே சிவாயம் அஞ்சு எழுத்துமே

என்றும்,

அஞ்கோடி மந்திர முஞ்சுளே யடக்கினால்
நெஞ்சுகூற வும்முளே நினைப்பதோ ரெழுத்துளே
அஞ்சுநாலு மூன்றதாகி யும்முளே யடங்கினால்
அஞ்சுமோ ரெழுத்ததா யமைந்ததே சிவாயமே

என்று ஐந்து கோடி மந்திரங்களும் 'சிவாய நம' எனும் ஐந்து எழுத்தில் அடங்கி நன்மையளிக்கும் பெருமையைக் கூறுகின்றார்.

திருமூலரின் சில கருத்துக்களையும் சிவவாக்கியர் தம் பாடலில் எடுத்துரைக்கின்றார்.

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்'

என்ற திருமூலர் கருத்தினை,

'கோயில்பள்ளி ஏதடா குறித்து நின்றது ஏதடா
வாயினால் தொழுது நின்ற மந்திரங்கள் ஏதடா
ஞானமான பள்ளியில் நன்மையில் வணங்கினால்
காயமான பள்ளியில் காணலாம் இறையையே"

என்ற சிவவாக்கியர் பாடலில் காணலாம்.

இறைவனை கோயில், பள்ளி இங்கெல்லாம் தேடி அலைய வேண்டிய தில்லை. நமது உள்ளமே இறைவன் உறையும் கோயில் இந்த உடம்பே அவன் ஆட்சி செய்யும் ஆலயம் என்று கூறுகின்றார் சிவவாக்கியர்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்

என்ற திருவள்ளுவரின் கருத்தையும்

"மனத்து அடுத்து அழுக்கு ஆறாத மவுனஞான யோகிகள்"

என்ற தம் பாடலில் புலப்படுத்துகின்றார்.

ஒருவர் பலரிடத்தும் பேசாமலிருக்கலாம், மௌனமாகவும் இருக்கலாம், ஞானியாகவும் இருக்கலாம், யோகம் செய்து கொண்டும் இருக்கலாம், நாட்டைத் துறந்து காட்டிலே போய்க்கூட வாழலாம். ஆனால் உள்ளத்தில் தூய்மை யில்லாதவராய் இருந்தால் அதனால் எந்த பலன்களும் மேற்சொன்ன விரதங்கள் யாவும் பாழாய் முடியும். உள்ளத்திலே குற்றங்களை வைத்துக் கொண்டு இருப்பவர்கள் உண்மையான கடவுளைக் காணமாட்டார்கள்.

அப்படியானால் உண்மையான கடவுள்தான் யார்? என்ற வினாவுக்கு அறிவுதான் இறைவன் என்று விளக்கம் தருகின்றார் சிவவாக்கியர். அறிவு தான் இறைவன் என்றால் அறிவாளிகள் மட்டும்தான் இறைவனைத் தொழ இயலுமோ? என்ற வினாவும் எழுகிறது. இல்லை பாமர மக்களும் தம் அன்பினால் இறைவனைத் தரிசிக்கலாம் என்றும் இறைவன் எங்கும்

நிறைந்திருக்கிறான் என்ற கருத்தையும் சிவவாக்கியர் தம் பாடல்களில் நிறைத்துக் காட்டுகின்றார்.

## காப்பு

அரியதோர் நமச்சிவாயம் ஆதியந்தம் ஆனதும்
ஆறிரண்டு நூறுதேவர் அன்றுரைத்த மந்திரம்
கரியதோர் எழுத்தையுன்னி சொல்லுவேன் சிவவாக்கியம்
தோஷ தோஷ பாவமாயை தூரதூர ஓடவே. 1

கரியதோர் முகத்தையொத்த கற்பகத்தைக் கைதொழக்
கலைகள் நூல்கள் ஞானமுங் கருத்தில்வந்து உதிக்கவே

பெரியபேர்கள் சிறிய பேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
பேயனாகி ஓதிடும் பிழை பொறுக்க வேண்டுமே. 2

## அக்ஷர நிலை

ஆனஅஞ் செழுத்துளே அண்டமும் அகண்டமும்
ஆனஅஞ் செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனஅஞ் செழுத்துளே அகாரமும் மகாரமும்
ஆனஅஞ் செழுத்துளே அடங்கலாவ லுற்றதே. 3

## சரியை விலக்கல்

ஓடிஓடி ஓடிஓடி உட்கலந்த சோதியை
நாடி நாடி நாடிநாடி நாட்களும் கழிந்துபோய்
வாடி வாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே. 4

## யோக நிலை

உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவை
கருத்தினால் இருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருள் தரித்த நாதர்பாதம் அம்மைபாதம் உண்மையே. 5

## தேக நிலை

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவன் நத்தினால்
விடுவனோ அவனை முன்னர் வெட்டவேணும் என்பனே
நடுவன்வந்து அழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்
சுடலைமட்டும் கொண்டுபோய்த் தோட்டி கைக் கொடுப்பரே. 6

## ஞான நிலை

என்னிலே இருந்தஒன்றை யான் அறிந்ததில்லையே
என்னிலே இருந்தஒன்றை யான் அறிந்து கொண்டபின்
என்னிலே இருந்தஒன்றை யாவர் காண வல்லரோ
என்னிலே இருந்திருந்து யான்உ ணர்ந்து கொண்டெனே. 7

நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாயை மாயையோ
அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதியாய்
எனக்குள்நீ உனக்குள் நான் இருக்குமாற தெங்ஙனே. 8

மண்ணும்நீ விண்ணும்நீ மறிகடல்கள் ஏழும்நீ
எண்ணும்நீ எழுத்தும்நீ இசைந்தபண் எழுத்தும் நீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுள் ஆடும் பாவை நீ
நண்ணுநீர்மை நின்றபாதம் நண்ணுமாறு அருளிடாய் 9

அரியுமல்ல அயனுமல்ல அப்புறத்தில்அப்புறம்
கருமைசெம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்
துரியமும் கடந்துநின்ற தூரதூர தூரமே. 10

அந்திமாலை உச்சிமூன்றும் ஆடுகின்ற தீர்த்தமும்
சந்திதர்ப் பணங்களும் தபங்களும் செபங்களும்
சிந்தைமேவு ஞானமும் தினம்செபிக்கு மந்திரம்
எந்தைராம ராமராம ராம என்னும் நாமமே. 11

கதாவுபஞ்ச பாதகங்களைத் துரந்த மந்திரம்
இதாம்இதாம் இதல்லவென்று வைத்துழலும் ஏழைகளாள்
சதாவிடாமல் ஓதுவார் தமக்குநல்ல மந்திரம்
இதாம்இதாம் இராம ராம ராமஎன்னும் நாமமே. 12

நானதேது நீயதேது நடுவில் நின்றது ஏதடா
கோனதேது குருவதேது கூறிடுங் குலாமரே
ஆனதேது அழிவதேது அப்புறத்தில் அப்புறம்
ஈனதேது ராமராம ராமஎன்ற நாமமே. 13

## யோக நிலை

14

சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே
வேர்த்துஇரைப்பு வந்தபோது வேதம்வந்து உதவுமோ
மாத்திரைப் போதும்முளே மறிந்து நோக்கவல்லிரேல்
சாத்திரப்பை நோய்கள்ஏது சத்திமுத்தி சித்தியே.

### ஞான நிலை

தூரம்தூரம் தூரம்என்று சொல்லுவார்கள் சோம்பர்கள்
பாரும்விண்ணும் எங்குமாய்ப் பரந்தஇப் பராபரம்
ஊருநாடு காடுதேடி உழன்றுதேடும் ஊமைகாள்
நேரதாக உம்முளே அறிந்துஉணர்ந்து கொள்ளுமே. 15

### யோக நிலை

நாலுவேதம் ஓதுவீர் ஞானபாத அறிகிலீர்
பாலுள்நெய்கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்
ஆலம்உண்ட கண்டனார் அகத்துளே இருக்கவே
காலன்என்று சொல்லுவீர் கனாவிலும் அதில்லையே. 16

வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை
தச்சில்லாத மாளிகை சமைந்தவாறெ தெங்ஙனே?
பெற்ற தாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்
சித்தில்லாத போதுசீவன் இல்லைஇல்லை இல்லையே. 17

அஞ்சுமூணு மெட்டதாம் அநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்துகொண்டு நூறுருச் செபிப்பிரேல்
பஞ்சமான பாதகங்கள் நூறுகோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே. 18

அண்டவாசல் ஆயிரம் ப்ரசண்டவாசல் ஆயிரம்
ஆறிரண்டு நூறுகோடி ஆனவாசல் ஆயிரம்
இந்த வாசல் ஏழைவாசல் ஏகபோக மானவாசல்
எம்பிரான் இருக்கும் வாசல் யாவர்காண வல்லரே? 19

சாமம்நாலு வேதமும் சகலசாத் திரங்களும்
சேமமாக வோதினும் சிவனைநீர் அறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே உணர்ந்தபின்
ஊமையான காயமாய் இருப்பன் எங் கள்ஈசனே. 20

சங்கிரண்டு தாரையொன்று சன்னல்பின்னல் ஆகையால்
மங்கிமாளுதே உலகில் மானிடங்கள் எத்தனை 21

சங்கிரண்டை யும்தவிர்த்து தாரையூத வல்லிரேல்
கொங்கை மங்கை பங்கரோடு கூடிவாழல் ஆகுமே.

### ஞான நிலை

தங்கம்ஒன்று ரூபம் வேறு தன்மையான வாறுபோல்
செங்கண் மாலும் ஈசனும் சிறந்திருந்தது எம்முளே
விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்றநாமம் நாமம்இந்த நாமமே. 22

### யோக நிலை

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்தில் ஓரெழுத்து அறிந்த கூறவல்லிரேல்
அஞ்சல்அஞ்சல் என்றுநாதன் அம்பலத்தில் ஆடுமே. 23

அஞ்சும்அஞ்சும் அஞ்சுமே அனாதியான அஞ்சுமே
பிஞ்சுபிஞ்சது அல்லவோ பித்தர்காள் பிதற்றுநீர்
நெஞ்சில்அஞ்சு கொண்டு நீர் நின்று தொக்க வல்லிரேல்
அஞ்சும்இல்லை ஆறும்இல்லை அனாதியானது ஒன்றுமே. 24

நீளவீடு கட்டுநீர் நெடுங்கதவு சாத்துநீர்
வாழவேணு மென்றலோ மகிழ்ந்திருந்த மாந்தரே
காலன்ஓலை வந்தபோது கையகன்று நிற்பிரே
ஆலமுண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே. 25

### கிரியை நிலை

வீடெடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யு மாய்
மாடுமக்கள் பெண்டிர்சுற்றம் என்றிருக்கும் மாந்தர்காள்
நாடுபெற்ற நடுவர்கையில் ஓலைவந்து அழைத்திடில்
ஓடுபெற்ற அவ்விலை பெறாதுகாண் இவ்வுடலமே. 26

### யோக நிலை

ஓடமுள்ள போதெலாம் ஓடியே உலாவலாம்
ஓடமுள்ள போதெலாம் உறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடம் உடைந்தபோது ஒப்பிலாத வெளியிலே
ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே. 27

### உற்பத்தி நிலை

அண்ணலே அனாதியே அனாதிமுன் அனாதியே
பெண்ணும்ஆணும் ஒன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்
கண்ணில் ஆணின் சுக்கிலம் கருவில் ஓங்கும் நாளிலே
மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாறு எங்ஙனே. **28**

### ஞான நிலை

பண்டுநான் பறித்துஎறிந்த பன்மலர்கள் எத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை
மிண்டராய்த் திரிந்தபோது இரைத்தநீர்கள் எத்தனை
மீளவும் சிவாலயங்கள் சூழவந்தது எத்தனை. **29**

அண்டர்கோன் இருப்பிடம் அறிந்தஉணர்ந்த ஞானிகாள்
பண்டறிந்த பான்மைதன்னை யாரறிய வல்லரே
விண்டவேத பொருளையன்றி வேறுகூற வகையிலா
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே. **30**

### யோக நிலை

நெருப்பை மூட்டி நெய்யைவிட்டு நித்தம்நித்தம் நீரிலே
விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்கியம் கேளுமின்
நெருப்பும்நீரும் உம்முளே நினைத்துகூற வல்லிரேல்
கருக்கம்அற்ற சோதியைத் தொடர்ந்துகூடல் ஆகுமே. **31**

பாட்டிலாத பரமனைப் பரலோக நாதனை
நாட்டிலாத நாதனை நாரிபங்கர் பாகனை
கூட்டி மெள்ள வாய்புதைத்து குணுகுணுத்த மந்திரம்
வேட்டகாரர் குசுகுசுப்பை கூப்பிடாக முடிந்ததே. **32**

### தரிசனம்

செய்யதெங்கி இளநீர் சேர்ந்தகார ணங்கள் போல்
ஐயன்வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டனன்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்ப தில்லையே. **33**

**34**

### சரியை நிலை

மாறுபட்ட மணிதுலக்கி வண்டின்எச்சில் கொண்டு போய்
ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே
மாறுபட்ட தேவரும் அறிந்து நோக்கும் என்னையும்
கூறுபட்டு தீர்க்கவோ குருக்கள் பாதம் வைத்ததே.

### யோக நிலை

கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆவதும் அழிவதும் இல்லைஇல்லை இல்லையே. 35

செங்கலும் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்
செம்பிலும் தராவிலுஞ் சிவனிருப்பன் என்கிறீர்
உம்மதம் அறிந்துநீர் உம்மை நீர் அறிந்தபின்
அம்பலம் நிறைந்த நாதர் ஆடல் பாடல் ஆகுமே. 36

### கிரியை நிலை

பூசை பூசை என்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுள்ள தன்னிலே பூசைகொண்டது எவ்விடம்
ஆதிபூசை கொண்டதோ அனாதிபூசை கொண்டதோ
ஏதுபூசை கொண்டதோ இன்னதென்று இயம்புமே. 37

### ஞான நிலை

இருக்கநாலு வேதமும் எழுத்தைஅற வோதிலும்
பெருக்கநீறு பூசினும் பிதற்றிலும் பிரானிரான்
உருக்கிநெஞ்சை உட்கலந்து உண்மைகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்துகூடல் ஆகுமே. 38

### யோக நிலை

கலத்தில்வார்த்து வைத்தநீர் கடுத்ததீ முடுக்கினால்
கலத்திலே கரந்ததோ கடுத்ததீக் குடித்ததோ

நிலத்திலே கரந்ததோ நீள்விசும்பு கொண்டதோ
மனத்தின் மாயை நீக்கியே மனத்துளே கரந்ததே. 39

### சரியை நிலை

பறைச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா
இறைச்சிதோல் எலும்பினும் இலக்கம்இட் டிருக்குதோ
பறைச்சி போகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுத்துபாரும் உம்முளே. 40

வாயிலே குடித்தநீரை எச்சிலென்று சொல்லுறீர்
வாயிலே குதப்புவேத மெனப்படக் கடவதோ
வாயில்எச்சில் போகவென்று நீர்தனைக் குடிப்பீர்காள்
வாயில்எச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே. 41

ஓதுகின்ற வேதம்எச்சில் உள்ளமந் திரங்கள்எச்சில்
மோதகங்க ளானதுஎச்சில் பூதலங்கள் ஏழும்எச்சில்
மாதிருந்த விந்தும்எச்சில் மதியும்எச்சில் ஒளியும்எச்சில்
ஏதில்எச்சில் இல்லதில்லை யில்லையில்லை யில்லையே. 42

### உற்பத்தி

பிறப்பதற்கு முன்னெலாம் இருக்குமாற தெங்ஙனே
பிறந்துமண் ணிறந்துபோய் இருக்குமாற தெங்ஙனே
குறித்துநீர் சொலாவிடில் குறிப்பில்லாத மாந்தரே
அறுப்பனே செவிஇரண்டும் அஞ்செழுத்து வாளினால். 43

### ஞானம்

அம்பலத்தை அம்புகொண்டுஅசங்கென்றால் அசங்குமோ
கம்பமற்ற பாற்கடல் கலங்கென்றால் கலங்குமோ
இன்பமற்ற யோகியை இருளும்வந்து அணுகுமோ
செம்பொன்அம்ப லத்துளே தெளிந்ததே சிவாயமே. 44

### கடவுள் நிலை

சித்தமேது சிந்தையேது சிவனேது சித்தரே
சத்தியேது சம்புவேது சாதிபேதம் அற்றது

முத்தியேது மூலமேது மூலமந் திரங்கள்ஏது
வித்திலாத வித்திலே இன்னதென்று இயம்புமே. 45

### ஒடுக்க நிலை

46

சித்தமற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சத்தியற்று சம்புவற்று சாதிபேத மற்றுநன்
முத்தியற்று மூலமற்று மூலமந்தி ரங்களும்
வித்தைஇத்தை ஈன்றவித்தில் விளைந்ததே சிவாயமே.

### கிரியை

சாதியாவது ஏதடா சலந்திரண்ட நீரெலோ
பூதவாசல் ஒன்றலோ பூதமைந்தும் ஒன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ
சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே. 47

கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணை மோர்புகா
உடைந்துபோன சங்கினோசை உயிர்களும் உடற்புகா
விரிந்த பூஉதிர்ந்த காயும் மீண்டும் போய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லையில்லை இல்லையே. 48

தறையினில் கிடந்தபோ தன்றுதூமை என்றிலீர்
துறையறிந்து நீர்குளித்த தன்றுதூமை என்றிலீர்
பறையறைந்து நீர்பிறந்த தன்று தூமை என்றிலீர்
புரையிலாத ஈசரோடு பொருந்துமாறது எங்ஙனே. 49

தூமைதூமை என்றுளே துவண்டலையும் ஏழைகாள்
தூமையான பெண்ணிருக்க தூமைபோனது எவ்விடம்
ஆமைபோல மூழ்கிவந் தனேகவேதம் ஓதுறீர்
தூமையுந் திரண்டுருண்டு சொற்குருக்கள் ஆனதே. 50

சொற்குருக்க ளானதும் சோதிமேனி யானதும்
மெய்க்குருக்க ளானதும் வேணபூசை செய்வதும்
சத்குருக்க ளானதும் சாத்திரங்கள் சொல்வதும்
மெய்க்குருக்க ளானுதும் திரண்டுருண்ட தூமையே. 51

கைவ்வடங்கள் கொண்டுநீர் கண்சிமிட்டி நிற்கிறீர்
எவ்விடங்கள் கண்டுநீர் எண்ணியெண்ணி பார்க்கிறீர்
பொய்யுணர்ந்த சிந்தையை பொருந்திநோக்க வல்லிரேல்
மெய்கடந்த தும்முளே விரைந்து கூடலாகுமே. 52

ஆடுகாட்டி வேங்கையை அகப்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி என்னைநீ மதிமயக்க லாகுமோ
கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி என்னைநீ வெளிப்படுத்த வேணுமே. 53

இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்
இடக்கைசங்கு சக்கரம் வலக்கை சூல மான்மழு
எடுத்தபாதம் நீண்முடி எண்திசைக்கும் அப்புறம்
உடல்கடந்து நின்றமாயம் யாவர்காண வல்லரோ. 54

நாழியப்பும் நாழியுப்பும் நாழியான வாறுபோல்
ஆழியோனும் ஈசனும் அமர்ந்துவாழ்ந் திருந்திடும்
ஏறில்ஏறும் ஈசனும் இயங்குசக்ர தரனையும்
வேறுகூறு பேசுவார் வீழ்வர்வீண் நரகிலே. 55

தில்லைநா யகன்னவன் திருவரங் கனும்அவன்
எல்லையான புவனமும் ஏகமுத்தி யானவன்
பல்லுநாவும் உள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே. 56

எத்திசைக்கும் எவ்வுயிர்க்கும் எங்களப்பன்என்பிரான்
முத்தியான வித்துளே முளைத்தெழும் தவச்சுடர்
சித்தமும் தெளிந்துவேத கோயிலும் திறந்தபின்
அத்தனாடல் கண்டபின் அடங்கலாடல் காணுமே. 57

உற்றநூல்க ளும்முளே உணர்ந்துணர்ந்து பாடுவீர்
பற்றறுத்து நின்றுநீர் பராபரங்கள் எய்துவீர்
செற்றமாவை உள்ளரைச் செறுக்கறுத்து இருத்திடில்
சுற்றமாக உம்முளே சோதியென்றும் வாழுமே. 58

போதடா வெழுந்ததும் புனலதாகி வந்ததும்
தாதடா புகுந்ததும் தானடா விளைந்ததும்

ஓதடா அஞ்சுமூன்றும் ஒன்றதான வக்கரம்
ஓதடா இராமராம ராமவென்னும் நாமமே. 59

அகாரமென்ற வக்கரத்துள் அவ்வுவந்து தித்ததோ
உகாரமென்ற வக்கரத்தில் உவ்வுவந்து தித்ததோ
அகாரமும் உகாரமுஞ் சிகாரமின்றி நின்றதோ
விகாரமற்ற யோகிகாள் விரித்துரைக்க வேணுமே. 60

அறத்திறங்க ளுக்கும்நீ அகண்ட ம்எண் திசைக்கும்நீ
திறத்திறங்க ளுக்கும்நீ தேடுவார்கள் சிந்தைநீ
உறக்கம்நீ உணர்வு நீஉட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினும் குடிகொளே. 61

அண்டம்நீ அகண்டம்நீ ஆதிமூல மானநீ
கண்டம்நீ கருத்தும்நீ காவியங்க ளானநீ
புண்டரீக மற்றுளே புணருகின்ற புண்ணியர்
கொண்ட கோல மானநேர்மை கூர்மையென்ன கூர்மையே. 62

மையடர்ந்த கண்ணினார் மயங்கிடும் மயக்கிலே
ஐயிறந்து கொண்டுநீங்கள் அல்லல்உற் றிருப்பிர்காள்
மெய்யடர்ந்த சிந்தையால் விளங்குஞான மெய்தினால்
உய்யடர்ந்து கொண்டுநீங்கள் ஊழிகாலம் வாழ்விரே. 63

கருவிருந்து வாசலால் கலங்குகின்ற ஊமைகாள்
குருவிருந்த சொன்னவார்த்தை குறித்து நோக்கவல்லிரேல்
உருவிலங்கு மேனியாகி உம்பராகி நின்றுநீர்
திருவிலங்கு மேனியாகிச் சென்றுகூட லாகுமே. 64

தீர்த்தமாட வேணுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்தமாடல் எவ்விடந் தெளிந்த நீ ரியம்புவீர்
தீர்த்தமாக உம்முளே தெளிந்துநீர் இருந்தபின்
தீர்த்தமாக வுள்ளதும் சிவாயவஞ் செழுத்துமே. 65

கழுத்தையும் நிமிர்த்திநல்ல கண்ணையும் விழித்துநீர்
பழுத்தவாய் விழுந்துபோன பாவமென்ன பாவமே
அழுத்தமான வித்திலே அனாதியாய் இருப்பதோர்
எழுத்திலா எழுத்திலே இருக்கலாம் இருந்துமே. 66

கண்டுநின்ற மாயையும் கலந்துநின்ற பூதமும்
உண்டுறங்கு மாறுநீர் உணர்ந்திருக்க வல்லிரேல்
பண்டைஆறும் ஒன்றுமாய்ப் பயந்தவேத சுத்தராய்
அண்டமுத்தி ஆகிநின்ற வாதிமூலம் ஆவிரே. 67

ஈன்றவாச லுக்குஇரங்கி எண்ணிறந்து போவிர்காள்
கான்றவாழை மொட்டலர்ந்த காரணம் அறிகிலீர்
நான்றவாச லைத்திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதிவந்து தோன்றுமே. 68

உழலும்வாச லுக்குஇரங்கி ஊசலாடும் ஊமைகாள்
உழலும்வாச லைத்துறந்து உண்மைசேர எண்ணிலிர்
உழலும் வாச லைத்துறந்து உண்மைநீர் உணர்ந்தபின்
உழலும்வாசல் உள்ளிருந்த உண்மைதானும் ஆவிரே. 69

மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி உம்முளே நாடியே யிருந்தபின்
பாலனாகி வாழலாம் பரப்பிரமம் ஆகலாம்
ஆலமுண்ட கண்டராணை அம்மைஆணை உண்மையே. 70

இருக்கவேணும் என்றபோ திருக்கலாய் இருக்குமோ
மரிக்கவேணும் என்றலோ மண்ணுளே படைத்தனர்
சுருக்கமற்ற தம்பிரான் சொன்ன அஞ் செழுத்தையும்
மரிக்குமுன் வணங்கிடீர் மருந்தென்ப பதங்கெடீர். 71

அம்பத்தொன்றில் அக்கரம் அடங்கலோர் எழுத்துமோ
விண்பரந்த மந்திரம் வேதநான்கும் ஒன்றலோ
விண்பரந்த மூலஅஞ் செழுத்துளே முளைத்ததே
அங்கலிங்க பீடமாய் அமர்ந்ததே சிவாயமே. 72

சிவாயம் என்ற அக்ஷரஞ் சிவனிருக்கும் அக்ஷரம்
உபாயமென்று நம்புவதற்கு உண்மையான அக்ஷரம்
கபாடம்அற்ற வாசலைக் கடந்துபோன வாயுவை
உபாயம்இட் டழைக்குமே சிவாயஅஞ் செழுத்துமே. 73

உருவுமல்ல வெளியுமல்ல ஒன்றைமேவி நின்றதல்ல
மருவுமல்ல சொந்தமல்ல மற்றதல்ல அற்றதல்ல

பெரியதல்ல சிறியதல்ல பேசலான தானுமல்ல
உரியதாகி நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 74

ஆத்துமா வனாதியோ ஆத்துமா அனாதியோ
மீத்திருந்த ஐம்பொறி புலன்களும் அனாதியோ
தாக்கமிக்க நூல்களும் சதாசிவமும் அனாதியோ
வீக்கவந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே. 75

அறிவிலே பிறந்திருந் தஆகமங்க ள்ஓதுநீர்
நெறியிலே மயங்குகின்ற நேர்மையொன் றறிகிலீர்
உறியிலே தயிரிருக்க ஊர்புகுந்து வெண்ணைய் தேடும்
அறிவிலாத மாந்தரோடு அணுகுமாறது எங்ஙனே. 76

இருவரங்க மும்பொருந்தி என்புருகி நோக்கிலீர்
உருவரங்க மாகிநின்ற உண்மை ஒன்றை ஓர்கிலீர்
கருவரங்க மாகிநின்ற கற்பனை கடந்தபின்
திருவரங்க மென்றுநீர் தெளிந்திருக்க வல்லிரே. 77

**கருக்குழியில் ஆசையாய்க் காதலுற்று நிற்கிறீர்**
**குருக்கிடுக்கும் ஏழைகாள் குலாவுகின்ற பாவிகாள்**
**திருத்துருத்தி மெய்யினாற் சிவந்தஅஞ் செழுத்தையும்**
**உருக்கழிக்கும் உம்மையும் உணர்ந்துணர்ந்து கொள்ளுமே. 78**

**மண்ணிலே பிறக்கவும் வழக்கலாது உரைக்கவும்**
**எண்ணிலாத கோடிதேவரென்ன துன்னதென்னவும்**
**கண்ணிலே கண்மணிஇருக்கக் கண்மறைந்த வாறுபோல்**
**எண்ணில் கோடி தேவரும் இதின்கணால் விழிப்பதே. 79**

**மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத்து அடுக்குவார்**
**வெண்கலம் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணுவார்**
**நண்கலம் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்**
**எண்கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே. 80**

**மிக்கசெல்வம் நீர் படைத்த விறகுமேவிப் பாவிகாள்**
**விறகுடன் கொளுத்திமேனி வெந்துபோவது அறிகிலீர்**
**மக்கள் பெண்டீர்சுற்ற மென்று மாயைகாணும் இவையெல்லாம்**
**மறலிவந் தழைத்தபோது வந்துகூட லாகுமோ. 81**

**ஒக்கவந்து மாதுடன் செறிந்திடத்தில் அழகியே**
**ஒருவராகி இருவராகி இளமைபெற்ற ஊரிலே**
**அக்கணிந்து கொன்றை சூடிஅம்பலத்தில் ஆடுவார்**
**அஞ்செழுத்தை ஓதிடில் அனேகபாவம் அகலுமே. 82**

**மாடுகன்று செல்வமும் மனைவிமைந்தர் மகிழவே**
**மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே**
**ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே**
**உடல்கிடந் துயிர்கழன்ற உண்மைகண்டு உணர்கிலீர். 83**

**பாடுகின்ற உம்பருக்குஆடுபாதம் உன்னியே**
**பழுதிலாத கன்மகூட்டம் இட்டளங்கள் பரமனே**
**நீடுசெம்பொன்னம்பலத்துள் ஆடுகொண்ட அப்பனே**
**நீலகண்ட காளகண்ட நித்யகல்லி யாணனே. 84**

**கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்**
**ஞானமுற்ற நெஞ்சகத்தில் வல்லதேதும் இல்லையே**
**ஊனமற்ற சோதியோடு உணர்வுசேர்ந்து அடக்கினால்**
**தேனகத்தின் ஊறல்போல் தெளிந்ததே சிவாயமே. 85**

பருகியோடி உம்முளே பறந்துவந்த வெளிதனை
நிரவியே நினைந்து பார்க்கில் நின்மலம் அதாகுமே
உருகியோடி எங்குமாய் ஓடும்சோதி தன்னுளே
கருதடா உனக்குநல்ல காரணம் அதாகுமே. 86

சோதிபாதி யாகிநின்று சுத்தமும் பலித்துவந்து
போதியாத போதகத்தை ஓதுகின்ற பூரணா
வீதியாக ஓடிவந்து விண்ணடியின் ஊடுபோய்
ஆதிநாதன் நாதனென்று அனந்தகாலம் உள்ளதே. 87

இறைவனால் எடுத்தமாடத் தில்லையம்ப லத்திலே
அறிவினால் அடுத்தகாயம் அஞ்சினால்அமர்ந்ததே
கருவில்நாத முண்டுபோய் கழன்றவாசல் ஒன்பதும்
ஒருவராய் ஒருவர்கோடி உள்ளுளே அமர்ந்ததே. 88

நெஞ்சிலே இருந்திருந்து நெருங்கியோடும் வாயுவை
அன்பினால் இருந்து நீரருகிருத்த வல்லிரேல்

அன்பர் கோயில்காணலாம் அகலும் எண்டிசைக்குளே
தும்பியோடி ஓடியே சொல்லடா சுவாமியே. 89

தில்லையை வணங்கிநின்ற தெண்டனிட்ட வாயுவே
எல்லையைக் கடந்துநின்ற ஏகபோக மாய்கையே
எல்லையைக் கடந்துநின்ற சொர்க்கலோக வெளியிலே
வெள்ளையும் சிவப்புமாகி மெய்கலந்து நின்றதே. 90

உடம்புயிர் எடுத்ததோ உயிருடம்பு எடுத்ததோ
உடம்புயிர் எடுத்தபோது உருவமேது செப்புவீர்
உடம்புயிர் எடுத்தபோதஉயிஇறப்ப தில்லையே
உடம்புமெய் மறந்துகண்டு உணர்ந்துஞானம் ஓதுமே. 91

அவ்வெனும் எழுத்தினால் அகண்டம்ஏழு மாகினாய்
உவ்வெனும் எழுத்தினால் உருத்தரித்து நின்றனை
மவ்வெனும் எழுத்தினால் மயங்கினார்கள் வையகம்
அவ்வும்உவ்வு மவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே. 92

மந்திரங்கள் உண்டுநீர் மயங்குகின்ற மானிடர்
மந்திரங்க ளாவது மறத்திலூற லன்றுகாண்
மந்திரங்க ளாவது மதத்தெழுந்த வாயுவை
மந்திரத்தை உண்டவர்க்கு மானமேதும் இல்லையோ. 93

என்னவென்று சொல்லுவேன் இலக்கணம் இலாததை
பன்னுகின்ற செந்தமிழ் பதங்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்துள் ஈசனும் யானுமல்ல இல்லையே. 94

ஆலவித்தில் ஆல்ஒடுங்கி ஆலமான வாறுபோல்
வேறுவித்தும் இன்றியே விளைந்துபோகம் எய்திடீர்
ஆறுவித்தை ஓர்கிலீர் அறிவிலாத மாந்தரே
பாருமித்தை உம்முளே பரப்பிரம்மம் ஆவிரே. 95

அவ்வுதித்த மந்திரம் அகாரமாய் உகாரமாய்
எவ்வெழுத்து அறிந்தவர்க்கு எழுபிறப்பது இங்கிலை
சவ்வுதித்த மந்திரத்தை தற்பரத்து இருத்தினால்
அவ்வுமுவ்வும் அவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே. 96

நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதாய் அமர்ந்துநின்ற நேர்மையில்
செவ்வைஒத்து நின்றதே சிவாயம் அஞ்செழுத்துமே. 97

இரண்டுமொன்று மூலமாய் இயங்குசக் கரத்துளே
சுருண்டுமூன்று வளையமாய்ச் சுணங்குபோல் கிடந்ததீ
முரண்டெழுந்த சங்கினோசை மூலநாடி ஊடுபோய்
அரங்கன் பட்டணத்திலே அமர்ந்ததே சிவாயமே. 98

கடலிலே திரியும்ஆமை கரையிலேறி முட்டையிட்டுக்
கடலிலே திரிந்தபோது ரூபமான வாறுபோல்
மடலுளே இருக்கும்எங்கள் மணியரங்க சோதியை
உடலுளே நினைத்துநல்ல உண்மையானதுஉண்மையே. 99

மூன்று மண்டலத்தினும் முட்டிநின்ற தூணிலும்
நான்ற பாம்பின் வாயிலும் நவின்றெழுந்த அட்சரம்
ஈன்றதாயும் அப்பனும் எடுத்துரைத்த மந்திரம்
தோன்றுமோர் எழுத்துளே சொல்லவெங்கும் இல்லையே. 100

மூன்றுமூன்று மூன்றுமே மூவர்தேவர் தேடிடும்
மூன்றுமஞ் சும்எழுத்துமாய் முழங்குமவ் எழுத்துளே
ஈன்றதாயும் அப்பனும் இயங்குகின்ற நாதமும்
தோன்றுமண்டத்திலே சொல்லவெங்கும் இல்லையே. 101

சோறுகின்ற பூதம்போல் சுணங்குபோல் கிடந்தநீர்
நாறுகின்ற கும்பியில் நவின் றெழுந்த மூடரே
சீறுகின்ற ஐவரைச் சிணுக்கறுக்க வல்லிரேல்
ஆறுகோடி வேணியார் ஆறிலொன்றில் ஆவிரே. 102

வட்டமென்று உம்முளே மயக்கிவிட்ட திவ்வெளி
அட்டவக் கரத்துளே அடக்குமும் ஒடுக்கமும்
எட்டுமெட்டும் எட்டுமாய் இயங்குசக் கரத்துளே
எட்டலாம் உதித்ததுஎம்பி ரானைநா னறிந்தபின். 103

பேசுவானும் ஈசனே பிரமஞானம் உம்முளே
ஆசையான ஐவரும் அலைத்தலைகள் செய்கறார்

ஆசையான ஐவரை அடக்கியோர் எழுத்திலே
பேசிடாது இருப்பிரேல் நாதன்வந் தொலிக்குமே. 104

நமசிவாய அஞ்செழுத்தும் நல்குமேல் நிலைகளும்
நமசிவாய அஞ்சிலஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய அஞ்செழுத்து நம்முளே இருக்கவே
நமசிவாய உண்மையை நன்குரைசெய் நாதனே. 105

பரமுனக்கு எனக்குவேறு பயமிலை பராபரா
கரம்எடுத்து நித்தலுங் குவித்திடக் கடவதும்
சிரம்உருகி ஆர்த்தலும் சிவபிரானே என்னலும்
உரம்எனக்கு நீயளித்த ஓம்நமசி வாயமே. 106

பச்சைமண் பதுப்பிலே பழுப்பதிந்த வேட்டுவன்
நித்தமும் நினைந்திட நினைத்தவண்ணம் ஆயிடும்
பச்சைமண் இடிந்துபோய் பரந்ததும்பி ஆயிடும்
பித்தர்காள் அறிந்து கொள்க பிரானிருந்த கோலமே. 107

ஒளியதான காசிமீது வந்ததங்கு வோர்க்கெலாம்
வெளியதான சோதிமேனி விசுவநாத னானவன்
தெளியுமங்கை உடனிருந்து செப்புகின்ற தாரகம்
எளியதோர் இராமராம ராமவிந்த நாமமே. 108

விழியினோடு புனல்விளைந்த வில்லவல்லி யோனியும்
வெளியிலே பிதற்றலாம் விளைவுநின்றது இல்லையே
வெளிபரந்த தேகமும் வெளிக்குள் மூலவித்தையும்
தெளியும் வல்ல ஞானிகள் தெளிந்திருத்தல் திண்ணமே. 109

ஓம்நமசி வாயமே உணர்ந்மெய் உணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே உணர்ந்துமெய் தெளிந்தபின்
ஓம்நமசி வாயமே உணர்ந்துமெய் உணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே உட்கலந்து நிற்குமே. **110**

அல்லல்வாசல் ஒன்பது மறுத்தடைந்த வாசலும்
சொல்லுவாசல் ஓரைந்தும் சொம்மிவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாசல் ஊடுபோய்
எல்லைவாசல் கண்டவர் இனிப்பிறப்பது இல்லையே. **111**

ஆதியானது ஒன்றுமே அனேகஅனேக ரூபமாய்
சாதிபேத மாய்எழுந்து சர்வசீவ னானபின்
ஆவியோடு ஆடுகின்ற மீண்டுமந்த சென்மமாம்
சோதியான ஞானியர்க்குச் சுத்தமாய் இருப்பரே. **112**

மலர்ந்ததாது மூலமாய் வையகம் மலர்ந்ததும்
மலர்ந்தபூ மயக்கம்வந்து அடுத்ததும் விடுத்ததும்
புலன்கள்ஐந்தும் பொறிகலங்கி பூமிமேல் விழுந்ததும்
இலங்கலங்கி நின்றமாயம் என்னமாய ஈசனே. **113**

பாரடங்க உள்ளதும் பரந்தவானம் உள்ளதும்
ஓரிடமும் இன்றியே ஒன்றிநின்ற ஒண்சுடர்
ஆரிடமும் இன்றியே அகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவர் சிவன்தெரிந்த ஞானியே. **114**

### தலயாத்திரை நீக்கல்

மண்கிடார மேசுமந்து மலையுளேறி மறுகுறீர்
எண்படாத காரியங்கள் இயலுமென்று கூறுகிறீர்
தம்பிரானை நாள்கடோறுந் தரையிலே தலைபடக்
கும்பிடாத மாந்தரோடு கூடிவாழ்வது எங்ஙனே. **115**

நாவிதூ ளழிந்ததும் நலங்குலம் அழிந்ததும்
மேவுதேர் அழிந்ததும் விசாரமுங் குறைந்ததும்
பாவிகாள் இதென்னமாயம் வாமநாடு பூசலாய்
ஆவியார் அடங்கினால் ஐவரும் அடங்குவார். **116**

வீடெடுத்து வேள்விசெய்து மெய்யரோடு பொய்யுமா
மாடுமக்கள் பெண்டீர்சுற்றம் என்றிருக்கு மாந்தர்காள்
நாடுபெற்ற நண்பர்கையில் ஓலைவந்து அழைத்தபோது
ஆடுபெற்ற தவ்விலை பெறாதுகாணும் இவ்வுடல். **117**

இல்லை இல்லை இல்லையென்று இயம்புகின்ற ஏழைகாள்
இல்லையென்று நின்றதொன்றை இல்லையென்ன லாகுமோ
இல்லையல்ல வொன்றுமல்ல இரண்டும் ஒன்றிநின்றதை
எல்லைகண்டு கொண்டபேர் இனிப்பிறப்பது இல்லையே. 118

காரகார காரகார காவலூழி காவலன்
போரபோர போரபோர போரில்நின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்களேழும் எய்தஸ்ரீ
ராமராம ராமராம ராமவென்னும் நாமமே. 119

நீடுபாரி லேபிறந்து நேயமான மாயந்தான்
வீடுபேரிதென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ
பாடிநாலு வேதமும் பாரிலே படர்ந்ததோ
நாடுராம ராமராம ராமவென்னும் நாமமே. 120

உயிரு நன்மையால் உடலெடுத்து வந்திருந்திடும்
உயிர்உடம்பு ஒழிந்தபோது ரூபரூபமாயிடும்
உயிர் சிவத்தின் மாய்கையாகிஒன்றைஒன்றுக் கொன்றிடும்
உயிரும்சத்தி மாய்கையாகி ஒன்றையொன்று தின்னுமே. 121

நெட்டெழுத்து வட்டமோ நிறைந்தவல்லி யோனியும்
நெட்டெழுத்தில் வட்டம் ஒன்று நின்றதொன்றும் கண்டிலேன்
குற்றெழுத்தில் உற்றதென்று கொம்புகால் குறித்திடில்
நெட்டெழுத்தில் வட்டமொன்றில் நேர்படான் நம்ஈசனே. 122

விண்ணிலுள்ள தேவர்கள் அறியொணாத மெய்ப்பொருள்
கண்ணிலாணி யாகவே கலந்துநின்ற தெம்பிரான்
மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்
அண்ணலாரும் எம்முளே அமர்ந்து வாழ்வது உண்மையே. 123

விண்கடந்து நின்றசோதி மேலைவாச லைத்திறந்து
கண்களிக்க உள்ளுளே கலந்துபுக் கிருந்தபின்
மண்பிறந்த மாயமும் மயக்கமும் மறந்துபோய்
எண்கலந்த ஈசனோடு இசைந்திருப்பது உண்மையே. 124

மூலமான மூச்சதில் மூச்சறிந்து விட்டபின்
நாலுநாளு முன்னிலோரு நாட்டமாகி நாட்டிடில்
பாலனாகி நீடலாம் பரப்பிரம்மம் ஆகலாம்
ஆலமுண்ட கண்டராணை அம்மையாணை உண்மையே. 125

மின்னெழுந்து மின்பரந்து மின்னொடுங்கும் வாறுபோல்
என்னுள்நின்ற என்னுள்ஈசன் என்னுளேஅடங்குமே

கண்ணுள்நின்ற கண்ணில்நேர்மை கண்ணறிவி லாமையால்
என்னுள்நின்ற என்னையன்றி யானறிந்த தில்லையே. 126

இருக்கலாம் இருக்கலாம் அவனியில் இருக்கலாம்
அரிக்குமால் பிரமனும் அகண்டம் ஏழகற்றலாம்
கருக்கொளாத குழியிலே காலிலாத கண்ணிலே
நெருப்பறை திறந்தபின்பு நீயும்நானும் ஈசனே. 127

ஏகபோகம் ஆகியே இருவரும் ஒருவராய்
போகமும் புணர்ச்சியும் பொருந்துமாறது எங்ஙனே
ஆகிலும் அழகிலும் அதன்கணேயம் ஆனபின்
சாதிலும் பிறக்கிலும் இல்லை இல்லை இல்லையே. 128

வேதம்நாலும் பூதமாய் விரவும்அங்கி நீரதாய்
பாதமே இலிங்கமாய்ப் பரிந்துபூசை பண்ணினால்
காதில்நின்று கடைதிறந்து கட்டறுத்த ஞானிகள்
அதிஅந்த மும்கடந்தது அரியவீட தாகுமே. 129

## ஞானநிலை

பருத்திநூல் முறுக்கிவிட்டு பஞ்சிஓதும் மாந்தரே
துருத்திநூல் முறுக்கிவிட்டு துன்பம்நீங்க வல்லிரேல்
கருத்தில்நூல் கலைபடும் காலநூல் கழிந்திடும்
திருத்திநூல் கரவறும் சிவாயஅஞ் செழுத்துமே. 130

சாவதான தத்துவச் சடங்குசெய்யும் ஊமைகாள்
தேவர்கல்லும் ஆவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்
மூவராலும் அறியொணாத முக்கணன் முதற்கொழுந்து
காவலாக உம்முளே கலந்திருப்பன் காணுமே. 131

காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்
காலைமாலை நீரிலே கிடந்ததேரை என்பெறும்
காலமே எழுந்திருந்து கண்கள்மூன்றில் ஒன்றினால்
மூலமே நினைப்பிராகில் முத்திசித்தி யாகுமே. 132

## மதவாதம் மறுத்தல்

எங்கள்தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ
இங்குமங்கு மாய் இரண்டு தேவரே இருப்பரோ

அங்குமிங்கு மாகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே. 133

### அறிவு நிலை

அறையறை இடைக்கிட அன்றுதூமை என்கிறீர்
முறையறிந்து பிறந்தபோதும் அன்றுதூமை என்கிறீர்
துறையறிந்த நீர்குளித்தால் அன்றுதூமை என்கிறீர்
பொறையிலாத நீசரோடும் பொருந்துமாறது எங்ஙனே. 134

சத்தம்வந்த வெளியிலே சலமிருந்து வந்ததும்
மத்தமாகி நீரிலே துவண்டுமூழ்கும் மூடரே
சுத்தமேது கட்டதேது தூய்மைகண்டு நின்றதேது
பித்தகாயம் உற்றதேது பேதமேது போதமே. 135

மாதமாதம் தூமைதான் மறந்துபோன தூமைதான்
மாதமற்று நின்றலோ வளர்ந்துரூப மானது
நாதமேது வேதமேது நற்குலங்கள் ஏதடா
வேதமோதும் வேதியர் விளைந்தவாறும் பேசடா. 136

தூமையற்று நின்றலோ சுதீபமற்று நின்றது
ஆண்மையற்று நின்றலோ வழக்கமற்று நின்றது
ஆண்மையற்று ஆண்மையற்றுசஞ்சலங்கள் அற்றுநின்ற
தூமைதூமை அற்றகாலம் சொல்லுமற்று நின்றதே. 137

ஊறிநின்ற தூமையை உறைந்துநின்ற சீவனை
வேறுபேசி மூடரே விளைந்தவாறது ஏதடா
நாறுகின்ற தூமையல்லோ நற்குலங்க ளாவன
சீறுகின்ற மூடனேஅத் தூமைநின்ற கோலமே. 138

தூமைகண்டு நின்றபெண்ணின் தூமைதானும் ஊறியே
சீமையெங்கும் ஆணும் பெண்ணும் சேர்ந்துலகங்கண்டதே
தூமைதானும் ஆசையாய்த் துறந்திருந்த சீவனை
தூமையற்று கொண்டிருந்த தேசமேது தேசமே. 139

வேணும்வேணும் என்றுநீர் வீண்உழன்று தேடுவீர்
வேணுமென்று தேடினாலும் உள்ளதல்ல தில்லையே

வேணும்என்று தேடுகின்ற வேட்கையைத் திறந்தபின்
வேணும்என்ற அப்பொருள் விரைந்துகாண லாகுமே. 140

சிட்டர்ஓது வேதமும் சிறந்தஆக மங்களும்
நட்டகார ணங்களும் நவின்ற மெய்ம்மை நூல்களும்
கட்டிவைத்த போதகம் கதைக்குகந்த பித்தெலாம்
பெட்டதாய் முடிந்ததே பிரானையான் அறிந்தபின். 141

நூறுகோடி ஆகமங்கள் நூறுகோடி மந்திரம்
நூறுகோடி நாளிருந்தும் ஓதினால் அதன்பயன்
ஆறும்ஆறும் ஆறுமாய் அகத்திலோர் எழுத்துமாய்
ஏறு சீரெழுத்தையோத ஈசன்வந்து பேசுமோ. 142

காலைமாலை தம்மிலே கலந்துநின்ற காலனார்
மாலைகாலை யாய்ச்சிவந்த மாயமேது செப்பிடீர்
காலைமாலை அற்றுநீர் கருத்திலே ஒடுங்கினால்
காலைமாலை ஆகிநின்ற காலனில்லை இல்லையே. 143

எட்டுமண்ட லத்துளே இரண்டுமண்டலம் வளைத்து
இட்டமண்டலத்திலே எண்ணியாறு மண்டலம்
தொட்டமண்டலத்திலே தோன்றிமூன்று மண்டலம்
நட்டமண்டலத்திலே நாதன்ஆடி நின்றதே. 144

நாலிரண்டு மண்டலத்துள் நாதனின்றது எவ்விடம்
காலிரண்டு மூலநாடி கண்டதங்கு உருத்திரன்
சேரிரண்டு கண்கலந்து திசைகளெட்டு மூடியே
மேலிரண்டு தான் கலந்து வீசியாடி நின்றதே. 145

அம்மையப்பன் அப்புநீ ரறிந்ததே அறிகிலீர்
அம்மையப்ன் அப்புநீ ரரியய ன்அரனுமாய்
அம்மையப்பன் அப்புநீ ராதியாதி ஆனபின்
அம்மையப்பன் அன்னையன்றி யாருமில்லை ஆனதே. 146

உருத்தரிப்ப தற்குமுன் உடல்கலந்தது எங்ஙனே
கருத்தரிப் பதற்குமுன் காரணங்கள் எங்ஙனே
பொருத்திவைத்த போதமும் பொருந்துமாறு எங்ஙனே
குருத்திருத்தி வைத்தசொல் குறித்துணர்ந்து கொள்ளுமே. 147

ஆதியுண்டு அந்தமில்லை அன்றிநாலு வேதமில்லை
சோதியுண்டு சொல்லுமில்லை சொல்லிறந்தது ஏதுமில்லை 148

ஆதியானமூவரில் அமர்ந்திருந்த வாயுவும்
ஆதியன்று தன்னையும் ஆரறிவது அண்ணலே.

புலால்புலால் புலாலதென்று பேதமைகள் பேசுறீர்
புலாலைவிட்டு எம்பிரான் பிரிந்திருந்தது எங்ஙனே
புலாலுமாய் பிதற்றுமாய் பேருலாவுந் தானுமாய்
புலாலிலே முளைத்தெழுந்த பித்தன்காணும் அத்தனே. 149

உதிரமான பால்குடித் தொக்கநீர் வளர்ந்ததும்
இரதமாய் இருந்ததொன் றிரண்டுபட்ட தென்னலாம்
மதிரமாக விட்டதேது மாமிசப் புலாலதென்று
சதிரமாய் வளர்ந்ததேது சைவரான மூடரே. 150

உண்டகல்லை எச்சிலென்று உள்ளெறிந்து போடுறீர்
கண்டஎச்சில் கையலோ பரமனுக்கு ஏறுமோ
கண்டஎச்சில் கேளடா கலந்தபாணி அப்பிலே
கொண்டசுத்தம் ஏதடா குறிப்பிலாத மூடரே. 151

ஓதிவைத்த நூல்களும் உணர்ந்து கற்ற கல்வியும்
மாதுமக்கள் சுற்றமும் மறக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ
சோதிபுக் கொளித்தமாயம் சொல்லடா சுவாமியே. 152

ஈணெருமை யின்கழுத்தில் இட்டபொட் டணங்கள் போல்
மூணுநாலு சீலையில் முடிந்தவிழ்க்கும் மூடர் காள்
மூணுநாலு லோகமும் முடிவிலாத மூர்த்தியை
ஊணிஊணி நீர்முடிந்த உண்மைஎன்ன உண்மையே. 153

சாவல்நாலு குஞ்சதஞ்சு தாயதான வாறுபோல்
காயமான கூட்டிலே கலந்துசண்டை கொள்ளுதே
கூவமான கிழநாரிக் கூட்டிலே புகுந்தபின்
சாவல்நாலு குஞ்சதஞ்சும் தாம்இறந்து போனதே. 154

மூலமாம் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை
காலமே எழுந்திருந்து நாலுகட்ட றுப்பிரேல்

பாலனாகி வாழலாம் பரப்பிரமம் ஆகலாம்
ஆலமுண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே. 155

செம்பினில் களிம்புவந்த சீதரங்கள் போலவே
அம்பினில் எழுதொணாத அணியரங்க சோதியை 156

வெம்பிவெம்பி வெம்பியே மெலிந்துமேல் கலங்கிட
செம்பினில் களிம்புவிட்ட சேதியேது காணுமே.

நாடிநாடி உம்முளே நயந்துகாண வல்லிரேல்
ஓடியோடி மீளுவார் உம்முளே அடங்கிடும்
தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடும்
கோடிகால மும்முகந்து இருந்தவாறு எங்ஙனே. 157

பிணங்குகின்றது ஏதடா பிரஞ்ஞைகெட்ட மூடரே
பிணங்கிலாத பேரொளிப் பிராணனை அறிகிலீர்
பிணங்குவோர் இருவினைப் பிணக்கறுக்க வல்லிரேல்
பிணங்கிலாத பெரிய இன்பம் பெற்றிருக்க லாகுமே. 158

மீனிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்
மீனிருக்கும் நீரலோ மூழ்வதுங் குடிப்பதும்
மானிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்
மானுரித்த தோலலோ மார்புநூல் அணிவதும். 159

ஆட்டிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்
ஆட்டிறைச்சி அல்லவோ யாகம்நீங்கள் ஆற்றலே
மாட்டிறைச்சி தின்றதில்லை அன்றுமின்றும் வேதியர்
மாட்டிறைச்சி அல்லவோ மரக்கறிக் கிடுவது. 160

அக்கிடீர் அனைத்துயிர்க்கும் ஆதியாகி நிற்பது
முக்கிடீர் உமைப்பிடித்து முத்தரித்து விட்டது
மைக்கிடில் பிறந்திறந்து மாண்டுமாண்டு போவது
மொக்கிடீர் உமக்குநான் உணர்த்துவித்தது உண்மையே. 161

ஐயன்வந்து மெய்யகம் புகுந்தவாறு எங்ஙனே
செய்யதெங்கு இளங்குரும்பை நீர்புகுந்த வண்ணமே
ஐயன்வந்து மெய்யகம் புகுந்து கோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தரோடு வாய்திறப்பது இல்லையே. 162

நவ்வுமவ்வை யுங்கடந்து நாடொணாத சியின்மேல்
வவ்வுயவ்வு ளுஞ்சிறந்த வண்மைஞான போதகம்
ஒவ்வுசுத்தி யுள்நிறைந்த துச்சியூ டுருவியே
இவ்வகை அறிந்த பேர் கள்ஈசன்ஆணை ஈசனே. 163

அக்கரம் அனாதியோ வாத்துமம் அனாதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களும் அனாதியோ 164

தர்க்கமிக்க நூல்களும் சாத்திரம் அனாதியோ
தற்பரத்தை ஊடறுத்த சற்குரு அனாதியோ.

பார்த்ததேது பார்த்திடில் பார்வையூ டழிந்திடும்
சுத்ததாய் இருப்பிரேல் குறிப்பிலச் சிவமதாம்
பார்த்தபார்த்த போதெலாம் பார்வையும் இகந்துநீர்
பூத்த பூவுங் காயுமாய் பொருந்துவீர் பிறப்பிலே. 165

நெத்திபத்தி உழலுகின்ற நீலமா விளக்கினைப்
பத்தியொத்தி நின்றுநின்று பற்றறுத்தது என்பலன்
உற்றிருந்து பாரடா உள்ளொளிக்கு மேலொளி
அத்தனார் அமர்ந்திடம் அறிந்தவன் அனாதியே. 166

நீரையள்ளி நீரில்விட்டு நீ நினைத்த காரியம்
ஆரையுன்னி நீரெலாம் அவத்திலே இறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி விதத்திலே முளைத்தெழுந்த
சீரையுன்ன வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம். 167

நெற்றியில் தியங்குகின்ற நீலமா விளக்கினை
உய்த் துணர்ந்து பாரடா உள்ளிருந்த சோதியைப்
பத்தியில் தொடர்ந்தவர் பரமயம தானவர்
அத்தலத்தில் இருந்தபேர்கள் அவரெனக்கு நாதரே. 168

கருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்றது எவ்விடம்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்றது எவ்விடம்
அருள்தரிக்கு முன்னெலாம் ஆசைநின்றது எவ்விடம்
திருக்கறுத்துக் கொண்டதே சிவாய மென்று கூறுவீர். 169

கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்ற தேயுவில்
உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது அப்புவில்

அருள்தரிக்கு முன்னெலாம் ஆசைநின்ற வாயுவில்
திருக்கறுத்துக் கொண்டதே சிவாய மென்று கூறுமே. 170

தாதரான தாதரும் தலத்திலுள்ள சைவரும்
கூதரைப் பறைச்சிமக்கள் கூடிசெய்த காரியம்
வீதிபோகு ஞானியை விரைந்துகல் எறிந்ததும்
பாதகங்களாகவே பலித்ததே சிவாயமே. 171

ஓடியோடி பாவியழைத்து உள்ளங்கால் வெளுத்ததும்
பாவியான பூனைவந்து பாலிலே குதித்ததும் 172

பணிக்கன் வந்து பார்த்ததும் பாரமில்லை என்றதும்
இழையறுந்து போனதும் என்னமாயம் ஈசனே.

சதுரம்நாலு மறையும்எட்டு தானதங்கி மூன்றுமே
எதிரதான வாயுவாறு எண்ணும் வட்ட மேவியே
உதிரந்தான் வரைகள்எட்டும் எண்ணுமென் சிரசின்மேல்
கதிரதான காயகத்தில் கலந்தெழுந்த நாதமே. 173

நாலொடாறு பத்துமேல் நாலுமூன்றும் இட்டபின்
மேலுபத்து மாறுடன் மேதிரண்ட தொன்றுமே
கோலிஅஞ் செழுத்துளே குருவிருந்து கூறிடில்
தோலுமேனி நாதமாய்த் தோற்றிநின்ற கோசமே. 174

கோசமாய் எழுந்ததுங் கூடுருவி நின்றதும்
தேசமாய் பிறந்ததும் சிவாயம்அஞ் செழுத்துமே
ஈசனார் இருந்திடம் அனேகனேக மந்திரம்
ஆகமம் நிறைந்துநின்ற ஐம்பத்தோர் எழுத்துமே. 175

அங்கலிங்க பீடமாய் ஐயிரண்டு எழுத்திலும்
பொங்கு தாமரையினும் பொருந்துவார் அகத்தினும்
பங்குகொண்ட சோதியும் பரந்தஅஞ் செழுத்துமே
சிங்கநாதஓசையும் சிவாயமல்ல தில்லையே. 176

உவமையில்லாப் பேரொளிக்குள் உருவமானது எவ் விடம்
உவமையாகி அண்டத்துள் உருவிநின்றது எவ் விடம்
தவமதான பரமனார் தரித்துநின்றது எவ்விடம்
தற்பரத்தில் ஜலம்பிறந்து தாங்கிநின்றது எவ்விடம். 177

சுகமதாக எருதுமூன்று கன்றையீன்றது எவ்விடம்
சொல்லுகீழு லோகமேழும் நின்ற வாறது எவ்விடம்
அளவதான மேருவும் அமைவதானது எவ்விடம்
அவனுஅவளும்ஆடலால் அருஞ்சீவன் பிறந்ததே. 178

உதிக்குமென்றது எவ்விடம் ஒடுங்குகின்ற துஎவ்விடம்
கதிக்குநின்றது எவ்விடங் கன்றுறக்கம் எவ்விடம்
மதிக்கநின்றது எவ்விடம் மதிமயக்கம் எவ்விடம்
விதிக்க வல்ல ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 179

திரும்பியாடு வாசலெட்டு திறமுரைத்த வாசலெட்டு
மருங்கிலாத கோலமெட்டு வன்னியாடு வாசலெட்டு 180

துரும்பிலாத கோலமெட்டு கத்திவந்த மருளரே
அரும்பிலாத பூவும்உண்டு ஐயனாணை உண்மையே.

தானிருந்து மூலஅங்கி தணலெழுப்பு வாயுவால்
தேனிருந்து வரைதிறந்து தித்தியொன்று ஒத்தவே
வானிருந்த மதியமூன்று மண்டலம் புகுந்தபின்
ஊனிருந்த தளவுகொண்ட யோகிநல்ல யோகியே. 181

முத்தனாய் நினைந்தபோது முடிந்த அண்டத்துச்சிமேல்
பத்தனாரும் அம்மையும் பரிந்துஆடல் ஆடினார்
சித்தரான ஞானிகாள் தில்லையாடல் என்பீர்காள்
அத்தனாடல் உற்றபோது அடங்கலாடல் உற்றதே. 182

ஒன்றுமொன்றும் ஒன்றுமே உலகனைத்தும் ஒன்றுமே
அன்றுமின்றும் ஒன்றுமே அனாதியான தொன்றுமே
கன்றல்நின்று செம்பொனைக் களிம் பறுத்து நாட்டினால்
அன்றுதெய்வ ம்உம்முளே அறிந்ததே சிவாயமே. 183

நட்டதா வரங்களும் நவின்ற சாத்திரங்களும்
இட்டமான ஓமகுண்டம் இசைந்தநாலு வேதமும்
கட்டிவைத்த புத்தகம் கடும்பிதற்று இதற்கெலாம்
பொட்டதாய் முடிந்ததே பிரானையான் அறியவே. 184

வட்டமான கூட்டிலே வளர்ந்தெழுந்த அம்புலி
சட்டமீ படத்திலே சங்குசக் கரங்களாய்

விட்டதஞ்சு வாசலில் கதவினால் அடைத்தபின்
முட்டையில் எழுந்தசீவன் விட்டவாறது எங்ஙனே. 185

கோயில்பள்ளி ஏதடா குறித்துநின்றது ஏதடா
வாயினால் தொழுதுநின்ற மந்திரங்கள் ஏதடா
ஞாயமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்
காயமான பள்ளியிற் காணலாம் இறையையே. 186

நல்லவெள்ளி ஆறதாய் நயந்தசெம்பு நாலதாய்
கொல்லுநாகம் மூன்றதாக் குலாவு செம்பொன் இரண்ட தாய்
வில்லினோசை ஒன்றுடன் விளங்கஊத வல்லிரேல்
எல்லையொத்த சோதியானை எட்டுமாற்ற லாகுமே. 187

மனத்தகத்து அழுக்கறாத மவுனஞான யோகிகள்
வனத்தகத்து இருக்கினும் மனத்தகத்து அழுக்கறார் 188

மனத்தகத்து அழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத்து இருக்கினும் பிறப்பறுத்து இருப்பரே.

உருவுமல்ல ஒளியுமல்ல ஒன்றதாகி நின்றதே
மருவுமல்ல கந்தமல்ல மந்தநாடி உற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசுமாவி தானுமல்ல
அரியதாக நின்ற நேர்மை யாவர்காண வல்லிரே. 189

ஒரெழுத்து உலகெலாம் உதித்தஉட் சரத்துளே
ஈரெழுத்து இயம்புகின்ற இன்பமேது அறிகிலீர்
மூவெழுத்து மூவராய் மூண்டெழுந்த மூர்த்தியை
நாலெழுத்து நாவிலே நவின்றதே சிவாயமே. 190

ஆதியந்த மூலவிந்து நாதமைந்து பூதமாய்
ஆதியந்த மூலவிந்து நாதம்ஐந்து எழுத்துமாய்
ஆதியந்த மூலவிந்து நாதமேவி நின்றதும்
ஆதியந்த மூலவிந்து நாதமே சிவாயமே. 191

அன்னமிட்ட பேரெலாம் அனேககோடி வாழவே
சொன்னமிட்ட பேரெலாந் துரைத்தனங்கள் பண்ணலாம்
வின்னமிட்ட பேரெல்லாம் வீழ்வர்வெந் நரகிலே
கன்னமிட்ட பேரெலாம் கடந்துநின்ற திண்ணமே. 192

ஓதொணாமல் நின்ற நீர்உறக்கம்ஊணும்அற்றநீர்
சாதிபேதம் அற்றநீர் சங்கையன்றி நின்றநீர்
கோதிலாத அறிவிலே குறிப்புணர்ந்து நின்றநீர்
ஏதுமின்றி நின்ற நீர்இயங்குமாறது எங்ஙனே. 193

பிறந்தபோது கோவணம் இலங்குநூல் குடுமியும்
பிறந்ததுடன் பிறந்ததோ பிறங்கு நாள் சடங்கெலாம்
மறந்தநாலு வேதமும் மனத்துளே உதித்ததோ
நிலம்பிறந்து வானிடிந்து நின்ற தென்ன வல்லிரே. 194

துருத்தியுண்டு கொல்லருண்டு சொர்னமான சோதியுண்டு
திருத்தமாய் மனதிலுன்னித் திகழவூத வல்லிரேல்
பெருத்த தூணிலங்கியே பிழம்பதாய் விரிந்திடும்
நிருத்தமான சோதியும் நீயுமல்ல இல்லையே. 195

வேடமிட்டு மணிதுலக்கி மிக்கதூப தீபமாய்
ஆடறுத்து கூறுபோட்ட அவர்கள் போலும் பண்ணுநீர் 196

தேடிவைத்த செம்பெலாம் திரள்படப் பரப்பியே
போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையே.

முட்டுகண்ட தூமையின் முளைத்தெழுந்த சீவனை
கட்டுகொண்டு நின்றிடம் கடந்துநோக்க வல்லிரேல்
முட்டுமற்று கட்டுமற்று முடியினின்ற நாதனை
எட்டுதிக்கும் கையினால் இருத்தவீட தாகுமே. 197

அருக்கனோடு சோமனும் அதுக்கும் அப்புறத்திலே
நெருக்கியேறு தாரகை நெருங்கிநின்ற நேர்மையை
உருக்கியோர் எழுத்துளே ஒப்பிலாத வெளியிலே
இருக்கவல்ல பேரலோ இனிப்பிறப்பது இல்லையே. 198

மூலவட்ட மீதிலே முளைத்தஅஞ் செழுத்தின்மேல்
கோலவட்ட மூன்றுமாய் குலைந்தலைந்து நின்றநீர்
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞான மாகிலோ
ஏலவட்ட மாகியே யிருந்ததே சிவாயமே. 199

சுக்கிலத் திசையுளே சுரோணிதத்தின் வாசலுள்
முச்சதுரம் எட்டுளே மூலாதார அறையிலே

அச்சமற்ற சவ்வுளே அரியரன் அயனுமாய்
உச்சரிக்கு மந்திரம் உண்மையே சிவாயமே. 200

பூவுநீரு மென்மனம் பொருந்துகோயில் என்னுளம்
ஆவியோடு லிங்கமாய் அகண்டமெங்கு மாகிலும்
மேவுகின்ற ஐவரும் விளங்குதீப தீபமாய்
ஆடுகின்ற கூத்தனுக்கோர் அந்திசந்தி இல்லையே. 201

உருக்கலந்த பின்னலோ உன்னை நானறிந்தது
இருக்கிலென் மறக்கிலென் நினைந்திருந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயும்நானும் ஒன்றலோ
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே. 202

சிவாயம்அஞ் செழுத்திலே தெளிந்துதேவர் ஆகலாம்
சிவாயம்அஞ் செழுத்திலே தெளிந்துவானம் ஆளலாம்
சிவாயம்அஞ் செழுத்திலே தெளிந்துகொண்ட வான் பொருள்
சிவாயம்அஞ் செழுத்துளே தெளிந்து கொள்ளும் உண்மையே. 203

பொய்க்குடத்தில் ஐந்தொதுங்கி போகம்வீசு மாறுபோல்
இச்சடமும் இந்தியமும் நீருமேல் அலைந்ததே 204

அக்குடம் சலத்தை மொண்டு அமர்ந்திருந்த வாறுபோல்
இச்சடஞ் சிவத்தை மொண்டுகர்ந்துஅமர்ந் திருப்பதே.

பட்டமும் கயிறுபோல் பறக்க நின்ற சீவனை
பார்வையாலே பார்த்துநீ படுமுடிச்சி போடடா
திட்டவும் படாதடா சீவனை விடாதடா
கட்டடாநீ சிக்கெனக் களவறிந்த கள்ளனை. 205

அல்லிறந்து பகலிறந்து அகப்பிரமம் இறந்துபோய்
அண்டரண்ட முங்கடந்த அனேகனேக ரூபமாய்
சொல்லிறந்து மனமிறந்த சுகசொரூப உண்மையைச்
சொல்லியாற் என்னில் வேறு துணைவரில்லை ஆனதே. 206

ஐயிரண்டு திங்களாய் அடங்கிநின்ற தூமைதான்
கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டும் ஆகியே
மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும்
துய்யகாயம் ஆனதும் சொல்லுகின்ற தூமையே. 207

அங்கலிங்க பீடமும் அசைவமூன் றெழுத்தினும்
சங்குசக்க ரத்தினும் சகலவா னகத்தினும்
பங்குகொண்ட யோகிகள் பரமவாசல் அஞ்சினும்
சிங்கநாத ஓசையும் சிவாயமில்லது இல்லையே. 208

அஞ்செழுத்து மூன்றெழுத்தும் என்றுரைத்த வன்பர்காள்
அஞ்செழுத்து மூன்றெழுத்து ம்அல்லகாணும் அப்பொருள்
அஞ்செழுத்து நெஞ்செழுத்து அவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து அவ்வின்வண்ண மானதே சிவாயமே. 209

ஆதரித்த மந்திர ம்அமைந்தஆக மங்களும்
மாதர்மக்கள் சுற்றமும் மயக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ
சோதிபுக் கொளித்திடம் சொல்லடா சுவாமியே. 210

அக்கரம் அனாதியோ ஆத்துமா அனாதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களும் அனாதியோ
தக்கமிக்க நூல்களும் சதாசிவம் அனாதியோ
மிக்க வந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே. 211

ஒன்பதான வாசல்தான் ஒழியுநாள் இருக்கையில்
ஒன்பதாம் ராமராம ராமவென்னு நாமமே 212

வன்மமான பேர்கள் வாக்கில் வந்துநோய் அடைப்பராம்
அன்பரான பேர்கள் வாக்கில் ஆய்ந்தமைந்து இருப்பதே.

அள்ளிநீரை இட்டதே தகங்கையில் குழைத்ததேது
மெள்ளவே மிணமிணென்று விளம்புகின்ற மூடர்கள்
கள்ளவேடம் இட்டதேது கண்ணை மூடி விட்டதேது
மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பிடீர். 213

அன்னைகர்ப்பத் தூமையில் அவதரித்த சுக்கிலம்
முன்னையே தரித்ததும் பனித்துளிபோ லாகுமோ
உன்னிதொக் குளழலுந் தூமையுள்ளுளே அடங்கிடும்
பின்னையே பிறப்பதுந் தூமைகாணும் பித்தரே. 214

அழுக்கறத் தினங்குளித்து அழுக்கறாத மாந்தரே
அழுக்கிருந்த தவ்விடம் அழுக்கிலாதது எவ்விடம்

அழுக்கிருந்த அவ்விடத்து அழுக்கறுக்க வல்லிரேல்
அழுக்கிலாத சோதியோடு அணுகிவாழ லாகுமே. 215

அணுத்திரண்ட கண்டமாய் அனைத்துபல்லி யோனியாய்
மணுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்
சனிப்பதேது சாவதேது தாபரத்தின் ஊடுபோய்
நினைப்பதேது நிற்பதேது நீர்நினைந்து பாருமே. 216

ஆதியாகி அண்டரண்டம் அப்புறத்தும் அப்புறம்
சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை
பேதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகாள்
சாதிபேதம் என்பதொன்று சற்றுமில்லை இல்லையே. 217

ஆக்கைமுப்பது இல்லையே ஆதிகார ணத்திலே
நாக்குமுக்கை யுள்மடித்து நாதநாடி யூடுபோய்
ஏக்கறுத்தி ரெட்டையும் இறுக்கழுத்த வல்லிரேல்
பார்க்கப்பார்க்க திக்கெல்லாம் பரப்பிரம்மம் ஆகுமே. 218

அஞ்சுமஞ்சு மஞ்சுமஞ்சு மல்லல்செய்து நிற்பதும்
அஞ்சுமஞ்சு மஞ்சுமே அமர்ந்துளே இருப்பதும்
அஞ்சுமஞ்சு மஞ்சுமே ஆதரிக்க வல்லிரேல்
அஞ்சுமஞ்சு மும்முளே அமர்ந்ததே சிவாயமே. 219

அஞ்செழுத்தின் அனாதியாய் அமர்ந்துநின்றது ஏதடா
நெஞ்செழுத்தி நின்று கொண்டு நீசெபிப்பது ஏதடா 220

அஞ்செழுத்தின் வாளதால் அறுப்பதாவது ஏதடா
பிஞ்செழுத்தின் நேர்மைதான் பிரிந்துரைக்க வேண்டுமே.

உயிரிருந்தது எவ்விடம் உடம்பெடுத்த தின்முனம்
உயிரதாவது ஏதடா உடம்பதாவது ஏதடா
உயிரையும் உடம்பையு ம்ஒன்றுவிப்பது ஏதடா
உயிரினால் உடம் பெடுத்த உண்மைஞானி சொல்லடா. 221

சுழித்தவோர் எழுத்தையுஞ் சொன்முகத்து இருத்தியே
துன்பவின்ப முங்கடந்து சொல்லுமூல நாடிகள்
அழுத்தமான வக்கரம் அடங்கியுள் எழுப்பியே
ஆறுபங்கயம் கலந் தப்புறத் தலத்துளே. 222

உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்புகுந்து நாதமும்
கருத்தரிப்ப தற்குமுன் காயமென்ன சோணிதம்
அருள்தரிப்ப தற்குமுன் அறிவுமூலா தாரமாம்
குருத்தறிந்து கொள்ளுவீர் குணங்கெடுங் குருக்களே. 223

எங்குமுள்ள ஈசனார் எம்முடல் புகுந்தபின்
பங்குகூறு பேசுவார் பாடுசென்றுஅ ணுகிலார்
எங்கள் தெய்வம்உங்கள் தெய்வ மென்றிரண்டு பேதமோ
உங்கள் பேதம் அன்றியே உண்மைஇரண்டும் இல்லையே. 224

அரியுமாகி அயனுமாகி அண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி உலகுதன்னில் நின்றபாத மொன்றலோ
விரிவதென்று வேறுசெய்து வேடமிட்ட மூடரே
அறிவினோடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே. 225

வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்
சிந்தையுள் நினைந்துமே தினஞ்செபிக்கு மந்திரம்
முந்த மந்திரத்திலோ மூல மந்திரத்திலோ
எந்த மந்திரத்திலோ ஈசன்வந்து இயங்குமே. 226

அகாரகா ரணத்திலே அனேகனேக ரூபமாய்
உகாரகா ரணத்திலே உருத்தரித்து நின்றனன்
மகாரகா ரணத்திலே மயங்குகின்ற வையகம்
சிகாரகா ரணத்திலோ தெளிந்ததே சிவாயமே. 227

அவ்வெழுத்தில் உவ்வுவந்த காரமுஞ் சனித்ததோ
உவ்வெழுத்து மவ்வெழுத்து மொன்றை யொன்றி நின்றதோ 228

செவ்வையொத்து நின்றலோ சிவபதங்கள் சேரினும்
மிவ்வை யொத்த ஞானிகாள் விரித்து ரைக்க வேணுமே.

ஆதியான அஞ்சிலும் அனாதியான நாலிலும்
சோதியான மூன்றிலும் சொரூபமற்ற ரெண்டிலும்
நீதியான தொன்றிலே நிறைந்துநின்ற வஸ்துவை
ஆதியான தொன்றுமே அற்றதஞ் செழுத்துமே. 229

வானிலாத தொன்றுமில்லை வானுமில்லை வானிடில்
ஊனிலாத தொன்றுமில்லை ஊனுமில்லை ஊனிடில்

நானிலாத தொன்றுமில்லை நானுமில்லை நண்ணிடில்
தானிலாத தொன்றுமே தயங்கியாடு கின்றதே. 230

சுழித்ததோர்எழுத்தையுன்னி சொல் முகத்திருத்தியே
துன்பஇன்ப முங்கடந்து சொல்லும்நாடி யூடுபோய்
அழுத்தமான வக்கரத்தின் அங்கியை எழுப்பியே
ஆறுபங்கயங் கடந் தப்புறத்து வெளியிலே. 231

விழித்தகண் குவித்தபோது அடைந்து போயெழுத்தெலாம்
விளைத்துவிட்ட இந்திரசால வீடதான வெளியிலே
அழுத்தினாலு மதிமயங்கி அனுபவிக்கும் வேளையில்
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை ஆனதே. 232

நல்லமஞ் சனங்கள்தேடி நாடிநாடி ஓடுறீர்
நல்லமஞ் சனங்களுண்டு நாதனுண்டு நம்முளே
எல்லமஞ் சனங்கள் தேடி ஏக பூசை பண்ணினால்
தில்லைமேவும் சீவனும் சிவபதத்துள் ஆடுமே. 233

உயிரகத்தில் நின்றிடும் உடம்பெடுத்த தற்குமுன்
உயிரகாரம் ஆயிடும் உடலுகாரம் ஆயிடும்
உயிரையும் உடம்பையும் ஒன்றுவிப்ப தச்சிவம்
உயிரினால் உடம்புதான் எடுத்தவாறு உரைக்கிறேன். 234

அண்டமேழும் உழலவே அணிந்த யோனி உழலவே
பண்டுமால் அயனுடன் பரந்துநின்று உழலவே
எண்டிசை கடந்துநின்ற இருண்டசத்தியு உழலவே
அண்டரண்டம் ஒன்றதாய் ஆதிநட்டம் ஆடுமே. 235

உருவநீர் உறுப்புகொண்டு உருத்தரித்து வைத்திடும்
பெரியபாதை பேசுமோ பிசாசையொத்த மூடரே 236

கரியமாலும் அயனுமாக காணொணாத கடவுளை
உரிமையாக வும்முளே உணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள் அதென்றுநீர்
எண்ணமுற்றும் என்னபே ருரைக்கிறீர்கள் ஏழைகாள்
பண்ணவும் படைக்கவும் படைத்துவைத் தளிக்கவும்
ஒண்ணுமாகி உலகளித்த வொன்றை நெஞ்சிலுன்னுமே. 237

நாலதான யோனியுள் நவின்றவிந்தும் ஒன்றதாய்
ஆலதான வித்துளே அமர்ந்தொடுங்கு மாறுபோல்
சூலதான உற்பனம் சொல்வதான மந்திரம்
மேலதான ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 238

அருவமா யிருந்தபோது அன்னையங்கு அறிந்திலை
உருவமா யிருந்தபோது உன்னைநா னறிந்தனன்
குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்
பருவமான போதலோ பரப்பிரம்ம மானதே. 239

பிறப்பதும் இறப்பதும் பிறந்திடா திருப்பதும்
மறப்பதும் நினைப்பதும் மறந்ததைத் தெளிந்ததும்
துறப்பதும் தொடுப்பதும் சுகித்துவாரி உண்பதும்
பிறப்பதும் இறப்பதும் பிறந்தவீட டங்குமே. 240

கண்ணிலே யிருப்பனே கருங்கடல் கடைந்தமால்
விண்ணிலே யிருப்பனே மேவியங்கு நிற்பனே
தன்னுளே யிருப்பனே தராதலம் படைத்தவன்
என்னுளே யிருப்பனே எங்குமாகி நிற்பனே. 241

ஆடுநாடு தேடினும் ஆனைசேனை தேடினும்
கோடிவாசி தேடினும் குறுக்கேவந்து நிற்குமோ
ஓடியிட்ட பிச்சையும் உகந்து செய்த தர்மமும்
சாடிவிட்ட குதிரைபோல் தர்மம் வந்து நிற்குமே. 242

எள்ளிரும்பு கம்பிளி யிடும்பருத்தி வெண்கலம்
அள்ளியுண்ட நாதனுக்கோர் ஆடைமாடை வஸ்திரம்
உள்ளிருக்கும் வேதியர்க்கு உற்றதான மீதிரால்
மெள்ளவந்து நோயனைத்து மீண்டிடுஞ் சிவாயமே. 243

ஊரிலுள்ள மனிதர்காள் ஒருமனதாய்க் கூடியே
தேரிலே வடத்தையிட்டு செம்பைவைத் திழுக்கிறீர் 244

ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரை
பேதையான மனிதர் பண்ணும் பிரளிபாரும் பாருமே.

மருள் புகுந்த சிந்தையால் மயங்குகின்ற மாந்தரே
குருக்கொடுத்த மந்திரம் கொண்டுநீந்த வல்லிரேல்

குருக்கொடுத்த தொண்டரும் குகனொடிந்த பிள்ளையும்
பருத்திபட்ட பன்னிரண்டு பாடுதான் படுவரே. 245

அன்னைகர்ப்ப அறையதற்குள் அங்கியின் பிரகாசமாய்
அந்தறைக்குள் வந்திருந்து அரியவிந்து ரூபமாய்
தன்னையொத்து நின்றபோது தடையறுத்து வெளியதாய்
தங்கநற் பெருமைதந்து தலைவனாய் வளர்ந்ததே. 246

உன்னையற்ப நேரமும் மறந்திருக்க லாகுமோ
உள்ளமீது உறைந்தெனை மறப்பிலாத சோதியை
பொன்னைவென்ற பேரொளிப் பொருவிலாத ஈசனே
பொன்னடிப் பிறப்பிலாமை யென்று நல்கவேணுமே. 247

பிடித்ததெண்டும் உம்மதோ பிரமமான பித்தர்காள்
தடித்தகோல மத்தைவிட்டு சாதிபேதங் கொண்மினோ
வடித்திருந்த தோர்சிவத்தை வாய்மைகூற வல்லிரேல்
திடுக்கமுற்ற ஈசனைச் சென்றுகூட லாகுமே. 248

சத்திநீ தயவுநீ தயங்குசங்கின் ஓசைநீ
சித்திநீ சிவனுநீ சிவாயமாம் எழுத்துநீ
முத்திநீ முதலுநீ மூவரான தேவர்நீ
அத்திறமும் உம்முளே அறிந்துணர்ந்து கொள்ளுமே. 249

சட்டையிட்டு மணிதுலங்கும் சாத்திரச் சழக்கரே
பொஸ்தகத்தை மெத்தவைத்து போதமோதும் பொய்யரே
நிட்டையேது ஞானமேது நீரிருந்த அக்ஷரம்
பட்டையேது சொல்லிரே பாதகக் கபடரே. 250

உண்மையான சுக்கிலம் உபாயமாய் இருந்ததும்
வெண்மையாகி நீரிலே விரைந்து நீர தானதும்
தண்மையான காயமே தரித்துருவ மானதும்
தெண்மையான ஞானிகாள் தெளிந்துரைக்க வேணுமே. 251

வஞ்சகப் பிறவியை மனத்துளே விரும்பியே
அஞ்செழுத்தின் உண்மையை அறிவிலாத மாந்தர்காள் 252

வஞ்சகப் பிறவியை வதைத்திடவும் வல்லிரேல்
அஞ் செழுத்தின் உண்மையை அறிந்துகொள்ள லாகுமே.

காயிலாத சோலையில் கனியுகந்த வண்டுகாள்
ஈயிலாத தேனையுண்டு இராப்பகல் உறங்குறீர்
பாயிலாத கப்பலேறி அக்கரைப் படுமுனே
வாயினால் உரைப்பதாகு மோமவுன ஞானமே. 253

பேய்கள்பேய்க ளென்கிறீர் பிதற்றுகின்ற பேயர்காள்
பேய்கள்பூசை கொள்ளுமோ பிடாரிபூசை கொள்ளுமோ
ஆதிபூசை கொள்ளுமோ அனாதிபூசை கொள்ளுமோ
காயமான பேயலோ கணக்கறிந்து கொண்டதே. 254

மூலமண்ட லத்திலே முச்சதுர மாதியாய்
நாலுவாசல் எம்பிரான் நடுவுதித்த மந்திரம்
கோலிஎட் டிதழுமாய் குளிர்ந்தலர்ந்த திட்டமாய்
மேலும்வேறு காண்கிலேன் விளைந்ததே சிவாயமே. 255

ஆதிகூடு நாடியோடி காலைமாலை நீரிலே
சோதிமூல மானநாடி சொல்லிறந்த தூவெளி
ஆதிகூடி நெற்பறித்த காரமாதி ஆகமம்
பேதபேத மாகியே பிறந்துடல் இறந்ததே. 256

பாங்கினோ டிருந்துகொண்டு பரமன்அஞ் செழுத்துளே
ஓங்கிநாடி மேலிருந்து உச்சரித்த மந்திரம்
மூங்கில் வெட்டி நாருரித்து மூச்சில்செய் விதத்தினில்
ஆய்ந்தநூலில் தோன்றுமே அறிந்துணர்ந்து கொள்ளுமே. 257

பண்டரீக மத்தியில் உதித்தெழுந்த சோதியை
மண்டலங்கள் மூன்றினோடு மன்னுகின்ற மாயனை
அண்டரண்டம் ஊடறுத்து அறிந்துணர வல்லிரேல்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே. 258

அம்பலங்கள் சந்தியில் ஆடுகின்ற வம்பனே
அன்பனுக்குள் அன்பனாய் நிற்பன்ஆதி வீரனே
அன்பருக்குள் அன்பராய் நின்றஆதி நாயனே
உன்பருக்கு உண்மையாய் நின்றவுண்மை உண்மையே. 259

அண்ண லாவது ஏதடா அறிந்துரைத்த மந்திரம்
தண்ண லான வந்தவன் சகலபுராணங் கற்றவன்

கண்ண னாக வந்தவன் காரணத் துதித்தவன்
ஒண்ண தாவது ஏதடா உண்மையான மந்திரம். 260

உள்ளதோ புறம்பதோ உயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேணும் என்கிறீர்
உள்ளதும் புறம்பதும் ஒத்தபோது நாதமாம்
கள்ள வாசலைத் திறந்து காணவேணும் அப்பனே. 261

ஆரலைந்து பூதமாய் அளவிடாத யோனியும்
பாரமான தேவரும் பழுதிலாத பாசமும்
ஓரொணாத அண்டமும் உலோகலோக லோகமும்
சேரவந்து போயிந்த தேகமேது செப்புமே. 262

என்னகத்துள் என்னை நானெங்குநாடி ஓடினேன்
என்னகத்துள் என்னை நானறிந்திலாத தாகையால்
என்னகத்துள் என்னை நானறிந்துமே தெரிந்தபின்
என்னகத்துள் என்னையன்றி யாது மொன்றுமில்லையே. 263

விண்ணினின்று மின்னெழுந்து மின்னொடுங்கும் ஆறுபோல்
என்னுள் நின்று எண்ணுமீச ன்என்ன கத்துஇருக்கையில்
கண்ணினின்று கண்ணில் தோன்றும் கண்ணறிவி லாமையால்
என்னுள்நின்ற என்னையும் யானறிந்த தில்லையே. 264

அடக்கினும் அடக்கொணாத அம்பலத்தின் ஊடுபோய்
அடக்கினிம் அடக்கொணாத அன்புருக்கும் ஒன்றுளே
கிடக்கினும் இருக்கினுங் கிலேசம் வந்திருக்கினும்
நடக்கினும் இடைவிடாத நாதசங்கு ஒலிக்குமே. 265

மட்டுலாவு தண்டுழாய் அலங்கலாய் புனற்கழல்
விட்டுவீழில் தாகபோக விண்ணில் கண்ணில் வெளியினும்
எட்டினோடு இரண்டினும் இதத்தினால் மனந்தனைக்
கட்டிவீடி லாதுவைத்த காதலின்பம் ஆகுமே. 266

ஏகமுத்தி மூன்றுமுத்தி நாலுமுத்தி நன்மைசேர்
போகமுற்றி புண்ணியத்தில் முத்தியன்றி முத்தியாய்
நாகமுற்ற சயனமாய் நலங்கடல் கடந்ததீ
யாகமுற்றி யாகிநின்ற தென்கொலாதி தேவனே. 267

மூன்றுமுப்பத்து ஆறினோடு மூன்றுமூன்று மாயமாய்
மூன்றுமுத்தி ஆகிமூன்று மூன்று மூன்று மூன்றுமாய்
தோன்றுசோதி மூன்றதாய் துலக்கமில் விளக்கதாய்
ஏன்றனாவின் உள்புகுந்த தென்கொலோ நம்ஈசனே. 268

ஐந்தும்ஐந்தும் ஐந்துமாய் அல்லவத்துள் ஆயுமாய்
ஐந்துமூன்றும் ஒன்றுமாகி நின்றஆதி தேவனே
ஐந்தும்ஐந்தும் ஐந்துமாய் அமைந்தனைத்து நின்றநீ
ஐந்தும்ஐந்தும் ஆயநின்னை யாவர்காண வல்லரே. 269

ஆறும்ஆறும்ஆறுமாய் ஓரைந்துமைந்தும் ஐந்துமாய்
ஏறுசீரிரண்டுமூன்றும் ஏழும்ஆறும் எட்டுமாய்
வேறுவேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்
ஊறுமோசை யாய்அமர்ந்த மாயமாய மாயனே. 270

எட்டும்எட்டும் எட்டுமாய் ஓரேழும்ஏழும் ஏழுமாய்
எட்டுமூன்றும் ஒன்றுமாகி நின்றஆதி தேவனே
எட்டுமாய பாதமோடு இறைஞ்சிநின்ற வண்ணமே
எட்டெழுத்தும் ஓதுவார்கள் அல்லல்நீங்கி நிற்பரே. 271

பத்தினோடு பத்துமாய் ஓரேழினோடும் ஒன்பதாய்
பத்துநாற் திசைக்குள்நின்ற நாடுபெற்ற நன்மையா
பத்துமாய் கொத்தமோடும் அத்தலமிக் காதிமால்
பத்தர்கட்க லாதுமுத்தி முத்திமுத்தி யாகுமே. 272

வாசியாகி நேசமொன்றி வந்தெதிர்ந்த தென்னுக
நேசமாக நாளுலாவ நன்மைசேர் பவங்களில்
வீசிமேல் நிமிர்ந்ததோளி யில்லையாக்கி னாய்கழல்
ஆசையால் மறக்கலாது அமரராகல் ஆகுமே. 273

எளியதான காயமீது எம்பிரான் இருப்பிடம்
அளிவுறாது நின்றதே அகாரமும் உகாரமும்
கொளுகையான சோதியுங் குலாவிநின்றது அவ்விடம்
வெளியதாகும் ஒன்றிலே விளைந்ததே சிவாயமே. 274

அஞ்செழுத்து மூன்றெழுத்தும் என்றுரைக்கும் அன்பர்காள்
அஞ்செழுத்து மூன்றெழுத்தும் அல்ல காணு மப்பொருள்

அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி அவ்வெழுத்தை அறிந்தபின்
அஞ்செழுத்து மூன்றெழுத்தும் அவ்வுபாயஞ் சிவாயமே. 275

பொய்யுரைக்க போதமென்று பொய்யருக் கிருக்கையால்
மெய்யுரைக்க வேண்டுதில்லை மெய்யர்மெய்க் கிலாமையால்
வையகத்தில் உண்மைதன்னை வாய்திறக்க அஞ்சினேன்
நையவைத்தது என்கொலோ நமசிவாய நாதனே. 276

ஒன்றையொன்று கொன்றுகூட உணவுசெய் திருக்கினும்
மன்றினூடு பொய்களவு மாறுவேறு செய்யினும்
பன்றிதேடும் ஈசனைப் பரிந்துகூட வல்லிரேல்
அன்றுதேவர் உம்முளே அறிந்துணர்ந்து கொள்ளுமே. 277

மச்சகத்துளே இவர்ந்து மாயைபேசும் வாயுவை
அச்சகத் துளேயிருந்து அறிவுணர்த்திக் கொள்விரேல்
அச்சகத் துளேயிருந்து அறிவுணர்த்தி கொண்டபின்
இச்சையற்ற எம்பிரான் எங்குமாகி நிற்பனே. 278

வயலிலே முளைத்த செந்நெல் களையதான வாறுபோல்
உலகினோரும் வண்மைகூறில் உய்யுமாற துஎங்ஙனே
விரகிலே முளைத்தெழுந்த மெய்யலாது பொய்யதாய்
நரகிலே பிறந்திருந்து நாடுபட்ட பாடதே. 279

ஆடுகின்ற எம்பிரானை அங்குமெங்கும் என்றுநீர்
தேடுகின்ற பாவிகாள் தெளிந்த தொன்றை ஓர்கிலீர்
காடுநாடு வீடுவீண் கலந்துநின்ற கள்வனை
நாடியோடி உம்முளே நயந்துணர்ந்து பாருமே. 280

ஆடுகின்ற அண்டர் கூடும் அப்புற மதிப்புறம்
தேடுநாலு வேதமும் தேவரான மூவரும்
நீடுவாழி பூதமும் நின்றதோர் நிலைகளும்
ஆடுவாழின் ஒழியலா தனைத்துமில்லை இல்லையே. 281

ஆவதும் பரத்துளே அழிவதும் பரத்துளே
போவதும் பரத்துளே புகுவதும் பரத்துளே
தேவரும் பரத்துளே திசைகளும் பரத்துளே
யாவரும் பரத்துளே யானும்அப் பரத்துளே. 282

ஏழுபார் ஏழுகடல் இபங்களெட்டு வெற்புடன்
சூழுவான் கிரிகடந்து சொல்லும் ஏழுலகமும்
ஆழிமால் விசும்புகொள் பிரமாண்டரண்ட அண்டமும்
ஊழியான் ஒளிக்குளே உதித்துடன் ஒடுங்குமே. 283

கயத்துநீர் இறைக்கிறீர் கைகள் சோர்ந்து நிற்பதேன்
மனத்துள்ஈரம் ஒன்றிலாத மதியிலாத மாந்தர்காள்
அகத்துள்ஈரங் கொண்டுநீர் அழுக்கறுக்க வல்லிரேல்
நினைத்திருந்த வோதியும் நீயும்நானும் ஒன்றலோ. 284

நீரிலே பிறந்திருந்து நீர்சடங்கு செய்கிறீர்
ஆரையுன்னி நீரெலாம் அவத்திலே இறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழும்
சீரையுன்ன வல்லிரேல் சிவபதம் அடைவிரே. 285

பத்தொடொத்த வாசலில் பரந்துமூல வக்கர
முத்திசித்தி தொந்தமென்று இயங்குகின்ற மூலமே
மத்தசித்த ஐம்புலன் மகாரமான கூத்தையே
அத்தியூரர் தம்முளே அமைந்ததே சிவாயமே. 286

அணுவினோடும் உண்டமாய் அளவிடாத சோதியை
குணமதாகி உம்முளே குறித்திருக்கின் முத்தியாம்
முணமுணென்று உம்முளே விரலையொன்றி மீளவும்
தினந்தினம் மயக்குவீர் செம்புபூசை பண்ணியே. 287

மூலமான அக்கர முகப்பதற்கு முன்னெலாம்
மூடமாக மூடுகின்ற மூடமேது மூடரே
காலனான அஞ்சுபூதம் அஞ்சிலே ஒடுங்கினால்
ஆதியோடு கூடுமோ அனாதியோடு கூடுமோ. 288

முச்சதுர மூலமாகி முடிவுமாகி ஏகமாய்
அச்சதுர மாகியே அடங்கியோர் எழுத்துமாய்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரிக்கு மந்திரத்தின் உண்மையே சிவாயமே. 289

வண்டலங்கள் போலுநீர் மனத்துமாசு அறுக்கிலீர்
குண்டலங்கள் போலுநீர் குளத்திலே முழுகிறீர்

பண்டும்உங்கள் நான்முகன் பறந்துதேடி காண்கிலான்
கண்டிருக்கும் உம்முளே கலந்திருப்பர் காணுமே. 290

நின்றதன்று இருந்ததன்று நேரிதன்று கூரிதன்று
பந்தமன்று வீடுமன்று பாவகங்கள் அற்றது
கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே
அந்தமின்றி நின்றதொன்றை எங்ஙனே உரைப்பதே. 291

பொருந்துநீரும் உம்முளே புகுந்துநின்ற காரணம்
எருதிரண்டு கன்றைஈன்ற வேகமொன்றை ஓர்கிலீர்
அருகிருந்து சாவுகின்ற யாவையும் அறிந்திலீர்
குருவிருந்த உலாவுகின்ற கோலமென்ன கோலமே. 292

அம்பரத்துள் ஆடுகின்ற அஞ்செழுத்து நீயலோ
சிம்புளாய்பரந்துநின்ற சிற்பரமும் நீயலோ
எம்பிரானும் எவ்வுயிர்க்கும் ஏகபோக மாதலால்
எம்பிரானும் நானுமாய் இருந்ததே சிவாயமே. 293

ஈரொளிய திங்களே இயங்கிநின்றது அப்புறம்
பேரொளிய திங்களே யாவரும் அறிகிலீர்
காரொளிப் படலமுங் கடந்துபோன தற்பரம்
பேரொளிப் பெரும்பதம் ஏகநாத பாதமே. 294

கொள்ளொணாது மெல்லொணாது கோதறக் குதட்டொணா
தள்ளொணாது அணுகொணாது ஆகலான் மனத் துளே
தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தின்உட்பயன்
விள்ளொணாத பொருளைநான் விளம்பு மாறது எங்ஙனே. 295

வாக்கினால் மனத்தினால் மதித்தகார ணத்தினால்,
நோக்கொணாத நோக்கையுன்னி நோக்கையாவர் நோக்குவார்,
நோக்கொணாத நோக்குவந்து நோக்க நோக்க நோக்கிடில்,
நோக்கொணாத நோக்குவந்து நோக்கைஎங்கண் நோக்குமே. 296

உள்ளினும் புறம்பினும் உலகம்எங்க ணும்பரந்து
எள்ளில் எண்ணெய்போலநின்று இயங்கு கின்ற எம்பிரான்
மெள்ளவந்து என்னுட்புகுந்த மெய்த்தவம் புரிந்தபின்
வள்ளலென்ன வள்ளலுக்கு வண்ணமென்ன வண்ணமே. 297

வேதமொன்று கண்டிலேன் வெம்பிறப்பு இலாமையால்
போதம்நின்ற வடிவதாய்ப் புவனமெங்கும் ஆயினாய்
சோதியுள் ஒளியுமாய்த் துரியமோடு அதீதமாய்
ஆதிமூலம் ஆதியாய் அமைந்ததே சிவாயமே. 298

சாணிரு மடங்கினால் சரிந்த கொண்டை தன்னுளே
பேணியப் பதிக்குளே பிறந்திறந்து உழலுவீர்
தோணியான ஐவரைத் துறந்தறுக்க வல்லிரேல்
காணிகண்டு கோடியாய்க் கலந்ததே சிவாயமே. 299

அஞ்சுகோடி மந்திரம் அஞ்சுளே அடங்கினால்
நெஞ்சுகூற உம்முளே நினைப்பதோர் எழுத்துளே
அஞ்சுநாலு மூன்றதாகி உம்முளே அடங்கினால்
அஞ்சுமோர் எழுத்ததாய் அமைந்ததே சிவாயமே. 300

அக்கரந்த அக்கரத்தில் உட்கரந்த அக்கரம்
சக்கரத்து சிவ்வையுண்டு சம்புளத் திருந்ததும்
எள்கரந்த வெண்ணெய்போல் எவ்வெழுத்தும் எம்பிரான்
உள்கரந்து நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 301

ஆகமத்தின் உட்பொருள் அகண்டமூல ம்ஆதலால்
தாகபோகம் அன்றியே தரித்ததற் பரமும்நீ
ஏகபாதம் வைத்தனை உணர்த்தும்அஞ் செழுத்துளே
ஏகபோகம் ஆகியே இருந்ததே சிவாயமே. 302

மூலவாசல் மீதுளே முச்சதுர மாகியே
நாலுவாசல் எண்விரல் நடுவுதித்த மந்திரம்
கோலமொன்று மஞ்சுமாகும் இங்கலைந்து நின்றநீ
வேறுவேறு கண்டிலேன் விளைந்ததே சிவாயமே. 303

சுக்கிலத் தடியுளே சுழித்ததோர் எழுத்துளே
அக்கரத் தடியுளே அமர்ந்தவாதி சோதிநீ
உக்கரத் தடியுளே உணர்ந்தஅஞ் செழுத்துளே
அக்கரம் அதாகியே அமர்ந்ததே சிவாயமே. 304

குண்டலத்து ளேயுளே குறித்தகத்து நாயகன்
கண்டவந்த மண்டலம் கருத்தழித்த கூத்தனை

விண்டலர்ந்த சந்திரன் விளங்குகின்ற மெய்ப்பொருள்
கண்டுகொண்ட மண்டலம் சிவாயமல்லது இல்லையே. 305

சுற்றமைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியும் சிவனுமாக நின்றதன்மை ஓர்கிலீர்
சத்தியாவதுஉம்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்திலீர் பிரானிருந்த கோலமே. 306

மூலமென்ற மந்திரம் முளைத்தஅஞ் செழுத்துளே
நாலுவேதம் நாவுளே நவின்றஞான மெய்யுளே
ஆலமுண்ட கண்டனும் அரிஅயனும் ஆதலால்
ஓலமென்ற மந்திரம் சிவாயமல்லது இல்லையே. 307

தத்துவங்கள் என்றுநீர் தமைக்கடிந்து போவிர்காள்
தத்துவம் சிவமதாகில் தற்பரமு நீரல்லோ
முத்திசீவ னாதமே மூலபாதம் வைத்தபின்
அத்தனாரும் உம்முளே அறிந்துணர்ந்து கொள்ளுமே. 308

மூன்றுபத்து மூன்றையும் முன்றுசொன்ன மூலனே
தோன்றுசேர ஞானிகாள் துய்யபாதம் என்றலை
ஏன்றுவைத்த வைத்தபின் இயம்பும்அஞ் செழுத்தையும்
தோன்றவோத வல்லிரேல் துய்யசோதி காணுமே. 309

உம்பர்வான கத்தினும் உலகுபாரம் ஏழினும்
நம்பர்நாடு தன்னிலும் நாவலென்ற தீவினும்
செம்பொன்மாட மல்குதில்லை அம்பலத்துள் ஆடுவான்
எம்பிரான் அலாதுதெய்வம் இல்லையில்லை இல்லையே. 310

பூவிலாய ஐந்துமாய் புனலில்நின்ற நான்குமாய்
தீயிலாய மூன்றுமாய் சிறந்தகால் இரண்டுமாய்
வேயிலாய தொன்றுமாய் வேறு வேறு தன்மையாய்
நீயலாமல் நின்றநேர்மை யாவர்காண வல்லரே. 311

அந்தரத்தில் ஒன்றுமாய் அசைவுகால் இரண்டுமாய்
செந்தழலில் மூன்றுமாய்ச் சிறந்தவப்பு நான்குமாய்
ஐந்துபாரில் ஐந்துமாய் அமர்ந்திருந்த நாதனை
சிந்தையில் தெளிந்தமாயை யாவர்காண வல்லரே. 312

மனவிகார மற்றுநீர் மதித்திருக்க வல்லிரேல்
நினைவிலாத மணிவிளக்கு நித்தமாகி நின்றிடும்
அனைவரோதும் வேதமும் அகம்பிதற்ற வேணுமேல்
கனவுகண்டது உண்மைநீர் தெளிந்ததே சிவாயமே. 313

இட்டகுண்டம் ஏதடா இருக்குவேதம் ஏதடா
சுட்டமண் கலத்திலே சுற்றுநூல்கள் ஏதடா
முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியை
பற்றிநின்றது ஏதடா பட்டநாத பட்டரே. 314

நீரிலே முளைத்தெழுந்த தாமரையின்ஓரிலை
நீரினோடு கூடிநின்றும் நீரிலாத வாறுபோல்
பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்
பாரினோடு கூடிநின்ற பண்புகண்டு இருப்பிரே. 315

உறங்கிலென் விழிக்கிலென்உணர்வுசென் றொடுங்கி லென்,
சிறந்தஐம் புலன்களும் திசைத்திசைகள் ஒன்றிலென்,
புறம்புமுள்ளும் எங்கணும் பொருந்திருந்த தேகமாய்,
நிறைந்திருந்த ஞானிகாள் நினைப்பதேனும் இல்லையே. 316

ஓதுவார்கள் ஓதுகின்ற ஓர்எழுத்தும் ஒன்றதே
வேதமென்ற தேகமாய் விளம்புகின்ற தன்றிது
நாதமொன்று நான்முகன் மாலும்நானும் ஒன்றதே
ஏதுமன்றி நின்றதொன்றை யானுணர்ந்த நேர்மையே. 317

பொங்கியே தரித்தஅச்சு புண்டரீக வெளியிலே
தங்கியே தரித்தபோது தாதுமாது ளையதாம்
அங்கியுள் சரித்தபோது வடிவுகள் ஒளியுமாய்
கொம்புமேல் வடிவுகொண்டு குருவிருந்த கோலமே. 318

மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாது எங்ஙனில்
கண்ணினோடு சோதிபோல் கலந்தநாத விந்துவும்
அண்ணலோடு சத்தியும் அஞ்சுபஞ்சு பூதமும்
பண்ணினோடு கொடுத்தழிப் பாரொடேழும் இன்றுமே. 319

ஒடுக்குகின்ற சோதியும் உந்திநின்ற ஒருவனும்
நடுத்தலத்தில் ஒருவனும் நடந்துகாலில் ஏறியே

விடுத்துநின்ற இருவரோடு மெய்யினோடு பொய்யுமாய்
அடுத்துநின்று அறிமினோ அனாதிநின்ற ஆதியே. 320

உதித்தமந் திரத்தினும் ஒடுங்குமக் கரத்தினும்
மதித்தமண் டலத்தினும் மறைந்துநின்ற சோதிநீ
மதித்தமண் டலத்துளே மரித்துநீ ரிருந்தபின்
சிரித்தமண் டலத்துளே சிறந்ததே சிவாயமே. 321

திருத்திவைத்த சற்குருவைச் சீர்பெற வணங்கிலீர்
குருக்கொடுக்கும் பித்தரே கொண்டு நீந்த வல்லிரோ
குருக்கொடுக்கும் பித்தரும் குருக்கொள் வந்தசீடனும்
பருத்திட்ட பாடுதான் பன்னிரண்டும் பட்டதே. 322

விழித்தகண் துதிக்கவும் விந்துநாத ஓசையும்
மேருவுங் கடந்தஅண்ட கோளமுங் கடந்துபோய்
எழுத்தெலாம் அறிந்துவிட்ட இந்திரஞால வெளியிலே
யானுநீயு மேகலந்த தென்ன தொன்மை ஈசனே. 323

ஓம்நமோ என்றுளே பாவையென்று அறிந்தபின்
பானுடல் கருத்துளே பாவையென்று அறிந்தபின்
நானுநீயும் உண்டடா நலங்குலம் அதுண்டடா
ஊனுமூணும் ஒன்றுமே உணந்திடாய் எனக்குளே. 324

ஐம்புலனை வென்றவர்க்கு அன்னதானம் ஈவதால்
நம்புலன்க ளாகிநின்ற நாதருக்க தேறுமோ
ஐம்புலனை வென்றிடா தவத்தமே உழன்றிடும்
வம்பருக்கும் ஈவதுங் கொடுப்பதும் அவத்தமே. 325

ஆணியான ஐம்புலன்கள் அவையுமொக்குள் ஒக்குமோ
யோனியில் பிறந்திருந்த துன்பமிக்கு மொக்குமோ
வீணர்காள் பிதற்றுவீர் மெய்ம்மையே உணர்திரேல்
ஊணுறக்க போகமும் உமக் கெனக்கும் ஒக்குமே. 326

ஓடுகின்ற ஐம்புலன் ஒடுங்கஅஞ் செழுத்துளே
நாடுகின்ற நான்மறை நவிலுகின்ற ஞானிகாள்
கூடுகின்ற கண்டித குணங்கள் மூன் றெழுத்துளே
ஆடுகின்ற பாவையாய் அமைந்ததே சிவாயமே. 327

புவனசக்க ரத்துளே பூதநாத வெளியிலே
பொங்குதீப அங்கியுள் பொதிந்தெழுந்த வாயுவைத்
தவனசோமர் இருவரு தாமியங்கும் வாசலில்
தண்டுமாறி ஏறிநின்ற சரசமான வெளியிலே. 328

மவுன அஞ் செழுத்திலே வாசியேறி மெள்ளவே
வானளாய் நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின்
அவனுநானு மெய்கலந்து அனுபவித்த அளவிலே
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே. 329

வாளுறையில் வாளடக்கம் வாயுறையில் வாய்வடக்கம்
ஆளுறையில் ஆளடக்கம் அருமையென்ன வித்தைகாண்
தாளுறையில் தாளடக்கம் தன்மையான தன்மையும்
நாளுறையில் நாளடக்கம் நானுநீயும் கண்டதே. 330

வழுத்திடான் அழித்திடான் மாயரூபம் ஆகிடான்
கழின்றிடான் வெகுண்டிடான் காலகால காலமும்
துவண்டிடான் அசைந்திடான் தூயதூபம் ஆகிடான்
சுவன்றிடான் உரைத்திடான் சூட்ச சூட்ச சூட்சமே. 331

ஆகிகூவென் றேஉரைத்த அக்ஷரத்தின் ஆனந்தம்
யோகியோகி என்பர் கோடி உற்றறிந்து கண்டிடார்
பூகமாய் மனக்குரங்கு பொங்குமங்கும் இங்குமாய்
ஏகமேக மாகவே இருப்பர்கோடி கோடியே. 332

கோடிகோடி கோடிகோடி குவலயத்தோர் ஆதியை
நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்
தேடிதேடி தேடிதேடி தேகமும் கசங்கியே
கூடிக்கூடி கூடிக்கூடி நிற்பர் கோடிக்கோடியே. 333

கருத்திலான் வெளுத்திலான் பரனிருந்த காரணம்
இருந்திலான் ஒளித்திலான் ஒன்றும் இரண்டு மாகிலான்
ஒருத்திலான் மரித்திலான் ஒழிந்திடான் அழிந்திடான்
கருத்திற்கீயும் கூவும்உற்றோன் கண்டறிந்த ஆதியே. 334

வாதிவாதி வாதிவாதி வண்டலை அறிந்திடான்
ஊதியூதி ஊதியூதி ஒளிமயங்கி உளறுவான்

வீதிவீதி வீதிவீதி விடையெருப் பொறுக்குவோன்
சாதிசாதி சாதிசாதி சாகரத்தைக் கண்டிடான். 335

ஆண்மையாண்மை ஆண்மையாண்மை ஆண்மை கூறும் அசடரே
காண்மையான வாதிரூபம் காலகால காலமும்
பாண்மையாகி மோனமான பாசமாகி நின்றிடும்
நாண்மையான நரலைவாயில் நங்குமிங்கும் அங்குமே. 336

மிங்குவென்ற அட்சரத்தின் மீட்டுவாகிக் கூவுடன்
துங்கமாகச் சோமனோடு சோமன்மாறி நின்றிடும்
அங்கமா முனைச்சுழியில் ஆகுமேகம் ஆகையால்
கங்குலற்றுக் கியானமுற்று காணுவாய் சுடரொளி. 337

சுடரெழும்பும் சூட்சமும் சுழிமுனையின் சூட்சமும்
அடரெழும்பி ஏகமாக அமர்ந்துநின்ற சூட்சமும்
திடரதான சூட்சமும் திரியின்வாலை சூட்சமும்
கடலெழும்பு சூட்சமுங் கண்டறிந்தோன் ஞானியே. 338

ஞானிஞானி என்றுரைத்த நாய்கள் கோடி கோடியே
வானிலாத மழைநாளென்ற வாதிகோடி கோடியே
தானிலான சாகரத்தின் தன்மைகாணா மூடர்கள்
மூனிலாமற் கோடிகோடி முன்னறிந்த தென்பரே. 339

சூக்ஷமான கொம்பிலே சுழிமுனைச் சுடரிலே
வீச்சமான வீயிலே விபுலைதங்கும் வாயிலே
கூச்சமான கொம்பிலே குடியிருந்த கோவிலே
தீக்ஷையான தீவிலே சிறந்ததே சிவாயமே. 340

பொங்கிநின்ற மோனமும் பொதிந்துநின்ற மோனமும்
தங்கிநின்ற மோனமும் தயங்கிநின்ற மோனமுந்
கங்கையான மோனமும் கதித்துநின்ற மோனமும்
திங்களான மோனமும் சிவனிருந்த மோனமே. 341

மோனமான வீதியில் முனைச்சுழியின் வாலையில்
பானமான வீதியில் பசைந்த செஞ்சுடரிலே
ஞானமான மூலையில் நரலைதங்கும் வாயிலில்
ஓனமான செஞ்சுட ர்உதித்ததே சிவாயமே. 342

உதித்தெழுந்த வாலையும் உசங்கிநின்ற வாலையும்
சதித்தெழுந்த வாலையும் காலையான வாலையும்
மதித்தெழுந்த வாலையும் மறைந்துநின்ற ஞானமும்
கொதித்தெழுந்து கும்பலாகி ஹூ வுங் ஹீயுமானதே. 343

கூவுங்கீயும் மோனமாகி கொள்கையான கொள்கையை
மூவிலே உதித்தெழுந்த முச்சுடர் விரிவிலே
பூவிலே நறைகள் போல் பொருந்திநின்ற பூரணம்
ஆவியாவி ஆவியாவி அன்பருள்ளம் உற்றதே. 344

ஆண்மைகூறும் மாந்தரே அருக்கனோடும் வீதியைக்
காண்மையாகக் காண்பிரே கசடறுக்க வல்லிரே
தூண்மையான வாதிசூட்சம் சோபமாகும் ஆகுமே
நாண்மையான வாயிலில் நடித்துநின்ற நாதமே. 345

நாதமான வாயிலில் நடித்துநின்ற சாயலில்
வேதமான வீதியில் விரிந்தமுச் சுடரிலே
கீதமான ஹீயிலே கிளர்ந்துநின்ற கூவிலே
பூதமான வாயிலைப் புகலறிவன் ஆதியே. 346

ஆவியாவி ஆவியாவி ஐந்துகொம்பின் ஆவியே
மேவிமேவி மேவிமேவி மேதினியில் மானிடர்
வாவிவாவி வாவிவாவி வண்டல்கள் அறிந்திடார்
பாவிபாவி பாவிபாவி படியிலுற்ற மாந்தரே. 347

வித்திலே முளைத்தசோதி வில்வளைவின் மத்தியில்
உத்திலே யொளிவதாகி மோனமான தீபமே
நத்திலோ திரட்சிபோன்ற நாதனை யறிந்திடார்
வத்திலே கிடந்துழன்ற வாலையான சூட்சமே. 348

மாலையோடு காலையும், வடிந்து பொங்கும், மோனமே
மாலையோடு காலையான வாறறிந்த மாந்தரே
மூலையான கோணமின் முளைத்தெழுந்த செஞ்சுடர்
காலையோடு பானகன்று தங்கி நின்ற மோனமே. 349

மோனமான வீதியில் முடுகிநின்ற நாதமே
ஈனமின்றி வேகமான வேகமென்ன வேகமே

கானமான மூலையில் கனிந்திருந்த வாலையில்
ஞானமான செஞ்சுடர் நடந்ததே சிவாயாமே. 350

உச்சிமத்தி வீதியில்ஒழிந்திருந்த சாதியில்
பச்சியுற்ற சோமனும் பரந்துநின் றுலாவவே
செச்சியான தீபமே தியானமான மோனமே
கச்சியான மோனமே கடந்ததே சிவாயமே. 351

அஞ்சிகொம்பில் நின்றநாத மாலைபோல் எழும்பியே
பிஞ்சினோடு பூமலர்ந்து பெற்றியுற்ற சுத்தமே
செஞ்சுடர் உதித்தபோது தேசிகன் சுழன்றுடன்
பஞ்சபூதம் ஆனதே பரந்துநின்ற மோனமே. 352

சடுதியான கொம்பிலே தத்துவத்தின் ஹீயிலே
அடுதியான ஆவிலே அரனிருந்த ஹூவிலே
இடுதியென்ற சோலையிலிருந்த முச் சுடரிலே
நடுதியென்று நாதமோடி நன்குற அமைத்ததே. 353

அமையுமால் மோனமும் அரனிருந்த மோனமும்
சமையும்பூத மோனமும் தரித்திருந்த மோனமும்
இமையும்கொண்ட வேகமும் இலங்கும்உச்சி மோனமும்
தமையறிந்த மாந்தரே சடத்தையுற்று நோக்கிலார். 354

பாய்ச்சலூர் வழியிலே பரனிருந்த சுழியிலே
காய்ச்சகொம்பின் நுனியிலே கனியிருந்த மலையிலே
வீச்சமான தேதடா விரிவுதங்கும் இங்குமே
மூச்சினோடு மூச்சைவாங்கு முட்டிநின்ற சோதியே. 355

**சோதிசோதி என்று நாடித் தோற்பவர் சிலவரே**
**ஆதிஆதி யென்று நாடும் ஆடவர் சிலவரே**
**வாதிவாதி என்று சொல்லும் வம்பரும் சிலவரே**
**நீதிநீதி நீதிநீதி நின்றிடும் முழுச்சுடர்.** 356

**சுடரதாகி எழும்பியெங்கும் தூபமான காலமே**
**இடரதாகிப் புவியும்விண்ணும் ஏகமாய் அமைக்கமுன்**
**படரதாக நின்றவாதி பஞ்சபூதம் ஆகியே**
**அடரதாக அண்டம்எங்கும் ஆண்மையாக நின்றதே.** 357

**நின்றிருந்த சோதியை நிலத்திலுற்ற மானிடர்**
**கண்டறிந்து கண்குளிர்ந்து காதலுற்று உலாவுவோர்**
**கண்டமுற்ற மேன்முனையின் காட்சி தன்னைக் காணுவார்**
**நன்றியற்று நரலைபொங்கி நாதமும் மகிழ்ந்திடும்.** 358

**வயங்குமோனச் செஞ்சுடர் வடிந்தசோதி நாதமும்**
**கயங்கள் போலக் கதறியே கருவூரற்ற வெளியிலே**
**பங்கொடின்றி இன்றியே படர்ந்துநின்ற பான்மையை**
**நயங்கள் கோவென்றே நடுங்கி நங்கையான தீபமே.** 359

**தீபஉச்சி முனையிலே திவாகரத்தின் சுழியிலே**
**கோபமாறு கூவிலே கொதித்துநின்ற தீயிலே**
**தாபமான மூலையில் சமைந்துநின்ற சூக்ஷமும்**
**சாபமான மோட்சமும் தடிந்துநின்று இலங்குமே.** 360

**தேசிகன் கழன்றதே திரிமுனையின் வாலையில்**
**வேசமோடு வாலையில் வியனிருந்த மூலையில்**
**நேசசந்தி ரோதயம் நிறைந்திருந்த வாரமில்**
**வீசிவீசி நின்றதே விரிந்துநின்ற மோனமே.** 361

**உட்கமல மோனமில் உயங்கிநின்ற நந்தியை**
**விக்கலோடு கீயுமாகி வில்வளைவின் மத்தியில்**
**முட்பொதிந்தது என்னவே முடுகிநின்ற செஞ்சுடர்**
**கட்குவைகள் போலவும் கடிந்துநின்ற காட்சியே.** 362

**உந்தியில் சுழிவழியில் உச்சியுற்ற மத்தியில்**
**சந்திரன் ஒளிகிரணம் தாண்டிநின்ற செஞ்சுடர்**
**பந்தமாக வில்வளைவில் பஞ்சபூத விஞ்சையாம்**
**கிந்துபோலக் கீயில்நின்று கீச்சுமூச்சு என்றதே.** 363

செச்சையென்ற மூச்சினோடு சிகாரமும் வகாரமும்
பச்சையாகி நின்றதே பரவெளியின் பான்மையே
இச்சையான ஹு விலே இருந்தெழுந்த ஹீயிலே
உச்சியான கோணத்தில் உதித்ததே சிவாயமே. 364

ஆறுமூலைக் கோணத்தில் அமைந்த வொன்ப தாத்திலே
நாறுமென்று நங்கையான நாவியும் தெரிந்திட

கூறுமென்று ஐவரங்கு கொண்டுநின்ற மோனமே
பாறுகொண்டு நின்றது பறந்ததே சிவாயமே. 365

பறந்ததே கறந்தபோது பாய்ச்சலூர் வழியிலே
பிறந்ததே பிராணன்அன்றிப் பெண்ணும் ஆணும் அல்லவே
துறந்ததோ சிறந்ததோ தூயதுங்கம் ஆனதோ
இறந்த போதில் அன்றதே இலங்கிடும் சிவாயமே. 366

அருளிருந்த வெளியிலே அருக்கன்நின்ற இருளிலே
பொருளிருந்த சுழியிலே புரண்டெழுந்த வழியிலே
தெருளிருந்த கலையிலே தியங்கிநின்ற வலையிலே
குருவிருந்த வழியினின்று ஹு வும் ஹீயுமானதே. 367

ஆனதோர் எழுத்திலே அமைந்துநின்ற ஆதியே
கானமோடு தாலமீதில் கண்டறிவது இல்லையே
தானந்தானும் ஆனதே சமைந்தமாலை காலையில்
வேனலோடு மாறுபோல் விரிந்ததே சிவாயமே. 368

ஆறுகொண்ட வாரியும் அமைந்துநின்ற தெய்வமும்
தூறுகொண்ட மாரியும் துலங்கிநின்ற தூபமும்
வீறுகொண்ட போனமும் விளங்குமுட் கமலமும்
மாறுகொண்ட ஹூவிலே மடிந்ததே சிவாயமே. 369

வாயில் கண்ட கோணமில் வயங்குமைவர் வைகியே
சாயல் கண்டு சார்ந்த துந்தலைமன்னா யுறைந்ததும்
காயவண்டு கண்டதும் கருவூரங்கு சென்றதும்
பாயுமென்று சென்றதும் பறந்ததே சிவாயமே. 370

பறந்ததே துறந்தபோது பாய்ச்சலூரின் வழியிலே
மறந்ததே கவ்வுமுற்ற வாணர்கையின் மேவியே
பிறந்ததே இறந்தபோதில் நீடிடாமற் கீயிலே
சிறந்துநின்ற மோனமே தெளிந்ததே சிவாயமே. 371

**வடிவுபத்ம ஆசனத்து இருத்திமூல அனலையே**
**மாருதத்தி னாலெழுப்பி வாசலைந்து நாலையும்**
**முடிவுமுத்தி ரைப்படுத்தி மூலவீணா தண்டினால்**
**முளரியால யங்கடந்து மூலநாடி ஊடுபோய்.** 372

**அடிதுவக்கி முடியளவும் ஆறுமா நிலங்கடந்து**
**அப்புறத்தில் வெளிகடந்த ஆதிஎங்கள் சோதியை**
**உடுபதிக்கண் அமுதருந்தி உண்மைஞான உவகையுள்**
**உச்சிபட்டு இறங்குகின்ற யோகிநல்ல யோகியே.** 373

**மந்திங் கள்உண்டுநீர் மயங்குகின்ற மானிடர்**
**மந்திரங் கள்ஆவது மரத்திலூற ல்அன்றுகாண்**
**மந்திரங் கள்ஆவது மதித்தெழுந்த வாயுவை**
**மந்திரத்தை உண்டவர்க்கு மரணமேதும் இல்லையே.** 374

**மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே**
**மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ**
**மந்திரங்க ள்உம்முளே மதித்தநீரும் உம்முளே**
**மந்திரங் கள்ஆவது மனத்தின்ஐந் தெழுத்துமே.** 375

**உள்ளதோ புறம்பதோ உயிரொடுங்கி நின்றிடம்**
**மெள்ளவந்து கிட்டிநீர் வினாவவேண்டும் என்கிறீர்**
**உள்ளதும் பிறப்பதும் ஒத்தபோது நாதமாம்**
**கள்ளவாச லைத்திறந்து காணவேண்டும் மாந்தரே.** 376

**ஓரெழுத்து லிங்கமாய் ஓதுமட்ச ரத்துளே**
**ஓரெழுத்து யங்குகின்ற உண்மையை அறிகிலீர்**
**மூவெழுத்து மூவராய் முளைத்து எழுந்த சோதியை**
**நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே.** 377

**முத்தி சித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை**
**மற்றுதித்த அப்புனல்கள் ஆகுமத்தி அப்புலன்**
**அத்தர்நித்தர் காளகண்டர் அன்பினால் அனுதினம்**
**உச்சரித்து உளத்திலே அறிந்துணர்ந்து கொண்மினே.** 378

**மூன்றிரண்டும் ஐந்துமாய் முயன்றெழுந்த தேவராய்**
**மூன்றிரண்டும் ஐந்ததாய் முயன்றதே உலகெலாம்**
**ஈன்ற தாயும் அப்பனும் இயங்குகின்ற நாதமாய்**
**தோன்றுமோர் எழுத்தினோடு சொல்ல ஒன்ம்இமில்லையே.** 379

வெளியுருக்கி அஞ்செழுத்து விந்துநாத சத்தமும்
தளியுருக்கி நெய்கலந்து சகலசத்தி ஆனதும்

வெளியிலும் அவ்வினையிலும் இருவரை அறிந்தபின்
வெளிகடந்த தன்மையால் தெளிந்ததே சிவாயமே. 380

முப்புரத்தில் அப்புறம் முக்கணன் விளைவிலே
சிற்பரத்துள் உற்பனம் சிவாயம்அஞ் செழுத்துமாம்
தற்பரம் உதித்துநின்ற தாணுவெங்கும் ஆனபின்
இப்பறம் ஒடுங்குமோடி எங்கும் லிங்கமானதே. 381

ஆடிநின்ற சீவன்ஓர் அஞ்சுபஞ்ச பூதமோ
கூடிநின்ற சோதியோ குலாவிநின்ற மூலமோ
நாடுகண்டு நின்றதோ நாவுகற்ற கல்வியோ
வீடுகண்டு விண்டிடின் வெட்ட வெளியும் ஆனதே. 382

உருத்தரித்த போது சீவன்ஒக்கநின்ற உண்மையும்
திருத்தமுள்ளது ஒன்றிலும் சிவாயமம் அஞ்செழுத்துமாம்
இருத்துநின்று உறுத்தடங்கி ஏகபோகம் ஆனபின்
கருத்திநின்று உதித்ததே கபாலமேந்து நாதனே. 383

கருத்தரித்து உதித்தபோது கமலபீடம் ஆனதுங்
கருத்தரித்து உதித்தபோது காரணங்கள் ஆனதுங்
கருத்தரித்து உதித்தபோது காரணமிரண்டு கண்களாய்
கருத்தினின் றுதித்ததே கபாலம் ஏந்துநாதனே. 384

ஆனவன்னி மூன்று கோணம் ஆறிரண்டு எட்டிலே
ஆனசீவன் அஞ்செழுத்து அகாரமிட் டுஅலர்ந்தது
ஆனசோதி உண்மையும் அனாதியான உண்மையும்
ஆனதான தானதா அவலமாய் மறைந்திடும். 385

ஈன்றெழுந்த எம்பிரான் திருவரங்க வெளியிலே
நான்றபாம்பின் வாயினால் நாலுதிக்கும் ஆயினான்
மூன்றுமூன்று வளையமாய் முப்புரங் கடந்தபின்
ஈன்றெழுந்த அவ்வினோசை எங்குமாகி நின்றதே. 386

எங்குமெங்கும் ஒன்றலோ ஈரேழ்லோகம் ஒன்றலோ
அங்குமிங்கும் ஒன்றலோ அனாதியானது ஒன்றலோ
தங்குதா பரங்களும் தரித்துவாரது ஒன்றலோ
உங்கள்எங்கள் பங்கினில் உதித்ததே சிவாயமே. 387

அம்பரத்தில் ஆடுஞ்சோதி யானவன்னி மூலமாம்
அம்பரமும் தம்பரமும் அகோரமிட்டு அலர்ந்ததும்
அம்பரக் குழியிலே அங்கமிட் டுருக்கிட
அம்பரத்தில் ஆதியோடு அமர்ந்ததே சிவாயமே. 388

வாடிலாத பூமலர்ந்து வண்டுரிசை நாவிலே
ஓடிநின்று உருவெடுத்து உகாரமாய் அலர்ந்ததும்
ஆடியாடி அங்கமும் அகப்படக் கடந்தபின்
கூடிநின் றுலாவுமே குருவிருந்த கோலமே. 389

விட்டடி விரைத்ததோ வேருருக்கி நின்றதோ
எட்டிநின்ற சீவனும் ஈரேழ்லோகங் கண்டதோ
தட்டுருவ மாகிநின்ற சதாசிவத் தொளியதோ
வட்டவீடறிந்த பேர்கள் வானதேவ ராவரே. 390

வானவர் நிறைந்த சோதி மானிடக் கருவிலே
வானதேவர் அத்தனைக்குள் வந்தடைவர் வானவர்
வானகமும் மண்ணகமும் வட்டவீடு அறிந்தபின்
வானெலாம் நிறைந்துமன்னு மாணிக்கங்கள் ஆனவே. 391

பன்னிரண்டு கால் நிறுத்திப் பஞ்சவர்ணம் உற்றிடின்
மின்னியே வெளிக்குள்நின்று வேரிடத்து அமர்ந்ததும்
சென்னியாம் தலத்திலே சீவனின்று இயங்கிடும்
பன்னியுன்னி ஆய்ந்தவர் பரப்பிரம மானதே. 392

உச்சிகண்டு கண்கள் கட்டிஉண்மைகண்டது எவ்விடம்
மச்சுமாளி கைக்குள்ளே மானிடம் கலப்பிரேல்
எச்சிலான வாசல்களும் ஏகபோக மாய்விடும்
பச்சைமாலும் ஈசனும் பரந்ததே சிவாயமே. 393

வாயிலிட்டு நல்லுரிசை அட்சரத் தொலியிலே
கோயிலிட்டு வாவியுமங் கொம்பிலே உலர்ந்தது
ஆயிலிட்ட காயமும் அனாதியிட்ட சீவனும்
வாயுவிட்ட வன்னியும் வளர்ந்ததே சிவாயமே. 394

அட்சரத்தை உச்சரித்து அனாதியங்கி மூலமாம்
அட்சரத்தை யுந்திறந்த சோரமிட்ட லர்ந்ததும்

அட்சரத்தில் உட்கரம் அகப்படக் கடந்தபின்
அட்சரத்தில் ஆதியோடு அமர்ந்ததே சிவாயமே. 395

கோயிலும் குளங்களும் குறியினில் குருக்களாய்,
மாயிலும் மடியிலும் மனத்திலே மயங்குறீர்
ஆயனை அரனையும் அறிந்துணர்ந்து கொள்விரேல்
தாயினும் தகப்பனோடு தானமர்ந்தது ஒக்குமே. 396

கோயிலெங்கும் ஒன்றலோ குளங்கள் நீர்கள் ஒன்றலோ
தேயுவாயு ஒன்றலோ சிவனுமங்கே ஒன்றலோ
ஆயசீவன் எங்குமாய் அமர்ந்துவாரது ஒன்றலோ
காயம் ஈதறிந்த பேர்கள் காட்சியாவர் காணுமே. 397

காதுகண்கள் மூக்குவாய் கலந்துவாரது ஒன்றலோ
சோதியிட் டெடுத்ததும் சுகங்களஞ்சும் ஒன்றலோ
ஓதிவைத்த சாத்திரம் உதித்துவாரது ஒன்றலோ
நாதவீடறிந்த பேர்கள் நாதராவர் காணுமே. 398

அவ்வுதித்த வட்சரத்தின் உட்கலந்த அட்சரம்
சவ்வுதித்த மந்திரம் சம்புளத்து இருந்ததால்
மவ்வுதித்த மாய்கையால் மயங்குகின்ற மாந்தர்காள்
உவ்வுதித்தது அவ்வுமாய் உருத்தரித்த உண்மையே. 399

அகார மென்னும் அக்கரத்தில் அக்கர மொழிந்ததோ
அகாரமென்னும் அக்கரத்தி அவ்வுவந்து உதித்ததோ
உகாரமும் அகாரமும் ஒன்றிநன்று நின்றதோ
விகாரமற்ற ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. 400

சத்தியாவது ன்னுடல் தயங்குசீவன் உட்சிவம்
பித்தர்காள் இதற்குமேல் பிதற்றுகின்ற தில்லையே
சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்ததோர் வெளி
சத்திசிவமு மாகிநின்று தண்மையாவது உண்மையே. 401

சுக்கிலத் துளையிலே சுரோணிதக் கருவுளே
முச்சதுர வாசலில் முளைத்தெழுந்த மோட்டினில்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரிக்கும் மந்திரம் ஓம் நமசிவாயமே. 402

அக்கரம் அனாதியல்ல ஆத்துமா அனாதியல்ல
புக்கிருந்த பூதமும் புலன்களும் அனாதியல்ல
தக்கமிக்க நூல்களும் சாஸ்திரம் அனாதியல்ல
ஒக்க நின் றுடன் கலந்த உண்மைகாண் அனாதியே. 403

மென்மையாகி நின்றதேது விட்டுநின்று தொட்டதேது
உண்மையாக நீயுரைக்க, வேணுமெங்கள் உத்தமா
பெண்மையாகி நின்றதொன்று விட்டுநின்ற தொட்டதை
உண்மையாய் உரைக்க முத்தி உட்கலந் திருந்ததே. **404**

அடக்கினால் அடங்குமோ அண்டம் அஞ் செழுத்துளே
உடக்கினால் எடுத்தகாயம் உண்மையென்று உணர்ந்துநீ
சடக்கில்ஆறு வேதமும் தரிக்கஓதி லாமையால்
விடக்குநாயு மாயவோதி வேறு வேறு பேசுமோ. **405**

உண்மையான சக்கரம் உபாயமாய் இருந்ததும்
தண்மையான காயமும் தரித்தரூபம் ஆனதும்
வெண்மையாகி நீறியே விளைந்து நின்ற தானதும்
உண்மையான ஞானிகள் விரித்துரைக்க வேண்டுமே. **406**

எள்ளகத்தில் எண்ணெய்போல வெங்குமாகி எம்பிரான்
உள்ளகத்தி லேயிருக்க ஊசலாடு மூடர்காள்
கொள்ளைநாயின் வாலினைக் குணக்கெடுக்க வல்லிரேல்
வள்ளலாகி நின்றசோதி காணலாகும் மெய்ம்மையே. **407**

வேணுமென்ற ஞானமும் விரும்புகின்ற நூலிலே
தாணுவுண்டு அங்குஎன்கிறீர் தரிக்கிலீர் மறக்கிலீர்
தாணுவொன்று மூலநாடி தன்னுள்நாடி உம்முளே
காணுமன்றி வேறியாவும் கனாமயக்கம் ஒக்குமே. **408**

வழக்கிலே உரைக்கிறீர் மனத்துளே தவிக்கிறீர்
உழக்கிலாது நாழியான வாறுபோலும் ஊமைகாள்
உழக்குநாலு நாழியான வாறுபோலும் உம்முளே
வழக்கிலே உரைக்கிறீர் மனத்துள்ஈசன் மன்னுமே. **409**

அத்திறங்க ளுக்குநீ அண்டம்எண் டிசைக்கும் நீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ

உறக்கும்நீ உணர்வுநீ உட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினுங் குடிகொளே. **410**

ஆடுகின்ற எம்பிரானை அங்குமிங்கும் நின்றுநீர்
தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை ஓர்கிலீர்
நாடிநாடி உம்முளே நவின்றுநோக்க வல்லிரேல்
கூடொணாத தற்பரம் குவிந்துகூட லாகுமே. **411**

சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவமுமாகி நின்றதன்மை ஓர்கிலீர்
சத்தியாவது உம்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்துகொள் பிரானிருந்த கோலமே. 412

அகாரமான தம்பலம் மனாதியான தம்பலம்
உகாரமான தம்பலம் உண்மையான தம்பலம்
மகாரமான தம்பலம் வடிவமான தம்பலம்
சிகாரமான தம்பலம் தெளிந்ததே சிவாயமே. 413

சக்கரம் பறந்ததோடி சக்கரமேல் பலகையாய்
செக்கிலாமல் எண்ணெய்போல் சிங்குவாயு தேயுவும்
உக்கிலே ஒளிகலந்து யுகங்களுங் கலக்கமாய்
புக்கிலே புகுந்தபோது போனவாறது எங்ஙனே. 414

வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமென்று எண்ணிநீ
அருள் கொள்சீவ ராருடம்பு உடைமையாகத் தேர்வீர்காள்
விளங்குஞானம் மேவியே மிக்கோர்சொல்லைக் கேட்பிரேல்
களங்கமற்று நெஞ்சுளே கருத்து வந்து புக்குமே. 415

நாலுவேதம் ஓதுகின்ற ஞானமொன்று அறிவிரோ
நாலுசாமம் ஆகியே நவின்றஞான போதமாய்
ஆலமுண்ட கண்டனும் அயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே. 416

சுற்றமென்று சொல்வதுஞ் சுருதிமுடிவில் வைத்திடீர்
அத்தன்நித்தம் ஆடியே அமர்ந்திருந்தது எவ்விடம்
பத்திமுற்றி அன்பர்கள் பரத்திலொன்று பாழது
பித்தரே இதைக்கருதி பேசலாவது எங்ஙனே. 417

எங்ஙனே விளக்கதுக்குள் ஏற்றவாறு நின்றுதான்
எங்ஙனே எழுந்தருளி ஈசனேசர் என்பரேல்
அங்ஙனே இருந்தருளும் ஆதியான தற்பரம்
சிங்கமண்மி யானை போலத் திரிமலங்கள் அற்றதே. 428

அற்றவுள் அகத்தையும் அலகிடும் மெழுக்கிடும்
மெத்ததீபம் இட்டதிற் பிறவாத பூசை ஏத்தியே
நற்றவம் புரிந்துயேக நாதர்பாதம் நாடியே
கற்றிருப்பதே சரிதை கண்டுகொள்ளும் உம்முளே. 429

பார்த்து நின்றது அம்பலம் பரனாடும்அம்பலம்
கூத்துநின்றது அம்பலம் கோரமானதுஅம்பலம்
வார்த்தையானது அம்பலம் வன்னியானது அம்பலஞ்
சீற்றமானது அம்பலம் தெளிந்ததே சிவாயமே. 420

சென்று சென்றிடந்தொறும் சிறந்த செம்பொனம்பலம்
அன்றுமின்றும் நின்றதோர் அனாதியானது அம்பலம்
என்று மென்று மிருப்பதோர் உறுதியான அம்பலம்
ஒன்றியொன்றி நின்றதுள் ஒழிந்ததே சிவாயமே. 421

தந்தைதாய் தமரும்நீ சகலதே வதையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
எந்தைநீ இறைவநீ என்னையாண்ட ஈசனே. 422

எப்பிறப்பி லும்பிறந் திருந்தழிந்த ஏழைகாள்
இப்பிறப்பி லும்பிறந்து என்னநீறு பூசுறீர்
அப்புடன் மலமறுத்து ஆசைநீக்க வல்லிரேல்
செப்புநாத ஓசையில் தெளிந்துகாண லாகுமே. 423

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றுநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதிக்கநீறு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்தினைந் தெழுத்துமே. 424

எட்டுயோக மானதும் இயங்குகின்ற நாதமும்
எட்டுவக்க ரத்துளே உகாரமும் அகாரமும்

விட்டலர்ந்த மந்திரம் வீணாதண்டின் ஊடுபோய்
அட்டவக்ஷ ரத்துளே அமர்ந்ததே சிவாயமே. 425

பிரான்பிரா னென்றுநீர் பினத்துகின்ற மூடரே
பிரானைவிட்டு எம்பிரான் பிரிந்தவாறது எங்ஙனே
பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்
பிரானிலே முளைத்தெழுந்த பித்தர்காணும் உம்முடல். 426

ஆதியில்லை அந்தமில்லை யானநாலு வேதமில்லை
சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி
நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்
ஆதிகண்டு கொண்டபின் அஞ்செழுத்தும் இல்லையே. 427

அம்மையப்பன் அப்பனீர் அமர்ந்தபோது அறிகிலீர்
அம்மையப்பன் ஆனநீர் ஆதியான பாசமே
அம்மையப்பன் நின்னை அன்றி யாருமில்லை யானபின்
அம்மையப்பன் நின்னையன்றி யாருமில்லை யில்லையே. 428

நூறுகோடி மந்திரம் நூறுகோடி ஆகமம்
நூறுகோடி நாளிருந்து ஊடாடினாலும் என்பயன்
ஆறும் ஆறும் ஆறுமாய் அகத்திலோர் எழுத்ததாய்
சீரைஓத வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம். 429

முந்தவோ ரெழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்
அந்தவோ ரெழுத்துளே பிறந்துகாய மானதும்
அந்தவோ ரெழுத்துளே ஏகமாகி நின்றதும்
அந்தவோ ரெழுத்தையு மறிந்துணர்ந்து கொள்ளுமே. 430

கூட்டமிட்டு நீங்களும் கூடிவேத மோதுறீர்
ஏட்டகத்துள் ஈசனு மிருப்பதென் னெழுத்துளே
நாட்டமிட்டு நாடிடும் நாலுமூன்று தன்னுளே
ஆட்டகத்து ளாடிடும் அம்மையாணை உண்மையே. 431

காக்கைமூக்கை ஆமையார் எடுத்துரைத்த காரணம்
நாக்கை ஊன்றி உள்வளைத்து ஞானநாடி ஊடுபோய்
ஏக்கைநோக்க அட்சரம் இரண்டெழுத்தும் ஏத்திடில்
பார்த்தபார்த்த திக்கெலாம் பரப்பிரம்ம மானதே. 432

கொள்ளொணாது குவிக்கொணாது கோதறக் குலைக்கொணாது
அள்ளொணாது அணுகொணாது வாதிமூல மானதைத்
தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தின் உட்பணன்
வில்லொணாது பொருளையான் விளம்புமாறது எங்ஙனே. 433

ஓசையுள்ள கல்லைநீர் உடைத்திரண்டாய் செய்துமே
வாசலில் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர்
பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீரும் சாத்துறீர்
ஈசனுக்கு உகந்தகல் எந்தக்கல்லு சொல்லுமே. 434

ஒட்டுவைத்து கட்டிநீ உபாயமான மந்திரம்
கட்டுபட்ட போதிலும் கர்த்தனங்கு வாழுமோ
எட்டுமெட்டு மெட்டுளே இயங்குகின்ற வாயுவை
வட்டுமிட்ட அவ்விலே வைத்துணர்ந்து பாருமே. 435

இந்தவூரில் இல்லையென்று எங்குநாடி ஓடுறீர்
அந்தவூரில் ஈசனும் அமர்ந்துவாழ்வது எங்ஙனே
அந்தமான பொந்திலாறில் மேவிநின்ற நாதனை
அந்தமான சீயிலவ்வில் அறிந்துணர்ந்து கொள்ளுமே. 436

புக்கிருந்த தும்முளே பூரியிட்ட தோத்திரம்
தொக்குசட்சு சிங்குவை யாக்கிராணன் சூழ்த்திடில்
அக்குமணி கொன்றை சூடி அம்பலத்துள் ஆடுவார்
மிக்கசோதி அன்புடன் விளம்பிடாது பின்னையே. 437

பின்னெழுந்த மாங்கிசத்தை பேதையர்கண் பற்றியே
பின்புமாங் கிஷத்தினால் போக மாய்கை பண்ணினால்
துன்புறும் வினைகள் தான் சூழ்ந்திடும்பின் என்றலோ
அன்பராய் இருந்தபேர்கள் ஆறுநீந்தல் போல்விரே. 438

விட்டிருந்த தும்முளே விதனமற்று இருக்கிறீர்
கட்டிவைத்த வாசல் மூன்று காட்சியான வாசலொன்று
கட்டிவைத்த வாசலும் கதவுதாள் திறந்துபோய்த்
திட்டமான ஈசனைத் தெளியுமாங் கிஷத்துளே. 439

ஆகுமாகு மாகுமே அனாதியான அப்பொருள்
ஏகர்பாதம் நாடிநாடி ஏத்திநிற்க வல்லிரேல்

பாகுசேர் மொழியுமைக்குப் பாலனாகி வாழலாம்
வாகுடனே வன்னியை மருவியே வருந்திடீர். 440

உண்மையான தொன்ற தொன்றை உற்றுநோக்கி உம்முளே
வண்மையான வாசியுண்டு வாழ்த்தியேத்த வல்லிரேல்
தண்மைபெற் றிருக்கலாம் தவமும்வந்து நேரிடும்
கன்மதன்மம் ஆகுமீசர் காட்சிதானும் காணுமே. 441

பாலனாக வேணுமென்று பத்திமுற்றும் என்பரே
நாலுபாதம் உண்டதில் நனைந்திரண்டு அடுத்ததால்
மூலநாடி தன்னில் வன்னிமூட்டியந்த நீருண
ஏலவார் குழலியோடே ஈசர்பாதம் எய்துமே. 442

எய்துநின்னை அன்பினால் இறைஞ்சியேத்த வல்லிரேல்
எய்துமுண்மை தன்னிலே இறப்பிறப்பு அகற்றிடும்
மையிலங்கு கண்ணிபங்கன் வாசிவானில் ஏறிமுன்
செய்தவல் வினைகளும் சிதறுமது திண்ணமே. 443

திண்ணமென்று சேதிசொன்ன செவ்வியோர்கள் கேண்மினோ
அண்ணல்அன் புளன்புருகி அறிந்து நோக்க லாயிடும்
மண்ணமதிர விண்ணதிர வாசியை நடத்திடில்
நண்ணி எங்கள் ஈசனும் நமதுடலில் இருப்பனே. 444

இருப்பன்எட்டெட் டெண்ணிலே இருந்து வேறதாகுவன்
நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பும் ஆகுவான்
கருப்புகுந்து காலமே கலந்துசோதி நாதனைக்
குருப்புனலில் மூழ்கினார் குறித்துணர்ந்து கொள்வரே. 445

கொள்ளுவார்கள் சிந்தையில் குறிப்புணர்ந்த ஞானிகள்
விள்ளுவார்கள் பக்குவத்தில் வேண்டிவேண்டி ஏத்தினால்
உள்ளுமாய் புறம்புமாய் உணர்வதற்கு உணர்வுமாய்த்
தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே. 446

தெளிந்தநற் சரியைதன்னில் சென்று சாலோகம் பெறும்
தெளிந்த நற்கிரியை பூசை சேரலாஞ் சாமீபமே
தெளிந்தநல் யோகந்தன்னில் சேரலாகும் சாரூபம்
தெளிந்தஞானம் நான்கினும் சேரலாம் சாயுச்யமே. 447

சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளிவுளோர்
சேருவார்கள் நாலுபாதச் செம்மை யென்ற தில்லையே
சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்
சேருமாறு கண்டுநாலுஞ் செய்தொழில் திடப்படே. 448

திறமலிக்குநாலு பாதம் செம்மையும் திடப்படார்
அறிவிலிகள் தேசநாடி அவத்திலே அலைவதே
குழியதனைக் காட்டியுட் குறித்துநோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையுடையோன் மெய்ப் பதமடைவரே. 449

அடைவுளோர்கள் முத்தியை அறிந்திடாத மூடரே
படையுடைய தத்துவமும் பாதங்க ள்அல்லவோ
மடைதிறக்க வாரியின் மடையிலேறு மாறுபோல்
உடலில் மூல நாடியை உயரவேற்றி ஊன்றிடே. 450

ஊன்றியேற்றி மண்டலம் உருவிமூன்று தாள்திறந்து
ஆன்றுதந்தி ஏறிடில் அமுர்தம் வந்திறங்கிடும்
நான்றி தென்று தொண்டருக்கு நாதனும் வெளிப்படும்
ஆன்றியும் உயிர்பரம் பொருந்தி வாழ்வ தாகவே. 451

ஆகமூல நாடியில் அனலெழுப்பி அன்புடன்
மோகமான மாயையில் முயல்வது மொழிந்திடில்
தாகமேரு நாடியேகர் ஏகமான வாறுபோல்
ஏகர்பாதம் அன்புடன் இறைஞ்சினார் அறிவரே. 452

அறிந்துநோக்கி உம்முளே அயன்தியானம் உம்முளே
இருந்திராமல் ஏகர்பாதம் பெற்றிருப்பது உண்மையே
அறிந்துமீள வைத்திடா வகையுமரணம் ஏத்தினார்
செறிந்துமேலை வாசலைத் திறந்துபாரு உம்முளே. 453

சோதியாக உம்முளே தெளிந்து நோக்க வல்லிரேல்
சோதிவந்து உதித்திடும் துரியாதீதம் உற்றிடு
ஆதிசக் கரத்தினில் அமர்ந்துதீர்த்தம் ஆடுவன்
பேதியாது கண்டுகொள் பிராணனைத் திருத்தியே. 454

திருவுமாகிச் சிவனுமாகித் தெளிந்துளோர்கள் சிந்தையில்
மருவிலே எழுந்துவீசும் வாசனைய தாகுவன்

கருவிலே விழுந்தெழுந்த கன்மவாதனை யெலாம்
பருதிமுன் இருளதாயப் பறியும் அங்கி பாருமே. 455

பாரும்எந்தை ஈசர்வைத்த பண்பிலே இருந்துநீர்
சேருமே நடுவறிந்து செம்மையான அப்பொருள்
வேரையும் முடியையும் விரைந்துதேடி மாலயன்
பாரிடந்து விண்ணிலே பறந்துங்கண்டது இல்லையே. 456

கண்டிலாது அயன்மாலென்று காட்சியாகச் சொல்கிறீர்
மிண்டிலால் அரனுடன் மேவலாய் இருக்குமோ
தொண்டுமட்டும் அன்புடன் தொழுதுநோக்க வல்லிரேல்
பண்டுமுப் புரமெரித்த பக்திவந்து முற்றுமே. 457

முற்றுமே அவனொழிந்து முன்பின்ஒன்றும் காண்கிலேன்
பற்றிலாத ஒன்றுதன்னை பற்றுநிற்க வல்லது
கற்றதாலே ஈசர்பாதம் காணலா யிருக்குமோ
பெற்றபேரை அன்புடன் பிரியமாகக் கேளுமே. 458

கேட்டுநின்ற உன்னிலை கிடைத்த காலத்துளே
வாட்டமுள்ள தத்துவ மயக்கமும் அகற்றிடும்
வீட்டிலே வெளியதாகும் விளங்கவந்து நேரிடும்
கூட்டிவன்னி மாருதம் குயத்தைவிட்டு எழுப்புமே. 459

எழுப்பிமூல நாடியை இதப்படுத்த லாகுமே
மழுப்பிலாத சபையைநீர் வலித்துவாங்க வல்லிரேல்
கழுத்தியும் கடந்துபோய் சொப்பனத்தில்அப்புறம்
அழுத்திஓ ரெழுத்துளே அமைப்பதுண்மை ஐயனே. 460

அல்லதில்லை யென்று தானாவியும் பொருளுடல்
நல்லஈசர் தாளிணைக்கும் நாதனுக்கும் ஈந்திலை
என்றும்என்னுள் நேசமும் வாசியை வருந்தினால்
தொல்லையாம் வினைவிடென்று தூரதூரம் ஆனதே. 461

ஆனதே பதியது அற்றதே பசுபாசம்
போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்
கானகத்தில் இட்டதீயில் காற்றுவந்து அடுத்ததோ
ஊனகத்தில் வாயுஉன்னி ஒன்றியே உலாவுமே. 462

உலாவும்உவ்வும் மவ்வுமாய் உதித்தடர்ந்து நின்றதும்
உலாவிஐம் புலன்களும் ஒருதலத் திருந்திடும்
நிலாவும்அங்கு நேசமாகி நின்றமுர்தம் உண்டுதாம்
குலாவும்எங்கள் ஈசனைக் குறித்துணர்ந்து கும்பிடே. 463

கும்பிடும் கருத்துளே குகனைஐங் கரனையும்
நம்பியே இடம் வலம் நமஸ்கரித்து நாடிட
எம்பிரானும் அம்மையும் இருத்தியே நடுவணைத்
தும்பிபோல வாசகம் தொடர்ந்து சோம்பி நீங்குமே. 464

நீங்கும்ஐம் புலன்களும் நிறைந்தவல் வினைகளும்
ஆங்காரமாம் ஆசையும் அருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தி னுள்ளிருந்த வொன்பதொழிந் தொன்றிலத்
தூங்கவீசர் சொற்படி துணிந்திருக்க சுத்தமே. 465

நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையே
அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதியாய்
நினைக்குள் நானெக்குள் நீ நினைக்குமாறது எங்ஙனே. 466

கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்
உருக்கலந்த போதலோ உன்னை நானுணர்ந்தது
விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயும்நானும் ஒன்றலோ. 467

ஞானநூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்
ஞானமான சோதியை நாடியுள் அறிகிலீர்
ஞானமாகி நின்றதோர் நாதனை அறிந்தபின்
ஞானமற்ற தில்லைவேறு நாமுரைத்தது உண்மையே. 468

கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்றது எவ்விடம்
உருத்தரிப்ப தற்குமுன் உயிர்ப்புநின்றது எவ்விடம்
அருட்பொதிந்த சிந்தையில் மயக்கம்நின்றது எவ்விடம்
விருப்புணர்ந்த ஞானிகள் விரித்துரைக்க வேணுமே. 469

கருவினில் கருவதாய் எடுத்தஏழு தோற்றமும்
இருவினைப் பயத்தினால் பிறந்திறந்து உழன்றிடும்

மறுவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உருவினைப் பயன்இதென்று உணர்ந்தஞானி சொல்லுமே. 470

வாயில்எச்சில் போகவே நீர்குடித்து துப்புவீர்
வாயிருக்க எச்சில் போன வாறதென்னது எவ்விடம்
வாயிலெச்சில் அல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை அறிந்தபோது நாடும்எச்சில் ஏதுசொல். 471

தொடக்கதென்று நீர்விழத் தொடங்குகின்ற ஊமர்காள்
தொடக்கிருந்த தெவ்விடம் சுத்தியானது எவ்விடம்
தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லிரேல்
தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்து காணலாகுமே. 472

மேதியோடும் ஆவுமே விரும்பியே உணர்ந்திடில்
சாதிபேத மாய்உருத் தரிக்குமாறு போலவே
வேதமோது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே. 473

வகைகுலங்கள் பேசியே வழக்குரைக்கும் மாந்தர்காள்
தொகைக்கு லங்களான நேர்மைநாடியே உணர்ந்தபின்
மிகைத்த சுக்கிலம் அன்றியே வேறுமொன்று கண்டிலீர்
நகைத்த நாதன் மன்றுள் நின்ற நந்தினியாரு பேசுமே. 474

ஓதும்நாலு வேதமும் உரைத்தசாஸ் திரங்களும்
பூததத் துவங்களும் பொருந்தும்ஆக மங்களும்
சாதிபேத வன்மையும் தயங்குகின்ற நூல்களும்
பேதபேத மாகியே பிறந்துழன் றிருந்ததே. 475

உறங்கிலென் விழிக்கிலென் உணர்வுசென்றொடுங் கிலென்
திறம்பிலென் திகைக்கிலென் சிலதிசைகள் எட்டிலென்
புறம்புமுள்ளும் எங்ஙணும் பொதிந் திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகள் நினைப்ப தேது மில்லையே. 476

அங்கலிங்கம் பூண்டுநீர் அகண்டபூசை செய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டுநீர் அமர்ந்திருந்த மார்பனே
எங்குமோடி எங்குமெங்கும் ஈடழிந்து மாய்குகிறீர்
செங்கல்செம்பு கல்லெலாம் சிறந்துபார்க்கு மூடரே. 477

திட்டம்தீட்டம் என்றுநீர் தினமுழுகு மூடரே
தீட்டமாகி அல்லவோ திரண்டுகாய மானது
பூட்டகாயம் உம்முளே புகழுகின்ற பேயரே
தீட்டுவந்து கொண்டலோ தெளிந்ததே சிவாயமே. 478

மூலநாடி தம்முளே முளைத்தெழுந்த வாயுவை
நாளுநாளு நம்முளே நடுவிருந்த வல்லிரேல்
பாலனாகும் உம்முடன் பறந்து போகலாய்விடும்
ஆலமுண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே. 479

உந்திமேலே நாலுமூன்று ஓம்நமசி வாயமாம்
சந்திசந்தி என்றுநீர் சாற்றுகின்ற பேயரே
முந்தவந்து நம்முளே மூலநாடி ஊடுபோய்
அந்திசந்தி அற்றிட அறிந்துணர்ந்து பாருமே. 480

வன்னிமூன்று தீயினில் வாழுமெங்கள் நாதனும்
கன்னியான துள்ளிருக்கக் காதல் கொண்டது எவ்விடம்
சென்னிநாலு கையிரண்டு சிந்தையில் இரண்டிலொன்று
உன்னியுன்னி நம்முளே உய்த்துணர்ந்து பாருமே. 481

தொண்டு செய்து நீங்களும் சூழவோடி மாள்கிறீர்
உண்டுழன்று நும்முளே உற்றுணர்ந்து பார்க்கிலீர்
வண்டுலாவு சோலைசூழ் வாழுமெங்கள் நாதனும்
பண்டுபோல நம்முளே பகுத்திருப்பன் ஈசனே. 482

அரியதோர் நமச்சிவாயம் அதியந்தம் ஆனதும்
ஆறிரண்டு நூறுகோடி அளவிடாத மந்திரம்
தெரியநாலு வேதம்ஆறு சாத்திர புராணமும்
தேடுமாறும் அயனுஞ்சர்வ தேவதேவ தேவனே. 483

பரமுனக்கு எனக்குவேறு பயமுமில்லை பாரையா
கரமுனக்கு நித்தமுங் குவித்திடக் கடமையாம்
சிரமுருக்கி அமுதளித்த சீருலாவும் நாதனே
உரமெனக்கு நீயளித்த உண்மையுண்மை உண்மையே. 484

மூலவட்ட மீதிலே முளைந்தஐந் தெழுத்திலே
கோலவட்டம் மூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்ற தீ

ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதாய்
ஏலவட்டம் ஆகியே இருந்ததே சிவாயமே. 485

என்னகத்தில் என்னை நானெங்கும் ஓடிநாடினேன்
என்னகத்தில் என்னையன்றி ஏதுமொன்று கண்டிலேன்
வின்னெழும்பி விண்ணகத்தின் மின்னொடுங்கு மாறுபோல்
என்னகத்துள் ஈசனோ டியானுமல்ல தில்லையே. 486

நாலுவேதம் ஓதுகின்ற ஞானமொன்று அறிவிரோ
நாலுசாமம் ஆகியும் நவின்றஞான போதமாய்
ஆலமுண்ட கண்டனும் அயனும் அந்தமாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சிலே தரித்ததேசி வாயமே. 487

முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமாய்
அச்சதுரம் உம்முளே அடங்கிவாசி யோகமாம்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரித்த மந்திரம் ஓம்நமசி வாயமே. 488

மூலமண்ட லத்துளே முச்சதுர மாயமாய்
நாலுவாசல் என்விரலில் உடுத்தித்த மந்திரம்
கோலியென்றும் ஐந்துமாய்க் குளிர்ந்தலந்து நின்றநீ
மேலுமேலு நாடினேன் விழைந்ததே சிவாயமே. 489

இடங்கள் பண்ணி சுத்திசெய்தே இட்டபீட மீதிலே
அடங்கநீறு பூசல்செய்து அருந்தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்குகின்ற நாதனார் உதிக்கஞானம் எவ்விடம்
அடங்குகின்றது எவ்விட மறிந்து பூசை செய்யுமே. 490

புத்தகங்க ளைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடம் தெங்ஙனென்றே அறிகிலீர்
அத்தனைய சித்தனை அறிந்துநோக்க வல்லிரேல்
உத்தமத்துள் ஆயசோதி உணரும் போக மாகுமே. 491

அருளிலே பிறந்துதித்து மானயரூப மாகியே
இருளிலே தயங்குகின்ற ஏழைமாந்தர் கேண்மினோ
பொருளிலே தவம்புனைந்து பொருந்திநோக்க வல்லிரேல்
மருள தேதுவன்னியின் மறைந்ததே சிவாயமே. 492

கருக்கலந்த காலமே கண்டிருந்த காரணா
உருக்கலந்த சோதியைத் தெளிந்து யானறிந்தபின்
தருக்கலந்த சோதியைத் தெளிந்துயா னறிந்தபின்
இருக்கிலேன் இறக்கிலேன் இரண்டுமற்று இருந்ததே. 493

தன்மசிந்தை யாமளவும் தவமறியாத் தன்மையாய்க்
கன்மசிந்தை வெயிலுழன்று கருத்தமிழ்ந்த கசடரே
சென்மசென்மம் தேடியும் தெளிவொணாத செல்வனை
நன்மையாக உம்முளே நயந்துகாண வேண்டுமே. 494

கள்ளவுள்ள மேயிருந்து கடந்தஞானம் ஓதுவீர்
கள்ளமுள் ளறுத்தபோது கதியிதன்றிக் காண்கிலீர்
உள்ளமே விளக்கிநித்தம் ஒளியணுக வல்லிரேல்
தெள்ளுஞானம் உம்முளே சிறந்ததே சிவாயமே. 495

காணவேண்டு மென்று நீர் கடல்மலைகள் ஏறுவீர்
ஆணவம் அதல்லவோ அறிவில்லாத மாந்தரே
வேணுமென்றவ் வீசர்பாதம் மெய்யுளே தரிப்பிரேல்
தாணுவாக நின்றசீவன் தான்சிவம தாகுமே. 496

அணுவினொடு அகண்டமாய் அளவிலாத சோதியைக்
குணம தாகஉம் முளே குறித்து நோக்கின் முத்தியாம்
மிணமிணென்று விரலையெண்ணி மீளொணாத மயக்கமாய்
துணிவிலாத படியினால் தொடர்ந்து பூசை செய்குவீர். 497

எச்சிலெச்சில் என்றுநீரிடைந்திருக்கும் ஏழைகாள்
துச்சிலெச்சில் அல்லவோ தூயகாய மானதும்
வைத்தஎச்சில் தேனலோ வண்டினெச்சில் பூவலோ
கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலும் எச்சிலே. 498

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே
தீர்த்தலிங்கம் உள்ளினின்ற சீவனைத் தெளியுமே
தீர்த்தலிங்கம் உம்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்தலிங்கம் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே. 499

ஆடுகொண்டு கூடுசெய்து அமர்ந்திருக்கும் வாறுபோல்
தேடுகின்ற செம்பினைத் திடப்படப் பரப்பியே

நாடுகின்ற தம்பிரானும் நம்முளே இருக்கவே
போடுதர்ப்ப பூசையென்ன பூசையென்ன பூசையே. 500

என்னைஅற்ப நேரமும் மறக்கிலாத நாதனே
ஏகனே இறைவனே இராசராச ராசனே
உன்னையற்ப நேரமும் ஒழிந்திருக்க லாகுமோ
உனதுநாட்டம் எனதுநாவி லுதவி செய்வீசனே. 501

எல்லையற்று நின்ற சோதி ஏகமாய் எரிக்கவே
வல்லபூர ணப்பிரகாசர் ஏகபோக மாகியே
நல்லவின்ப மோனசாகரத்திலே அழுத்தியே
நாடொணாத அமிர்தமுண்டு நானழிந்து நின்றநாள். 503

ஆனவாற தாயிடும் அகண்டமான சோதியை
ஊனைகாட்டி உம்முளே உகந்துகாண வல்லிரே
ஊனகாயம் ஆளலாம் உலகபாரம் ஆளலாம்
வானநாடும் ஆளலாம் வண்ணநாடர் ஆணையே. 504

நித்தமும் மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியே கதறியே கண்கள் மூடி என்பயன்
எத்தனைபேர் எண்ணினும் எட்டிரண்டும் பத்தலோ
வத்தனுக் கிதேற்குமோ அறிவிலாத மாந்தரே. 505

எட்டிரண்டும் கூடியே இலிங்கமான தேவனை
மட்டதாக உம்முளே மதித்து நோக்க வல்லிரேல்
கட்டமான பிறவியென் கருங்கடல் கடக்கலாம்
இட்டமான வெளியினோடு இசைந்திருப்பீர் காண்மினே. 506

உண்மையான மந்திர மொளியிலே இருந்திடும்
தண்மையான மந்திரம் சமைந்துரூபம் ஆகியே
வெண்மையான மந்திரம் விளைந்துநீற தானதே
உண்மையான மந்திரம் அதொன்றுமே சிவாயமே. 507

பன்னிரண்டு நாளிருத்திப் பஞ்சவண்ணம் ஒத்திட
மின்னியவ் வெளிக்குள்நின் றுவேரெடுத் தமர்ந்தது
சென்னியான தலத்திலே சீவன்நின் றியங்கிடும்
பன்னியுன்னி ஆய்ந்தவர் பரப்பிரம்ம மாவரே. 508

தச்சுவாயில் உச்சிமேல் ஆயிரந் தலங்களாய்
முச்சுடரும் மூவிரண்டு மூண்டெழுந்த தீச்சுடர்
வச்சிரம் அதாகியே வளர்ந்துநின்றது எவ்விடம்
இச்சுடரும் இந்திரியமும் மேகமானது எங்ஙனே. 509

முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுஉதித்த ஐம்புலன்கள் ஆகுமத்தி அப்புலன்
அத்தனித்த காளகண்டர் அன்பினால் அனுதினம்
உச்சரித் துளத்திலே அறிந்துணர்ந்து கொண்மினே. 510

அண்ணலார் அநாதியாய் அநாதிமு னநாதியாய்
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதாகு முன்னலோ
கண்ணிலானில் சுக்கிலங் கருத்தொடுங்கி நின்றபின்
மண்ணுளோரு விண்ணுளோரு வந்தவாற தெங்கனே. 511

எத்திசைக்கும் எவ்வுயிர்க்கும் எங்களப்பன் எம்பிரான்
முத்தியான விந்துளே முளைத்தெழுந்து செஞ்சுடர்
சித்தினில் தெளிந்தபோது தேவர் கோயில் சேர்ந்தனன்
அத்தனாடல் கண்டபோது அடங்கியாடல் உற்றதே. 512

வல்லவாசல் ஒன்பது மருத்தடைத்த வாசலும்
சொல்லும் வாசல்ஓரைந்துஞ் சொல்லவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாசல் ஊடுபோய்
எல்லைவாசல் கண்டபின் இனிப்பிறப்ப தில்லையே. 513

ஆதியான தொன்றுமே அனேகரூப மாயமாய்ப்
பேதபேத மாயெழுந்து சர்வசீவ னானபின்
ஆதியோடு கூடிமீண் டெழுந்து சன்ம மானபின்
சோதியான ஞானியரும் சத்தமாய் இருப்பரே. 514

வண்டுபூ மணங்க ளோடு வந்திருந்த தேனெலாம்
உண்டுளே அடங்குவண்ண மோதுலிங்க மூலமாய்க்
கண்டுகண்டு வேரிலே கருத்தொடுங்க வல்லிரேல்
பண்டுகொண்ட வல்வினை பறந்திடும் சிவாயமே. 515

ஓரெழுத்து லிங்கமாக வோதுமக் கரத்துளே
ஓரெழுத்து இயங்குகின்ற உண்மையை அறிகிலீர்

மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாலெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே. 516

தூரதூர தூரமும் தொடர்ந்தெழுந்த தூரமும்
பாரபாரம் என்றுமே பரித்திருந்த பாவிகாள்
நேரநேர நேரமும் நினைந்திருக்க வல்லிரேல்
தூரதூர தூரமும் தொடர்ந்து கூட லாகுமே. 517

குண்டலங்கள் பூண்டு நீர் குளங்கடோறும் மூழ்கிறீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்
மண்டையேந்து கையரை மனத்திருத்த வல்லிரேல்
பண்டைமால் அயன்றொழப் பணிந்து வாழ லாகுமே. 518

கூடுகட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோல்
ஆடிரண்டு கன்றைஈன்ற அம்பலத்துள் ஆடுதே
மாடுகொண்டு வெண்ணெயுண்ணும் மானிடப் பசுக்களே
வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியும் காணுமே. 519

உள்ளதோ பிறப்பதோ உயிர்ப்படங்கி நின்றிடும்
மெள்ளவந்து கிட்டநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பதும் ஒத்தபோது நாதமாம்
கள்ள வாசலைத் திறந்து காணவேண்டு மாந்தரே. 520

நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் இருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை அறியுமோ. 521

நானும்அல்ல நீயும் அல்ல நாதன் அல்ல ஓதுவேன்
வானில்உள்ள சோதி அல்ல சோதிநம்முள் உள்ளதே
நானும்நீயும் ஒத்தபோது நாடிக்காண லாகுமோ
தானதான தத்ததான தானதான தானனா. 522

நல்லதல்ல கெட்டதல்ல நடுவில்நிற்பது ஒன்றுதான்
நல்லதென்ற போதது நல்லதாகி நின்றுபின்
நல்லதல்ல கெட்டதென்றால் கெட்டதாகும் ஆதலால்
நல்லதென்று நாடிநின்று நாமம் சொல்ல வேண்டுமே. 523

பேய்கள்கூடிப் பிணங்கள் தின்னும் பிரியமில்லாக் காட்டிலே
நாய்கள்சுற்ற நடனமாடும் நம்பன் வாழ்க்கை ஏதடா !
தாய்கள்பால் உதிக்கும்இச்சை தவிரவேண்டி நாடினால்
நோய்கள் பட்டு உழல்வது ஏது நோக்கிப்பாரும் உம்முளே. 524

உப்பைநீக்கில் அழுகிப்போகும் ஊற்றையாகும் உடலில்நீ
அப்பியாசை கொண்டிருக்கல் ஆகுமோசொல் அறிவிலா
தப்பிலிப்பொய் மானம் கெட்ட தடியனாகும் மனமேகேள்;
ஒப்பிலாசெஞ் சடையனாகும் ஒருவன் பாதம் உண்மையே. 525

பிறப்பதெல்லாம் இறப்பது உண்டு பேதைமக்கள் தெரிகிலாது
இறப்பது இல்லை என மகிழ்ந்து எங்கள் உங்கள் சொத்தெனக்
குறிப்புப்பேசித் திரிவரன்றிக் கொண்ட கோலம் என்னவோ
நிறப்பும் பொந்தி அழிந்தபோது நேசமாமோ ஈசனே? 526

சுட்டெரித்த சாந்துபூசும் சுந்தரப்பெண் மதிமுகத்
திட்டநெட்டு எழுத்தறியாது ஏங்கிநோக்கு மதிவலீர்
பெட்டகத்துப் பாம்புறங்கும் பித்தலாட்டம் அறியிரோ?
கட்டவிழ்த்துப் பிரமன் பார்க்கில் கதிஉமக்கும் ஏதுகாண். 527

வேதம்ஓது வேலையோ வீணதாகும் பாரிலே
காதகாத தூரம்ஓடிக் காதல்பூசை வேணுமோ?
ஆதிநாதன் வெண்ணெயுண்ட அவனிருக்க நம்முளே
கோதுபூசை வேதம்ஏது குறித்துப்பாரும் உம்முளே. 528

பரம்இலாதது எவ்விடம்? பரம் இருப்பது எவ்விடம்?
அறம் இலாத பாவிகட்குப் பரம்இலை அஃது உண்மையே;
கரம் இருந்தும் பொருளிருந்தும் அருளிலாத போதது
பரம் இலாத சூன்யமாகும் பாழ் நரகம் ஆகுமே. 529

மாதர் தோள்சேராத தேவர் மானிலத்தில் இல்லையே !
மாதர் தோள் புணர்ந்தபோது மனிதர்வாழ் சிறக்குமே
மாதராகுஞ் சத்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்து கொண்டான் ஈசனே. 530

சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியொணாத சீவர்காள் !
சித்தர் இங்கு இருந்த போது பித்தர் என்று எண்ணுவீர்

சித்தர் இங்கு இருந்தும் என்னபித்தன் நாட்டிருப்பரே;
அத்தன் நாடும் இந்தநாடும் அவர்களுக்கெ லாமொன்றே. 531

மாந்தர் வாழ்வு மண்ணிலே மறந்தபோது விண்ணிலே
சாந்தனான ஆவியைச் சரிப்படுத்த வல்லிரேல்
வேந்தன் ஆகி மன்றுளாடும் விமலன் பாதம் காணலாம்
கூந்தலம்மை கோணல் ஒன்றும் குறிக்கொணாதுஇஃது
உண்மையே. 532

சருகருந்தி நீர் குடித்துச் சாரல்வாழ் தவசிகாள் !
சருகருத்தில் தேகங்குன்றிச் சஞ்சலம் உண்டாகுமே;
வருவிருந்தோடு உண்டுஉடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்
வருவிருந்தோன் ஈசனாகி வாழ்வளிக்கும் சிவாயமே. 533

காடுமேடு குன்றுபள்ளம் கானின் ஆறகற்றியும்
நாடு தேசம் விட்டலைவர் நாதன் பாதம் காண்பரோ?
கூடுவிட்டு அகன்றுஉன் ஆவி கூத்தனூர்க்கே நோக்கலால்
வீடு பெற்று அரன் பதத்தில் வீற்றிருப்பர் இல்லையே. 534

கட்டையால் செய் தேவரும் கல்லினால் செய் தேவரும்
மட்டையால்செய் தேவரும் மஞ்சளால்செய் தேவரும்
சட்டையால்செய் தேவரும் சாணியால்செய் தேவரும்
வெட்ட வெளிய தன்றிமற்று வேறுதெய்வம் இல்லையே. 535

தங்கள் தேகம் நோய் பெறின் தனைப்பிடாரி கோயிலில்
பொங்கல் வைத்து ஆடு கோழிப் பூசைப்பலியை இட்டிட
நங்கச் சொல்லு நலிமிகுந்து நாளும் தேய்ந்து மூஞ்சூராய்
உங்கள் குலதெய்வம் உங்கள் உருக்குலைப்பது உண்மையே. 536

ஆசைகொண்டு அனுதினமும் அன்னியர் பொருளினை
மோசம் செய்து அபகரிக்க முற்றிலும் அலைபவர்
பூசையோடு நேமநிட்டை பூரிக்கச் செய் பாதகர்
காசினியில் ஏழுநரகைக் காத்திருப்பது உண்மையே. 537

நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்
வாசமோடு அணிந்து நெற்றி மைதிலர் தம் இட்டுமே
மோசம் பொய்புனை சுருட்டு முற்றிலும்செய் மூடர்காள் !
வேசரிக ளம்புரண்ட வெண்ணீறாகும் மேனியே. 538

வாதம் செய்வேன் வெள்ளியும் பொன் மாற்றுயர்ந்த தங்கமும்
போதவே குருமுடிக்கப் பொன் பணங்கள் தாவெனச்
சாதனை செய் தெத்திச் சொத்து தந்ததைக் கவர்ந்துமே
காததூரம் ஓடிச்செல்வர் காண்பதும் அருமையே. 539

யோகசாடை காட்டுவார் உயரவும் எழும்புவார்
வேகமாக அட்டசித்து வித்தைகற்று நெட்டுவார்
மோகம் கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்
பேயது பிடித்தவர் போல் பேருலகில் சாவரே. 540

காயகாயம் உண்பதாகக் கண்டவர் மதித்திட
மாயவித்தை செய்வது எங்கு மடிப்பு மோசம் செய்பவர்
நேயமாக் கஞ்சா அடித்து நேர் அபினைத் தின்பதால்
நாயதாக நக்கிமுக்கி நாட்டினில் அலைவரே. 541

நீரினில் குமிழிஒத்த நிலையிலாத காயம்என்று
ஊரினில் பறை அடித்து உதாரியாய்த் திரிபவர்
சீரினில் உனக்கு ஞான சித்திசெய்வேன் பாரென
நேரினில் பிறர் பொருளை நீளவும் கைப்பற்றுவார். 542

காவியும் சடைமுடி கமண்டலங்கள் ஆசனம்
தாவுருத்தி ராட்சம் யோகத் தண்டு கொண்ட மாடுகள்
தேவியை அலையவிட்டுத் தேசம் எங்கும் சுற்றியே
பாவியென்ன வீடெலாம் பருக்கை கேட்டு அலைவரே. 543

முத்திசேரச் சித்திஇங்கு முன்னளிப்பேன் பாரெனச்
சத்தியங்கள் சொல்லி எங்கும் சாமிவேடம் பூண்டவர்
நித்தியம் வயிறு வளர்க்க நீதி ஞானம் பேசியே
பத்தியாய்ப் பணம்பறித்துப் பாழ்நரகில் வீழ்வரே. 544

செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்
கொம்மையற்ற கிளையில்பாத குறடு செய்து அழிக்கிறீர்
நும்முளே விளங்குவோனை நாடி நோக்க வல்லிரேல்
இம்மளமும் மும்மளமும் எம்மளமும் அல்லவே. 545

எத்திசை எங்கு எங்கும்ஓடி எண்ணிலாத நதிகளில்
சுற்றியும் தலைமுழுகச் சுத்தஞானி யாவரோ?

பத்தியோடு அரன்பதம் பணிந்திடாத பாவிகாள் !
முத்திஇன்றி பாழ்நரகில் மூழ்கிநொந்து அலைவரே. 546

கல்லு வெள்ளி செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்
வல்லதேவ ரூபபேதம் அங்கமைத்துப் போற்றிடில்
தொல்லைஅற் றிடப்பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்
இல்லை இல்லை இல்லை இல்லை ஈசன் ஆணை இல்லையே. 547

இச்சகம் சனித்ததுவும் ஈசன்ஐந்து எழுத்திலே
மெச்சவும் சராசரங்கள் மேவும் ஐந்து எழுத்திலே
உச்சிதப் பலஉயிர்கள் ஓங்கல் அஞ்செழுத்திலே
நிச்சயமெய்ஞ் ஞானபோதம் நிற்கும் ஐந்தெழுத்திலே. 548

**சாத்திரங்கள் பார்த்துப் பார்த்து தான் குருடு ஆவதால்**
**நேத்திரங்கெட வெய்யோனை நேர்துதிசெய் மூடர்கள் !**
**பாத்திரம் அறிந்து மோன பக்திசெய்ய வல்லிரேல்**
**சூத்திரப்படி யாவரும் சுத்தர் ஆவர் அங்ஙனே. 549**

**மனவுறுதி தானிலாத மட்டிப்பிண மாடுகள்**
**சினமுறப் பிறர் பொருளைச் சேகரித்து வைத்ததைத்**
**தினந்தினம் ஊர் எங்கும் சுற்றி திண்டிக்கே அலைபவர்**
**இனமதில் பலர்கள் வையும்; இன்பம் அற்ற பாவிகள். 550**

**சிவாயவசி என்னவும் செபிக்க இச்சகம் எலாம்**
**சிவாயவசி என்னவும் செபிக்கயாவும் சித்தியாம்**
**சிவாயவசி என்னவும் செபிக்கவானம் ஆளலாம்**
**சிவாயவசி என்பதே இருதலைத்தீ ஆகுமே. 551**

## 2. பட்டினத்தார் பாடல்

இளமை முதலே இவர் வாழ்வில் அற்புதங்கள் பல நிகழ்ந்ததாய்ச் சொல்லப்படுகின்றது. வானுலக தேவர்களில் ஒருவரான குபேரன் தான் இப்பூவுலகில் பட்டினத்தாராக அவதரித்தார் என்று திருவெண்காட்டுப் புராணம் கூறும். இவரது பெற்றோர்கள் சிவநேசன்-ஞானகலாம்பை ஆவர். இவர்களின் தவப்பயனாய்ப் பிறந்தவரே பட்டினத்தார். இவருக்குப் பெற்றோர் வைத்த பெயர் திருவெண்காடர்.

கப்பல் வணிகம் மூலம் பெரும் பொருள் ஈட்டிய சிவநேசர் காலமாக உரிய வயதில் ஞானகலாம்பை சிதம்பரச் செட்டியார் சிவகாமியம்மையின் புதல்வியான சிவகலை என்பவரை திருவெண்காடருக்கு மணமுடித்தார்.

இல்லற வாழ்க்கை இனிதே நடந்தாலும் குழந்தையில்லா ஏக்கம் திருவெண்காடரை வாட்டியது. இறைவனிடம் முறையிட்டார். இறைவன் தாமே குழந்தை வடிவாய் சிவசருமர் என்ற சிவபக்தர் மூலம் திருவெண்காடரைச் சேர்ந்தார். அன்பு மகனை மருதபிரான் என்று பெயரிட்டு வளர்த்தார்.

குழந்தை பெரியவனானதும் வியாபாரம் செய்ய அனுப்பினார். திரைகடலோடித் திரவியம் தேடிச் சென்ற மருதவாணன் கப்பல் நிறையத் தவிடு மூட்டையும் வரட்டிகளையும் ஏற்றிக்கொண்டு திரும்பி வந்தான்.

மருதவாணனுக்குப் பித்துப் பிடித்து விட்டதோ என்றஞ்சிய அவர் வீட்டினுள்ளே சிறை வைத்தார். வரட்டிகளை வெளியே எறிய வரட்டிக்குள் வைரக்கற்கள் சிதறின. தவிடெல்லாம் தங்கமாக மின்ன திகைத்துப்போன திருவெண்காடர் தம் மகனைப் பாராட்டத் தேடுகையில் அவரோ தம் அன்னையாரிடம் சிறு பேழையைக் கொடுக்கச் சொல்லிக் கொடுத்து விட்டு மறைந்து விட்டிருந்தார்.

மைந்தன் கொடுத்துவிட்டுச் சென்றிருந்த பேழையில் காதற்ற ஊசியும் ஓர் ஓலைச்சீட்டும் இருந்தது. அதில் ‘காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே’* என்று எழுதப்பட்டிருந்தது. வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து கொண்ட திருவெண்காடர் தமது மைந்தனாக இதுநாள் வரை இருந்தது திருவிடைமருதூர் பெருமான்தான் என்பதை உணர்ந்து மனம் வருந்தித் துறவறம் பூண்டார்.

*“காதற்ற ஊசியும் வாராதே காணும் கடைவழிக்கே” பட்டினத்தாரின் இந்த வாசகமும் பாடலும் புதுச்சேரி கருவடிக்குப்பம் சுடுகாட்டில் உள்ள

அரிச்சந்திரன் கோவிலில் கல்வெட்டாய் பதிக்கப்பட்டு உலக நிலையாமையை உணர்ந்து நடக்க வேண்டுகிறது.

இந்தத் துறவு நிலை வருவதற்கு முன் தன் மனம் இருந்த நிலையை பொருளாசை, பெண்ணாசை, வித்தையாசை என்று மனம் ஆசையின் வாய்க்கப்பட்டு அலைக்கழிப்புற்ற நிலையை அழகிய கண்ணிகளாகப் பாடுகின்றார்.

"அறியாமை யாம் மலத்தால் அறிவுமுதல் கெட்டனடா
பிறியா வினைப் பயனால் பித்துப் பிடித்தனடா"

"மாமாயை என்னும் வனத்தில் அலைகிறண்டா"
"மண்ணாசைப் பட்டேனை மன்னுண்டு போட்டதடா"

"பொன்னாசை பெண்ணாசை போகேனே என்குதே"

"மக்கள் சுற்றத் தாசை மறக்கேனே என்குதே;
திக்கரசாம் ஆசையது தீரேனே என்குதே"

"வித்தை கற்கும் ஆசையது விட்டொழியேன் என்குதே;
சித்து கற்கும் ஆசை சிதையேனே என்குதே"

"மந்திரத்தில் ஆசை மறக்கேனே என்குதே
சுந்தரத்தில் ஆசை துறக்கேனே என்குதே"

"கட்டுவர்க்கத்து ஆசை கழலேனே என்குதே
செட்டுதனில் ஆசை சிதையேனே என்குதே"

இதுமட்டுமா, இந்த ஆசையைத் தூண்டும் ஐந்து புலனும் அவருக்கு அடங்கா நிலையையும் தெரிவிக்கின்றார்.

"ஐந்து புலனும் அடங்கேனே என்குதே;
சிந்தை தவிக்கிறதும் தேறேனே என்குதே"

காமக் குரோதம் கடக்கேனே என்குதே
நாமே அரசென்று நாள்தோறும் எண்ணுதே
அச்சம் ஆங்காரம் அடங்கேனே என்குதே

என்று அழுகிறார்.

நேற்றிருந்தோர் இன்று இல்லை. கண்ணுக்குக் கண்ணெதிரே உடல்களெல்லாம் கட்டையில் வேகக் கண்டும் இந்த உடலை நித்தியமான தென்று எண்ணி நிரந்தரமாக இருப்போமென்று எண்ணி ஆங்காரம் கொள்ளுகிறதே, நீர்க்குமிழி போன்ற இவ்வாழ்க்கை ஒரு பெருங்காற்றுக்குத் தங்காதே. பெண்ணாசை மனதை அணுஅணுவாய்ச் சித்திர வதை செய்கிறதே. அரும்பு விழியழகும், குதம்பை முலையழகும் உரகப்படத் தல்குல் அழகும், 'ஆவி உண்பேன்' என்று என்னை அலைக்கழிக்கின்றதே'.

கன்னி வனநாதா ! கன்னி வனநாதா !
புல்லாகிப் பூடாய்ப் புலந்தநாள் போதாதோ?

கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ?
சீரியாய்க் கீடமாய்க் கெட்ட நாள் போதாதோ?
நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ?
பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ?
அன்னை வயிற்றில் அழிந்த நாள் போதாதோ?
மன்னவனாய் வாழ்ந்து மரித்த நாள்போதாதோ?
காமன் கணையால் கடைபட்டல் போதாதோ? (18-24)

"பிறப்பைத் தவிர்த்தையிலை புண்ணாக் கொண்டையிலை
இறப்பைத் தவிர்த்தையிலை; என்னென்று கேட்டையிலை"

என்று கூறி கன்னி வனநாதா என்னை உன்னோடு அழைத்துக்கொள் என்று கெஞ்சுகின்றார்.

இறைவன் அவ்வளவு சீக்கிரம் அழைத்துக் கொள்வாரா என்ன? இன்னும் அவரது அருட்புலம்பலைக் கேட்கும் ஆசைப்பேறும் முதல்வன் முறையீட்டைத் தொடர்ந்து அருட்புலம்பலும் தொடர்கின்றது.

குருவாகி வந்தானோ? குலம் அறுக்க வந்தானோ?
உருவாகி வந்தானோ? உரு அழிக்க வந்தானோ"(13)

"முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி
தன்னை யறியவே தான் ஒருத்தி யானேண்டி" (21)

"சும்மா இருக்கவைத்தான் சூத்திரத்தை நான் அறியேன்
மாணிக்கத்துள் ஒளிபோல் மருவி இருந்தாண்டி"
உள்ளுண்வாய் நின்றவர்தம் உணர்வுக்கு உணர்வாண்டி (54)

உடலும் உயிரும்போல் உள்கலந்து நின்றாண்டி

அந்த இறைவன்
ஓசை ஒடுங்கும் இடம் ஓங்காரத்து உள்ஒளி காண்
பேசாமல் இருக்கும் பிரமம் இது என்றாண்டி"

என்று தாமறிந்தவற்றை கூறிப் புலம்புகின்றார். இந்தத் துறவியை இனி நாம் பட்டினத்தார் என்றே குறிப்பிடுவோம்.

காவிரிப்பூம்பட்டினத்துப் பெருஞ்செல்வந்தராய் வாழ்ந்த சிறப்பு நோக்கி இவரை எல்லோரும் பட்டினத்தார் என்றே அழைத்தனர்.

இவரது பாடல்களில் பெரும்பாலும் திருவாசக மணமும் நிறைந்து காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக,

"புல்லாகிப் பூடாய்ப் புலந்தநாள் போதாதோ?
கல்லாய் மரமாய்க் கழிந்தநாள் போதாதோ?
கீரியாய்க் கீடமாய்க் கெட்டநாள் போதாதோ?
நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ? (21-22)

என்ற வரிகள் மாணிக்கவாசகரின்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்ல ஆ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"

என்ற சிவபுராண வரிகளை நினைவூட்டுகின்றன.

இன்னும் சில பாடல்கள் இராமலிங்க அடிகளாரின் பாடல்களை மனத்தினில் நிழலாட வைக்கின்றன.

"தன்னை அறிந்தேன்டி ! தனிக்குமரி ஆனேன்டி
தன்னம் தனியே தனி இருக்கும் பக்குவமோ?

என்ற வரிகள் இராமலிங்கரின் 'தனித்திருக்க மாட்டேனடி' என்ற பாடலை நினைவுறுத்துகின்றன.

மொத்தத்தில் இறைவனை உருக வைப்பதில் மாணிக்க வாசகரும், இராமலிங்க அடிகளாரும் கலந்த கலவை இந்தப் பட்டினத்தார் எனலாம்.

அப்படி இறைவனைப் பாடி உருகுகின்ற திருவாசகத்திலும், அருட்பாவிலும் நனைந்த ஈர விழிகள் இந்தப் பட்டினத்தார் பாடல்களிலும் கசிவை ஏற்படுத்துகின்றன.

துறவுக்கோலத்தில் வீடு வீடாய்ப் பிச்சையெடுத்து உண்டு திரிவது பட்டினத்தாரின் சகோதரிக்கு வருத்தத்தை ஏற்படுத்தியது. இப்படிப்பட்ட அவமானத்தைத் தேடித் தரும் தம்பி தனக்கு இருந்தென்ன செத்தென்ன என்ற எண்ணத்துடன் பட்டினத்தாரை விஷம் கலந்த ஆப்பம் கொடுத்துக் கொல்லப் பார்த்தாள்.

தமக்கையின் கருத்தை அறிந்த பட்டினத்தார், ‘தன்னப்பம் தன்னைச் சுடும்; வீட்டப்பம் ஓட்டைச் சுடும்’ என்று கூறி வீட்டின் கூரை மீது அப்பத்தினை வீச அவ்வீடு தீப்பிடித்து எரிந்தது.

இப்படித் துறவியாய்த் திரிந்த காலத்து அன்னை இறந்த துயர் கேட்டு அங்கே சென்று பச்சை வாழை மட்டை மீது அன்னையின் உடலைக் கிடத்தி திருப்பதிகம் பாடித் தீயெழுப்பித் தம் அன்னையாருக்குச் செய்ய வேண்டிய ஈமக்கிரியை செய்து முடித்தார். இவ்வளவு நாட்கள் அவ்வூரில் சுற்றித் திரிந்தது இதற்காகத்தானே.

இவர் பாடிய இந்த தகனப்பாடல் புதுச்சேரியிலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் இறுதி ஊர்வலப் பாடலாய்த் திருவாசகத்துடன் சேர்த்துப் பாடப்படுகிறது. இது வேறு எந்தச் சித்தர் பாடலுக்கும் இல்லாத சிறப்பாய்க் கருதப்படுகிறது.

**“ஐயிரண்டு திங்களா யங்கமெலாம் நொந்து பெற்றுப்**
**பையலென்ற போதே பரிந்தெடுத்துச் - செய்யஇரு**
**கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை**
**எப்பிறப்பிற் காண்பே னினி”**

என்று ஓதுவார் பட்டினத்தாரின் இந்தப் பாடலைப் பாடும்போது உயிரற்ற அந்த உடலை இன்னொரு தரம் பார்க்க வைக்கிறது.

பிணம் சுடுவதற்கு முன்போ அல்லது புதைப்பதற்கு முன்போ வாய்க்கரிசி இடுதல் என்ற சடங்கு உண்டு. உறவும் சுற்றமும் வாய்க்கரிசி இடும் நேரத்தில் ஓதுவார் அல்லது பரியாரி இந்தப் பாடலைப் பாடுவார்.

“அரிசியோ நானிடுவே னாத்தாள் தனக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல் - உருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானே யென வழைத்த வாய்க்கு”

என்று வாய்க்கரிசி இடுபவர் மனம் அழும் ஆசையை இப்பாடல் எதிரொலிக்கிறது.

வெட்டியான் மண்ணால் உடலை மூடுகிறான். அல்லது உடலை வறட்டியால் (எரு மூட்டையால்) மூடுகிறான். அந்த உடலை இறுதியாக ஒரு தடவை பார்க்கத் துடிக்கிறது.

“ஐயிரண்டு திங்களா யங்கமெலாம் நொந்து பெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச் - செய்யஇரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பிற் காண்பே னினி”

பாசத்திற்கு ஆட்படாதார் ஆர்?

உடலுக்குத் தீ வைக்கச் சொல்லுகிறான் வெட்டியான். மனம் பதறுகிறது. எத்தனை அருமையாய் எம்மைப் பாதுகாத்த ‘தாய்’ அவளுக்கா இந்தக் கொடியவன் தீமூட்டச் சொல்லுகிறான். முடியாதய்யா முடியாது.

“முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாள் அளவும்
அந்திபக லாச்சிவனை யாதரித்துத் - தொந்தி

சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ
வெரியத் தழல்மூட்டு வேன்”

தம் குழந்தைப் பருவத்தில் சோறூட்டிய தாயாரின் கருணை முகம் மனதில் நிழலாடுகிறது. பட்டினத்தார் துடித்துப் போகிறார்.

“வட்டிலிலுந் தொட்டிலிலும் மார்மேலுந் தோள் மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன்”

பட்டினத்தார் மனத்தடுமாற்றத்தை இன்னுமொரு பாடலும் கூறுகிறது.

“அள்ளியிடுவ தரிசியோ தாய்தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல் - மெள்ள

முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு”

இனியும் காத்திருக்க இயலாது. அன்னை உடல் எரிக்குள் மூழ்குவதே சரி என்று நினைத்த பட்டினத்தார் அவ்வுடலைப் புதிய முறையில் பாட்டாலேயே தகனம் செய்கிறார்.

“முன்னை யிட்ட தீ முப்புரத்திலே
பின்னை யிட்ட தீ தென் னிலங்கையில்
அன்னை யிட்ட தீ அடிவயிற்றிலே
யானு மிட்ட தீ மூள்க மூள்கவே”

தீக்கடவுள் பட்டினத்தாரின் வாக்குக்குப் பணிந்து உடலைத் தீக்கிரையாக்கினான். அப்போது பட்டினத்தாருக்கு உடல் பதறுகிறது. வெந்தழலில் வேகும் அவ்வுடலைப் பார்த்து,

“வேகுதே தீயதனில் வெந்து பொடி சாம்பல்
ஆகுதே பாவியே னையகோ - மாகக்

குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை”

தீ உடலை ஏறத்தாழ எரித்துவிட்டது. மேடாக இருந்த உடற்கூடு சாம்பலாய்ப் போய்விட்டது.

“வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ என்னை மறந்தாளோ - சந்ததமு
முன்னையே நோக்கி யுகந்துவரங் கிடந்துஎன்
றன்னையே யீன்றெடுத்த தாய்”

இப்பொழுது அவர் மனம் ஏறத்தாழ பக்குவ நிலைக்கு வந்து விட்டது. உடற் சாம்பல் சேகரிக்கப்படுகிறது. இனி என்ன? நேற்று உடலாய் நடமாடினாள். இன்று சாம்பலாய்த் தோற்றம் தருகிறாள். இதுதான் வாழ்க்கை என்று சமாதானமடைகிறார்.

“வீற்றிருந்தா ளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா ளின்று வெந்து நீறானாள் - பாற்றெளிக்க

வெல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காம
லெல்லாந் சிவமயமே யாம்”

என்று முடித்து எல்லோரையும் பாற்றெளிக்க அழைக்கின்றார் பட்டினத்தார்.

இந்த பட்டினத்தார் பாடலிலே,

“மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாயின்மட்டே
யினமான சுற்ற மயானம் மட்டே வழிக்கேது துணை
தினையாமள வெள் ளளவாகினு முன்பு செய்ததவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே”

என்ற பாடல் பிரசித்தமானது. இப்பாடலைப் பிரசித்தமாக்கியவர் கவிஞர் கண்ணதாசன். ‘பாத காணிக்கை’ என்ற திரைப்படத்தில்,

“வீடுவரை உறவு; வீதிவரை மனைவி
காடுவரை பிள்ளை; கடைசிவரை யாரோ?”

என்று அவர் எழுப்பிய கேள்வி இந்தப் பட்டினத்தார் பாடலைப் பார்த்துதான். பட்டினத்தார் பாடலை வாசிக்க மறந்தவர்கள் கண்ணதாசனின் இந்தப் பாடலைக் கேட்க மறந்திருக்க மாட்டார்கள்.

இதுபோலவே பட்டினத்தாரின் உடற்கூற்று வண்ணத்தைப் படிக்கத் தயங்குபவர்களுக்கு அதன் சுருக்கமாகப் பின்வரும் திரைப்படப் பாடலையும் கவியரசு பாடியுள்ளார்.

“எந்த ஊர் என்பவனே !
இருந்த ஊரைச் சொல்லவா?
அந்த ஊர் நீயும்கூட
அறிந்த ஊர் அல்லவா?
மேலூரில் வாழ்ந்திருந்தேன்
,,,,,,,,,,,,,,,,”

இசையுடன் பாடும்போது எந்தப் பாடலும் ரசனைக்குரியதாகி விடுகிறதல்லவா?

இதோ பட்டினத்தார் பாடலையும் ஒருமுறை பாட வேண்டாம்; படித்துத்தான் பாருங்களேன்.

“ஒருமடமாதும் ஒருவனும்ஆகி இன்பசுகம் தரும்
அன்பு பொருந்தி உணர்வுகலங்கி ஒழுகிய விந்து ஊறுசுரோணிதம்
மீதுகலந்து

பனியில் ஓர்பாதி சிறிதுளிமாது பண்டியல் வந்து
„„„„„„„„„„„„„„„„„„„„„„”

## கோயில் திரு அகவல் - 1

**நினைமின் மனனே ! நினைமின் மனனே**
**சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை**
**நினைமின் மனனே ! நினைமின் மனனே !**
**அலகைத் தேரின் அலமரு காலின்**
**உலகப்பொய் வாழ்க்கையை உடலை ஓம்பற்க !** **5**

**பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்;**
**தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்;**
**பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்;**
**உணர்ந்தன மறக்கும், மறந்தன உணரும்;**
**புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்;** **10**

**அருந்தின மலமாம், புனைந்தன அழுக்காம்;**
**உவப்பன வெறுப்பாம், வெறுப்பன உவப்பாம்;**
**என்றிவை அனைத்தும் உணர்ந்தனை; அன்றியும்;**
**பிறந்தன பிறந்தன பிறவிகள் தோறும்**
**கொன்றனை அனைத்தும், அனைத்து நினைக்கொன்றன.** **15**

**தின்றனை அனைத்தும், அனைத்து நினைக் கொன்றன;**
**பெற்றனை அனைத்தும், அனைத்து நினைப் பெற்றன;**
**ஓம்பினை அனைத்தும், அனைத்து நினை ஓம்பின;**
**செல்வத்துக் களித்தனை, தரித்திரத்து அழுங்கினை;**
**சுவர்க்கத்து இருந்தனை, நரகில் கிடந்தனை;** **20**

**இன்பமும் துன்பமும் இருநிலத்து அருந்தினை;**
**ஒன்றொன்று ஒழியாது உற்றனை; அன்றியும்,**
**புற்புதக் குரம்பைத் துச்சில் ஒதுக்கிடம்**
**என்னநின் றியங்கும் இருவினைக் கூட்டைக்**
**கல்லினும் வலிதாகக் கருதினை; இதனுள்** **25**

**பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி;**
**மீளுங் குறும்பி வெளிப்படும் ஒரு பொறி**
**சளியும் நீரும் தவழும் ஒருபொறி;**
**உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி;**
**வளியும் மலமும் வழங்கும் ஒருவழி;** **30**

சலமும் சீயும் சரியும் ஒருவழி;
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டகம் முடிவில் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து,
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை. 35

ஒழிவருஞ் சிவபெரும் போகஇன் பத்தை,
நிலுலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற இருவினை மலமற
வரவொடு செலவற மருளற இருளற
இரவொடு பகலற இகபரம் அற ஒரு 40

முதல்வனைத் தில்லையுள் முனைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை
நெருப்பினில் அரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத்து ஒளிருஞ் சீவனை,
நினைமின் மனனே ! நினைமின் மனனே ! 45

சிவபெரு மானைச் செம் பொனம்பலவனை
நினைமின் மனனே ! நினைமின் மனனே !

## திருச்சிற்றம்பலம்

## கோயில் திரு அகவல் - 2

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்ணுடன் ஆடும்
காதலும் கருத்தும் அல்லால்நின் இருதாள்
பங்கயம் சூடப் பாக்கியம் செய்யாச்
சங்கடம் கூர்ந்த தமியேன் பாங்கிருந்து 5

அங்கோடு இங்கோடு அலமருங் கள்வர்
ஐவர் கலகமிட்டு அலைக்குங் கானகம்
சலமலப் பேழை; இருவினைப் பெட்டகம்;
வாதபித்தம் கோழை குடிபுகுஞ் சீறூர்;
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை; 10

நாற்றப் பாண்டம்; நான் முழத்து ஒன்பது
பீற்றல் துண்டம்; பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்;
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்;
ஓயா நோய்க்கிடம்; ஓடும் மரக்கலம்; 15

மாயா விகாரம்; மரணப் பஞ்சரம்;
சோற்றுத் துருத்தி; தூற்றும் பத்தம்;
காற்றில் பறக்கும் கானப் பட்டம்;
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை;
சதுர்முகப் பாணன் தைக்குஞ் சட்டை; 20

ஈமக் கனலில் இடுசில விருந்து;
காமக் கனலில் கருகும் சருகு;
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி,
பவக்கொழுந்து ஏறுங் கவைக் கொழு கொம்பு;
மணமாய் நடக்கும் வடிவின் முடிவில் 25

பிணமாய்க் கிடக்கும் பிண்டம்; பிணமேல்
ஊரில் கிடக்க வொட்டா உபாதி;
கால் எதிர் குவித்தபூளை; காலைக்
கதிர் எதிர்ப்பட்ட கடும்பனிக் கூட்டம்;
அந்தரத்து இயங்கும் இந்திர சாபம்; 30

அதிரும் மேகத்து உருவின் அருநிழல்;
நீரில் குமிழி; நீர்மேல் எழுத்து;
கண்துயில் கனவில் கண்ட காட்சி;
அதனினும் அமையும் பிரானே! அமையும்;
இமைய வல்லி வாழிஎன் றேத்த 35

ஆனந்தத் தாண்டவம் காட்டி
ஆண்டுகொண்டருள்கை நின் அருளினுக்கு அழகே!

## கோயில் திரு அகவல் - 3

பால்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற்று அடக்கிய சிவனே அடைக்கலம்!

அடங்கலும் அடக்கிடும் கடுங்கொலைக் காலனைக்
கால்எடுத் தடக்கிய கடவுள் நின் அடைக்கலம்
உலகு அடங் கலும்படைத்து உடையவன் தலைபறித்து 5

இடக்கையில் அடக்கிய இறைவ! நின் அடைக்கலம்!
செய்யபொன் னம்பலச் செல்வ! நின் அடைக்கலம்;
ஐய! நின் அடைக்கலம்; அடியன் நின் அடைக்கலம்;
மனவழி அலைத்திடும் கனவெனும் வாழ்க்கையும்;
விழுப்பொருள் அறியா வழுக்குமறு மனனும்; 10

ஆணவ மலத்துதித்து அளைந்ததில் உளைந்திடும்
நிணவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்;
படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்,
தவறும் அழுக்காறும் இவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யும் சுவடும் பெருஞ்சின 15

இகலும், கொலையும், இழிப்புறு புன்மையும்,
பகையும், அச்சமும், துணிவும், பனிப்பும்,
முக்குண மடமையும், ஐம்பொறி முயக்கமும்,
இடும்பையும் பிணியும் இடுக்கிய ஆக்கையை;
உயிர் எனுங் குருகுவிட்டு ஓடும் குரம்பையை 20

எலும்பொடு நரம்புகொண்டு இடையில் பிணித்துக்
கொழுந்தசை வேய்ந்தும் ஒழுக்கு விழுங் குடிலைச்
செழும்பெழு உதிரச் சிறுபுழுக் குரம்பையை,
மலவுடல் குடத்தைப் பலவுடல் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக் 25

கொலை படைக் கலம்பல கிடைக்கும் கூட்டைச்
சலிப்புறு வினைப் பலசரக்குக் குப்பையைக்
கோள்சரக்கு ஒழுகும் பீற்றல் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் துருத்தியை,
ஐம்புலப் பறவை அடையும்பஞ் சரத்தை. 30

புலராக் கவலை விளைமரப் பொதும்பை,
ஆசைக் கயிற்றில் ஆடும்பம் பரத்தைக்

காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை,
மக்கள் வினையின் மயக்குந் திகிரியைக்,
கடுவெளி உருட்டிய சகடக் காலைப் 35

பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத்து அலைப்பக் 40

கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடும் இயங்குபுற் கலனைக்
நடுவன்வந் தழைத்திட நடுங்கும் யாக்கையைப்

பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக்கு அபயம்நின் அடைக்கலம்;
வெளியிடை உரும்இடி இடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுள்நின் அடைக்கலம்;
இமையா நாட்டத்து இறையே! அடைக்கலம்; 45

அடியார்க்கு எளியாய்! அடைக்கலம் அடைக்கலம்;
மறையவர் தில்லை மன்றுள்நின் றாடிக்
கருணை மொண்டு அலையெறி கடலே! அடைக்கலம்,
தேவரும் முனிவரும் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்து அருள் புரியும் 50

எம்பெரு மானின் இணையடிக்கு அபயம்
அம்பலத் தரசே அடைக்கலம் உனக்கே!

## கச்சித் திரு அகவல்

திருமால் பயந்த திசைமுகன் அமைத்து
வரும் ஏழ் பிறவியும் மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலர் அடி இறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகாது அவமே
மாதரை மகிழ்ந்து காதல் கொண்டாடும் 5

மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விழிவெளி மாக்கள் தெளிவுறக் கேண்மின்;
முள்ளும் கல்லும் முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென உரைத்தும்,
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால் 10

துள்ளும் வரால் எனச் சொல்லித் துதித்தும்,
தசையும் எலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென இயம்பியும்
நெடும் உடல் தாங்கி நின்றிடும் இடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும், 15

மலமும் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை ஆலிலை யென்றும், 20

**சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந்து ஏறி
உகிரால் கீறல் உலர்ந்து உள் உருகி**

**நகுவார்க்கு இடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்,
குலையும் காமக் குருடர்க்கு உரைப்பேன்;
நீட்டவும் முடக்கவும் நெடும் பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவும் உதவி இங் கியற்றும்** 25

**அலங்கையைப் பார்த்துக் காந்தள் என்றுரைத்தும்,
வேர்வையும் அழுக்கும் மேவிய கழுத்தைப்
பாரினில் இனிய கமுகெனப் பகர்ந்தும்,
வெப்பும் ஊத்தையும் மேவிய வாயைத்
துப்பு முருக்கின் தூய்மலர் என்றும்,** 30

**அன்ன முங் கறியும் அசைவிட்டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீரும் சளியும் நின்று நின்று ஒழுகும்
கூறிய மூக்கைக் குமிழ் எனக் கூறியும்
தண்ணீர் பீளை தவிராது ஒழுகும்** 35

**கண்ணைப் பார்த்துக் கழுநீர் என்றும்
உள்ளுங் குறும்பி ஒழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளம் என வாழ்த்தியும்
கையும் எண்ணெயும் கலவாது ஒழியில்
வெய்ய அதரும் பேனும் விளையத்** 40

**தக்க தலை யோட்டில் முளைத்து எழுந்த
சிக்கின் மயிரைத் திரள்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லும் நரக வாயில்
தோலும் இறைச்சியும் துதைந்து சீப்பாயும்** 45

**காமப் பாழி; கருவிளை கழனி;
தூமைக் கடவழி; தொளைபெறு வாயில்;
எண்சாண் உடம்பும் இழியும் பெருவழி!
மண்பால் காமம் கழிக்கும் மறைவிடம்;
நச்சிக் காமுக நாய்தான் என்றும்** 50

இச்சித் திருக்கும் இடைகழி வாயில்;
திங்கள் சடையோன் திருவருள் இல்லார்
தங்கித் திரியும் சவலைப் பெருவழி;
புண் இது என்று புடவையை மூடி
உள் நீர் பாயும் ஓசைச் செழும்புண்; 55

மால்கொண்டு அறியா மாந்தர் புகும்வழி;
நோய் கொண்டு ஒழியார் நுண்ணியர் போம்வழி;
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி;
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி;
பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி; 60

மலம் சொரிந்து இழியும் வாயிற்கு அருகே
சலம்சொரிந்து இழியும் தண்ணீர் வாயில்;
இத்தை நீங்கள் இனிது என வேண்டா;
பச்சிலை இடினும் பத்தர்க்கு இரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை 65

முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்டர் அண்டமும் அனைத்துள புவனமும்
கண்ட அண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை இணையடி இறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுதல் ஒழிந்தே! 70

## திருவேகம்பமாலை

அறந்தான் இயற்றும் அவனிலுங்கோடி அதிகமில்லம்
துறந்தான் அவனிற் சதகோடிஉள்ளத் துறவுடையோன்
மறந்தான் அறக்கற் றறிவோடிருந்திரு வாதனையற்று
இருந்தான் பெருமையை என் சொல்லுவேன் கச்சியேகம்பனே. 1

கட்டிஅணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டிமுறிக்கும் மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டிமுழக்கி அழுவார் மயானங் குறுகியப்பால்
எட்டியடி வைப்பரோ இறைவாகச்சி யேகம்பனே. 2

கைப்பிடிநாயகன் தூங்கையிலேயவன் கையையெடுத்து
அப்புறந்தன்னில் அசையாமல் முன் வைத்தயல் வளவில்
ஒப்புடன் சென்று துயினீத்துப் பின்வந் துறங்குவளை
எப்படி நானம்புவேன் இறைவாகச்சி யேகம்பனே. 3

நன்னாரிற்பூட்டிய சூத்திரப்பாவைநன் னார்தப்பினால்
தன்னாலுமாடிச் சலித்திடுமோஅந்தத் தன்மையைப்போல்
உன்னா லியானுந் திரிவதல்லான் மற்றுனைப்பிரிந்தால்
என்னா லிங்காவதுண்டோ இறைவாகச்சி யேகம்பனே 4

நல்லறிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ அகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவாகச்சி யேகம்பனே. 5

பொல்லா தவனெறி நில்லா தவனைப் புலன்கடமை
வெல்லா தவன்கல்வி கல்லாதவன் மெய் யடியவர்பால்
செல்லா தவனுண்மை சொல்லா தவனின் திருவடிக்கன்பு
இல்லாதவன் மண்ணில் ஏன் பிறந்தேன்கச்சி ஏகம்பனே. 6

பிறக்கும்பொழுது கொடுபோதில்லைப் பிறந்துமண்மேல்
இறக்கும்பொழுது கொடுபோவதில்லை இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியாது
இறக்குங் குலாமருக்கென் சொல்லுவேன்கச்சி ஏகம்பனே. 7

அன்னவிசாரம் அதுவே விசாரம்அது வொழிந்தாற்
சொன்னவிசாரந் தொலையா விசாரநற் றோகையரைப்
பன்னவிசாரம் பலகால்விசார மிப்பாவி நெஞ்சுக்கு
என்னவிசாரம் வைத்தாய் இறைவாகச்சி ஏகம்பனே. 8

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துருகி
நல்லாப்பிழையும் நினையாப்பிழையும் நின்அஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந் தொழாப்பிழையும்
எல்லாப்பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே. 9

மாயநட்போரையும் மாயமலமெனும் மாதரையும்
வீயவிட்டோட்டி வெளியேபுறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்று பின்தாதையைக் கூடிப்பின்தாயைமறந்து
ஏயுமதேநிட்டை என்றான் எழிற்கச்சி ஏகம்பனே. 10

வரிக்கோல வேல்விழி யாரனுராக மயக்கிற்சென்று
சரிக்கோது வேனெழுத் தஞ்சுஞ் சொல்லேன்தமி யேனுடலம்
நரிக்கோ கழுகு பருந்தினுக் கோவெய்ய நாய்தனக்கோ
எரிக்கோஇரையெதுக்கோ இறைவாகச்சி ஏகம்பனே. 11

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டி என் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயைத உனை மறலிவிட்ட
தூதென்றுஎண் ணாமற் சுகமென்று நாடுமித் துற்புத்தியை
ஏதென்று எடுத்துரைப்பேன் இறைவாகச்சி ஏகம்பனே. 12

ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி ஏகம்பனே. 13

சீறும் வினையது பெண்ணுருவாகித் திரண்டுருண்டு
கூறு முலையும் இறைச்சியுமாகிக் கொடுமையினால்
பீறு மலமும் உதிரமுஞ்சாயும் பெருங்குழிவிட்டு
ஏறுங் கரைகண்டிலேன் இறைவாகச்சி ஏகம்பனே. 14

பொருளுடையோரைச் செயலிலும் வீரரைப் போர்க்களத்துந்
தெருளுடையோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல்

அருளுடையோரைத் தவத்திற்குணத்தில் அருளிலன்பில்
இருளறு சொல்லிலுங் காணத்தகுங்கச்சி ஏகம்பனே. 15

பருத்திப்பொதியினைப் போலவேவயிறு பருக்கத்தங்கள்
துறுத்திக் கறுசுவை போடுகின்றார் துறந் தோர்தமக்கு
வருத்திஅமுதிட மாட்டாரவரை இம்மானிலத்தில்
இருத்திக்கொண் டேனிருந்தா இறைவாகச்சி ஏகம்பனே. 16

பொல்லாஇருளகற் றுங்கதிர்கூகையென் புட்கண்ணினுக்கு
அல்லாயிருந்திடும் ஆறொக்குமேஅறி வோருள்ளத்தில்
வல்லாரறிவார் அறியார்தமக்கு மயக்கங்கண்டாய்
எல்லாம் விழிமயக்கே இறைவாகச்சி ஏகம்பனே. 17

வாதுக்குச்சண்டைக்குப் போவார்வருவார் வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ் செய்திடுவார்தினந் தேடியொன்றும்
மாதுக்களித்து மயங்கிடுவார் விதி மாளுமட்டும்
ஏதுக்கிவர் பிறந்தார் இறைவாகச்சி ஏகம்பனே. 18

ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரைநிந்திப்பர் உற்றுப்பெற்ற
தாயாரைவைவர் சதியாயிரஞ்செய்வர் சாத்திரங்கள்
ஆயார்பிறர்க்கு உபகாரஞ்செய்யார்தமை அண்டினர்க்கொன்று
ஈயாரிருந்தென்ன போயென்ன காண்கச்சி ஏகம்பனே. 19

அப்பென்றும் வெண்மையதாயினும் ஆங்கந்நிலத் தியல்பாய்த்
தப்பின்றி யேகுண வேற்றுமைதான் பல சார்தலினால்
செப்பில் அபக்குவம் பக்குவமாயுள்ள சீவரிலும்
இப்படியேநிற்பன் எந்தை பிரான்கச்சி ஏகம்பனே. 20

நாயாய்ப்பிறந்திடின் நல்வேட்டையாடி நயம்புரியும்
தாயார்வயிற்றில் நரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க்
காயாமரமும் வறளாங் குளமுங் கல்லாவு மன்ன
ஈயாமனிதரை ஏன்படைத்தாய் கச்சி ஏகம்பனே. 21

ஆற்றிற்கரைத்த புளியாக்கி டாமலென் அன்பையெல்லாம்
போற்றித் திருவுளம் பற்றுமை யாபுர மூன்றெரித்துக்
கூற்றைப் பணிகொளுந் தாளுடையாய் குன்ற வில்லுடையாய்
ஏற்றுக் கொடியுடையாய் இறைவாகச்சி ஏகம்பனே. 22

பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையால்மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
எண்ணா துனைமறந்தேன் இறைவாகச்சி ஏகம்பனே. 23

நாவார வேண்டும் இதஞ் சொல்லுவாருனை நான்பிரிந்தால்
சாவேன் என்றேயிருந் தொக்கவுண்பார்கள் கைதான்வறண்டால்
போய்வாரும் என்றுநடுத் தலைக்கே குட்டும் பூவையருக்கு
ஈவார் தலைவிதியோ இறைவாகச்சி ஏகம்பனே. 24

கல்லார் சிவகதை நல்லார் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங் கொடார் குருசொன்னபடி
நில்லார்அறத்தை நினையார்நின்னாமம் நினைவிற்சற்றும்
இல்லார் இருந்தென் இறந்தென் புகல் கச்சி ஏகம்பனே. 25

வானமுதத்தின் சுவையறி யாதவர்வண்கனியின்
தானமுதத்தின் சுவையெண்ணல் போலத் தனித்தனியே
தேனமு தத்தின் தெளிவாயஞானஞ் சிறிது மில்லார்க்கு
ஈனமுதச்சுவை நன்றல்ல வோகச்சி ஏகம்பனே. 26

ஊற்றைச்சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த
பீற்றற் றுத்தியைச் சோறிடுந்தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
ஏற்றுத் திரிந்து விட்டேன் இறைவாகச்சி ஏகம்பனே. 27

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தையால் வருந்தோடஞ்செய்த
பொல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுஞ் தீங்குக ளாயவுமற்று
எல்லாப்பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே. 28

முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளைஓலை விளக்கியிட்டுப்
பட்டப்பகலில் வெளிமயக்கே செய்யும் பாவையர்மேல்
இட்டத்தை நீ தவிர்ப்பாய் இறைவாகச்சி ஏகம்பனே. 29

பிறந்துமண் மீதிற் பிணியேகுடி கொண்டு பேரின்பத்தை
மறந்து சிற்றின்பத்தின் மேன்மைய லாகிப்புன் மாதருக்குட்

பறந்துஉழன் றேதடு மாறிப்பொன்தேடியப் பாவையர்க்கீந்து
இறந்திட வோபணித்தா யிறைவாகச்சி ஏகம்பனே. 30

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற ஆனந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப்பேன் இறைவாகச்சி ஏகம்பனே. 31

நல்லாய்எனக்கு மனுவொன்று தந்தருள் ஞானமிலாப்
பொல்லா எனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெபம்
சொல்லார் நற்கோயில் நியமம் பலவகைத் தோத்திரமும்
எல்லாமுடிந்தபின் கொல்லுகண் டாய்கச்சி ஏகம்பனே. 32

சடக்கடத் துக்கிரை தேடிப்பலவுயிர் தம்மைக்கொன்று
விடக்கடித் துக்கொண்டு இறுமாந்திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்கடமைக்கரம் பற்றிநமன்
இடக்கடிக்கும் பொழுதேது செய்வார்கச்சி ஏகம்பனே. 33

நாறுமுடலை நரிப்பொதிச் சோற்றினை நான்தினமுஞ்
சோறுங்கறியும் நிரப்பியபாண்டத்தைத் தோகையர்தங்
கூறுமலமும் இரத்த முஞ்சோறுங் குழியில் விழாது
ஏறும்படி யருள்வாய் இறைவா கச்சி ஏகம்பனே. 34

சொக்கிட் டரண்மனைப் புக்குட் டிருடிய துட்டர்வந்து
திக்குற்ற மன்னரைக் கேட்பது பொற்சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கமம் நிந்தித்து வீடிச்சிக்கும்
எக்குப் பெருத்தவர்க் கென்சொல்லுவேன்கச்சி ஏகம்பனே. 35

விருந்தாக வந்தவர் தங்களுக்கன்னம் மிகக் கொடுக்கப்
பொருந்தார் வளம்பெற வாழ்வார் நின்னாமத்தை போற்றி
நித்தம்
அருந்தா முலைப்பங்கர் என்னாத பாதகர் அம்புவியில்
இருந்தாவ தேதுகண்டாய் இறைவாகச்சி ஏகம்பனே. 36

எல்லாம்அறிந்து படித்தே இருந்தெமக்கு உள்ளபடி
வல்லான் அறிந்துளன் என்றுணராது மதிமயங்கிச்
சொல்லால் மலைந்துறு சூழ் விதியின்படி துக்கித்துப்பின்
எல்லாம் சிவன்செயலே என்பர்காண்கச்சி ஏகம்பனே. 37

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவர் பூவையன்னாள்
தன்னைநினைந்து வெகுவாய்உருகுவர் தாரணியில்
உன்னை நினைந்திங் குனைப்பூசி யாத உலுத்தரெல்லாம்
என்னை இருந்துகண்டாய் இறைவாகச்சி ஏகம்பனே. 38

கடுஞ்சொலின் வம்பரை ஈனரைக் குண்டரைக் காமுகரைக்
கொடும் பவமேசெயும் நிர்மூடர்தம்மைக் குவலயத்து
நெடும்பனைபோல் வளர்ந்துநல் லோர் தம் நெறியறியா
இடும்பரை யேன்வகுத்தாய் இறைவாகச்சி ஏகம்பனே. 39

கொன்றேன் அனேகம் உயிரையெலாம் பின்புகொன்றுகொன்று
தின்றேன் அதன்றியும் தீங்குசெய்தேனது தீர்க வென்றே
நின்றேனின் சன்னிதிக்கேஅத னாற்குற்றம் நீபொறுப்பாய்
என்றேஉனைநம்பினேன் இறைவாகச்சி ஏகம்பனே. 40

ஊரிருந் தென்ன நல்லோரிருந்தென் னுபகாரமுள்ள
பேரிருந் தென்பெற்ற தாயிருந்தென்மடப் பெண்கொடியாள்
சீரிருந்த தென்னற் சிறப்பிருந் தென்னவித் தேயத்தினில்
ஏரிருந் தென்னவல்லாய் இறைவாகச்சி ஏகம்பனே. 41

வில்லா லடிக்கச் செருப்பா லுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பா லடிக்கக் களிவண்டுகூர்ந்து
அல்லாற் பொழிற்றில்லை அம்பலவாணர்க்கோர் அன்னைபிதா
இல்லாத தாலல்லவோ இறைவாகச்சி ஏகம்பனே. 42

### எண்சீர் விருத்தம்

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ 43

பிள்ளை எத்தனை எத்தனை பெண்டிரோ
  பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னை எத்தனை எத்தனை சன்மமோ
  மூடனாய் அடியேனும் அறிந்திலேன்
இன்னம் எத்தனை எத்தனை சன்மமோ
  என்செய்வேன்கச்சி ஏகம்ப நாதனே

1

## திருத் தில்லை

காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்குங்
                காசினிக்கும்
தாம்பிணங் கும்பல ஆசையும் விட்டுத் தனித்துச் செத்துப்
போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப் புரண்டு இனிமேற்
சாம்பிணங் கத்துது ஐயோ! என் செய்வேன் தில்லைச்
சங்கரனே!

சோறிடும் நாடு, துணிதருங் குப்பை, தொண்டன் பரைக்கண்டு 2
ஏறிடுங் கைகள் இறங்கிடுந் தீவினை, எப்பொழுதும்
நீறிடும் மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால்
ஊறிடும் கண்கள் உருகிடும் நெஞ்சம்என் உள்ளமுமே!

அழலுக்குள் வெண்ணெய் எனவே உருகிப்பொன் னம்பலத்தார் 3
நிழலுக்குள் நின்று தவமுற் றாமல்நிட் டூரமின்னார்
குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டுகுற் றேவல்செய்து
விழலுக்கு முத்துலை இட்டிறைத் தேன் என் விதிவசமே.

ஓடாமல் பாழுக்கு உழையாமல் ஓரம் உரைப்பவர்பால் 4
கூடாமல் நல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோபம் நெஞ்சில்
நாடாமல் நன்மை வழுவாமல் இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமல் செல்வம் தருவாய்! சிதம்பர தேசிகனே!

பாராமல் ஏற்பவர்க்கு இல்லையென் னாமல் பழுதுசொல்லி 5
வாராமல் பாவங்கள் வந்தணு காமல் மனம் அயர்ந்து
பேராமல், சேவை பிரியாமல் அன்புபெ றாதவரைச்
சேராமல் செல்வம் தருவாய்! சிதம்பர தேசிகனே!

கொல்லாமல், கொன்றதைத் தின்னாமல், குத்திரங் கோள்களவு 6
கல்லாமல், கைதவ ரோடுஇணங் காமல்கனவி னும்பொய்

சொல்லாமல், சொற்களைக் கேளாமல், தோகையர் மாயையிலே
செல்லாமல், செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே!

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு 7
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னும் இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லால்பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம்உய்ய வேண்டுமென்றே அறி வாரில்லையே!

காலை உபாதி மலஞ்சலமாம் அன்றிக் கட்டுச்சியிற் 8
சால உபாதி பசிதாகம் ஆகும்முன் சஞ்சிதிமாம்
மாலை உபாதி துயில்காமமாம் இவை மாற்றிவிட்டே
ஆலம் உகந்தருள் அம்பலவா, என்னை ஆண்டருளே!

ஆயும் புகழ்த்தில்லை அம்பலவாணர் அருகில் சென்றால் 9
பாயும் இடபம், கடிக்கும் அரவம், பின்பற்றிச் சென்றால்
பேயுங் கணமும் பெருந்தலைப் பூதமும் பின்தொடரும்;
போயென்செய் வாய்மனமே பிணக் காடவர் போமிடமே?

ஓடும் எடுத்து அதள் ஆடையும் சுற்றி, உலாவிமெள்ள 10
வீடுகள் தோறும் பலிவாங்கியே, விதி யற்றவர்போல்
ஆடும் அருள்கொண்டு இங்கு அம்பலத்தே நிற்கும்
ஆண்டிதன்னைத்
தேடுங் கணக்கென்ன காண்! சிவகாம சவுந்தரியே.

ஊட்டுவிப் பானும் உறங்குவிப்பானும் இங்கு 11
ஒன்றோடொன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின் வழி
ஆட்டுவிப் பானும் ஒருவன்உண் டேதில்லை அம்பலத்தே!

அடியார்க்கு எளியவர் அம்பலவாணர் அடிபணிந்தால் 12
மடியாமல் செல்வ வரம்பெற லாம், வையம் ஏழளந்த
நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலன் அருள்
குடிகாணும் நாங்கள்! அவர்காணும் எங்கள் குலதெய்வமே!

தெய்வச் சிதம்பர தேவா! உன் சித்தம் திரும்பிவிட்டால் 13
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே?
மெய்வைத்த செல்வமெங்கே? மண்ட லீகர்தம் மேடையெங்கே?
கைவைத்த நாடக சாலையெங்கே? இது கண்மயக்கே!

உடுப்பானும் பாலன்னம் உண்பானும் உய்வித்தொருவர் தம்மைக் 14
கெடுப்பானும் ஏதென்று கேள்விசெய் வானும் கதியடங்கக்
கொடுப்பானும் தேகிஎன்று ஏற்பானும் ஏற்கக் கொடாமல் நின்று
தடுப்பானும் நீயல்லையோ தில்லை ஆனந்தத் தாண்டவனே!

வித்தாரம் பேசினும் சோங்கேறி னும் கம்ப மீதிருந்து 15
தத்தாஎன் றோதிப் பரிவுகொண்டாடினும் தம்முன்தம்பி
ஒத்தாசை பேசினும் ஆவதுண்டோ? தில்லை யுள்நிறைந்த
கத்தாவின் சொற்படி அல்லாது வேறில்லை கன்மங்களே.

பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும்; பிறந்துவிட்டால் 16
இறவா திருக்க மருந்துண்டு காண்இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணர் அடிக்கமலம்
மறவா திருமனமே! அதுகாண் நல் மருந்துனக்கே!

தவியா திரு நெஞ்சமே தில்லை மேவிய சங்கரனைப் 17
புவியார்ந் திருக்கின்ற ஞானா கரனைப் புராந்தகனை
அவியாவிளக்கைப் பொன்னம்பலத் தாடியை ஐந்தெழுத்தால்
செவியாமல் நீ செபித்தால் பிறவாமுத்தி சித்திக்குமே!

நாலின் மறைப்பொருள் அம்பல வாணரை நம்பியவர் 18
பாலில் ஒருதரம் சேவிக்கொ ணாதிருப் பார்க் கருங்கல்
மேலில் எடுத்தவர் கைவிலங் கைத்தைப்பர் மீண்டுமொரு
காலில் நிறுத்துவர் கிட்டியும் தாம்வந்து கட்டுவரே.

ஆற்றொடு தும்பை அணிந்தாடும் அம்பல வாணர்தம்மைப் 19
போற்றா தவர்க்கு அடையாளம் உண்டே இந்தப் பூதலத்தில்
சோற்றாவி அற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியும் அற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற் றிருப்பர்களே.

அத்தனை, முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை 20
நித்தனை, அம்மை சிவகாம சுந்தரி நேசனை, எம்
கத்தனைப் பொன்னம்பலத் தாடும் ஐயனைக் காணக்கண்
எத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றனவே!

## திருச்செங்காடு

1

நெருப்பான மேனியர் செங்காட்டில் ஆத்தி நிழல் அருகே
இருப்பார் திருவுளம் எப்படி யோஇன்னம் என்னை அன்னைக்

கருப்பா சயக்குழிக்கே தள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே.

## திருவொற்றியூர்

ஐயுந் தொடர்ந்து, விழியுஞ் செருகி, அறிவழிந்து, 1
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யுந் திருவெற்றி யூர்உடையீர்! திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப் பண்ணி ஐந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

சுடப்படு வார் அறி யார், புரம் மூன்றையுஞ் சுட்டபிரான் 2
திடப்படு மாமதில் தென்ஒற்றி யூரன் தெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பதம் நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மே விதி ஏட்டைக் கிழிப்பதுவே!

## திருவிடைமருதூர்

காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தை சுற்றி 1
ஓடே எடுத்தென்ன? உள்ளன்பி லாதவர் ஓங்குவிண்ணோர்
நாடே இடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

தாயும் பகை கொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னுடைய 2
சேயும் பகை உற வோரும் பகைஇச் செகமும் பகை
ஆயும் பொழுதில் அருஞ்செல்வம் நீங்கில்இங் காதலினால்
தோயுநெஞ்சே மரு தீசர்பொற் பாதஞ் சுதந்தரமே.

## திருக்கழுக்குன்றம்

காடோ? செடியோ? கடல்புற மோ? கனமே மிகுந்த 1
நாடோ? நகரோ? நகர்நடு வோ? நலமே மிகுந்த
வீடோ? புறந்திண்ணை யோ? தமி யேன்உடல் விழுமிடம்?
நீள்தோய் கழுக்குன்றி லீசா! உயிர்த்துணை நின்பதமே!

## திருக்காளத்தி

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி, 1

**முத்தும் பவளமும் பூண்டுஓடி ஆடி முடிந்தபின்பு**
**செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள்**
**கத்துங் கணக்கென்ன? காண் கயிலாபுரிக் காளத்தியே!**

**பொன்னால் பிரயோசனம்பொன் படைத்தார்க்குண்டு; பொன் படைத்தோன்** 2
**தன்னால் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டு அத்தன் மையைப்போல்**
**உன்னால்பிர யோசனம் வேணதெல் லாம்உண்டு உனைப்பணியும்**
**என்னால்பிர யோசனம் ஏதுண்டு? காளத்தி ஈச்சுரனே!**

**வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லன்; மாதுசொன்ன** 3
**சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லன்; தொண்டு செய்து**
**நாளாறில் கண்இடந்து அப்பவல்லேன் அல்லன்நான் இனிச்சென்று**
**ஆளாவது எப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே?**

**முப்போதும் அன்னம் புசிக்கவும் தூங்கவும் மோகத்தினால்** 4
**செப்போது இளமுலை யாருடன் சேரவும் சீவன்விடும்**
**அப்போது கண்கலக் கப்படவும் வைத்தாய் ஐயனே!**
**எப்போது காணவல் லேன்? திருக் காளத்தி ஈச்சுரனே!**

**இரைக்கே இரவும் பகலும் திரிந்திங்கு இளைத்துமின்னார்** 5
**அரைக்கே அவலக் குழியருகே அசும் பார்ந்தொழுகும்**
**புரைக்கே உழலும் தமியேனை ஆண்டருள்! பொன்முகலிக்**
**கரைக்கே கல்லால நிழற்கீழ் அமர்ந்தருள் காளத்தியே!**

**நாறும் குருதிச் சலதாரை; தோற்புரை நாள் தொறும்சீ** 6
**ஊறும் மலக்குழி காமத்துவாரம் ஒளித்திடும்புண்**
**தேறும் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்டு**
**ஏறும் பதந்தருவாய்! திருக் காளத்தி ஈச்சுரனே!**

## திருக்கைலாயம்

**கான்சாயும் வெள்ளி மலைக்கரசே! - நின் கழல் நம்பினேன்** 1
**ஊன்சாயும் சென்மம் ஒழித்திடு வாய்! கர வூரனுக்காய்**
**மான்சாய செங்கை மழுவலஞ் சாய வனைந்த கொன்றைத்**
**தேன்சாய நல்ல திருமேனி சாய்த்த சிவக் கொழுந்தே!**

இல்லம் துறந்து பசிவந்த போது அங்கு இரந்து தின்று 2
பல்லும் கரையற்று, வெள்வாயு மாய்ஒன்றில் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளும் இழந்து சுகானந்தத் தூக்கத்திலே
அல்லும் பகலும் இருப்பாதென் றோ? கயி லாயத்தனே!

சினந்தனை யற்றுப் பிரியமும் தான் அற்றுச் செய்கையற்று 3
நினைந்ததும்அற்று, நினையா மையுமற்று, நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலில் என்றிருப்பேன் அத்தனே! கயிலாயத்தனே!

கையார ஏற்றுநின் றுஅங்ஙனந் தின்று, கரித்துணியைத் 4
தையா துஉடுத்தி, நின் சந்நிதிக்கே வந்து சந்ததமும்
மெய்யார நிற்பணிந்து உள்ளே உரோமம் விதிர்விதிர்ப்ப
ஐயா என்று ஓலம் இடுவது என்றோ? கயிலாயத்தனே!

நீறார்த்த மேனி உரோமம் சிலிர்த்து உளம் நெக்குநெக்குச் 5
சேறாய்க் கசிந்து கசிந்தே உருகி, நின்சீரடிக்கே
மாறாத் தியானமுற்று ஆனந்த மேற்கொண்டு, மார்பில் கண்ணீர்
ஆறாய்ப் பெருகக் கிடப்பதென்றோ? கயிலாயத்தனே!

செல்வரைப் பின்சென்று சங்கடம்பேசித் தினந்தினமும் 6
பல்லினைக் காட்டிப் பரிதவியாமல் பரமானந்தத்தின்
எல்லையில் புக்கிட ஏகாந்தமாய் எனக் காமிடத்தே
அல்லல் அற்று என்றிருப்பேன் அத்த னே! கயிலாயத்தனே!

மந்திக் குருளையொத் தேன்இல்லை; நாயேன் வழக்கறிந்தும் 7
சிந்திக்கும் சிந்தையை யான்என்செய் வேன்எனைத் தீதகற்றிப்
புந்திப் பரிவில் குருளையை ஏந்திய பூசையைப்போல்
எந்தைக் குரியவன் காண் அத்த னே !கயி லாயத்தனே!

வருந்தேன் பிறந்தும் இறந்தும் மயக்கும் புலன்வழிப்போய்ப் 8
பொருந்தேன் நரகில் புகுகின்றி லென், புகழ்வாரிடத்தில்
இருந்தேன் இனியவர் கூட்டம் விடேன்இயல் அஞ்செழுத்தாம்
அரும்தேன் அருந்துவன் நின் அரு ளால்கயி லாயத்தனே!

## மதுரை

விடப்படு மோ இப் பிரபஞ்ச வாழ்க்கையை? விட்டுமனம்
திடப்படு மோ? நின் அருளின்றி யேதினமே அலையக்

கடப்படு மோ? அற்பர் வாயிலில் சென் றுகண்ணீர் ததும்பிப்
படப்படு மோ? சொக்க நாதா! சவுந்தர பாண்டியனே!

## பொது

1. உடைகோ வணம் உண்டு, உறங்கப் புறந்திண்ணையுண்டு,
உணவிங்கு
அடைகாய் இலையுண்டு, அருந்தத் தண்ணீர் உண்டு,
அருந்துணைக்கே
விடையேறும் ஈசர் திருநாமம்உண்டு இந்தமேதினியில்
வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன
வான்பிறைக்கே?

2. வீடு நமக்குத் திருவாலங் காடு; விமலர் தந்த
ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திரம்; ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்பதெல்லாம்தர; நன்னெஞ்சமே!
ஈடு நமக்குச் சொலவே ஒருவரும் இங்கில்லையே!

3. நாடிக்கொண்டு ஈசரை நாட்டமுற் றாயிலை; நாதரடி
தேடிக்கொண் டாடித் தெளிந்தா யிலை; செக மாயைவந்து
மூடிக்கொண் டோமென்றும், காமாயு தங்கள் முனிந்தவென்றும்
பீடிப்பை யோநெஞ்ச மேயுனைப் போல இல்லை பித்தர்களே!

4. கையொன்று செய்ய, விழியொன்று நாடக் கருத்தொன்று
எண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பும்யான்
செய்கின்ற பூசைஎவ் வாறுகொள்வாய்? வினை தீர்த்தவனே!

5. கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதை யோ! கெடுவீர் இந்த மானுடமே!

6. சொல்லிலும் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லிலு(ம்) மாசற்ற ஆகாயம் தன்னிலும் ஆய்ந்து விட்டோர்
இல்லிலும் அன்பரிடத்திலும் ஈசன் இருக்குமிடம்!
கல்லிலும் செம்பிலு மோ இருப்பான் எங்கள் கண்ணுதலே?

62. பொய்யும் புலையும் மிகப் பொருந்திவீண் பேசலன்றி
ஐயோ உனை உரைக்க அறிகிலேன் பூரணமே!

63. நிரந்தரமாய் எங்கும் நின்று விளையாடினதைப்
பரம் அதுவே என்னப் பதம் அறியேன் பூரணமே!

64. கொல்வாய், பிறப்பிப்பாய்; கூட இருந்தே சுகிப்பாய்;
செல்வாய் பிறர்க்குள் செயல் அறியேன் பூரணமே!

65. வாரிதியாய், வையம் எல்லாம் மன்னும் அண்டபிண்டம் எல்லாம்
சாரதியாய் நின்ற தலம் அறியேன் பூரணமே!

66. வித்தாய், மரமாய், வெளியாய், ஒளியாய் நீ
சத்தாய் இருந்த தரம் அறியேன் பூரணமே!

67. தத்துவத்தைப் பார்த்து மிகத் தன்னை அறிந்த அறிவால்
உய்த்து உனைத்தான் பாராமல் உய்வாரோ பூரணமே!

68. ஒன்றாய் உயிராய் உடல்தோறும் நீ இருந்தும்
என்றும் அறியார்கள் ஏழைகள் தாம் பூரணமே!

69. நேற்று என்றும் நாளை என்றும் நினைப்புமறப் பாய்ப்படைத்தும்
மாற்றமாய் நின்ற வளம் அறியேன் பூரணமே!

70. மனம்புத்தி சித்தம்மகிழ் அறிவு ஆங்காரமதாய்
நினைவாம் தலமான நிலை அறியேன் பூரணமே!

71. உருப்பேதம் இன்றி உய்ந்தசப்த பேதமதாய்க்
குருப்பேத மாய்வந்த குணம் அறியேன் பூரணமே!

72. சட்சமய பேதங்கள் தான்வகுத்துப், பின்னும்ஒரு
உட்சமயம் உண்டென்று உரைத்தனையே பூரணமே!

73. முப்பத்திரண்டு உறுப்பாய் முனைந்துபடைத்து உள்ளிருந்த
செப்பிடு வித்தைத் திறம் அறியேன் பூரணமே!

74. என்னதான் கற்றால்என்? எப்பொருளும் பெற்றால்என்?
உன்னை அறியாதார் உய்வரோ? பூரணமே!

75. கற்றறிவோம் என்பார் காணார்கள் உன்பதத்தைப்
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பு அறுமோ பூரணமே!

76. வான்என்பார்; அண்டம்என்பார்; வாய்ஞான மேபேசித்
தான் என்பார் வீணர்; தனை அறியார் பூரணமே!

77. ஆதி என்பார்; அந்தம் என்பார்; அதற்குள்நடுவாய் இருந்த
சோதிஎன்பார்; நாதத் தொழில் அறியார்; பூரணமே!

78. மூச்சென்பார்; உள்ளம் என்பார்; மோனம்எனும் மோட்சம்என்பார்
பேச்சென்பார்; உன்னுடைய பேர் அறியார்; பூரணமே!

79. பரம்என்பார்; பானுஎன்பார்; பாழ்வெளியாய் நின்ற
வரம்என்பார்; உன்றன் வழி அறியார்; பூரணமே!

80. எத்தனை பேரோ எடுத்தெடுத்துத் தான் உரைத்தார்;
அத்தனை பேர்க்கு ஒன்றானது அறிகிலேன்; பூரணமே!

81. நகார மகாரம் என்பார்; நடுவே சிகாரம் என்பார்
வகாரயகாரம் என்பார்; வகை அறியார் பூரணமே!

82. மகத்துவமாய்க் காம மயக்கத்துக் குள்ளிருந்து
பகுத்தறிய மாட்டாமல் பயன் இழந்தேன் பூரணமே!

83. உண்மைப் பொருளை உகந்திருந்து பாராமல்
பெண் மயக்கத்தாலே பிறந்து இறந்தேன், பூரணமே!

84. வாயார வாழ்த்தி மகிழ்ந்து உனைத்தான் போற்றாமல்
காயம் எடுத்துக் கலங்கினேன்! பூரணமே!

85. சந்திரனை மேகமது தான் மறைத்த வாறது போல்
பந்தமுற யானும்உனைப் பார்க்கிலேன்; பூரணமே!

86. செந்தா மரைத்தாளைத் தினந்தினமும் போற்றாமல்
அந்தரமாய் நின்றங்கு அலைந்தேன்நான் பூரணமே!

87. நீர்மேல் குமிழிபோல் நிலையற்ற காயம் இதைத்
தாரகம் என்றெண்ணி நான் தட்டழிந்தேன்; பூரணமே!

88. நெஞ்சம் உருகி நினைந்து உனைத்தான் போற்றிநெடு
வஞ்சகத்தைப் போக்க வகை அறியேன்; பூரணமே!

89. எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்திருந்து
உள்ளம் அறியாது உருகினேன்; பூரணமே!

90. மாயாப் பிரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே!
ஓயாச் சனனம் ஒழிந்திலேன்; பூரணமே!

91. பூசையுடன் புவன போகம்எனும் போக்கியத்தால்
ஆசையுற்றே நானும் அறிவழிந்தேன் பூரணமே!

92. படைத்தும் அழித்திடுவாய்; பார்க்கில் பிரமாவெழுத்தைத்
துடைத்துச் சிரஞ்சீ வியாய்த் துலங்குவிப்பாய்; பூரணமே!

93. மந்திரமாய்ச் சாத்திரமாய் மறைநான்காய் நீ இருந்த
தந்திரத்தை நான் அறியத் தகுமோ தான் பூரணமே!

94. அல்லாய்ப் பகலாய் அனவரத காலம் எனும்
சொல்லாய்ப் பகுத்த தொடர்பறியேன்; பூரணமே!

95. நரகம் சுவர்க்கம்என நண்ணும் இரண்டு உண்டாயும்
அரகரா என்பது அறிகிலேன்; பூரணமே!

96. பாவபுண்ணியம் என்னும் பகுப்பாய்ப் படைத்து அழித்திங்கு
ஆவலையுண்டாக்கி வைத்த அருள் அறியேன்; பூரணமே!

97. சாந்தம் என்றும், கோபம் என்றும், சாதிபேதங்கள் என்றும்
பாந்தம் என்றும், புத்தியென்றும் படைத்தனையே; பூரணமே!

98. பாசம் உடலாய்ப் பசு அதுவும் தான்உயிராய்
நேசமுடன் நீ பொருளாய் நின்றனையே, பூரணமே!

99. ஏதில் அடியார் இரங்கி இகத்தில் வந்துன்
பாதம் அதில் தாழப் பரிந்தருள்வாய் பூரணமே!

100. நானேநீ நீயே நான் நாம் இரண்டும் ஒன்றானால்
தேனின் ருசியது போல் தெவிட்டாய்நீ பூரணமே!

101. முடிவில் ஒரு சூனியத்தை முடித்து நின்று பாராமல்
அடியில் ஒரு சூனியத்தில் அலைந்தேனே; பூரணமே!

102. பூரண மாலை தனை புத்தியுடன் ஓதினர்க்கு
தாரணியில் ஞானம் தழைப்பிப்பாய்; பூரணமே!

## நெஞ்சொடு மகிழ்தல்

1. அன்று முதல் இன்றளவும் ஆக்கையொடு சூட்சியுமாய்
நின்ற நிலை அறிய நேசமுற்றாய், நெஞ்சமே!

2. அங்கங்கு உணர்வாய் அறிவாகி யே நிரம்பி
எங்கெங்கும் ஆனதிலே ஏகரித்தாய்; நெஞ்சமே!

3. அலையாத பேரின்ப ஆனந்த வெள்ளத்தில்
நிலையாய் உரு இருந்து நின்றனையே; நெஞ்சமே!

4. பாராமல் பதையாமல் பருகாமல் யாதொன்றும்
ஓராது உணர்வுடனே ஒன்றினையே; நெஞ்சமே!

5. களவிறந்து, கொலையிறந்து, காண்பனவும் காட்சியும்போய்
அளவிறந்து நின்றதிலே அன்புற்றாய் நெஞ்சமே!

6. பேச்சிறந்து, சுட்டிறந்து, பின்னிறந்து, முன்னிறந்து,
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய்; நெஞ்சமே!

7. விண்ணிறந்து, மண்ணிறந்து, வெளியிறந்து, ஒளியிறந்து
எண்ணிறந்து நின்றதிலே ஏகரித்தாய்; நெஞ்சமே!

8. பார்த்த இடம் எங்கும் பரம் எனவே உள் புறம்பும்
கோத்தபடி உண்மையெனக் கொண்டனையே நெஞ்சமே!

9. ஊரிறந்து, பேரிறந்து, ஒளியிறந்து, வெளியிறந்து,
சீரிறந்து நின்றதிலே சேர்ந்தனையே; நெஞ்சமே!

10. ஆண்பெண் அலியென்று அழைக்கஅரி தாய் நிறைந்து
காண்ப அரி தாய இடம் கண்ணுற்றாய் நெஞ்சமே!

11. ஆங்காரம் அச்சம் அகற்றி அறிவினொடு
தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றாய் நெஞ்சமே!

12. ஆதியாய் நின்ற அகண்டபரி பூரணத்தைச்
சாதியா நின்ற இடம் சார்வுற்றாய் நெஞ்சமே!

13. விருப்புவெறுப்பு இல்லாத வெட்டவெளி யதனில்
இருப்பே சுகம் என்று இருந்தனையே நெஞ்சமே!

14. ஆரும் உறாப் பேரண்டத்து அப்புறத்தும் இப்புறத்தும்
நீரும் உப்பும் என்ன நிலை பெற்றாய் நெஞ்சமே!

15. உடனாகவே இருந்து உணர அரி யானோடு
கடல் நீரும் ஆறும்போல் கலந்தனையே; நெஞ்சமே!

16. நெடியகத்தைப் போக்கி, நின்ற சழக்கறுத்துப்
படிகத்துக் கும்பம்போல் பற்றினையே; நெஞ்சமே!

17. மேலாகி எங்கும் விளங்கும் பரம் பொருளில்
பாலூறும் மென் சுவைபோல் பற்றினையே; நெஞ்சமே!

18. நீரொடுதண் ஆலிவிண்டு நீரான வாறேபோல்
ஊரொடுபேர் இல்லானோடு ஒன்றினையே; நெஞ்சமே!

19. இப்பிறப்பைப் பாழ்படுத்தி இருந்தபடி யேஇருக்கச்
செப்ப அரிதாய இடம் சேர்ந்தனையே; நெஞ்சமே!

20. மேலாம் பதங்கள் எல்லாம் விட்டுவிட்டு ஆராய்ந்து
நாலாம் பதத்தில் நடந்தனையே; நெஞ்சமே!

21. கடங்கடங்கள் தோறும் கதிரவன் ஊடாடி
அடங்கும் இடம்தான் அறிந்து அன்புற்றாய்; நெஞ்சமே!

22. கற்றவனாய்க், கேட்டவனாய்க், காணானாய்க், காண்பவனாய்
உற்றவனாய் நின்றதிலே ஒன்று பட்டாய் நெஞ்சமே!

23. நாலு வகைக் கரணம் நல்குபுலன் ஐந்தும் ஒன்றாய்
சீலமுற்று நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே!

24. விட்டிடமும், தொட்டிடமும், விண்ணிடமும், மண்ணிடமும்
கட்டும்ஒரு தன்மைஎனக் கண்ணுற்றாய்; நெஞ்சமே!

25. எந்தெந்த நாளும் இருந்தபடி யேஇருக்க
அந்தச் சுகாதீதம் ஆக்கினையே; நெஞ்சமே!

26. வாக்கிறந்து நின்ற மனோகோச ரம்தனிலே
தாக்கறவே நின்றதிலே தலைசெய்தாய்; நெஞ்சமே!

27. எத்தேசமும் நிறைந்தே எக்கால மும்சிறந்து,
சித்தாய சித்தினிடம் சேர்ந்தனையே; நெஞ்சமே!

28. தாழாதே நீளாதே தன்மய மாய்நிறைந்து
வாழாதே வாழ மருவினையே; நெஞ்சமே!

29. உள்ளும் புறம்பும் உவட்டாத ஆனந்தக்
கள்ளருந்தி நின்றதிலே கண்ணுற்றாய்; நெஞ்சமே!

30. வாதனை போய், நிட்டையும்போய், மாமௌன ராச்சியம்போய்
பேதம்அற நின்ற இடம் பெற்றனையே; நெஞ்சமே!

31. இரதம் பிரிந்துகலந்து ஏகமாம் ஆறேபோல்
விரகம் தவிர்ந்து அணல்பால் மேவினையே, நெஞ்சமே!

32. சோதியான் சூழ்பனிநீர் சூறைகொளும் ஆறேபோல்
நீதிகுரு வின்திருத்தாள் நீபெற்றாய்; நெஞ்சமே!

## உடல் கூற்று வண்ணம்
### குறப்புச் சந்தம்

தனதனதான தனதனதான
  தந்தனந்தன தந்ததனந்தன
தனனை தனந்த தனனதனந்த
    தானன தானன தானனதந்த
  தந்தனதான தனதானனா

1. ஒருமடமாதும் ஒருவனும்ஆகி இன்பசுகம் தரும்
அன்புபொருந்தி உணர்வுகலங்கி ஒழுகியவிந்து
  ஊறுசுரோணிதம் மீதுகலந்து-

2. பனியில்ஓர் பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து
புகுந்துதிரண்டு பதும அரும்பு கமடம்இதென்று
  பார்வைமெய்வாய்செவி கால்கைகள் என்ற-

3. உருவமும்ஆகி உயிர்வளர்மாதம் ஒன்பதும் ஒன்றும்
நிறைந்துமடந்தை உதரம் அகன்று புவியில்வி ழுந்து
  யோகமும்வாரமும் நாளும் அறிந்து-

4. மகளிர்கள் சேனை தரவணையாடை மண்படஉந்தி
உதைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை அமுதம்அருந்தி
  ஓரறிவீ ரறி வாகிவளர்ந்து-

5. ஒளிநகைஊறல் இதழ்மடவாரும் உவந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியில் இருந்து மழலைபொழிந்து
வாஇருபோவென நாமம்விளம்ப-

6. உடைமணி ஆடை அரைவடம் ஆட உண்பவர் தின்பவர்
தங்களொடுஉண்டு தெருவில் இருந்த புழுகி அளைந்து
தேடியபாலரோ டோடிநடந்து
அஞ்சுவயதாகி விளையாடியே

7. உயர்தருஞான குருஉபதேசம் முத்தமிழின்கலை
யும்கரைகண்டு வளர்பிறைஎன்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து-

8. மயிர்முடிகோதி அறுபதநீல வண்டிமிர் தண்தொடை
கொண்டைபுனைந்து மணிபொன் இலங்கும் பணிகள் அணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க-

9. மதன சொரூபன் இவன் எனமோக மங்கையர் கண்டு
மருண்டு திரண்டு வரி விழிகொண்டு சுழிய எறிந்து
மாமலர் போல் அவர் போவது கண்டு-

10. மனது பொறாமல் அவர் பிறகோடி மங்கல செங்கல
சந்திகழ் கொங்கை மருவமயங்கி இதழ் அமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி-

11. ஒரு முதலாகி முதுபொருளாய் இருந்ததனங்களும்
வம்பில் இழந்து மதனசுகந்த விதனம்இதென்று
வாலிபகோலமும் வேறு பிரிந்து-

12. வளமையும்மாறி இளமையும்மாறி வன்பல்வி ழுந்துஇரு
கண்கள் இருண்டு வயது முதிர்ந்து நரைதிரை வந்து
வாதவி ராத குரோதம் அடைந்து-
செங்கையினில் ஓர் தடியும் ஆகியே

13. வருவதுபோவது ஒருமுதுகூனும் மந்தியெனும்படி
குந்தி நடந்து மதியும் அழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல் விடாமல் மொழிந்து-

14. துயில்வரும்நேரம் இருமல் பொறாது தொண்டையும்
நெஞ்சமும்
உலர்ந்து வறண்டு துகிலும் இழந்து சுணையும் அழிந்து
தோகையர் பாலர்கள் கோரணி கொண்டு

15. கலியுகமீதில் இவர் மரியாதை கண்டிடும் என்பவர்
சஞ்சலம் மிஞ்ச கலகல என்றுமலசலம் வந்து
காலவழி மேல்வழி சாரநடந்து-

16. தெளிவும்இராமல் உரை தடுமாறி சிந்தையும் நெஞ்சமும்
உலைந்து மருண்டு திடமும் உலைந்துமிகவும் அலைந்து
தேறிநல் ஆதரவு ஏதெனநொந்து-

17. மறையவன் வேதன் எழுதியவாறு வந்தது கண்டமும்
என்று தெளிந்து இனி என கண்டம் இனியென தொந்தம்
மேதினி வாழ்வு நிலாதினி நின்ற-

18. கடன் முறை பேசும் என உரைநாவுறங்கி விழுந்துகை
கொண்டு மொழிந்துகடைவழிகஞ்சி ஒழுகிட வந்து
பூதமும் நாலுசு வாசமும் நின்று-
நெஞ்சுதடுமாறி வரும்நேரமே-

19. வளர்பிறை போல எயிறும் உரோமமும் சடையும் சிறு
குஞ்சியும் விஞ்ச மனதும் இருண்ட வடிவும் இலங்க
மாமலை போல்யம தூதர்கள் வந்து-

20. வலைகொடுவீசி உயிர்கொடு போக மைந்தரும் வந்து
குனிந்தழ நொந்து மடியில் விழுந்து மனைவி புலம்ப
மாழ்கினரே இவர் காலம் அறிந்து-

21. பழையவர்காணும் எனும்அயலார்கள் பஞ்சு பறந்திட
நின்றவர் பந்தர் இடுமென வந்து பறையிட முந்த
வேபிணம் வேக விசாரியும் என்று-

22. பலரையும் ஏவி முதியவர் தாமிருந்தசவம் கழு
வும் சிலரென்று பணிதுகில் தொங்கல் களபமணிந்து
பாவகமே செய்து நாறும் உடம்பை-

23. வரிசை கெடாமல் எடுமென ஓடி வந்திளமைந்தர்
குனிந்து சுமந்து கடுகி நடந்து சுடலை அடைந்து
மானிடவாழ்வென வாழ்வென நொந்து-

24. விறகிடமூடி அழல்கொடு போட வெந்து விழுந்து
முறிந்து நிணங்கள் உருகி எலும்பு கருகி அடங்கி
ஓர்பிடி நீறும் இலாத உடம்பை
நம்பும் அடியேனை இனி ஆளுமே!

## 3. பாம்பாட்டிச் சித்தர்பாடல்

பாம்பாட்டி ஒருவர் பாம்புகள் பிடிப்பதில் வல்லவர். எத்தகைய கொடிய விஷமுள்ள பாம்பும் இவர் கண் பார்வைக்கும், கைப்பிடிக்கும் தப்பித்துச் செல்ல முடியாது. பக்கத்திலுள்ள காடு ஒன்றில் நவரத்தினப் பாம்பொன்று இருப்பதாகக் கேள்விப்பட்டு அக்காட்டினுள் சென்றார்.

இரவு நேரம். இருட்டில் பாதை தெரியாமல் தட்டுத் தடுமாறிக்கொண்டு காட்டினுள் நடந்து கொண்டிருந்த பாம்பாட்டியின் எதிரே பிரகாசமான ஒளியுடைய பாம்பொன்று மெல்ல ஊர்ந்து கொண்டு சென்றது. அதன் அழகில், அதன் ஒளியில் ஆட்பட்டு அதனைப் பிடிக்கவும் செய்யாமல் பிரமிப்புடன் நின்று கொண்டிருந்தார்.

தேடிப்போன புதையலைக் கண்ணெதிரே கண்டுங்கூடக் கைப்பற்ற முடியாதவராகி ஏதோ சிந்தைனையில் அப்படியே ஆடாமல் அசையாமல் நின்றார். கொஞ்ச நேரத்தில் அந்தப் பாம்பு தவயோகி ஒருவராக வடிவமெடுத்து நின்றது. அவர்தான் சட்டைமுனி சித்தர்.

இந்த சட்டைமுனி சித்தர் அந்தப் பாம்பாட்டிக்கு நல்லறிவு புகட்டினார். உலக நிலையாமையைக் கூறினார். பின்னர் அவருக்குத் தீட்சையளித்து மறைந்தார்.

நடந்தது கனவா! நினைவா! என்று திகைத்து நின்ற பாம்பாட்டி மெய்ஞானம் கைவரப்பெற்று நாட்டினுள் சென்றார். அக்காலத்தில் அந்நாட்டு அரசன் மரணமடைந்து

விடவே அனைவரும் பெருந்துக்கத்தில் இருந்தனர். அவர்களின் துக்கம் தீர்க்கவும், தாம் பெற்ற தவ சக்தியைப் பரிட்சித்துப் பார்க்கவும் இறந்த அரசனின் உடலில் புகுந்து அதிசயம் நிகழ்த்தினார். எல்லோருக்கும் மகிழ்ச்சி.

பிழைத்து எழுந்த மன்னர் அருகில் இருந்த செத்த பாம்பொன்றைக் கண்டார். பாம்பே! நான் எழுந்து விட்டேன். நீயும் எழுந்திரு என்றார். என்ன ஆச்சிரியம்; செத்த பாம்பு நெளிந்தது. அனைவரும் வியப்படைந்தனர். பாம்பு, கூட்டத்தைப் பார்த்துப் பயந்து ஓட முயற்சித்தது.

மன்னர் அந்தப் பாம்பைப் பார்த்தார். பாம்பே எங்கே போகிறாய். இறந்துபோன நீ இப்பொழுது எழுந்து விட்டாய். இன்னுமா உலக ஆசை

உனக்கு விடவில்லை? உலக வாழ்வில் ஏமாந்து போகாதே என்று சொன்னவர். 'ஆடு பாம்பே' என்று ஆணையிட்டார். மன்னரின் கட்டளைக்குக் கட்டுப்பட்ட பாம்பு மகுடி வாசிக்காமலேயே ஆடத் தொடங்கியது. பாம்பை முன்னிலைப்படுத்தி அற்புதமான தத்துவப் பாடல்களைப் பாடத் தொடங்கினார். தான் ஒரு சித்தர் என்பதையும் மன்னர் உடம்பில் தான் புகுந்திருப்பதையும் குறிப்பாக உணர்த்திப் பாடினார்.

ஆனால் அவர் பாடியதன் பொருள் யாருக்கும் புரியவில்லை. பிழைத்து விட்டாரே தவிர, அவருக்குக் கிறுக்கு பிடித்து விட்டது போலும் என்று கூறிக் கூட்டத்தினர் கலைந்து சென்றனர்.

மன்னரின் செயல்கள் மகாராணிக்கு ஆச்சரியமாயிருந்தது. முரட்டுப் பிடிவாதமும், பெண்கள் சுகமும் என்று சுகபோக வாழ்க்கை வாழ்ந்த இவர் எப்படி இப்படி தத்துவ அறிவு பெற்றார் என்று சந்தேகப்பட்டாள்.

"நாடுநகர் வீடுமாடு நற்பொருளெல்லாம்
நடுவன் வரும்பொழுது நாடிவருமோ
கூடுபோனபின் பவற்றாற் கொள்பயனென்னோ
கூத்தன் பதங்குறித்துநின் றாடாய்பாம்பே"

ராணிக்கு ஒரே அதிர்ச்சி. தன் மனதில் எழுந்த சந்தேகத்திற்குப் பதிலளிப்பது போல் இப்படிப் பாடுகின்றாரே, மா, பலா, வாழை, பெண்கள் என்று கனிரசமும் காமரசமும் பருகி வாழ்ந்தவர் இன்று கூத்தன் பதத்தை அல்லவா பாடுகின்றார் என்று வியப்படைந்தாள். அவர் வியப்பை அதிகமாக்குவதைப் போல் மேலும் சில பாடல்களைப் பாடினார்.

"மாடகூட மாளிகைகள் வண்ண மண்டபம்
மதில்சூழ்ந்த வரண்மனை மற்றும் முள்ளவை
கூடவாரா வென்றந்தக் கொள்கை யறிந்தோர்
குலவாமல் வெறுப்பாரென் றாடாய் பாம்பே"

"மலைபோன்ற செம்பொற்குவை வைத்திருப்பவர்
மறலி வருகையில் வாரிச்செல்வரோ
அலை யாமலகத்தினை யத்தன் பால்வைத்தோர்
அழியாரென்றே நீ துணிந்தாடாய் பாம்பே"

"பஞ்சணையும் பூவணையும் பாயலும் வெறும்
பாழ்சுடு காடதிலே பயன் பெறுமோ
மஞ்சள் மணம்போய் சுடு நாறு மணங்கள்
வருமென்று தெளிந்து நின்றாடாய் பாம்பே"

"முக்கனியுஞ் சக்கரையு மோதகங்களும்
முதிர்சுவைப் பண்டங்களு முந்தியுண்டவாய்
மிக்கவுயிர் போனபின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோமென் றாடாய் பாம்பே"

ஆகா எத்தனை தத்துவார்த்தமான பாடல்கள். பெண்ணாசை விலக்கலைப் பற்றியும் பாடத் தொடங்குகின்றார்.

"வெயில்கண்டமஞ்சள் போன்ற மாதரழகை
விரும்பியே மேல்விழுந்து மேவுமாந்தர்
ஒயில்கண்டே யிலவுகாத் தோடுங்கிளிபோல்
உடல் போனாலோடு வாரென்றாடாய் பாம்பே"

போதும் என்று அவரை கையெடுத்துக் கும்பிட்ட ராணி, ஐயா, தாங்கள் யார்? எங்கள் அரசரா? அல்லது யாராவது மகானின் ஆத்மா இந்த உடலில் புகுந்துள்ளீரா? என்று கேட்டாள்.

சித்தரும் அவளுக்கு நடந்த உண்மைகளைக் கூறினார். சில காலம் இவ்வுடலில் வசிக்க வேண்டிய கட்டாயத்தையும் கூறி அவளுடன் இல்வாழ்க்கையைத் தாமரை இலைத் தண்ணீர் போலத் தொடர்ந்தார்.

இவர் சித்தராய்த் திரிந்த காலத்து இவருடைய சீடர்களாய் இருந்தவர்கள் தம் குருநாதர் நீண்ட நாட்களாய் வராமை கண்டு பின்னர்த் தம் குருவருளால் அவரிருக்குமிடமறிந்து, அவர் தம் பழைய உடலுக்குத் திரும்பும்வண்ணம் பொருளமைந்த சில பாடல்களைப் பாடினார்கள். பின்னர் அன்றிரவு வெட்டியான் வேடம் பூண்டு நான்கு சாமத்துக்கும் பின்வரும் நான்கு வெண்பாக்களைப் பாடிப் பறையடித்துக் குருவை மீட்டுச் சென்றதாகக் கூறப்படுகிறது.

"ஆலஞ்சரீரம் அநித்தியம் என்று எண்ணாக்
காலன் தினம் வருவான் காணுங்கள் - காலன்
கலங்காத கண்டன்நற் கண்மணியைப் போற்றி
உறங்கி யுறங்காது இரு"

"வானமணித் தேவர் வனத்திலுள வைவேடர்
ஞானமணி யைத்திருட நன்னினார் - ஞானம்
நிறுங்காலம் தானறிந்து நல்லுணர்வை நாடி
உறங்கி உறங்காது இரு"

"ஆசையினால் பாசம் அளவிறந்த கர்மமிது
ஆசைவிட்டுப் போவது அரிதரிது - ஆசை
அறுங்காத லாகி அரனடியைப் போற்றி
உறங்கி உறங்காது இரு"

"தந்தைதாய் பந்துசனம் தாரம் சகோதரர்கள்
விந்துநிலை அறியா வீணரே - விந்து
வெறும் பாழ் என்று எண்ணியே மெய்யுணர்வை நாடி
உறங்கி உறங்காது இரு"

பாம்பாட்டிச் சித்தர் விருத்தாசலத்தில் சித்தியடைந்ததாகச் சில நூல்களும் துவாரகையில் சித்தியடைந்ததாக சில நூல்களும் கூறுகின்றன. பாம்பாட்டி சித்தரின் பாடல்கள் பெரும்பாலும் தாயுமான சுவாமிகளின் பாடல்களை அடியொற்றியே இருப்பதால் இவர் அவரின் காலத்திற்குப் பிற்பட்டவராக இருக்கலாம் என்ற முடிவுக்கு வரவேண்டி உள்ளது.

தாயுமானவரின் சித்தர் கனம் பகுதியைப் போலவே இவரும் 'சித்தர் வல்லபங்கூறல்' பகுதியைப் பாடியுள்ளார். இஃதோர் கலம்பக உறுப்பாய் பிரபந்தம் பாடுதலின் பாற்பட்டதாகும்.

நாங்களெல்லாம் சித்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களாவோம். எங்களுக்கு அபூர்வ சக்திகள் பல உண்டு. அவைகள் என்ன தெரியுமா?

தூணைச் சிறுதுரும்பாகத் தோன்றிடச் செய்வோம், துரும்பைப் பெருந்தூணாகத் தோன்றிடச் செய்வோம், ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் மாற்றிக் காட்டுவோம். எட்டுமலைகளைப் பந்தாய் எடுத்தெறிவோம், ஏழுகடல்களையும் குடித்து, ஏப்பம் விட்டுக் காட்டுவோம், வானத்தை வில்லாக வளைத்திடுவோம்,

மூண்டெரியும் அக்கினிக்குள்ளே மூழ்கிவருவோம், தண்ணீருக்குள் மூச்சடக்கியும் இருப்போம், இந்த நிலவுலகை மட்டுமல்லாது இன்னுமுள்ள உலகமத்தனையும் பொன்மயமாக்கிக் காட்டுவோம், பிரம்மா போல புதுப்புது உயிர்களைப் படைத்துக் காட்டுவோம், சூரியனின் செங்கதிரையும் நிலவைப் போல தன்கதிராய் மாற்றிக் காட்டுவோம், கொடிய மிருகங்களான புலி, யானை, யாளி, சிங்கம் முதலான விலங்குகளை எங்களுக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம். சக்தி வாய்ந்த கடவுளுக்குச் சமமாக நாங்கள் இருப்பதால் அவரை எங்களுடன் விளையாடவும் அழைப்போம், இந்த உலகத்தை இல்லாமற்கூட செய்து காட்டுவோம், எத்தனை பெரிய வித்தகரும் அறுபத்து நான்கு கலைகளை மட்டுமே அறிவார். நாங்களோ அதற்கும் மேலாக ஒரு கலையையும் அறிவோம். இதற்கெல்லாம் காரணம் நாங்கள்

இறைவன் மேல் பற்றும் ஏனைய பொருள்களின் மேல் பற்றும் இல்லாதவர்களாயிருப்பதே என்று சித்தர்களின் வல்லபத்தைக் கூறி முடிக்கின்றார் பாம்பாட்டிச் சித்தர்.

**பாம்பாட்டிச்சித்தரின் விடுகதைகள்**

பெரும்பாலானப் பாடல்கள் விடுகதை நோக்கிலேயே அமைந்துள்ளன. உதாரணமாக சருர குணம் சொல்லும் பகுதியில்,

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேரறியவே மெத்தவீங்கிப்
பரியார மொருமாது பார்த்தபோது
பையோடே கழன்ற தென்றாடாய் பாம்பே

என்ற பாடலில் பெண்ணொருத்தி விளையாட்டு போலவே ஆடவனொருவனைப் புணர அது கர்ப்பமாய் உருக்கொள்ள இதற்குப் பரிகாரம் என்னவென்று யோசிக்கும் வேளையில்

அது பிரசவமாகி குழந்தை பிறந்து விட்டது என்பதுதான் தெளிபொருள்.

விடுகதையில் வரும்போது பாம்பு ஒன்று விளையாட்டாய் ஒன்றைக் கடித்துவிட, அதனால் பாம்புக்கு வீக்கமேற்பட்டு விட்டது. இதற்கு என்ன வைத்தியம் என்று தேடியபோது, கடிபட்ட அந்த விறப்பையிலிருந்த வீக்கத்திற்குக் காரணமான பொருள் வெளியேறி விட்டது. அது என்ன? இதற்கு விடையறிய பாடலிலேயே 'மாது' என்ற வார்த்தையை யூகத்திற்கொரு பொருளாகச் சொல்லிப் பார்க்கிறார். மேலே சொன்ன விடுகதையை பெண்ணுக்குப் பொருத்திப் பார்க்க வேண்டும்.

பெண்களின் அல்குலை பாம்புக்கு ஒப்பிடுவர். அந்தப் பாம்பானது விளையாட்டாய் கடித்த பொருள் 'ஆணின் கற்பு'. பெண்ணானவள் ஆணோடு புணர்ந்தது. யாருக்கும் தெரியாமல் இரகசியமாய்ச் செய்த இந்தச் செயல் பலரறியும்படி உடலானது வீங்கிக் காட்டிக் கொடுத்து விட்டது. அதாவது கர்ப்பமடைந்து வயிறு வீங்கி விட்டது.

இதனை எப்படி சமாளிப்பது என்று யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் கர்ப்பத்தில் தங்கியிருக்கும் சிசுவானது கர்ப்பபையை விட்டு வெளியே பிரசவமாகி வந்துவிட்டது. அவளது பிரச்சனையும் தீர்ந்தது.

எப்படி இருக்கிறது விடுகதை?

‘நாலுத்தெருவிலே நாலுகம்பம்
நடுத்தெருவிலே பொன்னுக்கம்’

என்று விடுகதையொன்று போட்டுவிட்டு நம்மை விடை காணச் சொல்கின்றார் பாம்பாட்டிச் சித்தர்.

கடுவெளிச் சித்தரைப் போன்று இவரும் குயவனார் மண் தோண்டி விடுகதையைப் பாடுகின்றார்.

‘ஊத்தைக் குழிதனிலே மண்ணையெடுத்தே
உதிரப் புனலிலே யுண்டை சேர்த்தே
வாய்த்த குயவனார் அவர் பண்ணும் பாண்டம்
வறையோட்டுக்கு மாகாதென் றாடாய் பாம்பே’

இதில் மட்பாண்டம் செய்யும் மூலப்பொருள் கூறப்படுகிறது. இப்படி ஊத்தைக் குழியிலே மண்ணை எடுத்துக் குருதிப்புனலிலே உண்டையாக்கி குயவனார் செய்த மட்பாண்டம் இறுதியில் பிச்சையெடுக்கும் திருவோடு அளவுக்குக்கூடப் பயனாவதில்லை என்று கூறுகின்றார்.

இரண்டு பேர் மண் சேர்த்துப் பிசைய ஒருவர் பானை செய்து அவரே பத்து மாதம் சூளையில் வைத்துப் பக்குவமாய் இறக்கி வைத்தாலும் அந்தப் பானையானது இறுதியில் அரைக்காசுக்குக்கூட உதவாது என்று இந்த உடல் நிலையாமையைக் கூறுகின்றார் பாம்பாட்டிச் சித்தர்.

‘இருவர் மண்சேர்த்திட வொருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையா யிருப்பினு மந்தச்சூளை
அரைக்காசுக் காகா தென் றாடாய்ப் பாம்பே’

மனிதர் என்னதான் தான் செய்த பாவங்களுக்குப் பரிகாரம் தேடினாலும் அதற்கான தண்டனை நிச்சயம் உண்டு என்று இந்தச் சித்தர் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

நாறுகின்ற மீனைப் பல தரம் நல்ல தண்ணீர் ஊற்றிக் கழுவினாலும் அதனது இயல்பான நாற்றம் போகாது. அதுபோல மனிதன் என்னதான் பரிகாரங்கள் செய்தாலும் அவன் செய்த பாவ வினைகள் அவனை விட்டகலாது அவனைத் தண்டித்தே தீரும் என்பதை,

“நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங் கழுவினு மத னாற்றம் போமோ
ஊறுமுடல் பலநதி பாடிக் கொண்டதால்
கொண்டமல நீங்கா தென்றா டாய் பாம்பே”

என்னதான் புனித நீராடினாலும் பாவங்கள் தண்டனைக் குரியவையே என்பது பாம்பாட்டியாரின் தீர்ப்பாகும்.

பொம்மலாட்டம் தெரியுமா? திரைக்குப் பின்னாலிருந்து சூத்திரதாரி ஒருவன் இயக்க, பாவைக் கூத்தாடும் நாடகக் காட்சியைப் போன்றது நமது வாழ்க்கை என்பதைப் பின் வரும் பாடலால் விளக்குகின்றார்.

“மரப்பாவை போலவொரு மண்ணுருச் செய்து
வளமான சீவனென்னுந் சூத்திர மாட்டித்
திரைக் குள்ளிருந்தசைப் போன் தீர்ந்த பொழுதே
தேகம் விழுமென்று தெளிந் தாடு பாம்பே”

இன்னும் இந்த உடல் நிலையில்லாது என்பதை,

“சீயும் மலமுஞ் செந்நீரும் நிணமும்
சேர்ந்திடுதுர் நாற்றமுடைக் குடமதுஉடைந்தால்
நாயும் நரியும் பேயும் கடுகும்
நமதென்றே தின்னு மென்றடாய் பாம்பே”

எவ்வளவு சீரும் சிறப்புமாய் வளர்த்த இந்த உடலானது உலகில் பார்க்கின்ற பொருளையெல்லாம் தனதென்றே சொந்தம் கொண்டாடும், சீழும் குருதியும் மலமும் சேர்ந்த இந்த நாற்றக்குடமான உடல் இறந்து விட்டால் நாயும், நரியும், பேயும், கழுகும் என்னுடையது இந்த உடல் என்று பங்கு போட்டுச் சாப்பிட ஆரம்பித்து விடும். இப்பொழுது சொல்லுங்கள், இந்த உடல் நம்முடையதா? அல்லது நாய் நரிகளுக்குச் சொந்தமானதா? என்று கேள்வி விடுக்கின்றார் பாம்பாட்டி.

இந்தப் பாடலானது பட்டினத்தாரின் உடற்கூற்று வண்ணப் பாடல்களுடன் ஒப்பு நோக்கி ஆராயத்தக்கது.

“எரியெனக் கென்னும் புழுவோவெனக் கென்று மிந்த மண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக் கென்னும் தான் புசிக்க
நரியெனக்கென்னும் புன்னாயெனக் கென்னும் இந்த நாறுடலைப் பிரியமுடன்
வளர்த்தே னிதனாலென்ன பேறெனக்கே”

பாம்பாட்டியின்,

இருவர் மண்சேர்த்திட வொருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமை யாயிருப்பினு மந்தச்சூளை
அரைக்காசுக் காகா தென்றாடாய் பாம்பே

இந்தப் பாடலும்,

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேரறியவே மெத்த வீங்கிப்
பரியார மொருமாது பார்த்தபோது
பையோடே கழன்ற தென்றாடாய் பாம்பே

இந்தப் பாடலும் பட்டினத்தாரின் உடற்கூற்றுப் பண்ணப் பாடலுடன் ஒப்பு நோக்கத்தக்கது.

ஒருமடமாதும் ஒருவனும் ஆகி இன்பசுகம்தரும்
அன்பு பொருந்தி உணர்வுகலங்கி ஒழுகியவிந்து
ஊறுசுரோணிதம் மீது கலந்து
பனியில் ஓர் பாதி சிறுதுளிமாது பண்டியில் வந்து

என்ற பாடல் பாம்பாட்டிச் சித்தரின் மேற்கண்ட பாடலுடன் ஒத்துப் போவதை ஒருங்கு காணலாம். இன்னும்,

மனையாளும் மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாயின் மட்டே
யினமான சுற்ற மயான மட்டே வழிக்கேது துணை

என்ற பட்டினத்தாரின் பாடல் கருத்து பாம்பாட்டியின்,

“மக்கள் பெண்டிர் சுற்றமரு மக்கண் மற்றவர்
மாளும் போது கூடவவர் மாள்வதில்லையே”

பாடலோடு ஒத்து விளங்குவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

**பழமொழிகள்**

வாழ்க்கை என்பது பற்றற்று இருக்க வேண்டுமென்பதற்கு ‘அகப்பற்று நீக்கல்’களாகச் சில பழமொழிகளை உதாரணங்களாகக் கூறுகின்றார் பாம்பாட்டி.

"தாமரையிலை யினிலே தண்ணீர்தங்காத்
தன்மை போல"

தண்ணீரிலே இருந்தாலும் தாமரை இலையிலே தண்ணீர் தங்காத் தன்மை போல ஆசாபாசங்கள் நிறைந்த இந்த உலக வாழ்க்கையிலே வாழ்ந்துங்கூட ஆசாபாசங்கள் பாதிக்கப்படாதவாறு வாழ்க்கையை அமைத்துக் கொண்டு இறைவன் ஒருவனே நித்தியமானவன் என்பதை உணர வேண்டும் என்கிறார்.

**சேற்றிற் றிரிபிள்ளைபூச்சி சேற்றை நீக்கல்போல்**

பிள்ளைப் பூச்சியானது சேற்றினில் இருந்தாலும் அதன்மேல் ஏதும் சேறு ஒட்டிக்கொள்ளாமல் வாழ்வது போல நாமும் உலக இச்சைகளின் மேல் பற்று வைக்காமல் தேசத்தாரோடு ஒத்து வாழ்தல் வேண்டும் என்றும்,

எண்ணெய்க்குந் தண்ணீர்க்குந் தொந்தமில்லாவாறு போல்

தண்ணீருக்குள் என்னதான் எண்ணெயை இரண்டறக் கலந்து விட்டாலும் அது அதனுள் ஐக்கியமாகாது. அதற்கும் தனக்கும் சம்பந்தமில்லாது தனியே மிதப்பது போல உலக ஆசாபாசங்களில் மூழ்காது தனித்திருத்தல் வேண்டும் என்கிறார்.

இன்னும்,
"சொல்லும் புளியம்பழத்தி னோடு போலீவ"

என்ற உதாரண முகத்தான் எத்தனை சொந்தங்கள் நமக்குத் துணை நின்றாலும் அவையெல்லாம் உண்மையான சொந்தங்கள் அல்ல என்றும் இறைவன் ஒருவனே நம்முடைய உண்மையான சொந்தம் என்றும் உணர்ந்து மேல் ஓட்டினுள் ஒட்டாத புளியம் பழம் போல வாழ்க்கை நடத்த வேண்டும் என்று பாம்பாட்டிச் சித்தர் அறிவுரை கூறுகின்றார்.

இவை போல இன்னும் சில பழமொழிகள் ஆழ்ந்த கருத்துடையனவாய் இவர் பாடல்களில் பின்னிப் பிணைந்துள்ளன.
'தேனில் விழுந்த ஈயைப் போல' (81)
'ஏட்டுச் சுரைக்காய்க் கறிக் கெய்திடாது போல்' (94)
'காந்தம் வலி இரும்பு போல்' (91)
'உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி' (92)
'கண்டவர்கள் ஒருகாலும் விண்டிலர்
விண்டவர் ஒருகாலும் கண்டிலர்' (105)
'உள்ளங் கையிற் கனிபோல' (12)

இவர் பாடலில் எல்லாப் பாடல்களுமே ஆடு பாம்பே என்று முடிவதற்கு செத்த பாம்பை ஆட்டுவித்து தத்துவங்களைச் சொன்னதுடன் இன்னொரு காரணமும் கூறப்படுகிறது. குண்டலினியாகிய பாம்பை இவர் ஆட்டுவித்து இறை இன்பம் காணுதலால் ஆடுபாம்பே என்று குண்டலினியை முன்னிலைப்படுத்திய சித்தர் பாடல்கள் இவையென்றும் சிறப்பிக்கப்படுகின்றன.

பாம்பின் முழு ஆட்டத்தைப் பாடல்களில் தொடர்ந்து காணலாம்.

## கடவுள் வணக்கம்

### கண்ணிகள்

**தெளிந்து தெளிந்துதெளிந் தாடுபாம்பே - சிவன்**
**சீர்பாதங் கண்டுதெளிந் தாடு பாம்பே**
**ஆடும்பாம்பே தெளிந்தாடு பாம்பே - சிவன்**
**அடியினைக் கண்டோமென் றாடு பாம்பே.** 1

**நீடுபதம் நமக்கென்றுஞ் சொந்த மென்றே**
**நித்திய மென்றே பெரிய முத்தி யென்றே**
**பாடுபடும் போதுமாதி பாத நினைந்தே**
**பன்னிப் பன்னிப் பரவிநின் றாடுபாம்பே.** 2

**பொன்னிலொளி போலவெங்கும் பூரணமதாய்ப்**
**பூவின் மணம் போலத்தங்கும் பொற்புடையதாய்**
**மன்னும் பல உயிர்களில் மன்னிப் பொருந்தும்**
**வள்ளலடி வணங்கி நின் றாடுபாம்பே.** 3

**எள்ளிலெண்ணெய் போலவுயி ரெங்கு நிறைந்த**
**ஈசன் பதவாசமலர் எண்ணி யெண்ணியே**
**உள்ளபடி அன்புபத்தி ஓங்கி நிற்கவே**
**ஒடுங்கிய டங்கித்தெளிந் தாடு பாம்பே.** 4

**அண்டபிண்டந் தந்த வெங்கள் ஆதிதேவனை**
**அகலாம மேலநினைந் தன்புடன் பணிந்து**
**எண்திசையும் புகழ்ந்திட ஏத்தி யேத்தியே**
**ஏகமன மாகநாடி யாடு பாம்பே.** 5

**சோதிமய மானபரி சுத்த வஸ்துவைத்**
**தொழுதழு தலற்றிற் தொந்தோந்தோ மெனவே**
**நீதிதவ றாவழியில் நின்று நிலையாய்**
**நினைந்து நினைந்துருகி யாடு பாம்பே.** 6

அருவாயும் உருவாயும் அந்தியாயும்
அந்தமாயும் ஒளியாயும் ஆகமமாயும்
திருவாயுங் குருவாயும் சீவனாயும்
செறிந்தவஸ் துவைப்போற்றி யாடு பாம்பே. 7

சுட்டிக்காட்டி ஒண்ணாதபாழ் சூனி யந்தன்னைச்
சூட்சமதி யாலறிந்து தோஷ மறவே
எட்டிபிடித் தோமென் றானந்த மாகப்பை
எடுத்து விரித்துநின் றாடு பாம்பே. 8

எவ்வுயிரும் எவ்வுலகு ஈன்று புறம்பாய்
இருந்து திருவிளையாட் டெய்தியும் பின்னர்
அவ்வுயிரும் அவ்வுலகும் ஆகியுநின்ற
ஆனந்த வெள்ளங்கண் டாடு பாம்பே. 9

## குரு வணக்கம்

சாற்றுமுடல் பொருளாவி தத்த மாகவே
தானம் வாங்கி நின்ற வெங்கள் சற்கு ருவினைப்
போற்றி மனம் வாக்குக்காயம் மூன்றும் பொருந்தப்
புகர்ந்து புகழ்ந்துநின் றாடாய் பாம்பே. 10

பொய்ம்மதங்கள் போதனைசெய் பொய்க்கு ருக்களைப்
புத்திசொல்லி நன்னெறியிற் போக விடுக்கும்
மெய்ம்மதந்தான் இன்ன தென்றும் மேவ விளம்பும்
மெய்க்குருவின் பதம் போற்றி ஆடாய்பாம்பே. 11

வேதப்பொருளின்ன தென்று வேதங் கடந்த
மெய்ப்பொருளைக்கண்டுமனம் மேவிவிளம்பிப்
போதப்பொருள் இன்னதென்றும் போதனை செய்யும்
பூரணசற் குருதாள்கண் டாடாய் பாம்பே. 12

உள்ளங்கையிற் கனிபோல உள்ள பொருளை
உண்மையுடன் காட்டவல்ல உண்மைக் குருவைக்
கள்ளமனந் தன்னைத்தள்ளிக் கண்டு கொண்டன்பாய்க்
சுளித்துக் களித்துநின் றாடாய் பாம்பே. 13

அங்கையிற்கண் ணாடிபோல ஆதி வஸ்துவை
அறிவிக்கும் எங்களுயி ரான குருவைச் 14

சங்கையறச்சந்ததமுந் தாழ்ந்து பணிந்தே
தமனியப் படமெடுத் தாடாய் பாம்பே.

காயம்நிலை யழிகையைக் கண்டு கொண்டுபின்
கற்புநிலை யுள்ளிற்கொண் டெக்காலமும் வாழும்
தூயநிலை கண்டபரி சுத்தக் குருவின்
துணையடி தொழுதுநின் றாடாய் பாம்பே. 15

கூடுவிட்டுக் கூடுபாயுங் கொள்கை யுடைய
குருவின் வல்லபமெவர் கூற வல்லவர்
வீடுபெறும் வகையைமென் மேலுங் காட்டும்
மெய்க்குருவைப் பணிந்துநின் றாடாய் பாம்பே. 16

அட்டதிக்கும் அண்டவெளி யான விடமும்
அடக்கிய குளிகையோ டாடி விரைவாய்
வட்டமிட்டு வலம்வரும் வல்ல குருவின்
மலரடி தஞ்சமென் றாடாய் பாம்பே. 17

கற்பகாலங்க டந்தாதி கர்த்தா வோடுங்
கடமழி யாதுவாழுங் காரணக்குரு
பொற்பதமே தஞ்சமென்று போற்றுதல் செய்து
பூரணச் சிந்தையோ டாடாய் பாம்பே. 18

வச்சிரத்திற் கோர்பழுது வாய்க்கு மாயினும்
வல்லுடம்புக் கோர் குறை வாய்த்தி டாது
மெச்சகட முள்ள வெங்கள் வேத குருவின்
மெல்லடி துதித்துநின் றாடாய்பாம்பே. 19

## பாம்பினது சிறப்பு

நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே
பாடிப்பாடி நின்றுவிளை யாடு பாம்பே. 20

வளைபுகும் போதேதலை வாங்கும் பாம்பே
மண்டலமிட் டுடல்வளை வண்ணப் பாம்பே
தளைக்கஞ்சி நின்றிடும் சத்தியப் பாம்பே
தலையெடுத் தேவிளையாடு பாம்பே. 21

குற்றமற்ற சிவனுக்குக் குண்டல மானாய்
கூறுந்திரு மாலினுக்குக் குடையு யானாய்
கற்றைக்குழல் பார்வதிக்குங் கங்கண மானாய்
கரவாமல் உளங்களித் தாடு பாம்பே. 22

மண்டலத்தைத் தாங்குமிக வல்லமை கொண்டாய்
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயானாய்
கண்டபடை நடுங்கிடக் காட்சியும் பெற்றாய்
கண்ணேசெவி யாகக்கொண்டாய் ஆடு பாம்பே. 23

சந்திரனைச் சூரியனைத் தாவித் தீண்டினாய்
சங்கரனுக் காபரணந் தானுமாகினாய்
மந்திரத்திற் கடங்கினாய் மண்டல மிட்டாய்
வளைந்து வளைந்துநின் றாடு பாம்பே. 24

### சித்தர் வல்லபங் கூறல்

எட்டுநாகந் தம்மைக்கையா லெடுத்தேயாட்டுவோம்
இந்திரனார் உலகத்தை இங்கே காட்டுவோம்
கட்டுக்கடங் காதபாம்பைக் கட்டி விடுவோம்
கடுவிஷத் தன்னைக்கக்கி யாடு பாம்பே. 25

ஆதிசேடன் ஆயிகினுமெம் மங்கையி னாலே
ஆட்டிவிடு வோமெங்கள் ஆக்கினைக்குள்ளே
நீதியோடங்கியே நின்றிடச் செய்வோம்
நின்றநிலை தவறாமல் ஆடுபாம்பே. 26

தூணைச்சிறு துரும்பாக தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்குவோம்
ஆணைபெண்ணும் பெண்ணை யாணு மாகச் செய்குவோம்
ஆரவாரித் தெதிராய்நின் றாடு பாம்பே. 27

எட்டுமலை களைப்பந்தாய் எடுத்தெ றிகுவோம்
ஏழுகட லையுங்குடித் தேப்ப மிடுவோம்
மட்டுப்படா மணலையும் மதித்திடுவோம்
மகாராஜன் முன்புநீ நின் றாடுபாம்பே. 28

மண்டலமுற் றுங்கையால் மறைத்து விடுவோம்
வானத்தையும் வில்லாக வளைத்து விடுவோம் 29

தொண்டருக்குச் சூனியஞ் சொல்லிக் காட்டுவோம்
தோன்றலுக்கு முன்பு நின் றாடாய் பாம்பே.

மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கிவருவோம்
முந்நீருள் இருப்பினு மூச்ச டக்குவோம்
தாண்டிவரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்
தார்வேந்தன் முன்புநீ நின் றாடு பாம்பே. 30

செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் னாக்குவோம்
செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்து விடுவோம்
இப்பெரிய உலகத்தை இல்லாமற் செய்வோம்
எங்கள் வல்ல பங்கண்டுநீ யாடு பாம்பே. 31

வேதன்செய்த சிருஷ்டிகள்போல் வேறுசெய்குவோம்
வேதனையு மெங்கள் கீழே மேவச் செய்குவோம்
நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்
நாங்கள் செய்யும் செய்கையிதென் றாடு பாம்பே. 32

அறுபத்து நாலுகலை யாவு மறிந்தோம்
அதற்குமே லொருகலை யான தறிந்தோம்
மறுபற்றுச் சற்றுமில்லா மனமு முடையோம்
மன்னனே யாசானென் றாடு பாம்பே. 33

சிறுபுலி யானையாளி சிங்க முதலாய்ச்
சிற்றடிக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம்
வீறுபெருங் கடவுளை எங்களுடனே
விளையாடச் செய்குவோமென் றாடு பாம்பே. 34

## சித்தர் சம்வாதம்

வாசுகியை ஒருபக்கம் மன்னநிறுத்தி
மகத்தான பதுமனை மறுபக்கம் வைத்தே
தேசுலவு தக்கனைத் தன்றிக்கிற் சேர்த்துச்
செய்யபது மனைக்கொள் சித்த னாரே. 35

அனந்தனை யொருபக்க மாக நிறுத்தி
அதன்பக்கங் குளிகனை யண்டச் சேர்த்துக்
கனங்கொண்ட கார்க்கோடகன் காணக் காட்டுங்
கடுஞ்சங்க பாலனைத்தான் சித்த னாரே. 36

அட்டதிக்குஞ் சக்கரங் களாகக் கீறி
அக்கோண நிலைகளி லக்கரஞ் சேர்த்துத்
திட்டமுடன் மந்திரத்தைச் செபித்து நில்லும்
சித்தந்தடு மாறாதீர் சித்த னாரே. 37

அட்டதிக்குஞ் சக்கரங்க ளமைத்து விட்டோம்
அவ்வவற்றிற் சக்கரங்க ளமைத்து விட்டோம்
எட்டுநாக மிருக்கின்ற இடத்தில் விட்டோம்
இனியென்ன செய்வம்சொல்லும் சித்த னாரே. 38

நடுவாக ஆதிசேடன் றன்னைநாட்டும்
நான்கு திக்கும் மந்திரித்த நீறு தூவும்
கடுவிஷங் கக்கவேயக் கட்செ விகளைக்
கையிலெடுத் தாடுங்கள் சித்த னாரே. 39

## பொருளாசை விலக்கல்

நாடுநகர் வீடுமாடு நற்பொரு ளெல்லாம்
நடுவன் வரும்பொழுது நாடி வருமோ
கூடுபோன பின் பவற்றாற் கொள்பய னென்னோ
கூத்தன் பதங் குறித்துநின் றாடாய் பாம்பே. 40

யானைசேனை தேர்ப்பரி யாவு மணியாய்
யமன்வரும் போதுதுணை யாமோ அறிவாய்
ஞானஞ்சற்று மில்லாத நாய்கட் குப்புத்தி
நாடிவரும் படிநீநின் றாடுபாம்பே. 41

மாணிக்கமா மணிமுடி வாகு வலயம்
மார்பிற்றொங்கும் பதக்கங்கண் மற்றும் பணிகள்
ஆணிப் பொன்முத் தாரமம் பொன் அந்தகடகம்
அழிவானபொருளெனநின் றாடாய் பாம்பே. 42

மாடகூடமாளிகைகள் வண்ண மண்டபம்
மதில்சூழ்ந்த அரண்மனை மற்றும் முள்ளவை
கூடவாரா வென்றவந்தக் கொள்கை யறிந்தோர்
குலவாமல் வெறுப்பாரென் றாடாய் பாம்பே. 43

மலைபோன்ற செம்பொற்குவை வைத்தி ருப்பவர்
மறலிதான் வருகையில் வாரிச் செல்வரோ 44

அலையாமல் அகத்தினை அத்தன் பால்வைத்தோர்
அழியாரென் றேநீ துணிந் தாடாய் பாம்பே.

பஞ்சணையும் பூவணையும் பாய லும்வெறும்
பாழ்சுடு காடதிலே பயன் பெறுமோ
மஞ்சள் மணம் போய்சுடு நாறுமணங்கள்
வருமென்று தெளிந்துநின் றாடாய்பாம்பே. 45

முக்கனியுஞ் சர்க்கரையும் மோத கங்களும்
முதிர்சுவைப் பண்டங்களும் முந்தி யுண்டவாய்
மிக்கவுயிர் போனபின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோமென் றாடாய் பாம்பே. 46

வண்ணப்பட்டும் வாசனையும் வாய்த்த கோலமும்
வண்கவிகை ஆலவட்டம் மற்றுஞ் சின்னமும்
திண்ணமுடன் யமபுரஞ் செல்லுங் காலத்தில்
சேரவர மாட்டாவென் றாடாய் பாம்பே. 47

மக்கள்பெண்டிர் சுற்றமரு மக்கள் மற்றவர்
மாளும்போது கூடவவர் மாள்வ தில்லையே
தக்கவுல கனைத்தையுந் தந்த கர்த்தனைத்
தாவித்தாவித் துதித்துநின் றாடாய் பாம்பே. 48

கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமூடர் கண்டு களிப்பார்
மேனிலைகண் டார்கள் வீணாய் வீம்பு பேசிடார்
மெய்யன்பதம் நாடுவாரென் றாடாய் பாம்பே. 49

## பெண்ணாசை விலக்கல்

வெயில்கண்ட மஞ்சள்போன்ற மாத ரழகை
விரும்பியே மேல்விழுந்து மேவு மாந்தர்
ஒயில்கண்டே இலவுகாத் தோடுங் கிளிபோல்
உடல்போனால் ஓடுவாரென் றாடாய் பாம்பே. 50

செண்டுமுலை வண்டுவிழி கொண்ட தோகையைச்
சித்தப்பால் விழுங்கியே சீயென்று ஒறுத்தோம்
குண்டுகட் டெருமை யேறுங் கூற்றுப் பருந்தைக்
கொன்றுதின்று விட்டோமென் றாடாய் பாம்பே. 51

வட்டமுலை யென்றுமிக வற்றுந் தோலை
மகமேரு என்றுவமை வைத்துக் கூறுவார்
கெட்டநாற்ற முள்ளயோனிக் கேணியில் வீழ்ந்தோர்
கெடுவரென்றே நீதுணிந் தாடாய் பாம்பே. 52

மலஞ்சொரி கண்ணைவடி வாளுக் கொப்பாக
வருணித்துச் சொல்வார்மதி வன்மை யில்லாதார்
குருநலம் பேசுகின்ற கூகைமாந்தர்கள்
கும்பிக்கே இரையாவரென் றாடாய் பாம்பே. 53

சிக்குநாறுங் கூந்தலைச் செழுமை மேகமாய்ச்
செப்புவார்கள் கொங்கைதனைச் செப்புக் கொப்பதாய்
நெக்குநெக்கு ருகிப்பெண்ணை நெஞ்சில்நினைப்பார்
நிமலனை நினையாரென் றாடாய் பாம்பே. 54

நாறிவரும் எச்சில்தனை நல்லமு தென்றும்
நண்ணுஞ்சளி நாசிதனை நற்கு மிழென்றும்
கூறுவார்கள் புத்தியில்லாக் கூகை மாந்தர்
கோனிலையை யறியாரென் றாடாய் பாம்பே. 55

மயிலென்றுங் குயிலென்றும் மாணிக்க மென்றும்
மானேயென்றும் தேனேயென்றும் வானமு தென்றும்
ஒயிலான வன்னமயிற் கொத்தவ ளென்றும்
ஓதாமற் கடிந்துவிட் டாடாய் பாம்பே. 56

மின்னற்கொடி யென்றுஞ்சோதி விளக் கென்றும்
மெல்லியென்றும் வல்லியென்றும் மேனகை யென்றும்
கன்னற்கட்டி யென்றுஞ்சீனிக் கற்கண் டென்றும்
கழறாமற் கடிந்தோமென் றாடாய் பாம்பே. 57

பூவையென்றும் பாவையென்றும் பொன்னே யென்றும்
பூந்திருவே என்றுமென்றன் பொக்கிஷ மென்றும்
கோவையென்றுங் கோதையென்றுங் கோகில மென்றும்
கூறாமல் துறந்தோம்நாமென் றாடாய் பாம்பே. 58

மலக்குடம் மீதினிலே மஞ்சள் பூச்சென்றும்
மல்கும்புழுக் கூட்டின்மேல் வண்ணத் தோலென்றும்
சலக்குழிக் குள்ளேநாற்றஞ் சார்ந்த சேறென்றும்
தானறிந்து தள்ளினோமென் றாடாய் பாம்பே. 59

## சரீரத்தின் குணம்

ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே
உதிரப் புனலினிலே உண்டை சேர்த்தே
வாய்த்தகுய வனார் பண்ணும் பாண்டம்
வறகோட்டுக்கு மாகாதென் றாடாய் பாம்பே. 60

இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையா யிருப்பினு மந்தச் சூளை
அரைக்காசுக் காகாதென் றாடாய் பாம்பே. 61

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேரறியவே மெத்த வீங்கிப்
பரியார மொருமாது பார்த்த போது
பையோடே கழன்றதென் றாடாய் பாம்பே. 62

சீயுமல முஞ்செறி செந் நீரும் நிணமுஞ்
சேர்ந்திடு துர்நாற்றமுடைக் குடமது உடைந்தால்
நாயுநரி யும்பெரிய பேயுங் கழுகும்
நமதென்றே தின்னுமென் றாடாய் பாம்பே. 63

நீரிலெழும் நீர்க்குமிழி நிலைகெ டல்போல
நில்லாதுடல் நீங்கிவிடும் நிச்சய மென்றே
பாரிற் பல உயிர்களைப் படைத்த வன்றனைப்
பற்றவேநீ பற்றித்தொடர்ந் தாடாய் பாம்பே. 64

நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங்கழு வினுமதன் நாற்றம் போமோ
கூறுமுடல் பலநதி யாடிக் கொண்டதால்
கொண்ட மலம் நீங்காதென் றாடாய் பாம்பே. 65

காய்த்தமர மதுமிக்க கல்லடிப்படும்
கன்மவினை கொண்டகாயம் கண்டனை பெறும்
வாய்த்ததவ முடையவர் வாழ்பவ ரென்றே
வத்துத்திரு வடிதொழு தாடாய் பாம்பே. 66

பேசரிய நவவாயிற் பீற்றல் துருத்தி
பெருங்காற்றுள் புகுந்ததாற் பேச்சுண் டாச்சே
ஈசனிலை அறியாருக் கிந்தத் துருத்தி
எரிமண்ணிற் கிரைமென் றாடாய் பாம்பே. 67

மரப்பாவை போல வொரு மண்ணுருச் செய்து
வளமான சீவனென்னுஞ் சூத்திரம் மாட்டித்
திரைக்குள்ளி ருந்தசைப்போன் தீர்ந்த பொழுதே
தேகம்விழு மென்றுதெளிந் தாடாய் பாம்பே. 68

தசநாடி தசவாயு சத்த தாது
சார்ந்தமரக் கப்பலது தத்தி விழுமே
இசைவான கப்பலினை ஏக வெள்ளத்தில்
எந்நாளும் ஓட்டத்துணிந் தாடாய் பாம்பே. 69

## அகப்பற்று நீக்கல்

தாமரையி னிலையினிலே தண்ணீர் தங்காத
தன்மைபோலச் சகத்தாசை தள்ளி விட்டெங்கும்
தூமணியாம் விளங்கிய சோதி பதத்தைத்
தொழுது தொழுதுதொழு தாடாய்பாம்பே. 70

கள்ளங் கொலை காமமாதி கண்டித்த வெல்லாம்
கட்டறுத்து விட்டுஞானக் கண்ணைத் திறந்து
தெள்ளிதான வெட்டவெளி சிற்சொ ரூபத்தைத்
தேர்ந்துபார்த்துச் சிந்தைதெளிந் தாடாய் பாம்பே. 71

சொல்லும்புளி யம்பழத்தி னோடு போலவே
சுற்றத்திருந் தாலுமவர் தொந்தங் களற்று
நில்லுமன மேநீபர நின்ம லத்திலே
நின்றுணைதான் வெறும்பாழென் றாடாய் பாம்பே. 72

சேற்றில் திரிபிள்ளைப்பூச்சி சேற்றை நீக்கல்போல்
தேசத்தோ டொத்துவாழ்வார் செய்கை கண்டபின்
சாற்றுபர வெளிதனைச் சாரும் வழியே
தானடக்க வேணுமென் றாடாய் பாம்பே. 73

எண்ணெய்குந் தண்ணீர்க்குந் தொந்தமில்லா வாறுபோல்
எப்போதும் இப்புவியி லெய்த வேண்டும்
கண்ணுக்குக் கண்ணான வொளிகண்டு கொள்ளவே
கட்டறுத்து வாழ்ந்திடநின் றாடாய் பாம்பே. 74

கக்கிவிட்ட சோறுகறி கந்த மூலங்கள்
கண்களுக்கு சுத்தமான காட்சி போலவே 75

**சிக்கிக்கொண்ட சகத்தினைச் சீயென் றொறுத்துச்**
**சீர்பாதங் காணத்தெளிந் தாடாய் பாம்பே.**

**கோபமென்னும் மதயானை கொண்ட மதத்தை**
**கூர்கொள்யுத்தி அங்குசத்தாற் கொன்று விட்டோங்காண்**
**தீபமென்னுஞ் சிற்சொரூப செய்ய பொருளைச்**
**சேர்ந்துறவு கொண்டோமென் றாடாய் பாம்பே.** **76**

**நித்தியமென் னுமலையில் நின்று கொண்டோம்யாம்**
**நினைத்தபடியே முடித்து நின்மல மானோம்**
**சத்தியமாய் எங்கள் கடந்தானழி யாதே**
**சந்ததமும் வாழ்வோமென் றாடாய் பாம்பே.** **77**

**மனமென்னுங் குதிரையை வாகன மாக்கி**
**மதியென் னுங்கடிவாளம் வாயிற் பூட்டிச்**

**சினமென்னுஞ் சீனிமேற் சீரா யேறித்**
**தெளிவிடஞ் சவாரிவிட் டாடாய் பாம்பே.** **78**

**ஆசையென்னுஞ் செருப்பின்மேல் அடிமை வைத்தே**
**ஆங்கார முட்காட்டை அறவே மிதித்தே**
**காசையெனுந் துர்குணத்திற் கனலைக் கொளுத்திக்**
**காலாகாலங் கடந்தோமென் றாடாய் பாம்பே.** **79**

**காலனெனுங் கொடிதான கடும்ப கையைநாம்**
**கற்பமெனும் வாளினாலே கடிந்து விட்டோம்**
**தாலமதிற் பிறப்பினைத் தானும் கடந்தோம்**
**தற்பரங் கண்டோமென் றாடாய் பாம்பே.** **80**

**தேனில் வீழ்ந்த ஈயைப்போலச் சிந்தை குலைந்து**
**திகையாமற் சிற்சொரூப தெரிச னைகண்டு**
**வானிற் பறந் திடச்சூத வான்ம ணிதீர்ந்து**
**வாயிற்போட் டேகநீநின் றாடாய் பாம்பே.** **81**

**தூக்கியநற் பாதங்கண்டேன் சோதியும் கண்டேன்**
**சுத்தவெளிக் குள்ளேயொரு கூத்தனைக் கண்டேன்**
**தாக்கிய சிரசின்மேல் வைத்த பாதம்**
**சற்குருவின் பாதமென் றாடாய் பாம்பே.** **82**

**ஆலடிப் பொந்தினிலே வாழ்ந்த பாம்பே**
**அரசடிப் பொந்திலே புகுந்து கொண்டாய்** **83**

வாலடி தன்னிலே பார்த்துப் பார்த்து
வாங்கியே தூங்கிநின் றாடாய் பாம்பே.

நாலு தெருவினிலே நாலு கம்பம்
நடுத்தெரு வினிலேயோ பொன்னுக் கம்பம்
போலும் விளங்குபொன்னுக் கம்பத்தி னுக்கே
பூமாலை சூட்டிநின் றாடாய் பாம்பே. 84

ஆழிபெயர்ந் தாலுமேரு மட்டேயலையும்
அடியோடு பெயர்ந்தாலு மன்றிக் கால
ஊழிபெயர்ந்து தாலுமதி யுண்மைப் படிக்கே
உறுதி பெயராதுநின் றாடாய் பாம்பே. 85

வாயுவினை இரையாக வாங்கி உண்டே
வருடிக்கு நீரினை வாயுள் மடுத்தே
தேயுபிறை குளிர்காய்ந்து வெட்ட வெளியில்
திகைப்பறச் சேர்ந்துநின் றாடாய் பாம்பே. 86

மாசில்கதி வளையிலே மண்டல மிட்டே
மதியான பெரும்பட மடலை விரித்தே
ஆசில்பரா பரமான ஆதி பாதத்தை
அடுத்தடுத் தேதுதித் தாடாய் பாம்பே. 87

காடுமலை நதிபதி காசி முதலாய்க்
கால்கடுக்க ஓடிப்பலன் காணலாகுமோ
வீடுபெறும் வழிநிலை மேவிக்கொள்ளவே
வேதாந்தத் துறையினின் றாடாய் பாம்பே. 88

எள்ளளவும் அன்பகத்தில் இல்லா தார்முத்தி
எய்துவது தொல்லுலகில் இல்லை யெனவே
கள்ளப்புலன் கட்டறுத்துக் கால காலனைக்
கண்டு தொழுதேகளித் தாடாய் பாம்பே. 89

சூரியனைக் கண்டபனி தூர வோடல்போல்
சொந்தபந்தஞ் சிந்தபரி சுத்த தலத்தில்
ஆரியனைக் கண்டுதரி சித்தே யன்புடன்
அகலாமற் பற்றித் தொடர்ந் தாடாய் பாம்பே. 90

காந்தம்வலி யிரும்புபோல் காசில் மனத்தைக்
காட்சியான வஸ்துவுடன் கலக்கச்சேர்த்துச் 91

சாந்தமுடன் தோண்டியும் தாம்பும் போலச்
சலியாமற் தொடர்ந்து நின் றாடாய் பாம்பே.

உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி
உலகத்தின் மூடர்களுக் குண்டோ உணர்ச்சி
புளியிட்ட செம்பிற்குற்றம் போமோ அஞ்ஞானம்
போகாது மூடருக்கென் றாடாய் பாம்பே. 92

திரளான போரிலூசி தேடல் போல்முத்தி
சிக்காது தேசாசார தேசிகர் தம்மால்

அருளான மூலகுரு வையர் செயலால்
ஆனந்தங் கொண்டோமென் றாடாய் பாம்பே. 93

ஏட்டுச்சுரைக் காய்கறிக்கிங் கெய்தி டாதுபோல்
எண்டிசைதி ரிந்துங்கதி யெய்த லிலையே
நாட்டுக்கொரு கோயிற்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதங் காணார்களென் றாடாய் பாம்பே. 94

தன்னையறிந் தொழுகுவார் தன்னை மறைப்பார்
தன்னையறி யாதவரே தன்னைக் காட்டுவார்
பின்னையொரு கடவுளைப் பேண நினையார்
பேரொளியைப் பேணுவாரென் றாடாய் பாம்பே. 95

பாலிற்சுவை போலுமெங்கும் பாய்ந்த வொளியைப்
பற்றுப்பொன் பற்றவைத்த பான்மை போலே
காலிற்சுழு முனைநின்று கண்டு கொண்டு
களித்துக் களித்துநின் றாடாய் பாம்பே. 96

தேக்கெடுத்தே ஓடும்வானத் தேனை உண்டபின்
தேகபந்தம் கொண்டனமித் தேச வாழ்வினை
ஓக்காளமென் றெண்ணிமிகு மோகை யுடனீ
உள்ளந் தெளிந்துநின் றாடாய் பாம்பே. 97

சதுர்வேதம் ஆறுவகை சாஸ்தி ரம்பல
தந்திரம் புராணங்கலை சாற்று மாகமம்
விதம்வித மானவான வேறு நூல்களும்
வீணான நூல்களேயென் றாடாய் பாம்பே. 98

சமயபேதம் பலவான சாதி பேதங்கள்
சகத்தோர்க்கே யல்லாதுசற் சாதுக் களுக்கோ 99

**சிமயத்தி லேறினபேர் சித்த மாறுமோ**
**சித்தர்சித் தாந்தந்தேர்ந் தாடாய் பாம்பே.**

**பூசைசெய்த தாலேசுத்த போதம் வருமோ**
**பூமிவலஞ் செய்ததனாற் புண்ணிய முண்டோ**
**ஆசையற்ற காலத்திலே ஆதி வஸ்துவை**
**அடையலா மென்றுதுணிந் தாடாய் பாம்பே.** **100**

**மூலவேர றிந்துகொண்டால் மூன்று லகமும்**
**முன்பாகவே கண்டுநித்ய முத்தி சேரலாம்**
**சாலவேர றிந்ததாலே தான்பய னுண்டோ**
**சகத்தைப்பொய் யென்றுதெளிந் தாடாய் பாம்பே.** **101**

**சகத்தனாதி யென்றிடாது தான னாதியார்**
**சமைந்ததென் றுரைப்பார்கள் சத்தை யறியார்**
**மகத்துவ நிலைகற்ப வன்மை யல்லாது**
**மற்றும் வன்மை யில்லையேயென் றாடாய் பாம்பே.** **102**

**ஆயிரத்தெட்டி தழ்வீட்டி லமர்ந்த சித்தன்**
**அண்டமெல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்**
**காயமில்லா தோங்கிவளர் காரணச் சித்தன்**
**கண்ணுளொளி யாயினானென் றாடாய் பாம்பே.** **103**

**நாற்பத்துமுக் கோணநிலை நாப்ப ணதாக**
**நாடுமக்க ரச்சொரூப நாய கன்தனை**
**மேற்படுத்திக் கொண்டாலந்த மேலு லகெலாம்**
**மெல்லடிக்குத் தொண்டேயாமென் றாடாய் பாம்பே.** **104**

**கண்டவர்கள் ஒருக்காலும் விண்டி டார்களே**
**விண்டவர்கள் ஒருக்காலும் கண்டி டார்களே**
**கொண்டகோல முள்ளவர்கள் கோனிலை காணார்**
**கூத்தாடிக்கூத் தாடியேநீ யாடாய் பாம்பே.** **105**

**ஆறுகலைக் குச்சுக்குள்ளே ஆடுமொருவன்**
**அயல்வீடு போகுமுன்னே அரண்கோ லிக்கொள்ளு**
**வேறுபட்டால் அவன்றனை மீட்ட லரிதே**
**மேவிமுன்னே விடாதுகொண் டாடாய் பாம்பே.** **106**

**எண்ணரிய புண்ணியங்கள் எல்லாஞ் செய்துமென்**
**ஏகனடி நெஞ்சமதி லெண்ணா விடிலே** **107**

பண்ணரிய தவப்பயன் பத்தி யில்லையேற்
பாழ்படு மென்றுதுணிந் தாடாய் பாம்பே.

எவ்வுலகுஞ் சொந்தமதாய் எய்தும் பயனென்
எங்களாதி பதாம்புயம் எண்ணாக் காலையில்

இவ்வுலக வாழ்வுதானு மின்றே அறுமென்று
எண்ணிக்கர்த்தன் அடிநினைந் தாடாய் பாம்பே. 108

மணக்கோலங் கொண்டுமிக மனம கிழ்ந்துமே
மக்கள்மனை சுற்றத்தோடு மயங்கி நின்றாய்
பிணக்கோலங் கண்டுபின்னுந் துறவா விட்டால்
பிறப்புக்கே துணையாமென் றாடாய் பாம்பே. 109

பிறப்பையும் இறப்பையும் அறுத்து விடயான்
பெருமருந் தொன்று சொல்வேன் பெட்புடன் கேளாய்
திறப்புடன் மனப்பூட்டுஞ் சிந்தைக் கதவும்
திறந்திடும் வகையறிந் தாடாய் பாம்பே. 110

இறந்தவர் ஐவரவர் இட்ட மானவர்
எய்தும்அவ ரிறந்தாரென் றெல்ல வார்க்குஞ்சொல்
மறந்தவர் ஒருவரென்றே மண்ணினி லுள்ளோர்
வகையறிந் திடவேநின் றாடாய் பாம்பே. 111

### எண்சீர் விருத்தம்

ஆகார முதலிலே பாம்ப தாக
  ஆனந்த வயலிலே படம் விரித்தே
ஊகார முதலிலே யொத்தொ டுங்கி
  ஓடி வகாரத்தி னாவை நீட்டிச்
சீகாரங் கிடந்ததோர் மந்திரத் தைச்
  சித்தப்பி டாரனார் போதஞ் செய்ய
மாகாரப் பிறப்பையும் வேர றுத்து
  மாயபந்தங் கடந்தோமென் றாடாய் பாம்பே. 112

தந்திரஞ் சொல்லுவார் தம்மை யறிவார்
  தனிமந்தி ரஞ்சொல்லுவார் பொருளை யறியார்
மந்திரஞ் செபிப்பார்கள் வட்ட வீட்டினுள்
  மதிலினைச் சுற்றுவார் வாயில் காணார்.
அந்தரஞ் சென்றுமே வேர்பி டுங்கி
  அருளென்னும் ஞானத்தால் உண்டை சேர்த்தே 113

இந்த மருந்தினைத் தின்பீ ராகில்
 இனிப்பிறப் பில்லையென் றாடாய் பாம்பே.

களிமண்ணி னாலொரு கப்பல் சேர்த்தே
 கனமான பாய்மரங் காண நாட்டி
அளிபுலந் தன்னையே சுக்கா னாக்கி
 அறிவென்னு மாதாரச் சீனி தூக்கி
வெளியென்னும் வட்டத்தே யுள்ள டக்கி
 வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித்
தெளிவுறு ஞானியா ரோட்டுங் கப்பல்
 சீர்பாதஞ் சேர்ந்ததென் றாடாய் பாம்பே. 114

உள்ளத்துக் குள்ளே யுணர வேண்டும்
 உள்ளும் புறம்பையு மறிய வேண்டும்
மெள்ளக் கனலை யெழுப்ப வேண்டும்
 வீதிப் புனலிலே செலுத்த வேண்டும்
கள்ளப் புலனைக் கடிந்து விட்டுக்
 கண்ணுக்கு மூக்குமேற் காண நின்று
தெள்ளு பரஞ்சோதி தன்னைத் தேடிச்
 சீர்பாதம் கண்டோமென் றாடாய் பாம்பே. 115

ஓங்காரக் கம்பத்தின் உச்சி மேலே
 உள்ளும் புறம்பையு மறியவேண்டும்
ஆங்காரக் கோபத்தை யறுத்து விட்டே
 ஆனந்த வெள்ளத்தைத் தேக்கிக் கொண்டே
சாங்கால மில்லாமற் தாணு வோடே
 சட்டதிட்ட மாய்ச்சேர்ந்து சாந்த மாகத்
தூங்காமல் தூங்கியே சுக மடைந்து
 தொந்தோம் தொந்தோமென் றாடாய் பாம்பே. 116

விரகக் குடத்திலே பாம்ப டைப்போம்
 வேதாந்த வெளியிலே விட்டே யாட்டுவோம்
காரணங்க ளைப்பிடுங்கி இரைகொ டுப்போம்
 காலக் கடுவெளிநின் றாட்டு விப்போம்
துரகந் தனிலேறித் தொல்லுல கெங்கும்
 சுற்றிவலம் வந்து நித்ய சூட்சங் கண்டும்
உரையற்ற மந்திரஞ் சொல்லி மீட்டோம்
 ஒருநான்கும் பெற்றோமென் றாடாய் பாம்பே. 117

காயக் குடத்திலே நின்ற பாம்பைக்
 கருணைக் கடலிலே தியங்க விட்டு
நேயச் சுழுமுனை நீடு பாய்ச்சி
 நித்யமான வஸ்துவை நிலைக்க நாடி
மாயப் பெருவெளி தன்னி லேறி
 மாசற்ற பொருளினை வாய்க்கத் தேடி
ஆயத் துறைகடந் தப்பாற் பாழின்
 ஆனந்தஞ் சேர்ந்தோமென் றாடாய் பாம்பே. 118

மூலத் தலத்திலே நின்ற கருத்தை
 முற்றுஞ் சுழுமுனை தன்னி லூடே
மேலத் தலத்திலே விந்து வட்டம்
 வேலை வழியிலே மேவி வாழும்
பாலத் திருத்தாய்க் கருணை யதனால்
 பரகதி ஞானசொ ரூபமாகி
ஆலச் சயனத்து மாலுட னின்றே
 ஆனந்தஞ் சேர்ந்தோமென் றாடாய் பாம்பே. 119

புலனைந்து வீதியில் வையாளி பாயும்
 புரவி யெனுமனதை ஒருமைப் படுத்தி
மலபுந்த வுலகங் கடந்த தாலே
 மன்னுகுரு பாதத்தி னிலையை நாடித்
தலமைந்து பூலோகங் கடந்த தாலே
 சந்திர மண்டலமுங் கடந்த தாகும்
அலமந்து பூலோகக் கடலை நீக்கி
 ஆனந்த மாகிநின் றாடாய் பாம்பே. 120

குருவென்னும் ஆசானி னுருவெ டுத்துக்
 குறியான ஞானந்துப் பாக்கியாக்கி
அருளென்னும் அருளையே உண்டை யாக்கி
 ஆனந்த மாகவே அதைக்க டந்தே
மருளென்னு மாதர்மன நெறியைத் தொட்டு
 வாங்காம லெரிந்திட நெட்டை யிட்டு
பருவளைக் குள்ளேயே பட்ட தென்றே
 பற்றானைப் பற்றிநின் றாடாய் பாம்பே. 121

கன்னான் குகையிலே கான்ம றிப்போம்
 கருமா னுலையிலே தீயை மூட்டுவோம்
சொன்னார் தலையிலே பொன்னை யாக்குவோம்
 கருதி யருகல்வி ஒப்பஞ் செய்வோம் 122

மின்னார்கள் பாசத்தை விட்டே யெரிப்போம்
 மெய்ப்பொருட் குறிகண்டு விருப்பை யடைவோம்
பன்னாதே பன்னாதே சும்மா விருந்து
 பராபரஞ் சேர்ந்தோமென் றாடாய் பாம்பே.

சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்
 சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்
வீதிப் பிரிவினிலே விளையா டிடுவோம்
 வேண்டாத மனையினி லுறவு செய்வோம்
சோதித் துலாவியே தூங்கி விடுவோம்
 சுகமான பெண்ணையே சுகித்தி ருப்போம்
ஆதிப் பிர்மர்கள் ஐந்து பேரும்
 அறியார்கள் இதையென் றாடாய் பாம்பே. 123

நெட்டெழுத் ததனிலே நிலைபி டித்து
 நீங்கா வெழுத்திலே வாலை முறுக்கி
விட்டவ் வெழுத்திலே படம்வி ரித்து
 விண்ணின் வழியிலே மேவி யாடிப்
பட்ட வெழுத்தையும் பதிந்தி ருப்போம்
 பன்னிரண் டாமெழுத்தினிற் பன்னிக் கூடித்
திட்டமுட னெமக்கருள் தேசிக னார்தம்
 சீர்பாதஞ் சேர்ந்தோமென் றாடாய் பாம்பே. 124

ஊசித்துளைக் குடத்தினிற் பாம்பை யடைப்போம்
 உலகெலாஞ் சுற்றி யுலாவிவருவோம்
மாசுள்ள பிறவியை மறந்தி ருப்போம்
 மனமொத்த வெளியிலே விட்டே யாட்டுவோம்
மாசுப் புலன்களை இரைகொ டுப்போம்
 மனமுற்ற உச்சியிலேறி யாடுவோம்
பேசு மெழுத்தையும் விழுங்கி விடுவோம்
 பிறப்பிறப் பற்றோமென் றாடாய் பாம்பே. 125

ஆணிக் குடத்திலே பாம்ப டைப்போம்
 அக்கினிக் கோட்டைமே லேறிப் பார்ப்போம்
மாணிக்கத் தூணின்மேல் விட்டே யாட்டுவோம்
 மனம்வாக்குக் காயத்தை யிரைகொ டுப்போம்
நாணிக் கயிற்றையும் அறுத்து விடுவோம்
 நமனற்ற நாதன்பதம் நாடியே நிற்போம்
ஏணிப் படிவழிகண் டேறி விடுவோம்
 யாருமிதை அறியாரென் றாடாய் பாம்பே. 126

வடக்குங் கிழக்குமாக நூலை யிழைப்போம்
மற்றுஞ் சுழலிலே பாவு பூட்டுவோம்
நடக்கும் வழியினிலே யுண்டைசேர்ப்போம்
நடவா வழியினிலே புடவை நெய்வோம்
குடக்குக் கரையினிலே கோலைப் போடுவோம்
கொய்ததை எங்குமே விற்று விடுவோம்
அடக்கியே யேகத்துளே வைக்கவும் வல்லோம்
ஆதிபதங் கண்டோமென் றாடாய் பாம்பே. 127

சூத்திரக் குடத்திலே பாம்பை யடைப்போம்
சுழுமுனைக் குள்ளேயோ சுகித்தி ருப்போம்
பாத்திரங் கொண்டுமே பலியி ரப்போம்
பத்தெட்டு மூன்று படிகட ந்தோம்
ஊத்தைச் சடலத்தினைப் புடமே யிடுவோம்
உளவ னெமக்குநல் லுறுதி சொல்லப்
பார்த்துரை யிதன்மெய் பலிக்க வெண்ணிப்
பதனம் பதனமென் றாடாய் பாம்பே. 128

மவ்வக் குடத்திலே பாம்ப டைப்போம்
மணிவட்ட வாசியை வாரி யுண்டோம்
வவ்வக் குடங்களைத் தள்ளி விடுவோம்
வக்கிர சொர்ப்பனந் தாண்டி விடுவோம்
பவ்வ வெளியிலே விட்டே வாட்டுவோம்
பஞ்ச கருவியைப் பலிகொ டுப்போம்
சிவ்வுரு வாகியே நின்றோ மென்றே
சீர்பாதங் கண்டுதெளிந் தாடாய் பாம்பே. 129

## 4. இடைக்காட்டுச் சித்தர் பாடல்

இடைக்காட்டுச் சித்தர் சங்கப் புலவரான இடைக்காடரினும் வேறானவர். இவரது காலம் கி.பி. 15ம் நூற்றாண்டு என்று சொல்லப்படுகிறது. இவர் கொங்கணச் சித்தரின் சீடராவார். இவர் பிறந்த இடம் மதுரைக்குக் கிழக்கே உள்ள இடைக்காடா அல்லது தொண்டை மண்டலத்தில் உள்ள இடையன்மேடா என்பது ஆய்விற்குரியது.

ஒருசமயம் இவர் பொதிய மலைச்சாரலில் வழக்கம் போல் ஆடு மேய்த்துக் கொண்டிருக்கும் போது நவசித்தரில் ஒருவர் வந்து இவரிடம் பால் கேட்க, அவருக்குப் பால் முதலியன கொடுத்து உபசரிக்கவே அவரும் இவரது அன்பைக் கண்டு மகிழ்ந்து இவருக்கு ஞானத்தை உபதேசித்து விட்டுச் சென்றாராம். அதனால் ஏழை ஆடு மேய்க்கும் இடையன் மாபெரும் சித்தரானார்.

தமது சோதிட அறிவால் இன்னும் சிறிது காலத்தில் ஒரு கொடிய பஞ்சம் வரப்போகிறது என்பதை உணர்ந்தார். முன்னெச்சரிக்கையாகத் தமது ஆடுகளுக்கு எக்காலத்திலும் கிடைக்கக்கூடிய எருக்கிலை போன்றவற்றைத் தின்னக் கொடுத்துப் பழக்கினார். குறுவரகு என்னும் தானியத்தை மண்ணோடு சேர்த்துப் பிசைந்து சுவர்களை எழுப்பிக் குடிசை கட்டிக் கொண்டார். எருக்கிலை தின்பதால் உடலில் அரிப்பெடுத்து ஆடுகள் சுவரில் உராயும் போது உதிரும் வரகு தானியங்களை ஆட்டுப்பாலில் காய்ச்சி உண்டு

வரப்போகும் பஞ்சத்துக்குத் தம்மைத் தயார்படுத்திக் கொண்டார்.

வற்கடம் வந்தது. பஞ்சத்தால் உணவும் நீருமின்றி உயிர்கள் மாண்டன. நாடே ஜன சந்தடியில்லாமல் வெறிச்சோடிக் காட்சியளித்தது. ஆனால், இடைக்காடர் மட்டும் என்றும் போல் தம் ஆடுகளுடன் வாழ்ந்திருந்தார்.

நாட்டில் பஞ்சத்தால் உயிர்களெல்லாம் அழிந்து போக இடைக்காடரும் அவரது ஆடுகளும் மட்டும் பிழைத்திருப்பதைக் கண்ட நவக்கிரகங்கள் ஆச்சரியமுடன் அந்த இரகசியத்தை அறிந்துகொள்ள இவரிடம் வந்தன.

இடைக்காடருக்கோ ஆனந்தம். நவநாயகர்களும் என்குடிசையை நாடி வந்துள்ளீர்களே! உங்களை உபசரிக்க எம்மிடம் ஒன்றுமில்லை. ஆயினும் இந்த ஏழையின் குடிசையில் கிடைக்கும் வரகு ரொட்டியையும், ஆட்டுப் பாலையும் சாப்பிட்டுச் சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள் என்று உபசரித்தார்.

பஞ்ச காலத்திலும் பசிக்கு உணவு தரும் இடைக்காடரைக் கண்டு மகிழ்ந்த நவ கோள்களும் அந்த விருந்தினைப் புசித்தனர். எருக்கிலைச் சத்து ஆட்டுப்பால் அவர்களுக்கு மயக்கத்தை வரவழைக்கவே அவர்கள் மயக்கத்தால் உறங்கி விட்டனர்.

இந்த சமயத்தில் நவகோள்கள் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு உலகத்தைப் பஞ்சத்தால் வருத்தும் கிரகங்களை இடைக்காடர் அவைகள் எந்த அமைப்பில் இருந்தால் மழை பொழியுமோ அதற்குத் தக்கவாறு மாற்றிப் படுக்க வைத்து விட்டார்.

வானம் இருண்டது, மேகம் திரண்டது, மழை பொழிந்தது. வறட்சி நீங்கியது. கண் விழித்துப் பார்த்த நவகோள்களும் திடுக்கிட்டனர். நொடிப் பொழுதில் இடைக்காடர் செய்த அற்புதம் அவர்களுக்கு விளங்கிவிட்டது. நாட்டின் பஞ்சத்தை நீக்கிய சித்தரின் அறிவுத்திறனை மெச்சி அவருக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து விடைபெற்றனர்.

இந்த இடைக்காடரின் புகழ் பூவுலகம் மட்டுமன்றி வானுலகமும் எட்டியது. ஒரு சமயம் விஷ்ணுவை வழிபடுகிறவர்களுக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. விஷ்ணுவின் தசாவதாரங்களில் மிகவும் வணங்கத்தக்கவை எவை என்று எழவே சித்தரிடம் கேட்டனர்.

இடைக்காடரோ 'ஏழை இடையன் இளிச்சவாயன்' என்று கூறிவிட்டுச் சென்று விட்டார். தங்களுக்குப் பதில் சொல்லச் சங்கடப்பட்டு தன்னைத் தாழ்த்திக் கொண்டு சென்றுவிட்டாரோ என்று அவரது தன்னடகத்தை எண்ணிய அவர்கள் பின்னர் அவர் கூறியதை மறுபடியும் எண்ணிய போது அவர்கள் கேட்ட கேள்விக்கான விடையும் புலப்பட்டது.

ஏழை - சக்கரவர்த்தித் திருமகனாகப் பிறந்தும் ஏழையாகவே வாழ்ந்த இராமன் அவதாரம்.

இடையன் - கிருஷ்ணாவதாரம்
இளிச்சவாயன் - நரசிம்மர்

தேவர்கள் இடைக்காடரின் தன்னடக்கத்தையும் நுண்ணறிவையும் புகழ்ந்தவாறு தம்முலகு சென்றனர்.

இவைகள் இடைக்காடரைப் பற்றி வழங்கும் கதைகள். இவரது சித்தர் பாடல் தொகுப்பில் 30 கண்ணிகள் காணப்படுகின்றன. தாண்டவக் கோனார்

கூற்றாக இவர் பாடும் கோனார் பாட்டுக்கள் ஆழ்ந்த தத்துவத்தைப் புலப்படுத்துகின்றன.

முதலில் தாண்டவராயக் கோனார் கூற்றாக,

எல்லா உலகமும் எல்லா உயிர்களும்
எல்லாப் பொருள்களும் எண்ணரிய
வல்லாளன் ஆதிபரம சிவனது
சொல்லால் ஆகுமே கோனாரே

என்று கூறும் இடைக்காடர் அடுத்த நாராயணக் கோனார் கூற்றாக,

ஆயிரத்தெட்டு வட்டமுங் கண்டேன்
அந்த வட்டத்துள்ளே நின்றதுங் கண்டேன்
மாயிரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்
மந்த மனத்துறும் சந்தேகம் தீர்ந்தேன்

என்று தன் மனநிலையைக் கூறுகின்றார்.

தாந்தி மித்திமி தந்தக் கோனரே!
தீந்தி மித்திமி திந்தக் கோனாரே!
ஆனந்தக் கோணாரே! - அருள்
ஆனந்தக் கோணாரே

என்று இவர் ஆடும் ஆனந்தக்கூத்தும் மனக்கண்ணில் நிழலாடுகின்றது.

ஆதி பகவனையே அன்பாய் நினைப்பாயேல் சோதி பரகதிதான் சொந்தமது ஆகாதோ? என்று நம்மைக் கேட்கும் கேள்வியில் வள்ளுவரின் 'ஆதிபகவன் முதற்றே உலகு' குறளின் நிழலாட்டம் தெரிகின்றது.

எல்லாம் இருந்தாலும் ஈசர்
அருள் இல்லையேல் எதுவுமே
இல்லாத் தன்மை யாகும்

என்பதில் இறைவனின் எங்கும் நிறைந்த தன்மையும் உணர்த்துகின்றார்.

நெஞ்சோடு கிளத்தலில் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளை நீக்கும்படி அறிவுறுத்துகின்றார்.

பூமியெல்லாம் ஒரு குடைக்கீழ்ப்
பொருந்த அரசாளு தற்கு காமியம் வைத்தால்
உனக்கதி யுள்ளதோ கல்மனமே

பெண்ணாசை யைக் கொண்டு பேணித் திரிந்தக்கால்
விண்ணாசை வைக்க விதியில்லையே கல்மனமே

பொன்னிச்சைக் கொண்டு பூமிமுற்றும் திரிந்தால்
மண்ணிச்சை நோக்கம் வாய்க்குமோ கல்மனமே

என்று மூவாசைகளையும் துறக்கச் சொல்கின்றார்.

அறிவோடு கிளத்தலில்

கட்புலனுக்கு எவ்வளவும் காணாது இருந்தெங்கும்
உட்புலனாய் நின்ற ஒன்றை உய்த்தறி வாய் நீ புல்லறியே

என்று உண்மை இறையை உணர்ந்து கொள்ளச் சொல்கின்றார்.

சித்தத்தோடு கிளத்தலில் மாணிக்கவாசகரைப் போலவே தும்புவை விளித்துப் பாடுகின்றார்.

மூவாசை விட்டோம் என்றே தும்பீபற
அஞ்ஞானம் போயிற்று என்று தும்பீபற
எப்பொருளும் கனவென்றே தும்பீபற

தும்பியைப் பறக்க விட்ட இடைக்காடர் அடுத்த பாடலில் குயிலைப் பேசச் சொல்கின்றார்.

உலகம் ஒக்காளமாம் என்று ஓதுகுயிலே
எங்கள் உத்தனைக் காண்பரிதென்று
ஓது குயிலே

என்று கூறுகின்றார்.

ஆடுமயிலே நடமாடு மயிலே! எங்கள்
ஆதியணி சேடனைக் கண்டு ஆடு மயிலே

என்று மயிலை ஆடச் சொல்கின்றார். மயில் ஆடிற்றா?

அன்னத்தைக் காண்கின்றார்.

காற்றில் மரமுறியும் காட்சியைப் போல்
நல்லறிவு தூற்றிவிடில் அஞ்ஞானம் தூரப்
போகும் மடஅன்னமே

என்று கூறுகின்றார்.

குயில், மயில், அன்னத்தை கூவியழைத்து அவை திரும்பிப் பார்க்கவில்லைபோலும். தமது புல்லாங்குழலை எடுத்து வாசிக்கின்றார்.

தொல்லைப் பிறவி தொலைக்கார்க்கும்
முத்திதான் இல்லை என்று ஊதுகுழலே
பெட்டியிற் பாம்பெனப் பேய்மனம்
அடங்க ஒட்டியே ஊதுகுழலே

குழலோசைக்கு மயங்கி நின்ற ஆடுகளைப் பால் கறக்கிறார் இந்த இடைக்காடர்.

சாவாது இருந்திடப் பால்கற - சிரம்
தன்னில் இருந்திடும் பால்கற
வேவாது இருந்திடப் பால்கற - வெறு
வெட்ட வெளிக்குள்ளே பால்கற

இங்கு இவர் குறிப்பிடுவது குண்டலினி யோகத்தை. இறைவனை அடைய முக்தியை அடைய யோக மார்க்கமே சிறந்தது என்றும் அறிவுறுத்துகின்றார்.

பாடல்களைப் பக்குவமாகப் படித்தால் பல கருத்துக்கள் புலனாகும்.

## காப்பு

### கலிவிருத்தம்

**ஆதி யந்தமில் லாதவ னாதியைத்**
**தீது றும்பவந் தீப்படு பஞ்சுபோல்**
**மோ துறும்படி முப்பொறி யொத்துறக்**
**காத லாகக் கருத்திற் கருதுவாம்.**

## தாண்டவராயக்கோன் கூறுதல்

### கண்ணிகள்

**1**

எல்லா வுலகமு மெல்லா வுயிர்களும்
  எல்லாப் பொருள்களு மெண்ணரிய
வல்லாள னாதி பரம சிவனது
  சொல்லா லாகுமே கோனாரே.

வானியல் போல வயங்கும் பிரமமே
  சூனிய மென்றறிந் தேத்தாக்கால்
ஊனிய லாவிக் கொருகதி யில்லையென்
  றோர்ந்துகொள் ளுவீர்நீர் கோனாரே. 2

முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது
  முத்திக் குறுதிகள் செய்யாக்கால்
சித்தியும் பத்தியுஞ் சத்தியு முத்தியுஞ்
  சேரா வாகுமே கோனாரே. 3

தொல்லைப் பிறவியின் தொந்தமுற் றறவே
  சோம்பலற் றுத்தவஞ் செய்யாக்கால்

எல்லையில் கடவு ளெய்தும் பதமுமக்கு
  இல்லையென் றெண்ணுவீர் கோனாரே. 4

ஆரண மூலத்தை அன்புடனே பர
  மானந்தக் கோலத்தைப் பன்புடனே
பூரணமாகவே சிந்தித்து மெய்ஞ்ஞானப்
  போதத்தைச் சார்ந்திடு கோனாரே. 5

காலா காலங் கடந்திடு சோதியைக்
  கற்பனை கடந்த அற்புதத்தை
நூலாற் பெரியவர் சொன்னநுண் பொருளை
  நோக்கத்திற் காண்பது கோனாரே. 6

சொல்லருஞ் சகல நிட்கள மானதைச்
  சொல்லினாற் சொல்லாமல் கோனாரே
அல்லும் பகலு மகத்தி லிருந்திடிற்
  அந்தகன் கிட்டுமோ கோனாரே. 7

சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடுந்
  தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரியிடப்பாகன் தான்நெஞ்சிற்போற்றியே
  நற்கதி சேர்ந்திடும் கோனாரே. 8

மும்மலம் நீக்கிட முப்பொறிக் கிட்டாத
  முப்பாழ் கிடந்ததா மப்பாழைச்
செம்மறி யோட்டிய வேலை யமைத்துஞ்
  சிந்தையில் வைப்பீரே கோனாரே. 9

பஞ்ச விதமாய்ச் சஞ்சலம் பறக்கப்
பற்ற நின்றதைப் பற்றி யன்பாய்
நெஞ்சத் திருத்தி யிரவு பகலுமே
நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே. 10

## நாராயணக்கோன் கூறுதல்

### கொச்சகக் கலிப்பா

சீரார் சிவக்கொழுந்தைத் தெள்ளமுதைச் செந்தேனைப்
பாராதி வான்பொருளைப் பஞ்சவுரு வானவொன்றைப்
பேரான விண்ணொளியைப் பேரின்ப வாரிதியை
நேராக எந்நாளும் நெஞ்சிருத்தி வாழ்வேனே. 11

கண்ணுள் கருமணியைக் கற்பகத்தைக் காஞ்சனத்தைப்
பெண்ணுருவப் பாதியனைப் பேசரிய முப்பொருளை
விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்
தண்ணளியை யுள்ளில்வைத்துச் சாரூபஞ் சாருவனே. 12

### கண்ணிகள்

மனமென்னும் மாடடங்கில் தாண்ட வக்கோனே, முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா தாண்ட வக்கோனே. 13

சினமென்னும் பாம்பிறந்தாற் தாண்டவக்கோனே யாவுஞ்,
சித்தியென்றே நினையேடா தாண்ட வக்கோனே. 14

ஆசையெனும் பசுமாளின் தாண்டவக்கோனே - இந்த
அண்டமெல்லாங் கண்டறிவாய் தாண்ட வக்கோனே. 15

ஓசையுள்ள டங்குமுன்னந் தாண்ட வக்கோனே - மூல
ஓங்காரங் கண்டறிநீ தாண்ட வக்கோனே. 16

மூலப் பகுதியறத் தாண்ட வக்கோனே - உள்ளே
முளைத்தவேர் பிடுங்கேடா தாண்ட வக்கோனே. 17

சாலக் கடத்தியல்பு தாண்ட வக்கோனே - மலச்
சாலென்றே தேர்ந்தறிநீ தாண்ட வக்கோனே. 18

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்ட வக்கோனே - அதைப்
பற்றா தறுத்துவிடு தாண்ட வக்கோனே. 19

சற்றே பிரமத்திச்திசை தாண்ட வக்கோனே - உன்னுள்
சலியாமல் வைக்கவேண்டுந் தாண்ட வக்கோனே. 20

அவித்தவித்து முளையாதே தாண்ட வக்கோனே - குரு
அற்றவர் கதியடையார் தாண்ட வக்கோனே. 21

செவிதனிற்கே ளாதமறை தாண்ட வக்கோனே - குரு
செப்பில் வெளி யாமல்லவோ தாண்ட வக்கோனே. 22

## கட்டளைக் கலித்துறை

மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வான்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும்
வெண்கலமும்
காடுங் கரைகளுங் கல்லாம் பணியும் கரிபரியும்,
தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே. 23

## நேரிசை வெண்பா

போகம்போம் போக்கியம்போம் போசனம்போம் புன்மைபோம்,
மோகம்போம் மூர்க்கம்போம் மோசம்போம் - நரகம்போம்,
வேதமுத லாகமங்கண் மேலான தென்றுபல்கால்,
ஓதுபிர மத்துற்றக் கால். 24

## தாண்டவராயக்கோன் கூற்று

தாந்தி மித்திமி தந்தக்கோ னாரே
தீந்தி மித்திமி திந்தக்கோ னாரே
ஆனந்தக் கோனாரே - அருள்
ஆனந்தக் கோனாரே.

ஆயிரத்தெட்டு வட்டமுங் கண்டேன்
அந்தவட் டத்துள்ளே நின்றதுங் கண்டேன்
மாயிரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்
மந்த மனத்துறுஞ் சந்தேகந் தீர்த்தேன். (தாந்) 25

அந்தக் கரணமெனச் சொன்னா லாட்டையும்
அஞ்ஞான மென்னு மடர்ந்தவன் காட்டையும்
சந்தத் தவமென்னும் வாளினால் வெட்டினேன்
சாவா திருந்திடக் கோட்டையுங் கட்டினேன். (தாந்) 26

மெய்வாய்கண் மூக்குச் செவியென மைந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூறோசை யாங்காட்டை
எய்யாம லோட்டினேன் வாட்டினே னாட்டினேன்
ஏக வெளிக்குள்ளே யோக வெளிக்குள்ளே. (தாந்) 27

பற்றிரண் டும்மறப் பண்புற்றேன் நன்புற்றேன்
பாலையு முட்கொண்டேன் மேலையாங் கட்கொண்டேன்

சிற்றின்பம் நீக்கினேன் மற்றின்பம் நோக்கினேன்
சிற்பரஞ் சேர்ந்திட்டேன் தற்பரஞ் சார்ந்திட்டேன். (தாந்) 28

அண்ணாக்கை யூடே யடைத்தே யமுதுண்ணேன்
அந்தரத் தரத்தை யப்பொழு தேயெண்ணேன்
விண்ணாளும் மொழியை மேவிப்பூ சைபண்ணேன்
மெய்ஞ்ஞானம் ஒன்றன்றி வேறேயொன்றை நண்ணேன்.
(தாந்) 29

மண்ணாதி பூதங்க ளைந்தையுங் கண்டேனே
மாய விகாரங்கள் யாவையும் விண்டேனே
விண்ணாளி மொழியை மெய்யினுட் கொண்டேனே
மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே. (தாந்) 30

வாக்காதி யைந்தையும் வாகாய்த் தெரிந்தேனே
மாயைசம் பந்தங்க ளைந்தும் பிரிந்தேனே
நோக்கரும் யோகங்க ளைந்தும் புரிந்தேனே
நுவலும்மற் றைந்தியோக நோக்கம் பரிந்தேனே. (தாந்) 31

ஆறா தாரத்தெய் வங்களை நாடு
அவர்க்கும் மேலான ஆதியைத் தேடு
கூறான வட்டவா னந்தத்திற் கூடு
கோசமைந் துங்கண்டு குன்றேறி யாடு. (தாந்) 32

### நாராயணக்கோன் கூறுதல்

ஆதி பகவனையே பசுவே 33

அன்பாய் நினைப்பாயேல்
சோதி பரகதிதான் பசுவே
சொந்தம தாகாதோ.

எங்கும் நிறைப்பொருளைப் பசுவே
எண்ணிப் பணிவாயேல்
தங்கும் பரகதியில் பசுவே
சந்ததஞ் சாருவையே. 34

அல்லும் பகலும் நிதம் பசுவே
ஆதி பதந்தேடில்

புல்லு மோட்சநிலை பசுவே
பூரணங் காண்பாயே. 35

ஒன்றைப் பிடித்தோர்க்கே பசுவே
உண்மை வசப்படுமே
நின்ற நிலைதனிலே பசுவே
நேர்மை யறிவாயே. 36

எல்லா மிருந்தாலும் பசுவே
ஈசர் அருளிலையேல்
இல்லாத் தன்மையென்றே பசுவே
எண்ணிப் பணிவாயே. 37

தேவனு தவியின்றிப் பசுவே
தேர்ந்திடில் வேறொன்றில்லை
ஆவிக்கு மாவியதாம் பசுவே
அத்தன் திருவடியே. 38

தாயினும் அன்பனன்றோ பசுவே
சத்திக்குள் ளானவன்தான்
நேயம் உடையவர்பால் பசுவே
நீங்கா திருப்பானே. 39

முத்திக்கு வித்தானோன் பசுவே
மூலப் பொருளானோன்
சத்திக் குறவானோன் பசுவே
தன்னைத் துதிப்பாயே. 40

ஐயன் திருப்பாதம் பசுவே
அன்புற்றுநீ பணிந்தால்
வெய்ய வினைகளெல்லாம் பசுவே
விட்டொடுங் கண்டாயே. 41

சந்திர சேகரன்றாள் பசுவே
தாழ்ந்து பணிவாயேல்
இந்திரன் மான்முதலோர் பசுவே
ஏவல் புரிவாரே. 42

கட்புலன் காணவொண்ணாப் பசுவே
கர்த்தன் அடியிணையை
உட்புலன் கொண்டேத்திப் பசுவே
உன்னத மெய்வாயே. 43

சுட்டியுங் காணவொண்ணாப் பசுவே
சூனிய மானவஸ்தை
ஒட்டிப் பிடிப்பாயேல் பசுவே
உன்னை நிகர்ப்பவர்யார். 44

தன்மனந் தன்னாலே பசுவே
தாணுவைச் சாராதார்
வன்மர மொப்பாகப் பசுவே
வையத் துறைவாரே. 45

சொல்லென்னு நற்பொருளாம் பசுவே
சோதியைப் போற்றாக்கால்
இல்லென்று முத்திநிலை பசுவே
எப்பொருளுஞ் சொல்லுமே. 46

## பலரொடு கிளத்தல்

## குறள் வெண்செந்துறை

கண்ணுள் மணியைக் கருதிய பேரொளியை
விண்ணின் மணியை விளக்கொளியைப் போற்றீரே. 47

மனம் வாக்கு காயமெனும் வாய்த்தபொறிக் கெட்டாத
தினகரனை நெஞ்சமதிற் சேவித்துப் போற்றீரே. 48

காலமூன் றுடங்கடந்த கதிரொளியை யுள்ளத்தாற்
சாலமின் றிப்பற்றிச் சலிப்பறவே போற்றீரே. 49

பாலிற் சுவைபோலும் பழத்தின் மதுப்போலும்
நூலிற் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே. 50

மூவர் முதலை முக்கனியைச் சர்க்கரையைத்
தேவர் பொருளைத் தெள்ளமுதைப் போற்றீரே. 51

தூய மறைப்பொருளைச் சுகவா ரிதியமிர்தை
நேய முடனாளு நிலைபெறவே போற்றீரே. 52

சராசரத் தைத்தந்த தனிவான மூலமென்னும்
பராபரத் தைப்பற்றிப் பவமறவே போற்றீரே. 53

மண் ணாதி பூதமுதல் வகுத்ததொரு வான்பொருளைக்
கண்ணாரக் காணக் கருத்திசைந்து போற்றீரே. 54

பொய்ப்பொருளை விட்டுப் புலமறிய வொண்ணாத
மெய்ப்பொருளை நாளும் விருப்புற்றுப் போற்றீரே. 55

எள்ளிற்றை லம்போல எங்கும் நிறைபொருளை
உள்ளிற் றுதித்தே யுணர்வடைந்து போற்றீரே. 56

## நெஞ்சொடு கிளத்தல்

பூமியெல்லா மோர்குடைக்கீழ் பொருந்தவர சாளுதற்குக்
காமியம்வைத் தாலுனக்குக் கதியுளதோ கன்மனமே. 57

பெண்ணாசை யைக்கொண்டு பேணித் திரிந்தக்கால்
விண்ணாசை வைக்க விதியிலையே கன்மனமே. 58

மேயும் பொறிகடமை மேலிடவொட் டார்க்குவினை
தேயுமென்றே நல்வழியிற் செல்லுநீ கன்மனமே. 59

பொன்னிச்சை கொண்டு பூமிமுற் றுந்திரிந்தால்
மன்னிச்சை நோக்கும் வாய்க்குமோ கன்மனமே. 60

பொய்யான கல்விகற்றுப் பொருள்மயக்கங் கொள்ளாமல்,
மெய்யான ஞானக்கல்வி விரும்புவாய் கன்மனமே. 61

**பேய்க்குரங்கு போலப் பேருலகி லிச்சைவைத்து,**
**நாய்நரிகள் போலலைந்தேன் நன்மையுண்டோ கன்மனமே.** 62

**இரும்பையிழுக் குங்காந்தத் தியற்கைபோற் பலபொருளை,**
**விரும்பினதால் அவைநிலையோ விளம்புவாய் கன்மனமே.** 63

**கற்பநிலை யால்லவோ கற்பகா லங்கடத்தல்**
**சொற்பநிலை மற்றநிலை சூட்சங்காண கன்மனமே.** 64

**தேக மிழப்பதற்குச் செபஞ்செய்தென் தவஞ்செய்தென்,**
**யோகமட்டுஞ் செய்தாலென் யோசிப்பாய் கன்மனமே.** 65

**சாகா திருப்பதற்குத் தான்கற்ற கல்வியன்றோ**
**வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ கன்மனமே.** 66

### அறிவொடு கிளத்தல்

**எல்லாப் பொருள்களையு மெண்ணப் படிபடைத்த**
**வல்லாளன் றன்னை வகுத்தறிநீ புல்லறிவே.** 67

**கட்புலனுக் கெவ்வளவுங் காணா திருந்தெங்கும்**
**உட்புலனாய் நின்றவொன்றை உய்த்தறிநீ புல்லறிவே.** 68

**விழித்திருக்கும் வேளையிலே விரைந்துறக்க முண்டாகும்,**
**செழித்திலங்கும் ஆன்மாவைத் தேர்ந்ததறிநீ புல்லறிவே.** 69

**மெய்யிலொரு மெய்யாகி மேலாகிக் காலாகிப்**
**பொய்யிலொரு பொய்யாகும் புலமறிநீ புல்லறிவே.** 70

**ஆத்துமத்தின் கூறான அவயவப்பேய் உன்னுடனே**
**கூத்துப் புரிகின்ற கோளறிவாய் புல்லறிவே.** 71

**இருட்டறைக்கும் நல்விளக்காய் இருக்குமுன்றன்**
**வல்லமையை,**
**அருட்டுறையில் நிறுத்திவிளக் காகுநீ புல்லறிவே.** 72

**நல்லவழியிற் சென்று நம்பதவி யெய்தாமல்**
**கொல்வழியிற் சென்று குறுகுவதேன் புல்லறிவே.** 73

**கைவிளக்குக் கொண்டு கடலில்வீழ் வார்போல**
**மெய்விளக்குன் னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே.** 74

வாசிக்கு மேலான வான்கதியுன் னுள்ளிருக்க
யோசிக்கு மேற்கதிதான் உனக்கரிதோ புல்லறிவே. 75

அன்னையைப் போலெவ்வுயிரும் அன்புடனே காத்துவரும்
முன்னவனைக் கண்டு முத்தியடை புல்லறிவே. 76

## சித்தத்தொடு கிளத்தல்

### கண்ணிகள்

அஞ்ஞானம் போயிற்றென்று தும்பீ பற - பர
மானந்தங் கண்டோமென்று தும்பீ பற
மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற - மலை
மேலேறிக் கொண்டோமென்று தும்பீபற. 77

அல்லல்வலை இல்லையென்றே தும்பீபற - நிறை
ஆணவங்க ளற்றோமென்றே தும்பீபற
தொல்லைவினை நீங்கிற்றென்றே தும்பீபற - பரஞ்
சோதியைக் கண்டோமெனத் தும்பீபற. 78

ஐம்பொறி அடங்கினவே தும்பீபற - நிறை
அருவே பொருளாமெனத் தும்பீபற
செம்பொருள்கள் வாய்த்தனவே தும்பீபற - ஒரு
தெய்வீகங் கண்டோமென்றே தும்பீபற. 79

மூவாசை விட்டோமென்றே தும்பீபற - பர
முத்திநிலை சித்தியென்றே தும்பீபற
தேவாசை வைத்தோமென்று தும்பீபற - இந்த
செகத்தை யொழித்தோமென்று தும்பீபற. 80

பாழ்வெளியை நோக்கியே தும்பீபற - மாயைப்
பற்றற்றோ மென்றேநீ தும்பீபற
வாழ்விட மென்றெய்தோந் தும்பீபற - நிறை
வள்ளல்நிலை சார்ந்தோமே தும்பீபற. 81

எப்பொருளுங் கனவென்றே தும்பீபற - உல
கெல்லாம் அழியுமென்றே தும்பீபற
அப்பிலெழுத் துடலென்றே தும்பீபற - என்றும்
அழிவில்லாதது ஆதியென்று தும்பீபற. 82

## குயிலொடு கிளத்தல்

கரணங்கள் ஒருநான்கு மடங்கினவே - கெட்ட
காமமுதல் ஓராறும் ஒடுங்கினவே.

சரணங்கள் ஒருநான்குங் கண்டனமென்றே - நிறை
சந்தோஷ மாகவே கூவுகுயிலே. 83

உலகமோக் காளமாமென் றோதுகுயிலே - எங்கள்
உத்தமனைக் காண்பரிதென் றோதுகுயிலே
பலமதம் பொய்ம்மை யேயென் றோதுகுயிலே - எழு
பவமகன்யே றிட்டோம் நாமென் றோதுகுயிலே. 84

சாதனங்கள் செய்தவர்கள் சாவார்குயிலே - எல்லாத்
தத்துவங்கள் தேர்ந்தவர்கள் வேகார்குயிலே
மாதவங்கள் போலும் பலன் வாயாக் குயிலே - மூல
மந்திரங்கள் தான்மகிமை வாய்க்குங்குயிலே. 85

எட்டிரண்ட றிந்தோர்க்கிட ரில்லைகுயிலே - மனம்
ஏகாம னிற்கிற்கதி யெய்துங்குயிலே
நட்டணையைச் சார்ந்தறிந்து கொள்ளுகுயிலே - ஆதி
நாயகனை நினைவில்வைத் தோதுகுயிலே. 86

## மயிலொடு கிளத்தல்

ஆடுமயி லேநட மாடுமயிலே - எங்கள்
ஆதியணி சேடனைக்கண் டாடுமயிலே
கூடுபோகு முன்னங்கதி கொள்ளுமயிலே - என்றுங்
குறையாமல் மோனநெறி கொள்ளுமயிலே. 87

இல்லறமே யல்லலாமென் றாடுமயிலே பக்தி
இல்லவர்க்கு முத்திசித்தி இல்லைமயிலே
நல்லறமே துறவறங் காணுமயிலே - சுத்த
நாதாந்த வெட்டவெளி நாடுமயிலே. 88

கற்றூணைப் போல்மனதைக் காட்டுமயிலே - வரும்
காலனையுந் தூரத்தி லோட்டுமயிலே
பற்றூ டுருவவே பாயுமயிலே அகப்
பற்றுச்சறு மிறில்லாமற் பண்ணுமயிலே. 89

## அன்னத்தொடு கிளத்தல்

சிறுதவளை தான்கலக்கிற் சித்திரத்தி னிழன்மறையும்
மறுவாயைத் தான்கலக்கின் மதிமயங்கு மடவனமே. 90

காற்றின் மரமுறியுங் காட்சியைப்போல் நல்லறிவு
தூற்றிவிடி லஞ்ஞானந் தூரப்போம் மடவனமே. 91

அக்கினியால் பஞ்சுபொதி அழிந்திட்ட வாறேபோல்
பக்குநல் லறிவாலே பாவம் போம் மடவனமே. 92

குளவிபுழு வைக்கொணர்ந்து கூட்டிலுருப் படுத்தல்போல்
வளமுடைய வன்மனத்தை வசப்படுத்து மடவனமே. 93

அப்புடனே யுப்புச்சேர்ந் துளவுசரி யானதுபோல்
ஒப்புறவே பிரமமுட னொன்றிநில்லு மடவனமே. 94

காய்ந்த இரும்புநிறங் காட்டுதல்போல் ஆத்துமத்தை
வாய்ந்திலங்கச் செய்து வளம்பெறுநீ மடவனமே. 95

## புல்லாங்குழலூதல்

### கண்ணிகள்

தொல்லைப்பிறவி தொலைக்கார்க்கு முத்திதான்
இல்லையென் றூதுகுழல் - கோனே
இல்லையென் றூதுகுழல். 96

இந்திர போகங்கள் எய்தினுந் தொல்லையென்
அந்தமா யூதுகுழல் - கோனே
அந்தமா யூதுகுழல். 97

மோன நிலையினில் முத்தியுண் டாமென்றே
கானமா யூதுகுழல் - கோனே
கானமா யூதுகுழல். 98

நாற்போற் பொறிகளை நாநாவிதம் விட்டோர்
பேயரென் றூதுகுழல் - கோனே
பேயரென் றூதுகுழல். 99

ஓடித் திரிவோர்க் குணர்வுகிட் டும்படி
சாடியே யூதுகுழல் - கோனே
சாடியே யூதுகுழல். 100

ஆட்டுக்கூட் டங்களை அண்டும் புலிகளை
ஒட்டியே யூதுகுழல் - கோனே
ஒட்டியே யூதுகுழல். 101

மட்டிக் குணமுள்ள மாரீச நாய்களை
கட்டிவைத் தூதுகுழல் - கோனே
கட்டிவைத் தூதுகுழல். 102

கட்டாத நாயெல்லாம் காவலுக் கெப்போதும்
கிட்டாவென் றூதுகுழல் - கோனே
கிட்டாவென் றூதுகுழல். 103

பெட்டியிற் பாம்பெனப் பேய்மன மடங்க
ஒட்டியே யூதுகுழல் - கோனே
ஒட்டியே யூதுகுழல். 104

எனதென்றும் யானென்றும் இல்லா திருக்கவே
தனதாக வூதுகுழல் - கோனே
தனதாக வூதுகுழல். 105

அற்றவிடமொன்றே யற்றதோ டுற்றதைக்
கற்றதென் றூதுகுழல் - கோனே
கற்றதென் றூதுகுழல். 106

## பால்கறத்தல்

சாவா திருந்திடப் பால்கற - சிரம்
தன்னி லிருந்திடும் பால் கற
வேவா திருந்திடப் பால்கற - வெறும்
வெட்ட வெளிக்குள்ளே பால்கற. 107

தோயா திருந்திடும் பால்கற - முனைத்
தொல்லை வினையறப் பால்கற
வாயா லுமிழ்ந்திடும் பால்கற - வெறும்
வயிறார வுண்டிடப் பால்கற. 108

நாறா திருந்திடும் பால்கற - நெடு
  நாளு மிருந்திடப் பால்கற

மாறா தொழுகிடும் பால்கற - தலை
மண்டையில் வளரும் பால்கற. 109

உலகம் வெறுத்திடும் பால்கற - மிக்க
ஒக்காள மாகிய பால்கற
கலசத் தினுள்விழப் பால்கற - நிறை
கண்டத்தி னுள்விழப் பால்கற. 110

ஏப்பம் விடாமலே பாற்கற - வரும்
ஏமன் விலக்கவே பால்கற.
தீப்பொறி யோய்ந்திடப்பால்கற - பர
சிவத்துடன் சாரவே பால்கற. 111

அண்ணாவின் மேல்வரும் பால்கற - பேர்
அண்டத்தி லூறிடும் பால்கற
விண்ணாட்டி லில்லாத பால்கற - தொல்லை
வேதனை கெடவே பால்கற. 112

### கிடை கட்டுதல்

இருவினையான மாடுகளை ஏகவிடு கோனே - உன்
அடங்குமன மாடொன்றை யடக்கிவிடு கோனே. 113

சாற்றரிய நைட்டிகரே தற்பரத்தைச் சார்வார் - நாளும்
தவமவமாக் கழிப்பவரே சனனமதில் வருவார். 114

அகங்கார மாடுகண்மூன் றகற்றிவிடு கோனே - நாளும்
அவத்தையெனும் மாடதைநீ யடக்கிவிடு கோனே. 115

ஒருமலத்தன் எனுமாட்டை ஒதுக்கிக்கட்டுக் கோனே - உடன்,
உறையுமிரு மலந்தனையு மோட்டிக் கட்டுகோனே. 116

மும்மலத்தன் எனுமாட்டை முறுக்கிக்கட்டுகோனே - மிக,
முக்கால நேர்மையெல்லா முன்பறிவாய் கோனே. 117

இந்திரியத் திரயங்களை இறக்கிவிடு கோனே - என்றும்
இல்லையென்றே மரணங்குழ லெடுத்தூது கோனே. 118

உபாதியெனும் மூன்றாட்டை ஓட்டிவிடு கோனே - உனக்கு
உள்ளிருக்குங் கள்ளமெல்லாம் ஓடிப்போங் கோனே. 119

முக்காய மாடுகளை முன்னங்கட்டு கோனே - இனி
மோசமில்லை நாசமில்லை முத்தியுண்டாங் கோனே. 120

கன்மபல மாடுகளைக் கடைக்கட்டு கோனே - மற்றக்
கன்மத்திர யப்பசுவைக் கடையிற்கட்டு கோனே. 121

காரணக்கோ மூன்றனையுங் கால்பிணிப்பாய் கோனே - நல்ல
கைவசமாஞ் சாதனங்கள் கடைப்பிடிப்பாய் கோனே. 122

## வேறு

பிரமாந்த ரத்திற் பேரொளி காணெங்கள் கோனே - வாய்
பேசா திருந்து பெருநிட்டை சாரெங்கள் கோனே. 123

சிரமதிற் கமலச் சேவை தெரிந்தெங்கள் கோனே - முத்தி
சித்திக்குந் தந்திரஞ் சித்தத் தறியெங்கள் கோனே. 124

விண்ணாடி வத்துவை மெய்யறிவிற் காணுங் கோனே - என்றும்
மெய்யே மெய்யிற்கொண்டு மெய்யறிவிற் செல்லுங் கோனே. 125

கண்ணாடி யினுள்ளே கண்பார்த் துக்கொள்ளுங் கோனே - ஞானக்
கண்ணன்றிக்கண்ணாடி காணவொண்ணா தெங்கள் கோனே. 126

சூனியமானதைச் சுட்டுவா எங்குண்டுகோனே - புத்தி
சூக்குமமே யதைச்சுட்டு மென்றெண்ணங் கொள் கோனே. 127

நித்திய மானது நேர்படி லேநிலை கோனே - என்றும்
நிற்குமென் றேகண்டு நிச்சயங் காணெங்கள் கோனே. 128

சத்தியும் பரமுந் தன்னுட் கலந்தே கோனே - நிட்டை
சாதிக்கி லிரண்டுந் தன்னுள்ளே காணலாங் கோனே. 129

மூகைபோலிருந்து மோனத்தைச் சாதியெங்கோனே - பர
மூலநிலைகண்டு முட்டுப் பிறப்பறு கோனே. 130

## 5. அகப்பேய்ச் சித்தர் பாடல்

மனமாகிய பேயை வென்ற சித்தர் ஆதலின் இவர் அகப்பேய் சித்தர் என்றழைக்கப்படுகின்றார். அகம் + பேய் + சித்தர். இந்த அகப்பேய் சித்தர் பெயர் காலத்தால் சிதைவுற்று 'அகப்பைச் சித்தர்' எனவும் கூறுவதுண்டு.

நாயனார் குலத்தைச் சேர்ந்த இவர் இளமையில் துணி வணிகம் செய்து வாழ்க்கை நடத்தினார். வணிகத்தின் பொருட்டுத் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் பலதரப்பட்ட மனிதர்களைச் சந்திக்கின்றார். மேலுக்கு மகிழ்ச்சியான வாழ்க்கையை வாழ்வதாகச் சொல்லிக்கொள்ளும் அவர்கள் உண்மையில் மனதிற்குள் அழுதுகொண்டுதான் இருக்கிறார்கள்.

அவர்களின் துன்பத்திற்குக் காரணம் என்ன என்று யோசிக்க ஆரம்பித்தார். தன்னலம் கருதாது பிறர் நலன் குறித்துக் கவலைப்படும் அந்த நல்லவருக்கு ஒரு போதி மரத்தடியில் (ஜோதி மரத்தடியில்) ஞானம் பிறந்தது. ஆசையே துன்பத்திற்குக் காரணம். ஆசையை வென்றால் இன்பமயமான நித்திய வாழ்வு வாழலாம் என்று கண்டுகொண்டார். மனமாகிய அகப்பேயை அடக்கி வெற்றி கண்டார்க்கு சிவமாகிய இறைவன் காட்சி தருவார். துன்பமில்லா இன்பநிலையை அடையலாம் என்ற உண்மையைத் தம் பாடல்களில் பாடி வைத்தார்.

இவர் பாடல்கள் அத்தனையும் தத்துவ முத்துக்கள். பாடல்களையெல்லாம் படிக்குந்தோறும் அலை பாய்ந்து கொண்டிருக்கும் மனது அடக்கம் காணுகிறது.

ஆசைக்கு இல்லை, இல்லை ஆசையை அடக்குவதற்கு ஒரிரண்டு பாடல்களை இங்கு ஆய்வு செய்தோமானால் அவர் இறைவனைக் காணுவதற்குச் சொன்ன தத்துவங்களை முழுவதுமாக உணர்ந்து கொள்ளலாம். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமல்லவா?

இறைவனின் தாளை அடைவதற்கு அவர் கூறும் வழியைக் கேளுங்கள்.

"நஞ்சுண்ண வேண்டாவே - அகப்பேய்<br>
நாயகன் தாள் பெறவே<br>
நெஞ்சு மலையாதே - அகப்பேய்<br>
நீயொன்றுஞ் சொல்லாதே"

அவனுக்கு இறைவனின் தாளை அடைய வேண்டும் என்பது ஆசை. அதற்காக என்ன செய்ய வேண்டும்? திருக்குறளைப் படித்துப் பார் என்கின்றனர் அறிஞர்கள்.

நான் கேட்டது இறைவனை அடைய வழி. நீங்கள் சொல்வதோ இவ்வுலக வாழ்க்கை வாழ்வதற்கான நெறி. வாழ்பவருக்குச் சொல்லவேண்டிய வழியை வாழ்ந்து முடித்து விட்டவனிடம் சொல்கிறீரே.

ஐயப்பாடு நியாயம்தான். நீர் வாழ்ந்து முடித்து விட்டீரா? சரி அப்படியே இருக்கட்டும். நீர் வாழ்ந்து முடித்தவரென்றால் குறளின் நெறிகளிலேயே நீர் தேடிய வினாவுக்கு விடை கிடைத்திருக்குமே.

புரியவில்லை,,,,,,

இறைவனின் தாளை அடையும் மார்க்கங்களை வள்ளுவரே கடவுள் வாழ்த்தில் தெரிவித்திருக்கின்றாரே.

கடவுள் வாழ்த்தில் இறைவனை அடையும் மார்க்கமா? திருக்குறள் அடிகளை அசை போட்டுப் பார்க்கின்றான்.

"கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் எனின்"

தூய அறிவு வடிவான கடவுளின் திருவடிகளைத் தொழாதவன் கற்ற கல்வியினால் ஏதும் பயனில்லை என்கிறார்.

இறைவனின் திருவடிகளைத் தானே தொழச் சொல்கிறது. அதனை அடையும் மார்க்கம் எதனையும் கூறவில்லையே. அடுத்த குறளுக்குச் செல்கின்றான்.

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

சரி, ஏற்றுக்கொள்வோம். அந்த மாணடி சேர வழி என்ன?

விருப்பும் வெறுப்பும் இல்லாத ஆண்டவன் திருவடிகளைச் சேர்ந்தவர்க்குத் துன்பம் என்பது இல்லை.

சரி, தனக்கு ஒப்பு இல்லாத கடவுளின் திருவடிகளைப் பற்றியவர் தவிர மற்றையோரால் பாவக் கடலைக்கடக்க இயலாது.

சரி, எண்குணத்தானின் திருவடிகளை வணங்காதவர்களின் தலை செயலிழந்த ஐம்பொறிகளைப் போலப் பயனற்றதாகும்.

சரி, இறைவனின் திருவடிகளைச் சேர்ந்தவர்களால் மட்டுமே பிறவியாகிய பெருங்கடலைக் கடக்க முடியும். மற்றவர்களால் பிறவிக்கடலைக் கடக்க முடியாது.

எல்லாக் கருத்துக்களும் சரி. அந்த இறைவனின் திருவடியை அடையும் மார்க்கம்தான் என்ன?

இறைவனின் திருவடிகளின் பெருமைகளை இவ்வளவு நுண்மையாக உணர்த்திய திருவள்ளுவர் அத்திருவடிகளை அடையும் மார்க்கத்தைச் சொல்லாமலா இருந்திருப்பார்.

“பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்”

ஐம்பொறிகளால் விளையும் ஆசைகளை ஒழித்துக் கடவுளின் உண்மை நெறியில் நின்றவர் நிலையான பெருவாழ்வு வாழ்வார்கள். அதாவது நித்தியமான பெருவாழ்வாகிய இறைவனின் தாளை அடைவார்கள்.

திருக்குறளின் கடவுள் வாழ்த்து ஒட்டுமொத்த அதிகார கருத்துக்களையும் இரண்டே வரிகளில் அடக்கிவிடுகின்றார் நாயனார். அதாவது அகப்பேய் சித்தர்

நஞ்சுண்ண வேண்டாவே - அகப்பேய்
நாயகன்றாள் பெறவே
நெஞ்சு மலையாதே - அகப்பேய்
நீயொன்றும் சொல்லாதே”

இறைவனின் தாளை அடையும் மார்க்கத்தைக் கேட்ட அந்த இளைஞனுக்கு மனம் தன் மனம் போனபடியெல்லாம் யோசனை கூறுகின்றது.

“வானுலக வாழ்க்கையினை நாடி இன்ப வாழ்க்கையை பெண்கள் இன்பவாழ்க்கையை இழந்தவர்கள் கோடி” என்று மனம் பெண்ணாசையைத் தூண்டுகிறது. பெண்ணாசையால் முக்தியை அடைய முடியுமோ? இல்லை என்று மறுக்கிறது இன்னொரு மனம்.

மதுவை மாந்திக் களிப்பதால் இறைவனின் திருவடிகள் காட்சி தருமோ? அந்த காட்சிதான் இறைமையோ?

வெளி மனத்தின் விளைவுக்கு உன் மனம் இல்லை என்ற பதிலைத் தருகிறது.

மது, மாது, சூது இவைகள் இறைவனின் தாளை உணர்த்தாவிடில் வேறு எதுதான் இறைவனின் தாளை அடையும் மார்க்கம். சிந்தித்த உள் மனத்தை வெளி மனம் அடக்குகிறது. மனமே, நான் சொல்வதைக் கேள். மதுவும், மாதுவும், சூதுவும்தான் இறைவனை அடையும் மார்க்கங்கள்.

மனமே (வெளி மனமே) நீ அலையாதே. இவையெல்லாம் நீ அனுபவிக்கத் துடிக்கும் ஆசைகள். இந்த ஆசைகளெல்லாம் உண்மையான இன்பத்தை; இறைமையை உனக்கு உணர்த்த மாட்டா. ஆகவே என்னைக் குழப்பாமல் உண்மையாகவே இறைவனின் தாளைஅடையும் மார்க்கத்தைச் சொல் என்று மற்றுமொரு வழியை கேட்க,

அப்படியானால் நஞ்சுண்டு இறந்து விடு, நீ நேரே இறைவனைக் காணலாம்.

என்ன உளறுகிறாய்? இறைவன் அன்பு வடிவானவர். உயிரைப் பலி கொடுத்துதான் அவரை அடைய முடியுமென்பது வீண் பிதற்றல். மரணம் என்பது இறைவன் வகுத்தது. அது தானாகத்தான் வரவேண்டுமே ஒழிய நாமாகத் தேடிச் செல்லக்கூடாது.

"சரி வேண்டாம்; இப்படி செய்யலாமா? என்று இன்னுமொரு மார்க்கத்தை உபதேசிக்க வருகிறது வெளிமனம்.

என்னவென்று கேட்டு உபயோகமற்ற வெளிமனதின் ஆலோசனைகளைக் கேட்க உள்மனம் தயாராக இல்லை. "அகப்பேயே, இனி நீயொன்றும் சொல்லாதே. உண்மை ஞானமார்க்கத்தை நானே உணர்ந்து கொள்கிறேன்" என்று மனப்போராட்டத்திற்கு முடிவு கட்டுகிறான் அதே இளைஞன்.

இறைவனின் தாளை அடையும் மார்க்கத்தை அவனுக்கு உள் மனம் உணர்த்தியதா?

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார்"

இக்குறளுக்கு விளக்கமாக 56வது கண்ணியில்,

“பிறவிதீர வென்றால் - அகப்பேய்
பேதகம் பண்ணாதே
துறவியானவர்கள் - அகப்பேய்
சும்மாவிருப்பார்கள்”

என்று பிறவி தீரும் மார்க்கத்தை உபதேசிக்கிறார் அகப்பேய் சித்தர்.

இறைவனை அடையச் சும்மா இருந்துவிட்டால் போதுமா? வேறு ஏதேனும் செய்ய வேண்டுமா என்ற உள்மனக் கேள்விக்கு அகப்பேயே,

“தன்னை யறிய வேணும்
சாராமற் சாரவேணும்

என்று விடையளிக்கிறார்.

தன்னையறிவதென்றால் என்ன? நான் என்ற அகந்தையை நீக்க வேண்டும். நான் என்பது உடலா? உள்ளமா? உடல் என்றால் ஆசைகளை நீக்க வேண்டும். உயிர் என்றால் அவ்வுடலின் அநித்திய தன்மையை உணர்ந்து

அடங்க வேண்டும். பஞ்சபூதக் கூறுகளை இந்த உடல் ஒவ்வொன்றுமே அழியக்கூடியது என்று உணர வேண்டும். அழியக்கூடிய இந்த உடம்பின் சுகத்திற்காக இன்னொரு உயிரை / உடம்பை வருத்த வேண்டுமா? அப்படி அந்த உயிர் படும் அவஸ்தைகள் நிரந்தரமல்லவே. அதனால் பாவம், பழிகள் நிரந்தரமாக அல்லவா நம்மை வந்தடையும். ஆகையால் உன்னை நீ அறிந்து கொள் என்கிறார் அகப்பேய்.

சரி என்னை நான் உணர்ந்துகொண்டால் மட்டும் பழி பாவங்கள் செய்யாமலிருந்திடுவேனோ என்று அசட்டுத்தனமாக கேட்கும் மனத்திடம் அகப்பேயே,

“உன்னை அறிந்தக்கால்
ஒன்றையும் சேராயே”

என்று விடையளித்துத் தன்னையறியும் மார்க்கத்தையும் அகப்பேய் அறிவிக்கின்றார்.

“உன்னை அறியும் வகைஉள்ளது சொல்வேனே”

என்று கூறி,

சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று யோக மார்க்கங்களை அறிவிக்கின்றார்.

சரியை என்பது கடவுளைக் கோவிலில் வைத்து வழிபடுதலான நெறி.

கிரியை என்பது கடவுளை ஆகம விதிப்படி வழிபடுதலான நெறி.

யோகம் என்பது சித்தர் வழிபாட்டு நெறி.

இந்த மூன்று வழிகளில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றினால் தன்னையறிந்து இறைவனை அறிந்து கொள்ள

முடியுமோ என்ற வினாவுக்குச் சிரிப்பை விடையாகத் தருகின்றார் இந்த ஞானசித்தர்.

"சரியை ஆகாதே அகப்பேய்
சா லோகங் கண்டாயே
கிரியை செய்தாலும் அகப்பேய்
கிட்டுவது ஒன்றுமில்லை

யோகம் ஆகாதே அகப்பேய்
உள்ளது கண்டக்கால்
தேக ஞானமடி அகப்பேய்
தேடாது சொன்னேனே"

சரியையாகிய உருவ வழிபாட்டினாலும், கிரியையாகிய ஆசனம் முதலான உடற்பயிற்சி வழிபாட்டினாலும் போகமாகிய தியான மன வழிபாட்டினாலும் கூட இறையை இச்சை அற்றவிடத்து இனிதே காணலாம் என்று இறைவனைக் காணும் வழியைப் போதிக்கிறார். ஞானத்தினால் மட்டுமே இறைவனைக் காண முடியும் போலும்.

நமக்குப் பிறவி என்பது இறைவன் அளித்தது. புள்ளாய், பூண்டாய், புழுவாய், விலங்காய் என்று பிறந்து மாண்டு, பிறந்து மாண்டு பிறவி என்பதே ஒரு தொடர்கதையாய் இருக்கும் நிலையில் துறவறம் பூண்டு பிச்சை எடுத்து வாழ்வதால் பிறவி எடுப்பது நின்று விடாது. இச்சையற்றவனிடம் இறை தரிசனம் காணலாம். அந்த இறை தரிசனமே பிறவிப்பிணியை ஒழிக்க வல்லது என்று பிறவியை நீக்கும் வழியையும் இறை தரிசன வழியையும் கூறுகின்றார் அகப்பேய்.

இங்கு இன்னுமொரு வினா எழுகின்றது. பெரிய யோகிமான்களெல்லாம் 'வாசியோகம்' பற்றி பிரமாதமாக சொல்கிறார்களே, அப்படி வாசியோகம் செய்பவர்க்கு

இறைவன் எளிதில் புலப்பட்டு விடுவானோ? என்ற நம் கேள்விக்கு,

"வாசியிலேறிய படி
வான் பொருள் தேடாயோ? அகப்பேய்
வாசியி லேறினாலும்
வாராது சொன்னேனே"

என்று சரியாக விடையளிக்கின்றார்.

அதுமட்டுமல்ல, அறிவு வடிவான கடவுளைக் கண்டவர்கள் மோட்சமும் வேண்டார்கள். முக்தியும் வேண்டார்கள். தீட்சையும் வேண்டார்கள் என சிவமே சின்மயமானவர்கள் என்று சிவயோக நிலை குறித்தும் பாடுகின்றார்.

மோட்சம் வேண்டார்கள் அகப்பேய்
முத்தியும் வேண்டார்கள்
தீட்சை வேண்டார்கள் அகப்பேய்
சின்மய மானவர்கள்

பிறவித் துன்பம் தீருவதற்கு வழி தீமைகள் செய்யாமை, செருக்கின்மை இப்படி உண்மையான அன்பு நெறியே சைவம். அந்த உண்மை சிவத்தை சாத்திரங்களின் மூலம் காண முடியாது. நமக்குள்ளே கலந்திருக்கும் அந்தச் சிவத்தை அன்பு நெறியினால் மட்டுமே காண முடியும்.

இதை நான் சும்மா ஒப்புக்காகச் சொல்லவில்லை. உன்மேல் ஆணையிட்டு உறுதியாகச் சொல்லுகிறேன். நீருடன் உப்பு கலந்திருப்பது போல உன்னுடனேயே இறைவனாகிய சிவபெருமான் இருக்கின்றார். இதை ஆராய்ந்து உணர்ந்து ஆனந்தமாக வாழ்வாயாக என்று அகப்பேய் சித்தர் தம் பாடலில் ஆனந்த வாழ்வதனை உணர்த்துகின்றார்.

**"ஒப்பனை அல்லவடி - அகப்பேய்**
**உன் ஆணை சொன்னேனே**
**அப்புடனுப் பெனவே - அகப்பேய்**
**ஆராய்ந் திருப்பாயே**

மனப்பேயை அடக்கி வென்ற அகப்பேய் சித்தர் திருவையாற்றில் சித்தியடைந்தார் என்று போகர் குறிப்பிடுகின்றார்.

**நஞ்சுண்ண வேண்டாவே அகப்பேய்**
**நாயகன் தாள்பெறவே**
**நெஞ்சு மலையாதே அகப்பேய்**
**நீயொன்றும் சொல்லாதே. 1**

**பராபர மானதடி அகப்பேய்**
**பரவையாய் வந்ததடி**
**தராதல மேழ்புவியும் அகப்பேய்**
**தானே படைத்ததடி. 2**

**நாத வேதமடி அகப்பேய்**
**நன்னடங் கண்டாயோ**
**பாதஞ் சத்தியடி அகப்பேய்**
**பரவிந்து நாதமடி 3**

**விந்து நாதமடி அகப்பேய்**
**மெய்யாக வந்ததடி**
**ஐந்து பெரும்பூதம் அகப்பேய்**
**அதனிட மானதடி 4**

**நாலு பாதமடி அகப்பேய்**
**நன்னெறி கண்டாயே**
**மூல மானதல்லால் அகப்பேய்**
**முத்தி யல்லவடி. 5**

**வாக்காதி யைந்தடியோ அகப்பேய்**
**வந்த வகைகேளாய்**

**ஒக்கம தானதடி அகப்பேய்**
**உண்மைய தல்லவடி. 6**

**சத்தாதி யைந்தடியோ அகப்பேய்**
**சாத்திர மானதடி**
**மித்தையு மாகுமிடி அகப்பேய்**
**மெய்யது சொன்னேனே. 7**

**வசனாதி யைந்தடியோ அகப்பேய்**
**வண்மையாய் வந்ததடி 8**

தெசநாடி பத்தேடி அகப்பேய்
திடனிது கண்டாயே.

காரண மானதெல்லாம் அகப்பேய்
கண்டது சொன்னேனே
மாரணங் கண்டாயே அகப்பேய்
வந்தவி தங்களெல்லாம் 9

ஆறு தத்துவமும் அகப்பேய்
ஆகமஞ் சொன்னதடி
மாறாத மண்டலமும் அகப்பேய்
வந்தது மூன்றடியே. 10

பிருதிவி பொன்னிறமே அகப்பேய்
பேதைமை யல்லவடி
உருவது நீரடியோ அகப்பேய்
உள்ளது வெள்ளையடி. 11

தேயு செம்மையடி அகப்பேய்
திடனது கண்டாயே
வாயு நீலமடி அகப்பேய்
வான்பொருள் சொல்வேனே. 12

வான மஞ்சடியோ அகப்பேய்
வந்தது நீகேளாய்
ஊனம தாகாதே அகப்பேய்
உள்ளது சொன்னேனே. 13

அகார மித்தனையும் அகப்பேய்
அங்கென் றெழுந்ததடி
உகாரங் கூடியடி அகப்பேய்
உருவாகி வந்ததடி. 14

மாகார மாயையடி அகப்பேய்
மலமது சொன்னேனே
சிகார மூலமடி அகப்பேய்
சிந்தித்துக் கொள்வாயே. 15

வன்னம் புவனமடி அகப்பேய்
மந்திர தந்திரமும் 16

இன்னமுஞ் சொல்வேனே அகப்பேய்
  இம்மென்று கேட்பாயே.

அத்தி வரைவாடி அகப்பேய்
  ஐம்பத்தோ ரட்சரமும்
மித்தையாங் கண்டாயே அகப்பேய்
  மெய்யென்று நம்பாதே. 17

தத்துவ மானதடி அகப்பேய்
  சகலமாய் வந்ததடி
புத்தியுஞ் சொன்னேனே அகப்பேய்
  பூத வடிவலவோ. 18

இந்த விதங்களெல்லாம் அகப்பேய்
  எம்மிறை யல்லவடி
அந்த விதம்வேறே அகப்பேய்
  ஆராய்ந்து காணாயோ. 19

பாவந் தீரவென்றால் அகப்பேய்
  பாவிக்க லாகாதே
சாவது மில்லையடி அகப்பேய்
  சற்குரு பாதமடி. 20

எத்தனை சொன்னாலும் அகப்பேய்
  என்மனந் தேறாதே

சித்து மசித்தும்விட்டே அகப்பேய்
  சேர்த்துநீ காண்பாயே. 21

சமய மாறுபடி அகப்பேய்
  தம்மாலே வந்தவடி
அமைய நின்றவிடம் அகப்பேய்
  ஆராய்ந்து சொல்வாயே. 22

ஆறாறு மாகுமடி அகப்பேய்
  ஆகாது சொன்னேனே
வேறே யுண்டானால் அகப்பேய்
  மெய்யது சொல்வாயே. 23

உன்னை யறிந்தக்கால் அகப்பேய்
  ஒன்றையுஞ் சேராயே 24

உன்னை யறியும்வகை அகப்பேய்
உள்ளது சொல்வேனே.

சரியை யாகாதே அகப்பேய்
சாலோகங் கண்டாயே
கிரியை செய்தாலும் அகப்பேய்
கிட்டுவ தொன்றுமில்லை. 25

யோக மாகாதே அகப்பேய்
உள்ளது கண்டக்கால்
தேக ஞானமடி அகப்பேய்
தேடாது சொன்னேனே. 26

ஐந்துதலை நாகமடி அகப்பேய்
ஆதாயங் கொஞ்சமடி
இந்தவிஷந் தீர்க்கும் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. 27

இறைவ னென்றதெல்லாம் அகப்பேய்
எந்த விதமாகும்
அறை நீகேளாய் அகப்பேய்
ஆனந்த மானதடி. 28

கண்டு கொண்டேனே அகப்பேய்
காதல் விண்டேனே
உண்டு கொண்டேனே அகப்பேய்
உள்ளது சொன்னாயே. 29

உள்ளது சொன்னாலும் அகப்பேய்
உன்னாலே காண்பாயே
கள்ளமுந் தீராதே அகப்பேய்
கண்டாக்குக் காமமடி. 30

அறிந்து நின்றாலும் அகப்பேய்
அஞ்சார்கள் சொன்னேனே
புரிந்த வல்வினையும் அகப்பேய்
போகாதே யுன்னைவிட்டு. 31

ஈசன் பாசமடி அகப்பேய்
இவ்வண்ணங் கண்டதெல்லாம் 32

பாசம் பயின்றதடி அகப்பேய்
பாரமது கண்டாயே.

சாத்திர சூத்திரமும் அகப்பேய்
சங்கற்ப மானதெல்லாம்
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாழ்பலங் கண்டாயே. 33

ஆறு கண்டாயோ அகப்பேய்
அந்த வினைதீர
தேறித் தெளிவதற்கே அகப்பேய்
தீர்த்தமு மாடாயே. 34

எத்தனை காலமுந்தான் அகப்பேய்
யோக மிருந்தாலென்
மூத்தனு மாவாயோ அகப்பேய்
மோட்சமு முண்டாமோ. 35

நாச மாவதற்கே அகப்பேய்
நாடாதே சொன்னேனே

பாசம் போனாலும் அகப்பேய்
பசுக்களும் போகாவே. 36

நாண மேதுக்கடி அகப்பேய்
நல்வினை தீர்ந்தக்கால்
காண வேணுமென்றால் அகப்பேய்
காணக் கிடையாதே. 37

சும்மா இருந்துவிடாய் அகப்பேய்
சூத்திரஞ் சொன்னேனே
சும்மா இருந்தவிடம் அகப்பேய்
சுட்டது கண்டாயே. 38

உன்றனைக் காணாதே அகப்பேய்
ஊனுள் நுழைந்தாயே
என்றனைக் காணாதே அகப்பேய்
இடத்தில் வந்தாயே. 39

வான மோடிவரில் அகப்பேய்
வந்தும் பிறப்பாயே 40

தேனை யுண்ணாமல் அகப்பேய்
 தெருவோ டலைந்தாயே.

சைவ மானதடி அகப்பேய்
 தானாய் நின்றதடி
சைவ மில்லையாகில் அகப்பேய்
 சலம்வருங் கண்டாயே. 41

ஆசை யற்றவிடம் அகப்பேய்
 அசாரங் கண்டாயே
ஈசன் பாசமடி அகப்பேய்
 எங்ஙனஞ் சென்றாலும். 42

ஆணவ மூலமடி அகப்பேய்
 அகாரமாய் வந்ததடி
கோணு முகாரமடி அகப்பேய்
 கூடப் பிறந்ததுவே. 43

ஒன்று மில்லையடி அகப்பேய்
 உள்ள படியாச்சே
நன்றில்லை தீதிலையே அகப்பேய்
 நாணமு மில்லையடி. 44

சும்மா இருந்தவிடம் அகப்பேய்
 சுட்டது சொன்னேனே
எம்மாய மீதறியேன் அகப்பேய்
 என்னையுங் காணேனே. 45

கலைக ளேதுக்கடி அகப்பேய்
 கண்டார் நகையாரோ
நிலைக ளேதுக்கடி அகப்பேய்
 நீயார் சொல்வாயே. 46

இந்த அமிர்தமடி அகப்பேய்
 இரவி விஷமோடி
இந்து வெள்ளையடி அகப்பேய்
 இரவி சிவப்பாமே. 47

ஆணல பெண்ணலவே அகப்பேய்
 அக்கினி கண்டாயே 48

தாணுவு மிப்படியே அகப்பேய்
சற்குரு கண்டாயே.

என்ன படித்தாலும் அகப்பேய்
எம்முறை யாகாதே
சொன்னது கேட்டாயே அகப்பேய்
சும்மா இருந்துவிடு. 49

காடு மலையுமடி அகப்பேய்
கடுந்தவ மானாலென்
வீடும் வெளியாமோ அகப்பேய்
மெய்யாக வேண்டாமோ. 50

பரத்தில் சென்றாலும் அகப்பேய்
பாரிலே மீளுமடி

பரத்துக் கடுத்தவிடம் அகப்பேய்
பாழது கண்டாயே. 51

பஞ்ச முகமேது அகப்பேய்
பஞ்சு படுத்தாலே
குஞ்சித பாதமடி அகப்பேய்
குருபாதங் கண்டாயே. 52

பங்க மில்லையடி அகப்பேய்
பாத மிருந்தவிடம்
கங்கையில் வந்ததெல்லாம் அகப்பேய்
கண்டு தெளிவாயே. 53

தானது நின்றவிடம் அகப்பேய்
சைவங் கண்டாயே
ஊனற நின்றவர்க்கே அகப்பேய்
ஊனமொன் றில்லையடி. 54

சைவம் ஆருக்கடி அகப்பேய்
தன்னை யறிந்தவர்க்கே
சைவ மானவிடம் அகப்பேய்
சற்குரு பாதமடி. 55

பிறவி தீரவென்றால் அகப்பேய்
பேதகம் பண்ணாதே 56

துறவி யானவர்கள் அகப்பேய்
சும்மா இருப்பார்கள்.

ஆர லைந்தாலும் அகப்பேய்
நீயலை யாதேயடி
ஊர லைந்தாலும் அகப்பேய்
ஒன்றையும் நாடாதே. 57

தேனாறு பாயுமடி அகப்பேய்
திருவடி கண்டவர்க்கே
ஊனாறு மில்லையடி அகப்பேய்
ஒன்றையும் நாடாதே. 58

வெள்ளை கறுப்பாமோ அகப்பேய்
வெள்ளியும் செம்பாமோ
உள்ள துண்டோடி அகப்பேய்
உன்னாணை கண்டாயே. 59

அறிவுள் மன்னுமடி அகப்பேய்
ஆதார மில்லையடி
அறிவு பாசமடி அகப்பேய்
அருளது கண்டாயே. 60

வாசியி லேறியபடி அகப்பேய்
வான்பொருள் தேடாயோ
வாசியி லேறினாலும் அகப்பேய்
வாராது சொன்னேனே. 61

தூராதி தூரமடி அகப்பேய்
தூரமும் இல்லையடி
பாராமற் பாரடியோ அகப்பேய்
பாழ்வினை தீரவென்றால். 62

உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்
உள்ளது சொன்னேனே
கண்டார்கள் சொல்வாரோ அகப்பேய்
கற்பனை யற்றதடி. 63

நாலு மறைகாணா அகப்பேய்
நாதனை யார்காண்பார் 64

நாலு மறைமுடிவில் அகப்பேய்
நற்குரு பாதமடி.

மூல மில்லையடி அகப்பேய்
முப்பொரு ளில்லையடி
மூல முண்டானால் அகப்பேய்
முத்தியு முண்டாமே. 65

இந்திர சாலமடி அகப்பேய்
எண்பத் தொருபதமும்

மந்திர மப்படியே அகப்பேய்
வாயைத் திறவாதே. 66

பாழாக வேணுமென்றால் அகப்பேய்
பார்த்ததை நம்பாதே
கேளாமற் சொன்னேனே அகப்பேய்
கேள்வியு மில்லையடி 67

சாதி பேதமில்லை அகப்பேய்
தானாகி நின்றவர்க்கே
ஓதி யுணர்ந்தாலும் அகப்பேய்
ஒன்றுந்தா னில்லையடி. 68

சூழ வானமடி அகப்பேய்
சுற்றி மரக்காவில்
வேழம் உண்டகனி அகப்பேய்
மெய்யது கண்டாயே. 69

நானு மில்லையடி அகப்பேய்
நாதனு மில்லையடி
தானு மில்லையடி அகப்பேய்
சற்குரு வில்லையடி. 70

மந்திர மில்லையடி அகப்பேய்
வாதனை யில்லையடி
தந்திர மில்லையடி அகப்பேய்
சமய மழிந்ததடி. 71

பூசை பாசமடி அகப்பேய்
போதமே கொட்டமடி 72

ஈசன் மாயையடி அகப்பேய்
எல்லாமு மிப்படியே.

சொல்ல லாகாதோ அகப்பேய்
சொன்னாலும் தோஷமடி
இல்லை இல்லையடி அகப்பேய்
ஏகாந்தங் கண்டாயே. 73

தத்துவத் தெய்வமடி அகப்பேய்
சதாசிவ மானதடி
மற்றுள்ள தெய்வமெல்லாம் அகப்பேய்
மாயை வடிவாமே. 74

வார்தை யல்லவடி அகப்பேய்
வாச மகோசரத்தே
ஏற்ற தல்லவடி அகப்பேய்
என்னுடன் வந்ததல்ல. 75

சாத்திர மில்லையடி அகப்பேய்
சலனங் கடந்ததடி
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாவனைக் கெட்டாதே. 76

என்ன படித்தாலென் அகப்பேய்
ஏதுதான் செய்தாலென்
சொன்ன விதங்களெல்லாம் அகப்பேய்
சுட்டது கண்டாயே. 77

தன்னை யறியவேணும் அகப்பேய்
சாராமற் சாரவேணும்
பின்னை யறிவதெல்லாம் அகப்பேய்
பேயறி வாகுமடி 78

பிச்சை யெடுத்தாலும் அகப்பேய்
பிறவி தொலையாதே
இச்சை யற்றவிடம் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. 79

கோல மாகாதே அகப்பேய்
குதர்க்கம் ஆகாதே 80

சால மாகாதே அகப்பேய்
சஞ்சல மாகாதே.

ஒப்பனை யல்லவடி அகப்பேய்
உன்னாணை சொன்னேனே

அப்புட னுப்பெனவே அகப்பேய்
ஆராய்ந் திருப்பாயே. 81

மோட்சம் வேண்டார்கள் அகப்பேய்
முத்தியும் வேண்டார்கள்
தீட்சை வேண்டார்கள் அகப்பேய்
சின்மய மானவர்கள். 82

பாலன் பிசாசமடி அகப்பேய்
பார்த்தால் பித்தனடி
கால மூன்றுமல்ல அகப்பேய்
காரிய மல்லவடி. 83

கண்டது மில்லையடி அகப்பேய்
கண்டவ ருண்டானால்
உண்டது வேண்டடியோ அகப்பேய்
உன்னாணை சொன்னேனே. 84

அஞ்சையு முண்ணாதே அகப்பேய்
ஆசையும் வேண்டாதே
நெஞ்சையும் விட்டுவிடு அகப்பேய்
நிஷ்டையிற் சாராதே. 85

நாதாந்த வுண்மையிலே அகப்பேய்
நாடாதே சொன்னேனே
மீதான சூதானம் அகப்பேய்
மெய்யென்று நம்பாதே. 86

ஒன்றோ டொன்றுகூடில் அகப்பேய்
ஒன்றுங் கெடுங்காணே
நின்ற பரசிவமும் அகப்பேய்
நில்லாது கண்டாயே. 87

தோன்றும் வினைகளெல்லாம் அகப்பேய்
சூனியங் கண்டாயே 88

**தோன்றாமற் றோன்றிடும் அகப்பேய்**
**சுத்த வெளிதனிலே.**

**பொய்யென்று சொல்லாதே அகப்பேய்**
**போக்கு வரத்துதானே**
**மெய்யென்று சொன்னவர்கள் அகப்பேய்**
**வீடு பெறலாமே. 89**

**வேத மோதாதே அகப்பேய்**
**மெய்கண்டோ மென்னாதே**
**பாதம் நம்பாதே அகப்பேய்**
**பாவித்துப் பாராதே. 90**

## 6. குதம்பைச்சித்தர் பாடல்

அழுகணி சித்தரின் என் கண்ணம்மா, அகப்பேய் சித்தரின் அகப்பேயைப் போன்று குதம்பைச் சித்தரின் பாடல் கண்ணிகளில் 'குதம்பாய்' என்ற வார்த்தை ஜாலம் வருகின்றது. இவர் 'குதம்பை' என்ற காதணியணிந்த பெண்ணை முன்னிலைப்படுத்திப் பாடுவதால் இவர் குதம்பைச் சித்தர் என்ற பெயர் பெற்றார் என்பர்.

பெண் குழந்தை இல்லாத குறைக்கு ஆணாய்ப் பிறந்த இவரைப் பெண் குழந்தை போல அலங்காரம் செய்து மகிழ்வார்களாம். அப்படி அணிகலன்கள் அணியும் நிலையில் காதில் குதம்பை என்ற ஆபரணத்தை அணிந் திருக்கையில் அவ்வளவு அழகாகக் காட்சி தருமாம் அந்தக் குழந்தை. அதனால் அதனை 'குதம்பை' என்ற சிறப்புப் பெயராலேயே அழைக்கத் தொடங்கினார்களாம்.

இந்தக் கதை இப்படியிருக்க, இவர் இடையர் குலத்தைச் சேர்ந்த கோபாலர் தம்பதியர்க்கு மகனாகப் பிறந்து சித்தர் ஒருவரிடம் ஞானோ பதேசம் பெற்று மயிலாடுதுறையில் சித்தியடைந்தார் என்ற வரலாறும் கூறப்படுவதுண்டு.

ஏனைய சித்தர்களைப் போல இவரும் தமது பாடலில் "தன்னையறிய வேணும் சாராமல் சாரவேணும்" என்ற தத்துவக் கொள்கையைப் பின்பற்றுகிறார். இராமலிங்க சுவாமிகள்கூட 'தன்னையறிந்து இன்புறவே' என்று

வெண்ணிலவை நோக்கிப் பாடியதை நோக்க எல்லா ஞானிகளும் தன்னையறிதலுக்கு எவ்வளவு முக்கியத்துவம் தந்திருக்கிறார்கள் என்பது புலப்படும்.

"தன்னையறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்கு
பின்னாசை யேதுக்கடி - குதம்பாய்
பின்னாசை யேதுக்கடி"

இவர் தம் பாடலில் யோக சித்திகளைப் பற்றிப் பலப்படக் கூறினாலும் இறைவனையடையும் பக்குவம் பெற்றோர்க்கு இதெல்லாம் தேவையற்ற வழிமுறைகள் என்றும் காட்டமாகக் கூறுகிறார்.

“ஆதாரமான வடிமுடிகண்டோர்க்கு
வாதாட்ட மேதுக்கடி - குதம்பாய்
வாதாட்ட மேதுக்கடி”

“நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்க ளேதுக்கடி - குதம்பாய்
வாட்டங்க ளேதுக்கடி”.

“முக்கோணந் தன்னில் முளைத்த மெய்ஞ் ஞானிக்கு
சட் கோண மேதுக்கடி”

“சித்திரக் கூடத்தைத் தினந்தினந் காண்போர்க்கு
பத்திர மேதுக்கடி”

என்ற பாடல் வரிகள் குண்டலினி தவத்தைப் பற்றி எடுத்துக்காட்டுவனவாகும்.

முதற்பாடல் மூலாதார யோகத்தையும், இரண்டாம் பாடல் சுழுமுனை வழியையும், மூன்றாம் பாடல் அநாகத சக்கரத்தையும் நான்காம் பாடல் சகஸ்ராரம் பெருவெளியையும் குறிப்பால் உணர்த்துவன.

இறைவனாகிய உண்மைப் பொருளைக் கண்டு தெளிந்த மெய்ஞானிகள் மெய்யாகிய உடலை நீடித்து

வாழவைக்கும் காயகற்ப முறைகளை நாடி வீண் பொழுது கழிக்க மாட்டார்கள் என்று கூறுகின்றார்.

யோக சக்தி படைத்தவர்கள் காலனை வென்றவர்களாவார்கள். அவர்களைக் காலன் நெருங்க மாட்டான். நீண்ட நாள் உயிர் வாழும் தன்மையை அவர்கள் இயல்பாகவே பெற்றிருப்பதால் மரணம் என்பது அவர்களாகவே நிர்ணயித்துக் கொள்வது. இந்த நிலையில் அட்டாங்க யோகத்தில் ஒன்றான வேண்டிய வடிவமெடுக்கும் ஈசத்துவம் தேவையில்லை என்பது குதம்பைச் சித்தரின் கருத்து. இதனை,

“காலனை வென்ற கருத்தறி வாளர்க்குக்
கோலங்கள் ஏதுக்கடி”

என்கிறார்.

காயகற்ப சாதனைகளைச் செய்யாத சித்தர்களே இல்லை என்று கூறுமளவு பெரும்பாலும் எல்லாச் சித்தர்களும் காயகற்பப் பயிற்சியை மேற்கொண்ட

நிலையில் உண்மை ஞானிகள் காயகற்பந் தேட மாட்டார்கள் என்று வித்தியாசமாகத் தெரிவிக்கின்றார்.

“மெய்ப்பொருள் கண்டு விளங்கும் மெய்ஞானிக்குக்
கற்பங்கள் ஏதுக்கடி - குதம்பாய்”

கடவுளின் உண்மை உணர்ந்த ஞானிகளுக்கு உடலை வளர்க்கும் காயகற்பங்கள் தேவையில்லை என்பது குதம்பையாரின் தனிக் கருத்தாகும். நோயற்ற வாழ்வு வாழும் அவர்களுக்கு யோக சித்திகள் மூலம் உடலை வலுப்படுத்தும் காயகற்பம் தேவையா என்ற வினாவை எழுப்பிய அவர் வாசியோகமான பிரணாயமத்தை பின்பற்றும் ஒருவருக்கு யோகம்கூடத் தேவையில்லை என்ற முடிவுக்கு வருகின்றார்.

“வேகமடக்கி விளங்கு மெய்ஞ்ஞானிக்கு
யோகந் தானேதுக் கடி”

என்று அவர் கேட்பது நியாயமாகத்தானே படுகிறது.

உலகில் அஞ் ஞானம் ஒழிந்திட யார்க்கும்
இலகும் கடவுளை ஏத்தி - நலமார்
குதம்பாய் மெய்ஞ்ஞானம் கூறவே நன்கு
நிதம்பார்த்து நெஞ்சில் நினை.

**பூரணங் கண்டோர்இப் பூமியிலேவரக்**
**காரணம் இல்லையடி குதம்பாய்**
**காரணம் இல்லையடி.** 1

**போங்காலம் நீங்கநற் பூரணம் கண்டோர்க்குச்**
**சாங்காலம் இல்லையடி குதம்பாய்**
**சாங்காலம் இல்லையடி.** 2

**செத்துப் பிறக்கின்ற தேவைத் துதிப்போர்க்கு**
**முத்திதான் இல்லையடி குதம்பாய்**
**முத்திதான் இல்லையடி.** 3

**வஸ்து தரிசன மாட்சியாய்க் கண்டோர்க்குக்**
**கஸ்திசற்று இல்லையடி குதம்பாய்**
**கஸ்திசற்று இல்லையடி.** 4

பற்றற்ற வத்துவைப் பற்றறக் கண்டோர்க்குக்
குற்றங்கள் இல்லையடி குதம்பாய்
குற்றங்கள் இல்லையடி. 5

காட்சியாம் காட்சி கடந்த பிரமத்தைச்
சூட்சியாய்ப் பார்ப்பாயடி குதம்பாய்
சூட்சியாய்ப் பார்ப்பாயடி. 6

வெட்டவெளிக்குள் வெறும்பாழாய் நின்றதை
இட்டமாய்ப் பார்ப்பாயடி குதம்பாய்
இட்டமாய்ப் பார்ப்பாயடி. 7

எங்கு நிறைந்தே இருக்கின்ற சோதியை
அங்கத்துள் பார்ப்பாயடி குதம்பாய்
அங்கத்துள் பார்ப்பாயடி. 8

அண்டத்துக் கப்பால் அகன்ற சுடரினைப்
பிண்டத்துள் பார்ப்பாயடி குதம்பாய்
பிண்டத்துள் பார்ப்பாயடி. 9

ஆவித் துணையாகும் ஆராவ அமுதத்தைச்
சேவித்துக் கொள்வாயடி குதம்பாய்
சேவித்துக் கொள்வாயடி. 10

தீண்டா விளக்கினைத் தெய்வக் கொழுந்தினை
மாண்டாலும் போற்றிடுவாய் குதம்பாய்
மாண்டாலும் போற்றிடுவாய். 11

அண்டமும் பிண்டமும் ஆக்கிய தேவனைத்
தெண்டனிட்டு ஏத்தடியே குதம்பாய்
தெண்டனிட்டு ஏத்தடியே. 12

விந்தை பராபர வத்தின் இணையடி
சிந்தையில் கொள்வாயடி குதம்பாய்
சிந்தையில் கொள்வாயடி. 13

விண்ணொளி யாக விளங்கும் பிரமமே
கண்ணொளி ஆகுமடி குதம்பாய்
கண்ணொளி ஆகுமடி. 14

பத்தி சற்றில்லாத பாமர பாவிக்கு
முத்திசற்று இல்லையடி குதம்பாய்
முத்திசற்று இல்லையடி. 15

எல்லாப் பொருளுக்கு மேலான என்தேவைச்
சொல்லாமற் சொல்வாயடி குதம்பாய்
சொல்லாமற் சொல்வாயடி. 16

எந்த உயிர்க்கும் இரைதரும் ஈசனைச்
சந்ததம் வாழ்த்தடியோ குதம்பாய்
சந்ததம் வாழ்த்தடியோ. 17

காணக்கிடையாத கற்பாந்த கல்பத்தை
நாணாமல் ஏத்தடியே குதம்பாய்
நாணமற் ஏத்தடியே. 18

அணுவாய் பல்அண்டமாய் ஆனசிற்சோதியைத்
துணிவாய்நீ போற்றடியோ குதம்பாய்
துணிவாய்நீ போற்றடியோ. 19

மாணிக்கக் குன்றிற்கு மாசற்ற சோதிக்குக்
காணிக்கை நன்மனமே குதம்பாய்
காணிக்கை நன்மனமே. 20

### கடவுள் வல்லபங்கூறல்

தேவருஞ் சித்தருந் தேடு முதல்வர்
மூவரும் ஆவாரடி குதம்பாய்
மூவரும் ஆவாரடி. 21

சத்தாகிச் சித்தாகித் தாபர சங்கமாய்
வித்தாகும் வத்துவடி குதம்பாய்
வித்தாகும் வத்துவடி. 22

உருவாகி அருவாகி ஒளியாகி வெளியாகித்
திருவாகி நின்றது காண் குதம்பாய்
திருவாகி நின்றது காண். 23

நீரும் நெருப்பும் நெடுங்காற்று வானமும்
பாருமாய் நின்றதைக் காண் குதம்பாய்
பாருமாய் நின்றதைக் காண். 24

புவனம் எல்லாங் கணப்போதே அழித்திடச்
 சிவனாலே ஆகுமடி குதம்பாய்
 சிவனாலே ஆகுமடி. 25

அவன் அசையாவிடின் அணுஅசை யாதுஎன்றல்
 புவனத்தில் உண்மையடி குதம்பாய்
 புவனத்தில் உண்மையடி. 26

காரணம் சித்தென்றும் காரியம் சத்தென்றும்
 ஆரணஞ் சொல்லுமடி குதம்பாய்
 ஆரணஞ் சொல்லுமடி. 27

காரணம் முன்னென்றும் காரியம் பின்னென்றுந்
 தாரணி சொல்லுமடி குதம்பாய்
 தாரணி சொல்லுமடி. 28

ஆதிசகத்து என்று அநாதி மகத் தென்று
 மேதினி கூறுமடி குதம்பாய்
 மேதினி கூறுமடி. 29

ஐந்து தொழிற்கும் உரியோன் அநாதியை
 மந்திரம் போற்றுமடி குதம்பாய்
 மந்திரம் போற்றுமடி. 30

யானை தலையாய் எறும்பு கடை யாய்ப்பல்
 சேனையைத் தந்தானடி குதம்பாய்
 சேனையைத் தந்தானடி. 31

மண்ணள விட்டாலும் வத்துப் பெருமைக்கே
 எண்ணளவு வில்லையடி குதம்பாய்
 எண்ணளவு வில்லையடி. 32

ஆதியும் அந்தமும் ஆன ஒருவனே
 சோதியாய் நின்றானடி குதம்பாய்
 சோதியாய் நின்றானடி. 33

சீவனும் புத்தியும் சித்தமும் தந்தவன்
 தேவன் அவனாமடி குதம்பாய்
 தேவன் அவனாமடி. 34

சத்தம் சுயம்பு சுகுணம் சம்பூரணம்
சத்தியம் உள்ளானடி குதம்பாய்
சத்தியம் உள்ளானடி. 35

எங்கும் வியாபகம் ஈகை விவேங்கள்
பொங்கமாய் உள்ளானடி குதம்பாய்
பொங்கமாய் உள்ளானடி. 36

தீர்க்க ஆகாயம் தெரியாத தன்மைபோல்
பார்க்கப் படாதானடி குதம்பாய்
பார்க்கப்படா தானடி. 37

ஆத்துமந் தன்னை அரூபமா எண்ணினாய்
கூத்தன் அவ்வாறு அல்லவோ குதம்பாய்
கூத்தன் அவ்வாறு அல்லவோ. 38

அண்டத்தைத் தேவன் அளிக்க எண் ணும்போதே
அண்டம் உண் டாயிற்றடி குதம்பாய்
அண்டம் உண் டாயிற்றடி. 39

வானம் முற்றாக வளர்ந்திடு சின்னங்கள்
தான் அவர் செய்தாரடி குதம்பாய்
தான் அவர் செய்தாரடி. 40

ஒன்றும் இல்லாவெளிக் குள்ளேபல் லண்டத்தை
நின்றிடச் செய்தானடி குதம்பாய்
நின்றிடச் செய்தானடி. 41

கருவி களில்லாமற் காணும்பல் அண்டங்கள்
உருவுறச் செய்தானடி குதம்பாய்
உருவுறச் செய்தானடி. 42

எல்லா உயிர்களும் எந்த உலகமும்
வல்லானைப் போற்றுமடி குதம்பாய்
வல்லானைப் போற்றுமடி. 43

என்றும் அழியாமை எங்கு நிறைவாகி
நின்றது பிரமமடி குதம்பாய்
நின்றது பிரமமடி. 44

கண்டத்தை ஆள்கின்ற காவலர் போற்சோதி
அண்டத்தை ஆள்கின்றதே குதம்பாய்
அண்டத்தை ஆள்கின்றதே. 45

அண்டம் உண் டாகுமுன் ஆக அநாதியாய்க்
கண்டது பிரமமடி குதம்பாய்
கண்டது பிரமமடி. 46

எந்த உயிர் கட்கும் எந்த உலகிற்கும்
அந்தமாய் நின்றானடி குதம்பாய்
அந்தமாய் நின்றாடின. 47

தணிவான புத்தியால் தாணு அறியாதோர்
அணுவேனும் இல்லையடி குதம்பாய்
அணுவேனும் இல்லையடி. 48

மூன்று தொழிலினை மூர்த்திசெய் யாவிடில்
தோன்றாது உலகமடி குதம்பாய்
தோன்றாது உலகமடி. 49

சீரான தேவன் சிறப்பினைச் சொல்லவே
யாரலே யாகுமடி? குதம்பாய்
யாரலே யாகுமடி? 50

## முத்திநிலை பெறும் வழி

எல்லார்க்கும் மேலான ஏகனைப் பற்றிய
வல்லார்க்கு முத்தியடி குதம்பாய்
வல்லார்க்கு முத்தியடி. 51

பற்றற நின்றானைப் பற்றறப் பற்றிடக்
கற்றார்க்கு முத்தியடி குதம்பாய்
கற்றார்க்கு முத்தியடி. 52

பந்தத்தை விட்டொளிர் பந்தத்தைப் பற்றினால்
சந்தத முத்தியடி குதம்பாய்
சந்தத முத்தியடி. 53

ஆமைபோல் ஐந்தும் அடக்கித் திரிகின்ற
ஊமைக்கு முத்தியடி குதம்பாய்
ஊமைக்கு முத்தியடி. 54

மந்தி மனத்தை வயப்படுத் திட்டார்க்கு
வந்தெய்தும் முத்தியடி குதம்பாய்
வந்தெய்தும் முத்தியடி. 55

அந்தக் கரணம் அடங்க அடக்கினால்
சொந்தம் பிரமமடி குதம்பாய்
சொந்தம் பிரமமடி. 56

தாய்குச் சரியான தற்பரம் சார்ந்திடில்
வாய்க்கும் பதவியடி குதம்பாய்
வாய்க்கும் பதவியடி. 57

சுத்த பிரமத்தைத் தொந்தமென்று ஓட்டினால்
சித்திக்கும் முத்தியடி குதம்பாய்
சித்திக்கும் முத்தியடி. 58

கன்றை விடாதுசெல் கற்றாவைப்போல் வத்தை
ஒன்றினால் முத்தியடி குதம்பாய்
ஒன்றினால் முத்தியடி. 59

கைக்கனி போலவே காசறு பிரமத்தில்
சொக்கினால் முத்தியடி குதம்பாய்
சொக்கினால் முத்தியடி. 60

நித்திய வத்துவை நீங்காது நாடினால்
முத்திதான் சித்திக்குமே குதம்பாய்
முத்திதான் சித்திகுமே. 61

## தேகத்தைப் பழித்தல்

பேசரு நாற்றம் பெருகும் உடலுக்கு
வாசனை ஏதுக்கடி குதம்பாய்
வாசனை ஏதுக்கடி. 62

துற்கந்த மாய்மலம் சோரும் உடலுக்கு
நற்கந்த மேதுக்கடி குதம்பாய்
நற்கந்த மேதுக்கடி. 63

நீச்சுக் கவுச்சது நீங்கா மெய்க்கு மஞ்சள்
பூச்சுத்தான் ஏதுக்கடி குதம்பாய்
பூச்சுத்தான் ஏதுக்கடி. 64

சேலை மினுக்கதும் செம்பொன் மினுக்கதும்
மேலை மினுக்காமடி குதம்பாய்
மேலை மினுக்காமடி. 65

பீவாச முள்ளவள் பீறலு உடம்புக்குப்
பூவாச மேதுக்கடி குதம்பாய்
பூவாச மேதுக்கடி. 66

போராட்டஞ் செய்து புழுத்த வுடம்பிற்கு
நீராட்டம் ஏதுக்கடி குதம்பாய்
நீராட்டம் ஏதுக்கடி. 67

சீயு நிணமுந் திரண்ட உடம்பினை
ஆயுவ ஏதுக்கடி குதம்பாய்
ஆயுவ ஏதுக்கடி. 68

காகம் கழுகு களித்துண்ணும் மேனிக்கு
வாகனம் ஏதுக்கடி குதம்பாய்
வாகனம் ஏதுக்கடி. 69

கோவணத் தோடே கொளுத்தும் உடலுக்குப்
பூவணை ஏதுக்கடி குதம்பாய்
பூவணை ஏதுக்கடி. 70

### பரத்தயரைப் பழித்தல்

நெடுவரை போலவே நீண்ட கனதனம்
நடுவாக வந்ததடி குதம்பாய்
நடுவாக வந்ததடி. 71

கையால் அழைப்பது போல் உனது கண்
மையால் அழைப்பதென்ன குதம்பாய்
மையால் அழைப்பதென்ன. 72

முதிர்ந்த சுடுகாட்டில் முல்லையை ஒத்தபல்
உதிர்ந்து கிடக்குமடி குதம்பாய்
உதிர்ந்து கிடக்குமடி. 73

கழறும் கிளிமொழி காலஞ் சென்றாலது
குளறி அழியுமடி குதம்பாய்
குளறி அழியுமடி. 74

வளர்ந்து முறுக்காய் வயதில் எழுந்த தனம்
தளர்ந்து விழுந்திடுமே குதம்பாய்
தளர்ந்து விழுந்திடுமே. 75

பொருக்கின்றி மேனியில் பூரித்து எழுந்த தோல்
சுருக்கம் விழுந்திடுமே குதம்பாய்
சுருக்கம் விழுந்திடுமே. 76

கொள்ளை யாகக் கொழுத்தே எழுந்த கண்
நொள்ளைய தாய்விடுமே குதம்பாய்
நொள்ளைய தாய்விடுமே. 77

மஞ்சு போலாகி வளர்ந்திடும் கூந்தலும்
பஞ்சுபோல் ஆகிடுமே குதம்பாய்
பஞ்சுபோல் ஆகிடுமே. 78

பொன்னாலே செய்யாடி போன்ற உன்கன்னங்கள்
பின்னாலே ஒட்டிவிடும் குதம்பாய்
பின்னாலே ஒட்டிவிடும். 79

நல்லாய் உன் அங்கமும் நன்கு நிமர்ந்தாலும்
வில்லாய்ப்பின் கூனிவிடும் குதம்பாய்
வில்லாய்ப்பின் கூனிவிடும். 80

முந்தி நடக்கின்ற மொய்ம்பும்சின் னாளையில்
குந்தி இருக்கச் செய்யும் குதம்பாய்
குந்தி இருக்கச் செய்யும். 81

பிறக்கும்போது உற்ற பெருமையைப் போலவே
இறக்கும்போது எய்துவிடும் குதம்பாய்
இறக்கும்போது எய்துவிடும். 82

## நலம் நிலைமை

கோபம் பொறாமை கொடுஞ்சொல் வன்கோளிவை
பாபத்துக்கு ஏதுவடி குதம்பாய்
பாபத்துக்கு ஏதுவடி. 83

கள்ளங்கட் காமம் கொலைகள் கபடங்கள்
பள்ளத்திற் தள்ளுமடி குதம்பாய்
பள்ளத்திற் தள்ளுமடி. 84

பொருளாசை யுள்ளஇப் பூமியில் உள்ளோருக்கு
இருளாம் நரகமடி குதம்பாய்
இருளாம் நரகமடி. 85

கற்புள்ள மாதைக் கலக்க நினைக்கினும்
வற்புள்ள பாவமடி குதம்பாய்
வற்புள்ள பாவமடி. 86

தாழாமல் உத்தமர் தம்மை இகழ்வது
கீழாம் நரகமடி குதம்பாய்
கீழாம் நரகமடி. 87

சுத்த பிரமத்தைத் தோத்திரம் செய்யார்க்கு
நித்தம் நரகமடி குதம்பாய்
நித்தம் நரகமடி. 88

எப்பாரும் போற்றும் இறையை நினையார்க்குத்
தப்பா நரகமடி குதம்பாய்
தப்பா நரகமடி. 89

பாழாகப் பூசைகள் பண்ணும் மடையர்க்கே
ஏழாம் நரகமடி குதம்பாய்
ஏழாம் நரகமடி. 90

காயம் எடுத் தாதி கர்த்தரை எண்ணார்க்குத்
தீயாம் நரகமடி குதம்பாய்
தீயாம் நரகமடி. 91

அன்போடு நற்பத்தி ஆதிமேல் வையார்க்குத்
துன்பாம் நரகமடி குதம்பாய்
துன்பாம் நரகமடி? 92

### பொய்த்தவ ஒழுக்கத்தைப் பழித்தல்

செங்காவி பூண்டு தெருவில் அலைவோர்க்கு
எங்காகும் நல்வழியே குதம்பாய்
எங்காகும் நல்வழியே. 93

மாத்திரைக் கோல்கொண்டு மாரீசஞ் செய்வார்க்குச்
சாத்திரம் ஏதுக்கடி குதம்பாய்
சாத்திரம் ஏதுக்கடி? 94

வெண்ணீறு பூசியே வீதியில் வந்தோர்க்குப்
பெண்ணாசை ஏதுக்கடி குதம்பாய்
பெண்ணாசை ஏதுக்கடி? 95

ஒப்பிலாத் தேவனை உள்ளத்தில் வைத்தோர்க்குக்
கப்பறை ஏதுக்கடி குதம்பாய்
கப்பறை ஏதுக்கடி? 96

சான்றோர் எனச் சொல்லித் தத்துவம் தேர்ந்தோர்க்கு
மான்தோல் ஏதுக்கடி குதம்பாய்
மான்தோல் ஏதுக்கடி. 97

நாடி மனத்தினை நாதன்பால் வைத்தோர்க்குத்
தாடிசடை ஏனோ குதம்பாய்
தாடிசடை ஏனோ? 98

நாதற்கு உறவாகி நற்தவம் சார்ந்தோர்க்குப்
பாதக் குறடுமுண்டோ குதம்பாய்
பாதக் குறடுமுண்டோ? 99

தபநிலை கண்டாதி தன்வழி பட்டோர்க்குச்
செபமாலை ஏதுக்கடி குதம்பாய்
செபமாலை ஏதுக்கடி? 100

பங்கொடு பங்கில்லாப் பாழ்வெளி கண்டோர்க்கு
லங்கோ டேதுக்கடி குதம்பாய்
லங்கோ டேதுக்கடி? 101

## நிலையாப்பொருள்

தேடிய செம்பொன்னும் செத்தபோ துன்னோடு
நாடி வருவதுண்டோ? குதம்பாய்
நாடி வருவதுண்டோ? 102

போம்போது தேடும் பொருளில் அணுவேனும்
சாம்போது தான்வருமோ? குதம்பாய்
சாம்போது தான்வருமோ? 103

காசினிமுற்றாயுன் கைவச மாயினும்
தூசேனும் பின்வருமோ? குதம்பாய்
தூசேனும் பின்வருமோ? 104

உற்றார் உறவின ஊரார் பிறந்தவர்
பெற்றார்துணை யாவரோ? குதம்பாய்
பெற்றார்துணை யாவரோ? 105

மெய்ப்பணி கொள்ளாத மேதினி மாந்தர்க்குப்
பொய்ப்பணி ஏதுக்கடி? குதம்பாய்
பொய்ப்பணி ஏதுக்கடி? 106

விண்ணாசை தன்னை விரும்பாத மக்கட்கு
மண்ணாசை ஏதுக்கடி? குதம்பாய்
மண்ணாசை ஏதுக்கடி? 107

சேனைகள் பூந்தேர் திரண்ட மனுத்திரள்
யானையும் நில்லாதடி! குதம்பாய்
யானையும் நில்லாதடி! 108

செங்கோல் செலுத்திய செல்வமும் ஓர்காலம்
தங்காது அழியுமடி! குதம்பாய்
தங்காது அழியுமடி! 109

கூடங்கள் மாடங்கள் கோபுர மாபுரம்
கூடவே வாராதடி! கும்பாய்
கூடவே வாராதடி! 110

### தன்னோடு செல்பவை

நல்வினை தீவினை நாடிப் புரிந்தோர்பால்
செல்வன் நிச்சயமே குதம்பாய்
செல்வன நிச்சயமே. 111

செய்தவம் செய்கொலை செய்தர்மம் தன்னொடும்
எய்த வருவனவே குதம்பாய்
எய்த வருவனவே. 112

முத்தி அளித்திடு மூர்த்தியைப் போற்றிசெய
பத்தியும் பின்வருமே குதம்பாய்
பத்தியும் பின்வருமே. 113

## ஆசையை ஒழித்தல்

இச்சைப் பிறப்பினை எய்விக்கு என்றது
நிச்சய மாகுமடி குதம்பாய்
நிச்சய மாகுமடி. 114

வல்லமை யாகவே வாஞ்சை ஒழித்திட்டால்
நல்ல துறவாமடி குதம்பாய்
நல்ல துறவாமடி. 115

ஆசை அறுத்தோர்க்கே ஆனந்தம் உண்டென்ற
ஓசையைக் கேட்டிலையோ குதம்பாய்
ஓசையைக் கேட்டிலையோ? 116

தேக்கிய ஆசையைச் சீயென்று ஒறுத்தோரே
பாக்கிய வான்களடி குதம்பாய்
பாக்கிய வான்களடி. 117

இன்பங்கள் எய்திட விச்சை உறாதார்க்குத்
துன்பங்கள் உண்டாமடி குதம்பாய்
துன்பங்கள் உண்டாமடி. 118

துறவிகள் ஆளாசை துறந்து விடுவரேல்
பிறவிகள் இல்லையடி குதம்பாய்
பிறவிகள் இல்லையடி. 119

## தவநிலை கூறல்

கொல்லா விரதம் குளிர்பசி நீக்குதல்
நல்ல விரதமடி குதம்பாய்
நல்ல விரதமடி. 120

தவநிலை ஒன்றனைச் சாராத மாந்தர்கள்
அவநிலை யாவாரடி குதம்பாய்
அவநிலை யாவாரடி. 121

தவமதை எந்நாளுஞ் சாதிக்க வல்லார்க்குச்
சிவமது கைவசமே குதம்பாய்
சிவமது கைவசமே. 122

காமனை வென்று கடுந்தவஞ் செய்வோர்க்கு
ஏமன் பயப்படுவான் குதம்பாய்
ஏமன் பயப்படுவான். 123

யோகந் தான்வேண்டி உறுதிகொள் யோகிக்கு
மோகந்தான் இல்லையடி குதம்பாய்
மோகந்தான் இல்லையடி. 124

காலங்கள் கண்டு கடிந்த துறவோர்க்குக்
கோலங்கள் உண்டாமடி குதம்பாய்
கோலங்கள் உண்டாமடி. 125

ஐம்புலன் வென்றே அனைத்தும் துறந்தோர்கள்
சம்புவைக் காண்பாரடி குதம்பாய்
சம்புவைக் காண்பாரடி. 126

பொய்மை வெறுத்திட்டு மெய்யை விரும்பினோர்
மெய்யவர் ஆவாரடி குதம்பாய்
மெய்யவர் ஆவாரடி. 127

யான் என்ன தென்னும் இருவகைப் பற்றற்றோன்
வானவன் ஆவானடி குதம்பாய்
வானவன் ஆவானடி. 128

அகம்புறம் ஆனபற் றற்றமெய்ஞ் ஞானிக்கு
நகுபிறப்பு இல்லையடி குதம்பாய்
நகுபிறப்பு இல்லையடி. 129

பற்றறில் துன்பமும் பற்றறும் இன்பமும்
முற்றாக எய்துமடி குதம்பாய்
முற்றாக எய்துமடி. 130

### அறிவு விளக்கம்

பொய்ஞ்ஞானம் நீக்கியே பூரணம் சார்தற்கு
மெய்ஞ்ஞானம் வேண்டுமடி குதம்பாய்
மெய்ஞ்ஞானம் வேண்டுமடி. 131

பிறவியை நீக்கிடப் பேரின்பம் நோக்கிய
அறிவு பெரிதாமடி குதம்பாய்
அறிவு பெரிதாமடி. 132

தத்துவமாகவே சத்துப்பொருள் கண்டால்
தத்துவ ஞானமடி குதம்பாய்
தத்துவ ஞானமடி. 133

அண்டத்தைக் கண்டதை ஆக்கினோன் உண்டென்று
கண்டது அறிவாமடி குதம்பாய்
கண்டது அறிவாமடி. 134

முக்குற்றம் நீக்கமுயலும் மெய்ஞ் ஞானமே
தக்கமெய்ஞ் ஞானமடி குதம்பாய்
தக்கமெய்ஞ் ஞானமடி. 135

போதம் இதென்றுமெய்ப் போதநிலை காணல்
போதமது ஆகுமடி குதம்பாய்
போதமது ஆகுமடி. 136

## சாதி பேத மின்மை

ஆண்சாதி பெண்சாதி யாகும் இருசாதி
வீண்சாதி மற்றவெல்லாம் குதம்பாய்
வீண்சாதி மற்றவெல்லாம். 137

பார்ப்பார்கள் மேலென்றும் பறையர்கள் கீழென்றும்
தீர்ப்பாகச் சொல்வதென்ன? குதம்பாய்
தீர்ப்பாகச் சொல்வதென்ன? 138

பார்ப்பாரைக் கர்த்தர் பறையரைப் போலவே
தீர்ப்பாய்ப் படைத்தாரடி குதம்பாய்
தீர்ப்பாய்ப் படைத்தாரடி. 139

பற்பல சாதியாய்ப் பாரிற் பகுத்தது
கற்பனை ஆகுமடி குதம்பாய்
கற்பனை ஆகுமடி. 140

சுட்டிடுஞ் சாதிப்பேர் கட்டுச்சொல் லல்லாமல்
தொட்டிடும் வத்தல்லவே குதம்பாய்
தொட்டிடும் வத்தல்லவே. 141

ஆதி பரப்பிரமம் ஆக்கு மக்காலையில்
சாதிகள் இல்லையடி குதம்பாய்
சாதிகள் இல்லையடி. 142

சாதிவேறு என்றே தரம்பிரிப் போருக்குச்
சோதிவே றாகுமடி குதம்பாய்
சோதிவே றாகுமடி. 143

நீதிமானென்றே நெறியாய் இருப்பானே
சாதிமா னாவாடி குதம்பாய்
சாதிமா னாவாடி. 144

சாதி ஒன்றில்லை சமயம் ஒன்றில்லை என்று
ஓதி உணர்ந் தறிவாய் குதம்பாய்
ஓதி உணர்ந் தறிவாய். 145

## சமயநிலை கூறல்

தன்புத்தி தெய்வமாய்ச் சாற்றிய சார்வாகம்
புன்புத்தி ஆகுமடி குதம்பாய்
புன்புத்தி ஆகுமடி. 146

கல்லினைச் செம்பினைக் கட்டையைக் கும்பிடல்
புல்லறி வாகுமடி குதம்பாய்
புல்லறி வாகுமடி. 147

அண்டத்தைக் கண்டு அநாதியில் என்பவர்
கொண்ட கருத்தவமே குதம்பாய்
கொண்ட கருத்தவமே. 148

பெண்ணின்ப முத்தியாய்ப் பேசும்பா டாண்மதம்
கண்ணின்மை ஆகுமடி குதம்பாய்
கண்ணின்மை ஆகுமடி. 149

சூரியன் தெய்மாய்ச் சுட்டுஞ் சமயந்தான்
காரியம் அல்லவடி குதம்பாய்
காரியம் அல்லவடி. 150

மனம்தெய்வம் என்று மகிழ்ந்து கொண்டாடிய
இனமதி ஈனமடி குதம்பாய்
இனமதி ஈனமடி. 151

பற்பல மார்க்கம் பகர்ந்திடும் வேதங்கள்
கற்பனை ஆகுமடி குதம்பாய்
கற்பனை ஆகுமடி. 152

நீண்ட குரங்கை நெடிய பருந்தினை
வேண்டப் பயன்வருமோ? குதம்பாய்
வேண்டப் பயன்வருமோ? 153

மெய்த்தேவன் ஒன்றென்று வேண்டாத பன்மதம்
பொய்த்தேவைப் போற்றுமடி குதம்பாய்
பொய்த்தேவைப் போற்றுமடி. 154

### மந்திரநிலை கூறல்

நாற்பத்து முக்கோணம் நாடும் எழுத்தெலாம்
மேற்பற்றிக் கண்டறி நீ குதம்பாய்
மேற்பற்றிக் கண்டறி நீ. 155

சட்கோணத்து உள்ளந்தச் சண்முக அக்கரம்
உட்கோணத்து உள்ளறி நீ குதம்பாய்
உட்கோணத்து உள்ளறி நீ. 156

ஐந்தெழுத்து ஐந்தறைக் கார்ந்திடும் அவ்வாறே
சிந்தையுள் கண்டறி நீ குதம்பாய்
சிந்தையுள் கண்டறி நீ. 157

### வாதநிலை கூறல்

ஆறாறு காரமும் நூறுமே சேர்ந்திடில்
வீறான முப்பாமடி குதம்பாய்
வீறான முப்பாமடி. 158

விந்தொடு நாதம் விளங்கத் துலங்கினால்
வந்தது வாதமடி குதம்பாய்
வந்தது வாதமடி. 159

அப்பினைக் கொண்டந்த உப்பினைக் கட்டினால்
முப்பூ ஆகுமடி குதம்பாய்
முப்பூ ஆகுமடி. 160

உள்ளக் கருவியே உண்மை வாதம் அன்றிக்
கொள்ளக் கிடையாதடி குதம்பாய்
கொள்ளக் கிடையாதடி. 161

பெண்ணாலே வாதம் பிறப்பதே அல்லாமல்
மண்ணாலே இல்லையடி குதம்பாய்
மண்ணாலே இல்லையடி. 162

ஐந்து சரக்கொடு விந்துநா தம் சேரில்
வெந்திடும் லோகமடி குதம்பாய்
வெந்திடும் லோகமடி. 163

### வயித்தியங் கூறல்

முப்பிணி தன்னை அறியாத மூடர்கள்
எப்பிணி தீர்ப்பாரடி குதம்பாய்
எப்பிணி தீர்ப்பாரடி. 164

எட்டெட்டும் கட்டி இருக்குமேற் தீயினிற்
விட்டோடும் நோய்கள் எல்லாம் குதம்பாய்
விட்டோடும் நோய்கள் எல்லாம். 165

நாடி ஒருபது நன்காய் அறிந்திடில்
ஓடிவிடும் பிணியே குதம்பாய்
ஓடுவிடும் பிணியே. 166

சத்தவகை தாது தன்னை அறிந்தவன்
சுத்த வயித்தியனே குதம்பாய்
சுத்த வயித்தியனே. 167

வாயு ஒருபத்தும் வாய்த்த நிலைகண்டோன்
ஆயுள் அறிவானடி குதம்பாய்
ஆயுள் அறிவானடி. 168

ஆயுள் வேதப்படி அவிழ்த முடித்திடில்
மாயும் வியாதியடி குதம்பாய்
மாயும் வியாதிபடி. 169

### கற்பநிலை கூறல்

பொற்பாந்த முப்பூவைப் போதம் பொசித்தவர்
கற்பாந்தம் வாழ்வாரடி குதம்பாய்
கற்பாந்தம் வாழ்வாரடி. 170

வேவாத முப்பூவை வேண்டி உண் டார்பாரில்
சாவாமல் வாழ்வாரடி குதம்பாய்
சாவாமல் வாழ்வாரடி. 171

விந்து விடார்களே வெடிய சுடலையில்
வெந்து விடார்களடி குதம்பாய்
வெந்து விடார்களடி. 172

தொல்லைச் சடம்விட்டுச் சுட்ட சடம்கொண்டோர்
எல்லையில் வாழ்வாரடி குதம்பாய்
எல்லையில் வாழ்வாரடி. 173

தோற்பையை நீக்கிநற் சோதிப்பை கொண்டவர்
மேற்பைநஞ் சுண்பாரடி குதம்பாய்
மேற்பைநஞ் சுண்பாரடி. 174

மாற்றினை ஏற்ற வயங்கும்நெடி யோர்களே
கூற்றினை வெல்வாரடி குதம்பாய்
கூற்றினை வெல்வாரடி. 175

### தலங்களிவை எனல்

கோயில் பலதேடிக் கும்பிட்ட தால்உனக்கு
ஏயும் பலன் வருமோ? குதம்பாய்
ஏயும் பலன் வருமோ? 176

சித்தத் தலம்போலத் தெய்வம் இருக்கின்ற
சுத்தத் தலங்களுண்டோ? குதம்பாய்
சுத்தத் தலங்களுண்டோ? 177

மெய்த்தலத்து இல்லாத மெய்ப்பொருள் ஆனவர்
பொய்த்தலத் தெய்வத்துண்டோ? குதம்பாய்
பொய்த்தலத் தெய்வத்துண்டோ? 178

சிற்பர்கள் கட்டுந் திருக்கோயில் உள்ளாகத்
தற்பரம் வாழ்வதுண்டோ? குதம்பாய்
தற்பரம் வாழ்வதுண்டோ? 179

தன்னால் உண்டாம்சிட்டி தன்னாலே சிட்டித்த
புன்கோயில் உள்ளவன்யார்? குதம்பாய்
புன்கோயில் உள்ளவன்யார்? 180

அன்பான பத்தர் அகக்கோயில் கர்த்தற்கே
இன்பான கோயிலடி குதம்பாய்
இன்பான கோயிலடி. 181

## தேவநிலை அறிதல்

தன்னுள் விளங்கிய சம்புவைக் காணாது
மன்னும் தலத்தெய்வதென்? குதம்பாய்
மன்னும் தலத்தெய்வதென்? 182

இருந்த இடத்தில் இருந்தே அறியாமல்
வருந்தித் திரிவதென்னோ? குதம்பாய்
வருந்தித் திரிவதென்னோ? 183

காசி ராமேச்சுரம் கால் நோவச் சென்றாலும்
ஈசனைக் காணுவையோ? குதம்பாய்
ஈசனைக் காணுவையோ? 184

பூவதில் நாளும் பொருந்தித் திரியினும்
தேவனைக் காணுவையோ? குதம்பாய்
தேவனைக் காணுவையோ? 185

உள்ளங்கால் வெள்ளெலும்பாக உலாவினும்
வள்ளலைக் காணுவையோ? குதம்பாய்
வள்ளலைக் காணுவையோ? 186

போரினில் ஊசி பொறுக்கத் துணிதல்போல்
ஆரியன் தேடுதலே குதம்பாய்
ஆரியன் தேடுதலே. 187

சாதனை யாலே தனிப்பதஞ் சேரார்க்கு
வேதனை யாகுமடி குதம்பாய்
வேதனை யாகுமடி. 188

**வேதனை நீங்கி விடாது தொடர்ந் தோரே**
**நாதனைக் காணுவர்காண் குதம்பாய்**
**நாதனைக் காணுவர்காண்.** 189

**நாடில் வழக்கம் அறிந்து செறிந்தவர்**
**நீடொளி காணுவரே குதம்பாய்**
**நீடொளி காணுவரே.** 190

## அஞ்ஞானங் கடிதல்

**மீளா வியாதியில் மேன்மேலும் நொந்தார்க்கு**
**நாளேது கோளேதடி குதம்பாய்**
**நாளேது கோளேதடி.** 191

**தீட்டால் உடம்பு திறங்கொண்டிருக்கையில்**
**தீட்டென்று சொல்வதென்னை? குதம்பாய்**
**தீட்டென்று சொல்வதென்னை?** 192

**செத்தபின் சாப்பறை செத்தார்க்குச் சேவித்தால்**
**சத்தம் அறிவாரடி குதம்பாய்**
**சத்தம் அறிவாரடி.** 193

**தந்தைதாய் செய்வினை சந்ததிக்கு ஆமென்பார்**
**சிந்தை தெளிந்திலரே குதம்பாய்**
**சிந்தை தெளிந்திலரே.** 194

**பிள்ளைகள் செய்தன்மம் பெற்றோர்க்கு உறுமென்றால்**
**வெள்ளறி வாகுமடி குதம்பாய்**
**வெள்ளறி வாகுமடி.** 195

**பந்தவினைக்கு ஈடாடிப் பாரிற் பிறந்தோர்க்குச்**
**சொந்தமது இல்லையடி குதம்பாய்**
**சொந்தமது இல்லையடி.** 196

**பார்ப்பார் சடங்கு பலனின்று பாரிலே**
**தீர்ப்பாக எண்ணிடுவாய் குதம்பாய்**
**தீர்ப்பாக எண்ணிடுவாய்.** 197

**அந்தணர்க்கு ஆவை அளித்தோர்கள் ஆவிக்குச்**
**சொந்தமோ முத்தியடி குதம்பாய்**
**சொந்தமோ முத்தியடி.** 198

வேதியர் கட்டிய வீணான வேதத்தைச்
சோதித்துத் தள்ளடியோ குதம்பாய்
சோதித்துத் தள்ளடியோ. 199

தன்பாவம் நீக்காத தன்மயர் மற்றவர்
வன்பாவம் நீக்குவரோ? குதம்பாய்
வன்பாவம் நீக்குவரோ? 200

வேள்வியில் ஆட்டினை வேவச்செய்து உண்போர்க்கு
மீள்வழி இல்லையடி குதம்பாய்
மீள்வழி இல்லையடி. 201

வேதம் புராணம் விளங்கிய சாத்திரம்
போதனை ஆகுமடி குதம்பாய்
போதனை ஆகுமடி. 202

யாகாதி கன்மங்கள் யாவும் சடங்குகள்
ஆகாத செய்கையடி குதம்பாய்
ஆகாத செய்கையடி. 203

சாற்றும் சகுணங்கள் சந்தியா வந்தனம்
போற்றும் அறிவீனமே குதம்பாய்
போற்றும் அறிவீனமே. 204

ஆனதோர் நாள் என்றல் ஆகாத நாள் என்றல்
ஞானம்இல் லாமையடி குதம்பாய்
ஞானம்இல் லாமையடி. 205

அஞ்சனம் என்றது தறியாமல் ஏய்க்குதல்
வஞ்சனை ஆகுமடி குதம்பாய்
வஞ்சனை ஆகுமடி. 206

மாய வித்தை பல மாநிலத்தில் செய்கை
தீய தொழி லாமடி குதம்பாய்
தீய தொழி லாமடி. 207

கருவை அழித்துக் கன் மத்தொழில் செய்குதல்
திருவை அழிக்குமடி குதம்பாய்
திருவை அழிக்குமடி. 208

மாரணஞ் செய்துபல் மாந்தரைக் கொல்வது
 சூரணம் ஆக்குமடி குதம்பாய்
 சூரணம் ஆக்குமடி. 209

பொய்யான சோதிடர் பொய்மொழி யாவுமே
 வெய்ய மயக்கமடி குதம்பாய்
 வெய்ய மயக்கமடி. 210

மெய்க்குறி கண்டு விளங்க அறியார்க்குப்
 பொய்க்குறி யேதுக்கடி குதம்பாய்
 பொய்க்குறி யேதுக்கடி. 211

நாயாட்ட மாய் நகைத்துழல் மூடர்க்குப்
 பேயாட்ட மேதுக்கடி குதம்பாய்
 பேயாட்ட மேதுக்கடி. 212

மந்திர மூலம் வகுத்தறி யாதார்க்குத்
 தந்திரம் ஏதுக்கடி குதம்பாய்
 தந்திரம் ஏதுக்கடி. 213

வாதமென்றே பொய்யை வாயிற் புடைப்போர்க்குச்
 சேதம் மிகவருமே குதம்பாய்
 வேதம் மிகவருமே. 214

வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்கு
 பட்டய மேதுக்கடி குதம்பாய்
 பட்டய மேதுக்கடி. 215

மெய்ப்பொருள் கண்டு விளங்கும் மெய்ஞ்ஞானிக்கு
 கற்பங்க ளேதுக்கடி குதம்பாய்
 கற்பங்க ளேதுக்கடி. 216

காணாமற் கண்டு கருத்தோ டிருப்பார்க்கு
 வீணாசை யேதுக்கடி குதம்பாய்
 வீணாசை யேதுக்கடி. 217

வஞ்சக மற்று வழிதனைக் கண்டோர்க்கு
 சஞ்சல மேதுக்கடி குதம்பாய்
 சஞ்சல மேதுக்கடி. 218

ஆதார மான அடிமுடி கண்டோர்க்கு
வாதாட்ட மேதுக்கடி குதம்பாய்
வாதாட்ட மேதுக்கடி. 219

நித்திரை கெட்டு நினைவோ டிருப்போர்க்கு
முத்திரை யேதுக்கடி குதம்பாய்
முத்திரை யேதுக்கடி. 220

தந்திர மான தலந்தனில் நிற்போர்க்கு
மந்திர மேதுக்கடி குதம்பாய்
மந்திர மேதுக்கடி. 221

சத்தியமான தவத்தி லிருப்போர்க்கு
உத்திய மேதுக்கடி குதம்பாய்
உத்திய மேதுக்கடி. 222

நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்க ளேதுக்கடி குதம்பாய்
வாட்டங்க ளேதுக்கடி. 223

முத்தமிழ் கற்று முயங்குமெய்ஞ் ஞானிக்கு
சத்தங்க ளேதுக்கடி குதம்பாய்
சத்தங்க ளேதுக்கடி. 224

உச்சிக்கு மேற்சென்று உயர்வெளி கண்டோருக்கு
இச்சிப்பிங் கேதுக்கடி குதம்பாய்
இச்சிப்பிங் கேதுக்கடி. 225

வேகாமல் வெந்து வெளியொளி கண்டோர்க்கு
மோகாந்த மேதுக்கடி குதம்பாய்
மோகாந்த மேதுக்கடி. 226

சாகாமற் றாண்டி தனிவழி போவார்க்கு
ஏகாந்த மேதுக்கடி குதம்பாய்
ஏகாந்த மேதுக்கடி. 227

அந்தரந் தன்னி லசைந்தாடு முத்தர்க்குத்
தந்திர மேதுக்கடி குதம்பாய்
தந்திர மேதுக்கடி. 228

ஆனந்தம் பொங்கி அறிவோ டிருப்போர்க்கு
ஞானந்தா னேதுக்கடி குதம்பாய்
ஞானந்தா னேதுக்கடி. 229

சித்திரக் கூட்டத்தைத் தினந்தினங் காண்போர்க்குப்
பத்திர மேதுக்கடி குதம்பாய்
பத்திர மேதுக்கடி. 230

முக்கோணந் தன்னில் முளைத்தமெய்ஞ் ஞானிக்குச்
சட்கோண மேதுக்கடி குதம்பாய்
சட்கோண மேதுக்கடி. 231

அட்டதிக் கெல்லால் அசைந்தாடும் நாதர்க்கு
நட்டணை யேதுக்கடி குதம்பாய்
நட்டணை யேதுக்கடி. 232

முத்திபெற் றுள்ளம் முயங்குமெய்ஞ் ஞானிக்குப்
பத்திய மேதுக்கடி குதம்பாய்
பத்திய மேதுக்கடி. 233

அல்லலை நீக்கி அறிவோ டிருப்பார்க்குப்
பல்லாக் கேதுக்கடி குதம்பாய்
பல்லாக் கேதுக்கடி. 234

அட்டாங்கயோகம் அறிந்தமெய்ஞ் ஞானிக்கு
முட்டாங்க மேதுக்கடி குதம்பாய்
முட்டாங்க மேதுக்கடி. 235

வேகம் அடக்கி விளங்குமெய்ஞ் ஞானிக்கு
யோகந்தா னேதுக்கடி குதம்பாய்
யோகந்தா னேதுக்கடி. 236

மாத்தானை வென்று மலைமே லிருப்போர்க்குப்
பூத்தான மேதுக்கடி குதம்பாய்
பூத்தான மேதுக்கடி. 237

செத்தாமரைப் போலத் திரியுமெய்ஞ் ஞானிக்குக்
கைத்தாள மேதுக்கடி குதம்பாய்
கைத்தாள மேதுக்கடி. 238

கண்டாரை நோக்கிக் கருத்தோ டிருப்போர்க்குக்
கொண்டாட்ட மேதுக்கடி குதம்பாய்
கொண்டாட்ட மேதுக்கடி. 239

காலனை வென்ற கருத்தறி வாளர்க்குக்
கோலங்க ளேதுக்கடி குதம்பாய்
கோலங்க ளேதுக்கடி. 240

வெண்காய முண்டு மிளகுண்டு சுக்குண்டு
உண்காய மேதுக்கடி குதம்பாய்
உண்காய மேதுக்கடி. 241

மாங்காய்ப்பா லுண்டு மலைமே லிருப்போர்க்குத்
தேங்காய்ப்பா லேதுக்கடி குதம்பாய்
தேங்காய்ப்பா லேதுக்கடி. 242

பட்டணஞ் சுற்றிப் பகலே திரிவார்க்கு
முட்டாக் கேதுக்கடி குதம்பாய்
முட்டாக் கேதுக்கடி. 243

தாவார மில்லை தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி குதம்பாய்
தேவார மேதுக்கடி. 244

தன்னை யறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்கு
பின்னாசை யேதுக்கடி குதம்பாய்
பின்னாசை யேதுக்கடி. 245

பத்தாவுந் தானும் பதியோ டிருப்போர்க்கு
உத்தார மேதுக்கடி குதம்பாய்
உத்தார மேதுக்கடி. 246

## 7. கடுவெளிச் சித்தர் பாடல்

கடுவெளி என்பது 'வெட்டவெளி' அதாவது பிரமம். இந்தச் சித்தர் பிரபஞ்சத்தை வெட்ட வெளியாகக் கண்டு தம் ஆத்மானுபவத்தைப் பிறரும் அறிந்து நலம் பெறுவதற்காகப் பாடிய பாடல்கள் கடுவெளிச் சித்தர் பாடல்களாக நமக்கு அறிமுகமாகின்றன. இவரது இயற்பெயரோ வரலாறோ தெரியாத நிலையில் இவரது ஜீவசமாதி காஞ்சிபுரத்தில் இருக்கிறது என்ற செய்தியை மட்டும் போகர் தெரிவிக்கின்றார்.

வானென்ற கடுவெளிச் சித்தர்தானும்
வளமான திருக்காஞ்சிப் பதியிலாச்சு

இந்த 'திருக்காஞ்சிப்பதி' என்ற ஊரைப் புதுச்சேரிக் கருகிலுள்ள 'திருக்காஞ்சி' என்ற ஊராகக் கருதி அங்குள்ள காசி விசுவநாதர் ஆலயம் தான் அவர் ஜீவசமாதி கொண்ட தலம் என்று சுட்டுவாருளர். இது ஆய்வுக்குரியது.

இந்த சித்தரைப் பற்றி அறியாத நிலையில் இவர் பாடிய 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி' பாடல் தமிழகமெங்கும் வெகுபிரசித்தம்.

"நந்தவனத்தில் ஓர் ஆண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி"

என்ன அருமையான சொல்லாட்சி. இலக்கணம் பிறழாமல் அதே சமயம் எளிமை கூட்டி பாடலின் வரிகளைக் கொண்டு இவர் பிற்கால சித்தராயிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது.

ஏழை ஆண்டி ஒருவன் தினசரி பிச்சையேற்று உண்பவன். தனக்கென்று ஏதும் வைத்துக்கொள்ளாத அவன் ஒருநாள் நந்தவனமொன்றைக் காண்கிறான். என்ன வித விதமான வண்ண மலர்கள். வாசம் மிகுந்த மலர்கள் தனிமையில் இங்கு அமர்ந்து இயற்கையை ரசிப்பது எவ்வளவு சுகமாக இருக்கிறது. அருகில் ஒரு சேய்குளம். நிறைந்துதான் இருக்கிறது ஆனாலும் என்ன பயன்? செடி கொடிகளுக்குத் தேவையான நீர் வானம் மழைப் பொழியும் போது மட்டுந்தானே கிடைக்கிறது. குளம் நிறைய தண்ணீர் இருந்தாலும் வான்

மழையை மட்டுமே எதிர்பார்த்துக் காத்திருக்கும் இந்த நந்தவனத்திற்கு குளத்து நீரை தினசரி ஊற்றினால் எவ்வளவு செழுமையாக இருக்கும்?

ஆண்டியின் கற்பனை அளவுக்கு அதிகமானதுதான். அதனைச் செயலாக்கிப் பார்த்தால்தான் என்ன? பக்கத்து ஊரில் உள்ள குயவன் ஒருவனைப் பார்க்கிறான். தனக்குக் குடம் ஒன்று வனைந்து கொடுக்குமாறு கேட்கிறான்.

குயவன் ஆண்டியை மேலும் கீழுமாகப் பார்க்கிறான். அவனுக்குச் சிரிப்புதான் வருகிறது.

“ஏன் சிரிக்கிறீர்?”

“நீயோ ஆண்டி, உனக்கெதற்கய்யா தோண்டி?” குயவன் குசும்பாகக் கேட்டான்.

“உனக்கெதற்கு அந்தக் கதையெல்லாம். தோண்டி கேட்டால் கொடுக்க வேண்டியதுதானே? எதற்கு தேவையற்ற கேள்வி?”

“சரி எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு தோண்டி எட்டணா.”

“என்ன தோண்டிக்கு விலையா?”

“ம்,,, பின்னே என்ன இனாமாகவா தருவார்கள். உன்னைப் பார்த்தாலே வாங்குகிற மூஞ்சில்லை என்றுதான் உனக்கு எதற்கு தோண்டி என்றேன்.”

ஆண்டியின் சுருதி இறங்கி விட்டது. “ஐயா நானோ ஆண்டி, எம்மிடம் நீர் விலை சொல்வது நியாயமா? ஏதாவது தர்மம் செய்வதாக நினைத்துக் கொண்டு இந்தத் தோண்டியைத் தரக்கூடாதா?”

ஆண்டியின் பேச்சு குயவன் மனதை இளக்கவில்லை. “போ, போ, காலையில் வந்து வியாபாரத்தைக் கெடுத்துக் கொண்டு,,,,,,” குயவன் வேறு வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டான்.

ஆனால் ஆண்டி போகவில்லை. அவன் பார்வையில் படும் இடமாகப் பார்த்து தூரத்தே அமர்ந்து கொண்டான். தினசரி பிச்சை எடுத்த நேரம் போக மீதி நேரத்தை அந்த மரத்தடியில் அமர்ந்து குயவன் வியாபாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நாளில்லை ஒருநாள் மனமிறங்கித் தோண்டி தர மாட்டானா என்ன?

இப்படியே ஒரு நாளல்ல, ஒருமாதமல்ல, பத்து மாதங்கள் கடந்து விட்டன. ஆண்டியின் பொறுமை குயவனைக் கொஞ்சம் கொஞ்சமாக

மாற்றியது. குயவனும் போனால் போகிறது என்று நன்கு வனைந்த குடமொன்றை அந்த ஆண்டிக்கு அன்பளிப்பாக வழங்கினான்.

ஆண்டியின் சந்தோஷத்திற்கு அளவேது. ஆகா, இனி என்னைவிட பணக்காரன் உலகில் யாருமில்லை. இந்த குடத்தைக் கொண்டு குளத்து நீரைச் செடிகளுக்குப்

பாய்ச்சுவேன். செடிகளெல்லாம் நிறைய பூக்களைப் பூக்கும். பூக்களையெல்லாம் பறித்துக்கொண்டு போய் நல்ல விலைக்கு விற்பேன். எனக்குப் பெரும் பொருள் சேரும். அந்தப் பொருளைக் கொண்டு பெரிய மடம் ஒன்றைக் கட்டுவேன். அந்த மடத்தில் நிறைய ஆண்டிகள் தங்குவார்கள்.

ஆண்டி மடம் கட்டினான் கற்பனையில். சரி, கற்பனைக்கு யார் தடை விதிக்கப் போகிறார்கள்? அரும்பாடுபட்டு வாங்கி வந்த தோண்டியை அருமையாகப் பாதுகாக்க வேண்டு மல்லவா? தனக்குத் தோண்டி கிடைத்துவிட்ட சந்தோஷத்தில் தலையில் வைத்துக் கொண்டு ஆடாத ஆட்டமெல்லாம் ஆடிப் பார்த்தான். சந்தோஷத்தில் என்ன செய்கிறோம் என்று தெரியாமல் அந்தத் தோண்டியைப் பொத்தென்று கீழே போட்டு உடைத்து விட்டான்.

பத்து மாதங்கள் குயவனிடம் கெஞ்சி வாங்கி வந்த குடம் பத்தே விநாடிகளில் 'படார்'. இனியென்ன செய்வது? குயவன் மறுபடியும் ஒரு தோண்டி தருவானா? கேள்விக்குறியுடன் பரிதாபமாகக் குயவனைப் பார்க்கிறான் ஆண்டி.

இது சாதாரண ஆண்டி, குயவன், தோண்டி கதையல்ல. மனிதனின் ஜீவரகசியம். பத்து மாதம் தவமிருந்து கிடைக்கப்பெற்ற உடலை அவன் போற்றி பாதுகாக்காது அற்ப சுகங்களுக்கு ஆசைப்பட்டு வீணே அழித்து வருகிறானே என்ற அனுதாபத்தில் பாடப்பட்டது.

பத்து மாதங்களாகத் தவம் செய்து பெற்றது மனிதா நீ கூத்தாடிக் கூத்தாடிப் போட்டு உடைப்பதற்குத்தானோ?

அடப்பாவீ, எவ்வளவு அருமையான சந்தர்ப்பத்தைப் பெற்றிருக்கிறாய். இந்த உடல் உள்ள போதே ஆன்மா கடைத்தேற வழி காண வேண்டாமா? என்று மனிதனை இடித்துரைக்கின்றார் கடுவெளிச் சித்தர்.

தோண்டியை உடைத்த ஆண்டியைப் போல மேற் கொண்டு என்ன செய்வது என்று நாம் திகைத்திருக்கும் போது தமது அனுபவ உபதேசங்களை அள்ளி விடுகின்றார் சித்தர்.

“தூடணமாகச் சொல்லாதே”
“ஏடணை மூன்றும் பொல்லாதே”

“நல்லவர் தம்மைத் தள்ளாதே”

“பொல்லாங்குச் சொல்லாதே”

“பொய்மொழி, கோள்கள் பொருத்தமாகக்கூட சொல்லாதே”

“பெண்ணாசைக் கொண்டு அலையாதே”

“மனம் போன போக்கு போகாதே”

“மைவிழியாரைச் சாராதே”

“மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே”

“வைதோரைக் கூட வையாதே - இந்த
வையமுழுதும் பொய்த்தாலும் நீ பொய்யாதே”

“வைய வினைகள் செய்யாதே”

“பாம்பினைப் பற்றி யாட்டாதே - உன்றன்
பத்தினிமார் மகளைப் பழித்துக் காட்டாதே”

“கஞ்சா புகையாதே”

“வெறிகாட்டி மயக்கம்தரும் கள்ளைக் குடிக்காதே”

“மூடனுக்கு அறிவுரைப் புகலாதே”

“கள்ள வேடம் புனையாதே”

“கொள்ளைக் கொள்ள நினையாதே”

என்று செய்யக்கூடாதவற்றையெல்லாம் பட்டியலிடுகின்றார்.

அப்படி இவையெல்லாம் செய்யக்கூடாதது என்றால் செய்யக்கூடியதுதான் என்ன என்று கேட்பவருக்கு மீண்டும் ஒரு பட்டியலை நீட்டுகின்றார்."நல்ல வழிதனை நாடு"

"எந்த நாளும் பரமனை நத்தி தேடு"

"வல்லவர் கூட்டத்திற்கூடு"

"வேத விதிப்படி நில்லு"

"நல்லோர் மேவும் வழியினை வேண்டியே செல்லு"

"சாதக நிலைமையையே சொல்லு"

"பொல்லாத சண்டாளக் கோபத்தைச் சாதித்துக் கொல்லு"

"மெய்ஞ்ஞானப் பாதையி லேறு - சுத்த
வேதாந்த வெட்டவெளிதனை தேடு"

மனித வாழ்க்கை நிலையில்லாதது என்பதை 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி' பாடல் மூலம் குறிப்பாகச் சொன்ன கடுவெளிச் சித்தர் அந்தக் குறிப்பைப் புரிந்துகொள்ளாத பக்குவமில்லாத பாமரர்களுக்குப் புரியும்வண்ணம் அதே கருத்தமைந்த மற்றொரு பாடலையும் பாடுகின்றார்.

"நீர்மேற் குமிழியிக் காயம் - இது
நில்லாது போய்விடும் நீயறி மாயம்
பார்மீதின் மெத்தவும் நேயம் - சற்றும்
பற்றா திருந்திடப் பண்ணு முபாயம்"

அழகான வர்ணஜாலங்களுடன் மிதந்து வரும் நீர்க்குமிழியானது காற்று வேகமாக அடித்தாலோ அல்லது எதன் மீதாவது மோதினாலோ பட்டென்று உடைந்து தெரிந்து விடும். மனித வாழ்வும் இப்படித்தான் மாட மாளிகை, ஆள், அம்பு சேனைகளுடன் பெரும் சிறப்புடன் வாழ்ந்தாலும் திடீரென்று அழிவுற்றுக் காணாமல் போய்விடும். இந்த மாய வித்தையின் இரகசியத்தை மனிதா நீ அறிந்து அழியும் உலகப் பொருள்களின் மேல் பற்று வைக்காமல் இருப்பாயாக என்கிறார்.

மேலும் இந்த உலக வாழ்க்கை மட்டுமல்ல, நீகூட நிலையில்லாத ஒரு பொருள்தான். இந்த உலகம் உனக்குத்தான் சொந்தம் என்று உலகிலுள்ள பொருட்களைச் சொந்தம் கொண்டாடி சேர்த்து வைக்காதே. இன்று உனக்குச்

சொந்தமான அந்தப் பொருட்களெல்லாம் நாளை வேறொருவருக்குச் சொந்தமாகும்.

நீ நிரந்தரமானவன் இல்லை. உன்னை உன் உயிரை என்றைக்காயினும் எமன் கொண்டோடிப் போவான். ஆகையால் பாபஞ் செய்யாதிருப்பாயாக என்று உபதேசமும் செய்கிறார்.

பாபஞ் செய்யாதிரு மனமே - நாளைக்
கோபஞ் செய்தே யமன்
கொண்டோடிப் போவான்
பாபஞ் செய்யாதிரு மனமே

முடிந்த வரை உன் வாழ்க்கையில் யாருக்கும் வயிறெரிந்து சாபமிடாதே. ஒவ்வொன்றும் விதிப்படிதான் நடக்கும். ஆகையால் உன் வயிற்றெரிச்சல் அந்த மனிதனைத் துன்பத்திற்காட்படுத்தும் என்பதையும் அறிந்து கோபத்தைக் கட்டுப்படுத்து என்றும் அறிவுரை கூறுகின்றார்.

“சாபங் கொடுத்திடலாமோ - விதி
தன்னை நம்மாலே தடுத்திட லாமோ
கோபங் தொடுத்திட லாமோ - இச்சை
கொள்ளக் கருத்தைக் கொடுத்திடலாமோ”

கடுவெளிச் சித்தர் பாடல்கள் ஆனந்தக்களிப்பு வகையைச் சார்ந்தது. மனித வாழ்க்கைக்கு இன்பமும் மகிழ்ச்சியையும் தரும் பாடல்களாதலால் இவைகளை ஆனந்தக் களிப்பில் பாடினாற் போலும்.

“மெய்ஞானப் பாதையிலேறு - சுத்த
வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு
அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு - உன்னை
அண்டினோர்க் கானந்தமாம் வழி கூறு”

என்று நாம் செய்ய வேண்டிய வழிமுறைகளைத் தெளிவாகத் தம் பாடலில் கூறியுள்ளார் கடுவெளிச் சித்தர்.

## ஆனந்தக்களிப்பு

### பல்லவி

**பாபஞ்செய் யாதிரு மனமே - நாளைக்**
**கோபஞ்செய் தேயமன்**

கொண்டோடிப் போவான்
பாபஞ்செய் யாதிரு மனமே.

சாபங்கொடுத்திட லாமோ - விதி
  தன்னைநம் மாலே தடுத் திடலாமோ
கோபந் தொடுத்திட லாமோ - இச்சை
  கொள்ளக் கருத்தைக் கொடுத்திட லாமோ. பாப

சொல்லருஞ் சூதுபொய் மோசம் - செய்தாற்
  சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்
நல்லபத் திவிசு வாசம் - எந்த
  நாளும் மனிதர்க்கு நன்மையாம் நேசம். பாப

நீர்மேற் குமிழியிக் காயம் - இது
  நில்லாது போய்விடும் நீயறி மாயம்
பார்மீதில் மெத்தவும் நேயம் - சற்றும்
  பற்றா திருந்திடப் பண்ணு முபாயம். பாப

நந்த வனத்திலோ ராண்டி - அவன்
  நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டுவந் தானொரு தோண்டி - மெத்தக்
  கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி. பாப

தூடண மாகச்சொல் லாதே - தேடுஞ்
  சொத்துக்க ளிலொரு தூசும் நில் லாதே
ஏடணை மூன்றும் பொல்லாதே - சிவத்
  திச்சைவைத் தாலெம லோகம் பொல் லாதே. பாப

நல்ல வழிதனை நாடு - எந்த
  நாளும் பரமனை நத்தியே தேடு
வல்லவர் கூட்டத்திற் கூடு - அந்த
  வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக்கொண் டாடு. பாப

நல்லவர் தம்மைத்தள் ளாதே - அறம்
  நாலெட்டில் ஒன்றேனும் நாடித்தள் ளாதே
பொல்லாங்கில் ஒன்றுங்கொள் ளாதே - கெட்ட
  பொய்ம்மொழிக் கோள்கள் பொருந்த விள்ளாதே. பாப

வேத விதிப்படி நில்லு - நல்லோர்
  மேவும் வழியினை வேண்டியே செல்லு பாப

சாதக நிலைமையே சொல்லு - பொல்லாச்
 சண்டாளக் கோபத்தைச் சாதித்துக் கொல்லு.

பிச்சையென் றொன்றுங் கேள்ளாதே - எழில்
 பெண்ணாசை கொண்டு பெருக்கமா ளாதே
இச்சைய துன்னை யாளாதே - சிவன்
 இச்சைகொண் டவ்வழி யேறிமீ ளாதே. பாப

மெய்ஞ்ஞானப் பாதையி லேறு - சுத்த
 வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு

அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு - உன்னை
 அண்டினோர்க் கானந்த மாம்வழி கூறு. பாப

மெய்க்குரு சொற்கட வாதே - நன்மை
 மென்மேலுஞ்செய்கை மிகவடக் காதே
பொய்க்கலை யால்நட வாதே - நல்ல
 புத்தியைப் பொய்வழி தனில்நடத் தாதே. பாப

கூட வருவதொன் றில்லை - புழுக்
 கூடெடுத் திங்கள் உலவுவதே தொல்லை
தேடரு மோட்சம தெல்லை - அதைத்
 தேடும் வழியைத் தெளிவோரு மில்லை. பாப

ஐந்துபேர் சூழ்ந்திடுங் காடு - இந்த
 ஐவர்க்கும் ஐவர் அடைந்திடும் நாடு
முந்தி வருந்திநீ தேடு - அந்த
 மூலம் அறிந்திட வாமுத்தி வீடு. பாப

உள்ளாக நால்வகைக் கோட்டை - பகை
 ஓடப் பிடித்திட்டால் ஆளலாம் நாட்டை
கள்ளப் புலனென்னும் காட்டை - வெட்டிக்
 கனலிட் டெரித்திட்டாற் காணலாம் வீட்டை. பாப

காசிக்கோ டில்வினை போமோ - அந்தக்
 கங்கையா டில்கதி தானுமுண் டாமோ
பேசமுன் கன்மங்கள் சாமோ - பல
 பேதம் பிறப்பது போற்றினும் போமோ. பாப

பொய்யாகப் பாராட்டுங் கோலம் - எல்லாம்
 போகவே வாய்த்திடும் யாவர்க்கும்போங் காலம் பாப

மெய்யாக வேசுத்த சாலம் - பாரில்
  மேவப் புரிந்திடில் என்னனு கூலம்.

சந்தேக மில்லாத தங்கம் - அதைச்
  சார்ந்துகொண் டாலுமே தாழ்வில்லா பொங்கம்
அந்தமில் லாதவோர் துங்கம் - எங்கும்
  ஆனந்த மாக நிரம்பிய புங்கம். பாப

பாரி லுயர்ந்தது பத்தி - அதைப்
  பற்றின பேர்க்குண்டு மேவரு முத்தி
சீரி லுயரட்ட சித்தி - யார்க்குஞ்
  சித்திக்கு மேசிவன் செயலினால் பத்தி. பாப

அன்பெனும் நன்மலர் தூவிப் - பர
  மானந்தத் தேவின் அடியினை மேவி
இன்பொடும் உன்னுட லாவி - நாளும்
  ஈடேற்றத் தேடாய்நீ இங்கே குலாவி. பாப

ஆற்றறும் வீடேற்றங் கண்டு - அதற்
  கான வழியை யறிந்து நீ கொண்டு
சீற்றமில் லாமலே தொண்டு - ஆதி
  சிவனுக்குச் செய்திடிற் சேர்ந்திடுங் கொண்டு. பாப

ஆன்மாவா லாடிடு மாட்டந் - தேகத்
  தான்மா அற்றபோதே யாமுடல் வாட்டம்
வான்கதி மீதிலே நாட்டம் - நாளும்
  வையி லுனக்கு வருமே கொண் டாட்டம். பாப

எட்டு மிரண்டையும் ஓர்ந்து - மறை
  எல்லா முனக்குள்ளே ஏகமாய்த் தேர்ந்து
வெட்ட வெளியினைச் சார்ந்து - ஆனந்த
  வெள்ளத்தின் மூழ்கி மிகுகளி கூர்ந்து. பாப

இந்த வுலகமு முள்ளுஞ் - சற்றும்
  இச்சைவை யாமலே எந்நாளுந் தள்ளு
செந்தேன்வெள் ளமதை மொள்ளு - உன்றன்
  சிந்தைதித் திக்கத் தெவிட்டவுட் கொள்ளு. பாப

பொய்வேதந் தன்னைப் பாராதே - அந்தப்
  போதகர் சொற்புத்தி போதவோ ராதே பாப

மைவிழி யாரைச்சா ராதே - துன்
 மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே.

வைதோரைக் கூடவை யாதே - இந்த
 வைய முழுதும் பொய்த் தாலும்பொய் யாதே

வெய்ய வினைகள்செய் யாதே - கல்லை
 வீணில் பறவைகள் மீதிலெய் யாதே. பாப

சிவமன்றி வேறே வேண்டாதே - யார்க்குந்
 தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே
தவநிலை விட்டுத்தாண் டாதே - நல்ல
 சன்மார்க்க மில்லாத நூலைவேண் டாதே. பாப

பாம்பினைப் பற்றியாட் டாதே - உன்றன்
 பத்தினி மார்களைப் பழித்துக்காட் டாதே
வேம்பினை யுலகிலூட் டாதே - உன்றன்
 வீறாப்பு தன்னை விளங்க நாட்டாதே. பாப

போற்றுஞ் சடங்கைநண் ணாதே - உன்னைப்
 புகழ்ந்து பலரிற் புகலவொண் ணாதே
சாற்றுமுன் வாழ்வையெண் ணாதே - பிறர்
 தாழும் படிக்குநீ தாழ்வைப்பண் ணாதே. பாப

கஞ்சாப் புகைபிடி யாதே - வெறி
 காட்டி மயங்கியே கட்குடி யாதே
அஞ்ச வுயிர்மடி யாதே - புத்தி
 அற்றவஞ் ஞானத்தி னூல்படி யாதே. பாப

பத்தி யெனுமேனி நாட்டித் - தொந்த
 பந்தமற் றவிடம் பார்த்ததை நீட்டி
சத்திய மென்றதை யீட்டி - நாளுந்
 தன்வச மாக்கிக்கொள் சமயங்க ளோட்டி. பாப

செப்பரும் பலவித மோகம் - எல்லாம்
 சீயென் றொறுத்துத் திடங்கொள் விவேகம்
ஒப்பரும் அட்டாங்க யோகம் - நன்றாய்
 ஓர்ந்தறி வாயவற் றுண்மைசம் போகம். பாப

எவ்வகை யாகநன் னீதி - அவை
 எல்லா மறிந்தே யெடுத்துநீபோதி பாப

ஒவ்வாவென்ற பல சாதி - யாவும்
 ஒன்றென் றறிந்தே யுணர்ந்துற வோதி.

கள்ளவே டம்புனை யாதே - பல
 கங்கையி லேயுன் கடம்நனை யாதே
கொள்ளைகொள் ளநினை யாதே - நட்புக்
 கொண்டு பிரிந்துநீ கோள்முனை யாதே. பாப

எங்குஞ் சயப்பிர காசன் - அன்பர்
 இன்ப இருதயத் திருந்திடும் வாசன்
துங்க அடியவர் தாசன் - தன்னைத்
 துதிக்கிற் பதவி அருளுவன் ஈசன். பாப

# 8. அழுகணிச் சித்தர் பாடல்

அழுத கண்ணீருடன் காணப்பட்ட சித்தர் அல்லது இவரது பாடல்களைப் படிக்கும்தோறும் அழுகை உணர்ச்சி உண்டாவதால் 'அழுகண்' சித்தர் எனப்பட்டார் போலும்.

இவர் பாடும்பொழுது எப்பொழுதும் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டே இருக்கும் என்பதால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டதாகச் சிலர் கூறுவர். இவர் நாகப்பட்டினத்தில் சமாதி அடைந்ததாகக் கூறப்படுகின்றது.

இவரது பாடல்கள் ஏறத்தாழ ஒப்பாரிப் பாடல்கள் போலத் தோன்றினாலும் அப்பாடலின் கருத்துக்களை அனுபவ ஞானிகளால்தான் விளக்கிங்கொள்ள முடியும்.

இவரது பாடல்களனைத்தும் கண்ணம்மா என்ற பெண்ணை முன்னிலைப்படுத்துவனவாகவே உள்ளன.

"ஊத்தைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப்பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப்பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊத்தைச் சடலம் விட்டே - என் கண்ணம்மா
உன் பாதம் சேரேனே?

இந்த உடம்பு நாற்றம் பிடித்த அழுக்கு உடம்பு. உப்பிருந்த மட்பாண்டம் போல அளறு பிடித்துக் கரைந்து அழிந்து போகும் உடம்பு. இந்த உடம்பின் இயல்பை மாற்றி அழியாத உடம்புடன் பிறப்பதற்கான மருந்து எனக்குக் கிடைக்கவில்லை. அப்படி அழியா உடம்புடன் பிறப்பதற்கு

எனக்கு மட்டும் மருந்து கிடைக்குமென்றால் இந்த அழியக்கூடிய ஊத்தைச் சடலத்தை விட்டொழித்து உன் பாதமே தஞ்சம் என்று வந்து விடுவேனே என்று யோகத்தின் அவசியத்தைக் குறிப்பிடுகின்றார்.

இப்படிப்பட்ட யோகத்தை பழக முயற்சிக்கின்றார் அழுகண்ணர். யோகம் பழகப் பழக உடல் கொதிக்கிறது. மூலச்சூடு ஏற்படுகின்றது. அடி வயிறு வலிக்கிறது. தம்அனுபவத்தைப் பாடல்களில் கொட்டிக் கவிழ்க்கின்றார்.

கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி என் வயிறு
நில் என்று சொன்னால் நிலைநிறுத்தக் கூடுதில்லை;
நில்லென்று சொல்லி நிலைநிறுத்த வல்லார்க்குக்

கொல் என்று வந்த நமன் - என் கண்ணம்மா
குடியோடிப் போகாணோ!

யோகம் பயில்வாருக்கு அடிவயிறு சுடும் என்பது புரிகிறது. அது மூலச்சூடு என்பார்கள். இன்னும் சற்று ஆழ்ந்து நோக்கினால் மூலாதாரத்தில் உறங்கும் குண்டலிப் பாம்பை எழுப்புவதற்கான அனல் என்பது புரியும். எந்தச் செயலையும் ஆரம்பிப்பதுதான் கடினம். பிறகு அது சுலபமாகி விடும். யோகத்தைப் பயில ஆரம்பித்த நிலையில்தான் அழுகண்ணருக்கு உடலைக் கட்டுப்படுத்துவது கடினமாக இருந்ததே ஒழிய யோகம் பயின்றபின் அது இவர் கட்டுப்பாட்டை விட்டு விலகியே இருந்தது.

உடற்சூட்டின் மூலம் குண்டலினியைக் கிளப்பிய இவர் அதனை இடையில் நிறுத்தும் வித்தையையும் அறிய விரும்புகின்றார். ஆனால் முடியவில்லை. அடியில் தோன்றிய அனல் உச்சியில்தான், அதாவது சகரஸ்தளத்தில்தான் போய் நின்றது. இடையில் ஒவ்வொரு உடற் சக்கரத்தையும் கடக்கும்போது இன்பமயமான 'சிறுவலி'

அந்த அனுபவத்தை மீண்டும் அனுபவிக்க அல்லது அதே இடத்தில் குண்டலினியை நிலைநிறுத்த அவரால் முடியவில்லை.

இங்கு இந்த ஆறாதார குண்டலினி யோகத்தில் கவனிக்கப்படுகின்ற விஷயமும் ஒன்றிருக்கிறது. மூலாதாரத்திலிருந்து கிளம்பும் குண்டலினி அக்கினியை இடையில் தடங்கல் செய்தோமானால் யோகம் பயில்கின்றவர் பித்தாகி உயிர் துறப்பர் என்றும் சொல்லப்படுகிறது.

இந்தக் கருத்தைத்தான்,

'நில்லென்று சொல்லி நிலைநிறுத்த வல்லார்க்குக்
கொல் என்று வந்த நமன்"

என்ற வரிகளில் தெரிவிக்கின்றார்.

இது இப்படியிருக்க இந்த யோக முயற்சிக்கு முன் இளமை மயக்கத்தால் மனதைக் கட்டுப்படுத்தப், படாத பாடுபட்ட நிலையை

"மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணையெனக்கு கனலாக வேகுதடி
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா!
கண்விழிக்க வேகாவோ"

முறைப் பெண்ணாக இருந்தால் என்ன அல்லது மச்சினியாகத்தான் இருந்தென்ன? இளமைப்பருவத்தில் காமன் கணையினால் படும் துன்பம் பெரியதல்லவா? அந்தக் காமன் கணைகளெல்லாம் யோகத்திலிருந்த சிவபெருமான் கண்விழிக்கச் சாம்பரானது போல, யோக தவத்திலிருந்து நான் கண் விழித்தால் அந்த யோக அனலில் காம உணர்ச்சிகளெல்லாம் வெந்து சாம்பராகி விடாதா? என்று கண்ணம்மாளைக் கேட்கின்றார்.

குண்டலினி யோகத்தைப் பற்றி மற்றொரு பாடலிலும் குறிப்பிடுகின்றார்.

“உச்சிக்குக் கீழடியோ ஊசிமுனை வாசலுக்குள்
மச்சிக்கு மேலேறி வானுதிரந்தானெடுத்துக்
கச்சை வடம் புரியக் காயலூர்ப் பாதையிலே
வச்சு மறந்தல்லோ - என் கண்ணம்மா
வகை மோசமானேண்டி”

எவ்வளவு அருமையான விளக்கம். உச்சிக்குக் கீழே ஊசி முனை வாசல் என்று குறிப்பிட்டது சுழுமுனையை உச்சியான மச்சிக்கு மேலே ஏறிய குண்டலினி அமுத தாரண செய்யும் நிலையை இப்பாடலில் விளக்கம் செய்கின்றார்.

இவ்வளவு யோக விளக்கம் கூறுமிவர் உஞ்ச விருத்தி செய்தே காலத்தைக் கழித்தாரென்று கூறப்படுகிறது.

“புல்லரிடத்திற்போய் பொருள் தனக்கு கையேந்தி
பல்லை மிகக்காட்டிப் பரக்க விழிக்கிறண்டி
பல்லை மிகக் காட்டாமல் பரக்க விழிக்காமல் - என் கண்ணம்மா
புல்லரிடம் போகாமல் என் கண்ணம்மா!
பொருளெனக்குத் தாராயோ”

பிச்சையெடுப்பது கேவலமானதுதான். ஆனால் அதைவிடக் கேவலம் அப்படிப் பிச்சை எடுப்பவனிடம் பிச்சை போட மாட்டேன் என்று துரத்துவது என்ற ஔவையாரின் கருத்தை இவ்வரிகளில் காட்டித் தன்னைப் பொருள் தரா புல்லர்களிடம் போய் கையேந்திப் பல்லை மிகக்காட்டிப் பிச்சையெடுக்காமல் உயிர் வாடுவதற்கு எனக்குப் பொருள் கொடு அம்மா என்று மனோன்மணித் தாயிடம் (கண்ணம்மாவிடம்) வேண்டுகின்றார்.

படிக்கப் படிக்கப் பரிதாபத்தைத் தூண்டும் இவர் பாடல்கள் சித்தர் இலக்கியத்தில் மிகப் பிரபலம்.

“பையூரிலேயிருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா!
பாழாய் முடியாவோ”

இங்கு இவர் ஜனன முறைமை உணர்த்துகின்றார். பையூர் என்பது கருவறை (கருப்பை) பாழூர் என்பது யோனி; மெய்யூர் என்பது உடல் என்றும், உண்மை ஞானம் என்றும் இரு பொருள்படும்.

பாழ் என்பது மோட்சம், வீடு பேறு; உடலையே இறைவன் வாழும் ஆலயமாகக் கருதி யோக நியமங்கள் செய்தீர்களானால் அதுவே கோயிலாகி இறை தரிசனத்தைக் காட்டும். அந்த நிலையில் யோக நெறியாளர் வெறுத் தொதுக்கும் பெண்களின் கருப்பையும் உடம்பும் புனிதம் அடைந்து பாழூராக அதாவது ஆகாய வெளியாக இறைவன் வாழும் கோயிலாக மாறாதா? என்று நம்மைக் கேள்வி கேட்கின்றார்.

ஆராய்ச்சி உரையைப் படித்த நெஞ்சங்களுக்கு அழுகண்ணார் பாடலையும் படிக்க ஆவல் வருகின்ற தல்லவா! பாடலைத் தொடருங்கள்.

**மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே**
**கோலாப் பதியடியோ குதர்க்கந் தெருநடுவே**
**சாலப் பதிதனிலே தணலாய் வளர்த்தகம்பம்**
**மேலப் பதிதனிலே என் கண்ணம்மா**
**விளையாட்டைப் பாரேனோ.** 1

**எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி**
**பஞ்சாயக் காரரைவர் பட்டணமுந் தானிரண்டு**
**அஞ்சாமற் பேசுகிறாய் ஆக்கினைக்குத் தான்பயந்து**
**நெஞ்சார நில்லாமல் என் கண்ணம்மா**
**நிலைகடந்து வாடுறண்டி.** 2

**முத்து முகப்படியோ முச்சந்தி வீதியிலே**
**பத்தாம் இதழ்பரப்பிப் பஞ்சணையின் மேலிருத்தி**
**அத்தை யடக்கிநிலை ஆருமில்லா வேளையிலே**
**குத்து விளக்கேற்றி என் கண்ணம்மா**
**கோலமிட்டுப் பாரேனோ.** 3

**சம்பா அரிசியடி சாதஞ் சமைத்திருக்க**
**உண்பாய்நீ என்று சொல்லி உழக்குழக்கு நெய்வார்த்து**
**முத்துபோ லன்னமிட்டு முப்பழமுஞ் சர்க்கரையுந்** 4

தித்திக்குந் தேனமிர்தம் என் கண்ணம்மா
தின்றுகளைப் பாறேனோ.

பைம்பொற் சிலம்பணிந்து பாடகக்கால் மேல்தூக்கி
செம்பொற் கலையுடுத்தி சேல்விழிக்கு மையெழுதி
அம்பொற் பணிபூண் டறுகோண வீதியிலே
கம்பத்தின் மேலிருந்தே என் கண்ணம்மா
கண்குளிரப் பாரேனோ. 5

எட்டாப் புரவியடி யீராறு காலடியோ
விட்டாலும் பாரமடி வீதியிலே தான்மறித்துக்
கட்டக் கயிறெடுத்துக் கால்நாலுஞ் சேர்த்திறுக்கி
அட்டாள தேசமெல்லாம் என் கண்ணம்மா
ஆண்டிருந்தா லாகாதோ. 6

கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி என்வயிறு
நில்லென்று சொன்னால் நிலைநிறுத்த கூடுவதில்லை
நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்குக்
கொல்லென்று வந்தநமன் என் கண்ணம்மா
குடியோடிப் போகானோ. 7

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச்சடலம்விட்டே என் கண்ணம்மா
உன்பாதஞ் சேரேனோ. 8

வாழைப் பழந்தின்றால் வாய்நோகு மென்று சொல்லித்
தாழைப் பழந்தின்று சாவெனக்கு வந்ததடி
தாழைப் பழத்தைவிட்டுச் சாகாமற் சாகவல்லோ
வாழைப் பழந்தின்றால் என் கண்ணம்மா
வாழ்வெனக்கு வாராதோ 9

பையூரி லேயிருந்து பாழூரி லேபிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா
பாழாய் முடியாவோ. 10

மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணையெனக்கு கனலாக வேகுதடி
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா
கண்விழிக்க வேகாவோ. 11

அந்தரத்தை வில்லாக்கி ஐந்தெழுத்தை யம்பாக்கி
மந்திரத்தே ரேறியல்லோ மான்வேட்டை யாடுதற்குச்சந்திரருஞ்
சூரியருந் தான்போந்த காவனத்தே
வந்துவிளை யாடியல்லோ என் கண்ணம்மா
மனமகிழ்ந்து பார்ப்பதென்றோ. 12

காட்டானை மேலேறி கடைத்தெருவே போகையிலே
நாட்டார் நமைமறித்து நகைபுரியப் பார்ப்பதென்றோ
நாட்டார் நமைமறித்து நகைபுரியப் பார்த்தாலுங்
காட்டானை மேலேறி என் கண்ணம்மா
கண்குளிரக் காண்பேனோ. 13

உச்சிக்குக் கீழடியோ ஊசிமுனை வாசலுக்குள்
மச்சுக்கு மேலேறி வானுதிரந் தானெடுத்து
கச்சை வடம்புரியக் காயலூர்ப் பாதையிலே
வச்சு மறந்தல்லோ என் கண்ணம்மா
வகைமோச மானேண்டி. 14

முக்கால் அரும்பெடுத்து மூவிரண்டாய்த் தான்தூக்கி
நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீடுகட்டி
நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீட்டினுள்ளே
மூக்காலைக் காணாமல் என் கண்ணம்மா
முழுதுந் தவிக்கிறண்டி. 15

காம மலர்தூவக் கருத்தெனக்கு வந்ததடி
பாம வலிதொலைக்கப் பாசவலி கிட்டுதில்லை
பாம வலிதொலைக்கப் பாசவலி நிற்குமென்றால்
காம மலர்மூன்றும் என் கண்ணம்மா
கண்ணெதிரே நில்லாவோ. 16

தங்காயந் தோன்றாமல் சாணகலக் கொல்லைகட்டி
வெங்காய நாற்றுவிட்டு வெகுநாளாய்க் காத்திருந்தேன்
வெங்காயந் தின்னாமல் மேற்றோலைத் தின்றலவோ
தங்காயந் தோணாமல் என் கண்ணம்மா
சாகிறண்டி சாகாமல். 17

பற்றற்ற நீரதிலே பாசி படர்ந்ததுபோல்
உற்றுற்றுப் பார்த்தாலும் உன்மயக்கந் தீரவில்லை
உற்றுற்றுப் பார்த்தாலும் உன்மயக்கந் தீர்ந்தக்கால்
பற்றற்ற நீராகும் என் கண்ணம்மா
பாசியது வேறாமோ. 18

கற்றாரும் மற்றோரும் தொண்ணூற்றோ டாறதிலே
உற்றாரும் பெற்றாரும் ஒன்றென்றே யானிருந்தேன்
உற்றாரும் பெற்றாரும் ஊரை விட்டுப் போகையிலே
சுற்றாரு மில்லாமல் என் கண்ணம்மா
துணையிழந்து நின்றதென்ன. 19

கண்ணுக்கு மூக்கடியோ காதோர மத்திமத்தில்
உண்ணாக்கு மேலேறி உன்புதுமை மெத்தவுண்டு
உண்ணாக்கு மேலேறி உன்புதுமை கண்டவர்க்கு
கண்ணுக்கு மூக்கடியோ என் கண்ணம்மா
காரணங்கள் மெத்தவுண்டே. 20

சாயச் சரக்கெடுத்தே சாதிலிங்கந் தான்சேர்த்து
மாயப் பொடிகலந்து வாலுழுவை நெய்யூற்றிப்
பொட்டென்று பொட்டுமிட்டாள் புருவத் திடைநடுவே
இட்ட மருந்தாலே என் கண்ணம்மா
இவ்வேஷ மானேண்டி. 21

பாதாள மூலியடி பாஷாணந் தான்சேர்த்து
வேதாளங் கூட்டியல்லோ வெண்சாரை நெய்யூற்றி
செந்தூர மையடியோ ஜெகமெலாந் தான்மிரட்டித்
தந்த மருந்தாலே என் கண்ணம்மா
தணலாக வேகுறண்டி. 22

கள்ளர் பயமெனக்குக் கால்தூக்க வொட்டாமல்
பிள்ளை யழுதுநின்றால் பெற்றவர்க்குப் பாரமடி
பிள்ளை யழுவாமல் பெற்றமனம் நோகாமல்
கள்ளர் பயமெனக்கே என் கண்ணம்மா
கடுகளவு காணாதோ. 23

பட்டணத்தை யாளுகின்ற பஞ்சவர்கள் ராஜாக்கள்
விட்டுப் பிரியாமல் வீரியங்கள் தாம்பேசி
விட்டுப் பிரிந்தவரே வேறு படுங்காலம் 24

பட்டணமுந் தான் பறிபோய் என் கண்ணம்மா
படைமன்னர் மாண்டதென்ன.

ஆகாயப் புலையனடி அஞ்ஞானந் தான்பேசிச்
சாகாத் தலையறியேன் தன்னறிவு தானறியேன்
வேகாத காலறியேன் விதிமோச மானேனடி
நோகாமல் நொந்தல்லோ என் கண்ணம்மா
நொடியில் மெழு கானேனடி. 25

தாயைச்சதமென்றே தந்தையரை யொப்பென்றே
மாயக் கலவிவந்து மதிமயக்க மானேனடி
மாயக் கலவிவிட்டு மதிமயக்கந் தீர்ந்தக்கால்
தாயுஞ் சதமாமோ என் கண்ணம்மா
தந்தையரு மொப்பாமோ. 26

அஞ்சாத கள்ளனடி ஆருமற்ற பாவியடி
நெஞ்சாரப் பொய்சொல்லும் நேயமில்லா நிஷ்டூரன்
கஞ்சா வெறியனடி கைசேத மாகுமுன்னே
அஞ்சாதே யென்று சொல்லி என் கண்ணம்மா
ஆண்டிருந்தா லாகாதோ. 27

உன்னை மறந்தல்லோ உளுத்த மரமானேன்
தன்னை மறந்தார்க்குத் தாய்தந்தை யில்லையடி
தன்னை மறக்காமல் தாயாரு முண்டானால்
உன்னை மறக்காமல் என் கண்ணம்மா
ஒத்திருந்து வாழேனோ. 28

காயப் பதிதனிலே கந்தமூ லம்வாங்கி
மாயப் பணிபூண்டு வாழுஞ் சரக்கெடுத்தே
ஆயத் துறைதனிலே ஆராய்ந்து பார்க்குமுன்னே
மாயச் சுருளோலை என் கண்ணம்மா
மடிமேல் விழுந்ததென்ன. 29

சித்திரத்தை குத்தியல்லோ சிலையை எழுதிவைத்து
உத்திரத்தைக் காட்டாமல் ஊரம்பல மானேன்
உத்திரத்தைக் காட்டியல்லோ ஊரம்பல மானால்
சித்திரமும் வேறாமோ என் கண்ணம்மா
சிலையுங் குலையாதோ. 30

புல்ல ரிடத்திற்போய் பொருள்தனக்குக் கையேந்திப்
பல்லை மிகக்காட்டிப் பரக்க விழிக்கிறண்டி 31

பல்லைமிகக் காட்டாமல் பரக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல் என் கண்ணம்மா
பொருளெனக்குத் தாராயோ.

வெட்டுண்ட சக்கரத்தால் வேண தனிமளித்துக்
குட்டுண்டு நின்றேண்டி கோடிமனு முன்னாலே
குட்டுண்டு நில்லாமற் கோடிமனு முன்னாக
வெட்டுண்டு பிணிநீக்கி என் கண்ணம்மா
விழித்துவெளி காட்டாயோ. 32

என்னோடு உடன்பிறந்தார் எல்லோரும் பட்டார்கள்
தன்னந் தனியனுமாய்த் தனித்திருக்கல் ஆச்சுதடி
முன்னம் இதுதெரிந்தால் முழுமோசம் போகேனே
இன்னவிதம் என்று என் கண்ணம்மா
எடுத்து உரைக்க லாகாதோ? 33

எல்லாரும் பட்டார்கள் இன்னவிடம் என்றறியேன்
பொல்லாங்கும் போச்சுதடி புலனும் மறந்துதடி
கல்லான என்மனது கரைந்திருக்கு மேயாகில்
எல்லாரும் வந்து என் கண்ணம்மா
எனக்குஏவல் செய்யாரோ. 34

என்னை எனக்கறிய இருவினையும் ஈடழித்துத்
தன்னை அறியுமிடம் தானறிந்து கொண்டேண்டி
தன்னை அறியுமிடம் தானறிந்து கொண்டபின்பு
என்னை அறியாமல் என் கண்ணம்மா
இருந்தேன் ஒருவழியாய். 35

ஆதாரம் ஆறினையும் ஐம்பத்தோர் அட்சரமும்
சூதானக் கோட்டைஎல்லாம் சுட்டுத் தொலைத்தார்கள்
சூதானக் கோட்டைஎல்லாம் சுட்டுவிட நாளானால்
பாதாள வத்துவெல்லாம் என் கண்ணம்மா
பக்கத்து இருக்காதோ. 36

கடல்நீரின் ஆழமதைக் கண்டுகரை யேறிவந்து
உடலும்உயி ரும்போல ஒத்தே இருந்தோமடி
உடலும்உயி ரும்போல ஒத்தே இருக்கையிலே
திடமா மயக்கம்வந்து என் கண்ணம்மா
சேர்ந்தது என் சொல்லாயோ? 37

கல்லுள் இருந்த கனல்ஒளியைக் காரணமாய்ப்
புல்லுள் இருந்துவந்த பொருளறியக் காணேன்டி
புல்லுள் இருந்த பொருளறியக் காணாட்டால்
  வல்லபங்கள் தோணாமல்      என் கண்ணம்மா
  மயங்கித் தவிக்குறண்டி.                                 38

பொற்பூவும் வாசனையும் போதம் அறிந்தோர்க்குக்
கற்பூவும் வாசனையும் காணும் கயவருக்கும்
கற்பூவும் வாசனையும் கண்டது உண்டே யாமானால்
  பொற்பூவும் வாசனையின்      என் கண்ணம்மா
  புலன்கள் தெரியவேண்டி.                                 39

ஆதிமதி என்னும் அதின் விடாய் தான்அடங்கிச்
சோதிவிந்து நாதமெனச் சுக்கிலமாய் நின்றதடி
சோதிவிந்து நாமெனச் சுக்கிலமாய் நின்றாக்கால்
  நீதியுடன் பூர்வபட்சம்      என் கண்ணம்மா
  நிலைதெரிய மாட்டேனோ.                                 40

ஞானமிது நாற்பதையும் நலமாக வேதெரிய
மோன மயக்கத்தில் முழுதுமே கொட்டிவிட்டேன்;
மோன மயக்கத்தை முழுதும் அறிந்தோர்கள்
  ஞானம் அடைவார்கள்      என் கண்ணம்மா
  நன்மைபெற்று வாழ்வார்கள்.                                 41

## வாத கற்பம்

### கண்ணிகள்

மூலம்நடுவீதி ஆத்தாளே மும்மண்டலத்து அமர்ந்த
நீலகண்ட வத்துவைத்தான் - ஆத்தாளே
  நின்மலனைப் போற்றுவனே.                                 42

மேகத்தான் விந்தாச்சு - ஆத்தாளே
  விசயரவிச் சுண்ணாம்பாம்
ஆகச் சிவநீரால் - ஆத்தாளே
  அட்டசித்தி அவள்சக்தி.                                 43

இரவி முகத்தாலே - ஆத்தாளே
  ஈசன் என்ற உப்பாச்சு
வருகங்கை தன்னாலே - ஆத்தாளே
  மயமாகச் சுத்தம் செய்தே.                                 44

**முந்தின உப்பிரண்டும் - ஆத்தாளே**
**முழுக்கல்லுப் பொன்னாகத்**

**தொந்திக்க இவ்விடைக்க - ஆத்தாளே**
**சூழ்சீனங் கால்சேர்த்து.** **45**

**ஆறுதலச்செயநீர் - ஆத்தாளே**
**அதிலேகற் சுண்ணாம்பாம்**
**மீறுமிந்தச் சுண்ணாம்பில் - ஆத்தாளே**
**வீரமுடன் கற்பூரம்.** **46**

**சாரநீரால் அரைத்து - ஆத்தாளே**
**தனிக்கவச மேபூசி**
**ஆறுவகைச் செயநீரால் - ஆத்தாளே**
**அதன்மேலே சுத்திவைக்க.** **47**

**உப்பென்று அறியாரே - ஆத்தாளே**
**உலகத்தி லுள்ளோர்கள்**
**உப்பல்லோ சுண்ணாம்பாம் - ஆத்தாளே**
**ஊர்க்குள் விலைகூறுதடி.** **48**

**சவ்வீரம் முப்புச்சுண்ணம் - ஆத்தாளே**
**தனிப்பூரம் மேற்பூசி**
**ஒவ்வாத பான்முகத்தில் - ஆத்தாளே**
**ஊடுருவச் சுண்ணாம்பாம்.** **49**

**காரமிதில் ஏற்றலடி - ஆத்தாளே**
**கருஅறியார் தண்ணீரைச்**
**சீருடனே குத்தியடி - ஆத்தாளே**
**தீமுகத்தில் வாட்டிவிடு.** **50**

**கற்பூரச் சுண்ணமடி - ஆத்தாளே**
**கடுங்காரச் சுண்ணமடி**
**வெற்பாக வைத்தானே - ஆத்தாளே**
**வேதைகவர் கோடியடி.** **51**

**எண்ணெண் சரக்குமடி - ஆத்தாளே**
**இப்பூரச் சுண்ணமடி**
**கண்ணத்தில் வீரர்**
**கசதில் சுண்ணாம்பாம்.** **52**

அக்காரச் சுண்ணாம்பாம் - ஆத்தாளே
ஆகரெண்டு சுண்ணமதை
உக்காரம் மேற்பூசி - ஆத்தாளே
உலையிலே வைத்தூத. 53

எண்ணெய் எல்லாம் போக்குமடி
இருக்கும் சவுக்காரம்
சுண்ணமடி மேற்கவசம் - ஆத்தாளே
சொல்லுகிறேன் அப்புச்சுண்ணம். 54

கற்பூரச் சுண்ணாம்பாம் - ஆத்தாளே
கலந்திருந்த இண்டு மடி
செப்பமுள்ள செயநீரால் - ஆத்தாளே
சேர்த்தாட்டி வீரமிட்டு. 55

வழமலைக்கு - ஆத்தாளே
வளமாய்ப் பொதிந்தபின்பு
தழலிலே தானாட்டி - ஆத்தாளே
சற்குருவாம் உப்பாலே. 56

உப்புச் சுண்ணங் கற்பூரம் - ஆத்தாளே
உண்மை சவுக்காரம்
செப்பமுடன் மூன்றுசுண்ணம் - ஆத்தாளே
சேர்த்துரவியில் இட்டு. 57

இக்குருவில் மஞ்சாடி ஆத்தாளே
எடுத்துத் துருசில் இட்டு
முக்கியமுடன் மேற்கவசம் - ஆத்தாளே
முன்பூசி வெயிலில் வைக்க. 58

சுண்ணாம்பு தங்கியிது - ஆத்தாளே
துடிதாளகம் வெளுக்கும்
சுண்ணாம்பு வங்கமடி - ஆத்தாளே
துடிலிங்கம் கைமாட்டும். 59

சாதிலிங்கச் சுண்ணாம்பு - ஆத்தாளே
தனிலோகச் சுண்ணாம்பாம்

நாதாந்தச் சுண்ணாம்பாம் - ஆத்தாளே
நாகமிதிற் சுண்ணாம்பாம். 60

சுண்ணாந்தா னாகவடி - ஆத்தாளே
துடிகெந்த கம்வெளுப்பாம்
சுண்ணாம்பாங் கெந்தகந்தான் - ஆத்தாளே
துடியானை பட்டுவிடும். 61

சூதனடி பட்டாண்டி - ஆத்தாளே
சூழ்ந்து அங்கந் தான்சேர்க்க
வேதை சவ்வீரனடி - ஆத்தாளே
மீறும்வகை மூன்றுமொன்றாய். 62

சேர்ந்திருக்க வேமணியாம் - ஆத்தாளே
செம்புவெள்ளி சேர்ந்தேதான்
நூத்துக்கொரு மாவிடவே - ஆத்தாளே
நூத்தெட்டு மாத்தாகும். 63

இத்தங்கம் செந்தூரம் - ஆத்தாளே
இந்த மணியாலே
சத்தபேதி யாகுமடி - ஆத்தாளே
தான்பரிச பேதியிதாம். 64

மண்டலம் பேதிக்குமடி - ஆத்தாளே
மலையும் பழுக்குமடி
அண்டத்தை தொட்டாட்ட - ஆத்தாளே
அடங்காப் பொருளாகும். 65

மண்ணேது கல்லேது - ஆத்தாளே
மரமேது இவ்வேதை
ஒண்ணாது வொண்ணாது - ஆத்தாளே
ஒடுங்கும் பொருளைப்பேண். 66

தாளகம் வெள்ளியிலே - ஆத்தாளே
தப்பாது பத்தரையும்
பாளித்த லோகச்சுண்ணம் - ஆத்தாளே
பத்தரையாம் வங்கமதில். 67

வீரச்சுண்ணம் வெள்ளியதாம் - ஆத்தாளே
வெள்ளிபதி னெட்டாகும் 68

பூரச்சுண்ணஞ் சேர்க்கவடி - ஆத்தாளே
  பொன்வயதோ எண்ணான்காம்.

சிலபற்பம் செம்பினிலே - ஆத்தாளே
  சேர்க்கவய எட்டரையாம்
துலையாக் கவர்கோடி - ஆத்தாளே
  சொன்னார் திருமூலர். 69

பார்த்தேனடி கண்டேனடி - ஆத்தாளே
  பாசங் குருபாதம்
காத்தேனடி கண்டேனடி - ஆத்தாளே
  கைமுறையாம் என்னூல்தான். 70

கருவை ஒளியாமல் - ஆத்தாளே
  காசினியில் உள்ளோர்க்குக்
குருவைநாம் காண்பித்தோம் - ஆத்தாளே
  குணமான வாதவித்தை. 71

உண்டென்ற பேர்க்குமடி - ஆத்தாளே
  உண்டாய் இருக்குமடி
சண்டாளன் ஆனாக்கால் - ஆத்தாளே
  தான்லபிக்க மாட்டாதே. 72

லபிக்க வழி சொல்லுகிறேன் - ஆத்தாளே
  நந்திதிரு மூலரையும்
லபிக்கக் கா லாங்கியையும் - ஆத்தாளே
  நாதாந்தப் போகரையும். 73

சத்தி சிதம்பரமும் - ஆத்தாளே
  சட்டைமுனி பூசைசெய்வாய்
உத்தமக் கொங்கணரை - ஆத்தாளே
  உசிதமாய்ப் பூசைசெய்வாய். 74

கருவூரா னானந்தர் - ஆத்தாளே
  கண்டு வழிதெரிந்தோர்

ஒருநெறியாய் இவர்களையும் - ஆத்தாளே
  உண்மையுடன் பூசைசெய். 75

சண்டாளன் ஆனாலும் - ஆத்தாளே
  தான்வேதை காண்பானே 76

கண்டசெய்தி சொன்னோன்நான் - ஆத்தாளே
  கற்பவகை சொல்லுபவனே.

சொல்லுகிறேன் கரிப்பான் - ஆத்தாளே
  சுத்த இலைபரித்துச்
செல்லும் பழச்சாற்றில் - ஆத்தாளே
  செம்பழத் தளவரைத்து. 77

அரைத்தாவின் நெய்யதனில் - ஆத்தாளே
  அதுசிவக்கக் காய்ந்த
திரமாயோர் பீங்கானில் - ஆத்தாளே
  செப்பமுடன் வைத்தேதான். 78

பதனமாய் வண்டுகட்டி - ஆத்தாளே
  பரமென்று நம்பியேதான்
திதிபூரு வந்தனிலே - ஆத்தாளே
  செயல்பொருந்தும் நாள்பார்த்தும். 79

அமுதயோ கம்பார்த்து - ஆத்தாளே
  ஆனதொரு கற்பதைக்
குமுதவொலி உண்ணாக்கில் - ஆத்தாளே
  குலாவுகின்ற வாசலிலே. 80

பெருவிரலால் அதைத்தொட்டு - ஆத்தாளே
  பேதைமனம் எண்ணாமல்
ஒரு நெறியாய் நாலுதரம் - ஆத்தாளே
  உயரவலம் சுற்றிடவே. 81

நாலுதரம் சுத்திசெய்தால் - ஆத்தாளே
  நன்றாய் அகக்கதவில்
ஆலமுண்டோன் தன்னாணை - ஆத்தாளே
  அஞ்சுகத வுந்திறக்க. 82

நாற்பதுநாள் கொள்வாரேல் - ஆத்தாளே
  நற்கதவு ஐஞ்சுந் திறக்கும்
தீர்க்கமதாய் சித்தியுண்டாம் - ஆத்தாளே
  தேகம் வச்ரகாயமதாம். 83

மறவாமற் கற்பவகை - ஆத்தாளே
  மனசாரத் தின்றுவிட்டால் 84

இறவாமல் அட்டசித்தி - ஆத்தாளே
இக்கற்பங்கொண்ட பின்பு.

உற்றதொரு கற்பமதை - ஆத்தாளே
உணவாகத் தின்றுவிட்டால்
செத்திறந்து போவதில்லை - ஆத்தாளே
திடமா யிருக்குமடி. 85

கெதிபெற வேணுமென்றால் - ஆத்தாளே
கேளாம லேகேட்டு
மதியமுதம் கொண்டபின்பு - ஆத்தாளே
மறுகற்பம் கொண்டிடுவாய். 86

வேதாள கற்பமதை - ஆத்தாளே
விதுவளரும் அட்டமிநாள்
மாதாவிம் மூலிகைக்கு - ஆத்தாளே
மயமாய்நெய் வேத்யமிட்டு. 87

நமக்கரித்துத் தரம்நோக்கி - ஆத்தாளே
நயமாக வாங்கிவந்த
நமக்கார சித்தியுடன் - ஆத்தாளே
நன்றாய் நிழலுலர்த்தி. 88

சூரணஞ் செய்தேதான் - ஆத்தாளே
சுயமான நாள்பார்த்து
மீரும் வெருகடியாய் - ஆத்தாளே
வேண்டுந்தேன் நெய்சேர்த்து. 89

கொள்ளவே மண்டலந்தான் - ஆத்தாளே
கூறுமட்ட சித்தியுண்டாம்

தெள்ளும் அவர்களுக்கு - ஆத்தாளே
தேவ வருடமதில். 90

பதினா யிரவருடம் - ஆத்தாளே
பண்பாய் இருப்பனடி
ரதிவேதப் பெண்முதலாய் - ஆத்தாளே
நன்மையுடன் மேவுவர் பார். 91

பூலோக மாதர்களை - ஆத்தாளே
புகலவே ஆகாது 92

மேலோகப் பெண்கள்சித்தி - ஆத்தாளே
மேவுதற்குந் தானாகும்.

கையான்சங் காயளவு - ஆத்தாளே
கறிமிளக திற்பாதி
செய்யாதி மண்டலமே - ஆத்தாளே
தின்றால் நரைகளில்லை. 93

திரையில்லை அட்டசித்தி - ஆத்தாளே
தேகமது எவ்வர்ணமாய்
வரைவச்ர காயமதாம் - ஆத்தாளே
வயதுமுந் நூறிருப்பன். 94

கொடுப்பையிலை லேசாக - ஆத்தாளே
கொள்வாயோர் மண்டலமே
நடுக்கமில்லை தான் பகலில் - ஆத்தாளே
நட்சத் திரந்தோன்றும். 95

பத்தியம் பச்சரிசி - ஆத்தாளே
பாலிட்ட சோறாகும்
மத்தொன்றும் ஆகாதே - ஆத்தாளே
வண்மையுடன் இக்கொடுப்பை. 96

சமூலம் கழுவிநன்றாய் - ஆத்தாளே
தயவாய் நிழல் உலர்த்தி
சமூலம் இடித்துநன்றாய் - ஆத்தாளே
சதிராகச் சூரணஞ்செய். 97

பாலில் வெருகடியாய் - ஆத்தாளே
பதிமண்ட லம்கொளவே
மேலும் வச்ரகாயமடி - ஆத்தாளே
வேதையுமி நீராலே. 98

பழுக்கும் நவலோகம் - ஆத்தாளே
பரமட்ட சித்தியுண்டாம்
அழுக்கெடுத்து வெள்ளீயம் - ஆத்தாளே
அதில் ஈய நீர்வாங்கும். 99

சித்திபெற்ற கற்பமடி - ஆத்தாளே
தேவ வருடமதில் 100

அத்தியின் தன்பிலமாய் - ஆத்தாளே
  ஆயிரம் வயதிருப்பாய்.

உத்தமர்க்குச் சொன்னேன்நான் - ஆத்தாளே
  உயர வெளிகண்டதெல்லாம்
பத்தியுள்ள பத்தர்கட்கு - ஆத்தாளே
  பலிக்கும்பார் கண்டாயே. 101

பத்தியுடன் செய்துவந்தாள் - ஆத்தாளே
  பரம்பொருளுந் தோன்றுமடி
சித்தி அடைந்தவர்க்கு - ஆத்தாளே
  தெரியுமே சோதியுந்தான். 102

மாணிக்கத்து உள்ளொளிபோல் - ஆத்தாளே
  மருவிய சோதிதனைப்
பேணித் தொழும்அடியார் - ஆத்தாளே
  பேசாப் பிரமமடி. 103

அன்றுமுதல் இன்றளவும் - ஆத்தாளே
  அறியாப் பருவமதில்
என்றும் பொதுவாக - ஆத்தாளே
  இருந்த ரகசியந்தான். 104

ஓங்காரங் கொண்டு - ஆத்தாளே
  உள்மூலந் தான்தெரிந்து

உள்ளுணர்வாய் நின்றிருக்கும் - ஆத்தாளே
  ஓங்காரம் தன்னையுமே
எள்ளுளவா கிலுந்தான் - ஆத்தாளே
  ஏத்தித் துதிப்பாயே. 106

பாவிகள் தங்களுக்கு - ஆத்தாளே
  பரிவாக இந்நூலைத்
தாவிக் கொடுக்காதே - ஆத்தாளே
  சண்டாளர் தங்களுக்கே. 107

அனுபோக கற்பசித்தி - ஆத்தாளே
  ஆகுமிதைப் படித்தோர்
மனுவிக்யா னந்தெரிந்து - ஆத்தாளே
  வாழ்வார் வெகுகோடி. 108

## ஆறாதாரம்

ஞானநூல் கற்றால் எவன் தற்றுறவு பூண்டால் என்
மோன சமாதி முயன்றால் என் - தானாகி
எல்லாக் கவலையும் ஆற்று இன்புற் றிருப்பதுவே
சொல்லாரும் முத்தி சுகம்.

மேலத் தெருவாகி விந்துதித்த வீடாகிக்
கோலத்தி னாலேயடி கூறும் அறுகோணம்
சீலத்தில் முக்கோணம் சேர்ந்தப்பு வீடாகி
மூலத்தில் மண்ணாகி - என் ஆத்தாளே
முதலெழுத்தைப் போற்றி செய்தேன். 109

ஆதியெனும் மூலமடி அவ்வோடே உவ்வாகி
நீதியெனும் நாளமடி நின்று விசையெழுப்பி
சாதிமதி யென்னும் தாகவிடாய் தானடங்கிச்
சோதிவிந்து நாதமென்ன - என் ஆத்தாளே
சுக்கிலமாய் நின்றதடி. 110

துய்யவெள்ளை ஆனதடி துலங்கும்வட்டத் தோரெழுத்து
மெய்யில்நடு நாளமடி விளங்கும்விந்து தான்இரங்கிப்
பைரஅளவு யோனியிலே பராபத்தி லேவிழுந்து
செய்யவட்ட மாகியடி - என் ஆத்தாளே
சீமூல மாச்சுதடி. 111

நவ்வோடே மவ்வாகி நாலிதழின் மேற்படர்ந்து
உவ்வோடே சவ்வாகி உயர்வுன்னி யூடெழுந்து
நவ்வோடே மவ்வாகி நாடுகின்ற காலாகி
இவ்வோ டுதித்தாண்டி - என் ஆத்தாளே
இலங்குகின்ற திங்களடி. 112

கதிரங்கி யாகியடி கருணையினில் விந்திரங்கி
உதிரம் திரட்டியபடி ஓமென் றதனிலுன்னி
சதுரமது மண்ணாகிச் சதுர்முகனார் வீடாகி
மதுரம் பிறந்துதடி - என் ஆத்தாளே
வையகனாய் வந்தாண்டி. 113

மெப்பாகச் சதுரமடி மெய்யாய் அதிற்பரந்து
ஒப்பாய் நடுநாளாம் ஓங்கி அதில்முளைத்துச்
செப்பார் இளமுலையார் சீருடனே தானிருந்து 114

அப்பாலே மாலாகி - என் ஆத்தாளே
ஆனந்த மானதடி.

உன்னியப்பு மேலேயடி ஓங்கிக் கதிர்பரந்து
மின்னியதில் தான்முளைத்து மேவுகின்ற சீயாகிப்
பன்னிவரு முக்கோணப் பதியதனி லேமுளைத்து
வன்னியென்னும் பேராகி - என் ஆத்தாளே
மருவுகின்ற ருத்ரனடி. 115

வீரான வன்னியதன் மேல்நாளந் தான்முளைத்து
ஓராறு கோணமதாய் உள்ளேஓர் காலாகிப்
பேராகி நின்றுதடி பெருங்கிளையாங் கூட்டமதில்
மாறாமல் மாறியடி - என் ஆத்தாளே
வையத் துதித்தாண்டி. 116

உதையாமல் என்னைஇப்போது உதைத்தவனும்கீழிறங்கி
மதியான மூலமதில் வந்திருந்துக் கொண்டான்டி
நிதியாம் மிரண்டெலும்பு நீளெலும்பிரண்டாகி
முதியாத மாங்கிசமும் - என் ஆத்தாளே
மூடி யதிலிருந்து. 117

மாதவளைக் குள்ளேயடி வந்தவது கீழ்ப்படர்ந்து
போதத்தின் முட்டியடி புகழ்நரம்பை உண்டுபண்ணி
நீதம தாகவிந்த நீள்நிலத்தி லேதிரியப்
பாதமாய் உன்னியடி - என் ஆத்தாளே
பதியாய் வளர்ந்ததடி. 118

இருகண்ணின் மேலேயடி இருந்தநரம் பூடுசென்று
பெருநரம்பாய் விம்மிப் பெருக்க முளைத்ததடி
தரிநரம்பும் ஈரெலும்பாய்த் தான்ஒன்பது எலும்பாய்
விரிநரம்பு போலாக - என் ஆத்தாளே
மேலாய் நுழைந்ததடி. 119

இட்ட எழுத்திரண்டில் ஏங்கியதில் மேற்படர்ந்து
எட்டமதி போலெலும்பு வளர்ந்து கவிந்ததடி
எட்டிரண்டும் ஒன்றாகி இருந்தவர்க்கு வீடாச்சு
வெட்டவெளி யானதடி - என் ஆத்தாளே
மெய்யாய் இருந்துதடி. 120

அகார உகாரத்தில் ஆசூனி யம்பிறந்து
அகாரந் தனில்இரங்கி அரிமூலம் தன்னில்வந்து
உகாரத்துள் ஆவேறி ஓடி உலாவுவதற்கு
நிகரற்ற நாதனடி - என் ஆத்தாளே
 லிங்கமாய் வந்தான்டி. 121

கருவாகி வந்தானோ கருவழிக்க வந்தானோ
உருவாகி வந்தானோ உருவழிக்க வந்தானோ
குருவாகி வந்தானோ குலமறுக்க வந்தானோ
திருவாகி வந்தானோ - என் ஆத்தாளே
 சீர்திருத்த வந்தானோ. 122

## மெய்ஞ்ஞானம்

ஐங்கரனைத் தெண்டனிட்டு அருளடைய வேணுமென்று
தங்காமல் வந்தொருவன் - என் ஆத்தாளே
 தற்சொரூபங் கொண்டாண்டி. 123

உள்ளது ஒளியாக ஓங்காரத்து உள்ளிருந்து
கள்ளப் புலனறுக்க - என் ஆத்தாளே
 காரணமாய் வந்தாண்டி. 124

ஆதாரம் ஆறினையும் ஐம்பத்தோ ரட்சரமும்
சூதானக் கேட்டையெல்லாம் - என் ஆத்தாளே
 சுட்டான் துருசாலே. 125

என்னோடு உடன்பிறந்தார் எல்லோரும் பட்டார்கள்
தன்னந் தனித்தேனே - என் ஆத்தாளே
 தானிருக்க மாட்டேண்டி. 126

கல்லில் ஒளியானைக் கருத்தி விளியாளைச்
சொல்லி அழுதாலொழிய - என் ஆத்தாளே
 துயரம் எனக்கு ஆறாதே. 127

மண்முதலாய் ஐம்பூதம் மாண்டுவிடக் கண்டேன்டி
விண்முதலாய் ஐம்பொறியும் - என் ஆத்தாளே
 வெந்துவிடக் கண்டேன்டி. 128

ஆங்காரந் தான்கெடவே ஆறடுக்கு மாளிகையும்
நீங்காப் புலன்களைந்தும் - என் ஆத்தாளே
 நீறாக வெந்துதடி. 129

போற்றும்வகை எப்படியோ பொறிபேத கம்பிறந்தால்
ஆத்தும தத்துவங்கள் - என் ஆத்தாளே
அடுக்கழிய வெந்ததடி. 130

வித்தியா தத்துவங்கள் விதம்விதமாய் வெந்ததடி
சுத்துவித்தை அத்தனையும் - என் ஆத்தாளே
சுட்டான் துருசறவே. 131

கேடுவரும் என்றறியேன் கெடுமதிகண் தோற்றாமல்
பாடுவரும் என்றறியேன் - என் ஆத்தாளே
பதியில் இருந்தாண்டி. 132

எல்லோரும் போனவழி இன்னவிட மென்றறியேன்
பொல்லாங்கு தீரவடி - என் ஆத்தாளே
பொறிஅழியக் காணேன்டி. 133

உட்கோட்டைக்கு உள்ளிருந்தோர் ஒக்கமடிந்தார்கள்
இக்கோட்டைக் குள்ளாக - என் ஆத்தாளே
எல்லோரும் பட்டார்கள். 134

உட்கோட்டை தானும் ஊடுருவ வெந்தாக்கால்
கற்கோட்டை எல்லாம் - என் ஆத்தாளே
கரிக்கோட்டை ஆச்சுதடி. 135

தொண்ணூற்று அறுவரையும் சுட்டேன் துருசறவே
கண்ணேறு வாறாமல் - என் ஆத்தாளே
கருவருக்க வந்தான்டி. 136

ஓங்காரம் கேட்குதடி உள்ளமெல்லாம் ஒக்குதடி
ஆங்காரம் பட்டுவிழ - என் ஆத்தாளே
அடியோடு அறுத்தாண்டி. 137

முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி
தன்னையறிந்து - என் ஆத்தாளே
தானொருத்தி யானேன்டி. 138

என்னை எனக்கறிய இருவினையும் ஊடறுத்தான்
தன்னை அறியவாடி - என் ஆத்தாளே
தனித்திருக்கல் னேன்டி. 139

இன்னந் தனியேநான் இங்கிருக்க மாட்டேன்டி
சொன்னசொற் றிரவடிவு - என் ஆத்தாளே
  சுட்டான் துருசறவே. 140

வீட்டில் ஒருவரில்லை வெட்டவெளி யாச்சுதடி
காட்டுக்கு எரித்தநிலா - என் ஆத்தாளே
  கனாவாச்சு கண்டதெல்லாம். 141

நகையாரோ கண்டவர்கள் நாட்டுக்குப் பட்டலவோ
பகையாரோ விண்டவர்கள் - என் ஆத்தாளே
  பாசம் பகையாச்சே. 142

என்னையிவன் சுட்டாண்டி எங்கே இருந்தான்டி
கன்னி அழித்தாண்டி - என் ஆத்தாளே
  கற்பைக் குலைத்தான்டி. 143

உள்ளுரையிற் கள்ளனடி உபாயம் பலபேசிக்
கள்ளக்கண் கட்டியடி - என் ஆத்தாளே
  காலைப் பிடித்தான்டி. 144

பற்றத்தான் பற்றுவரோ பதியி லிருந்தான்டி
எற்றத்தான் என்றவரோ - என் ஆத்தாளே
  என்னை அறிந்தான்டி. 145

கண்டாருக்கு ஒக்குமடி கசடுவித்தை அத்தனையும்
பெண்டாக வைப்பனென்று - என் ஆத்தாளே
  பேசாது அளித்தான்டி. 146

மால்கோட்டை இட்டுமென்னை வசையிலாக் காவல்வைத்
தோல்கோட்டை இட்டடியோ - என் ஆத்தாளே
  தடுமாறச் சொன்னான்டி. 147

எந்தவித மோஅறியேன் இம்மாயஞ் செய்தான்டி
சந்தைக் கடைத்தெருவே - என் ஆத்தாளே
  தடுமாறச் சொன்னான்டி. 148

தூலத்துக்கு ஆதியடி துன்பமுற வந்தூடே
பாலத்தில் ஏறியடி - என் ஆத்தாளே
  பங்கம் அளித்தான்டி. 149

பண்டிவனை நானறியேன் பலகாலம் வந்தான்டி
அண்டி இருந்தான்டி - என் ஆத்தாளே
ஆகலத்தில் வைத்தான்டி. 150

பத்தினியாய் என்நாளும் பாடறிந்து சூடாமல்
மத்தியா னத்தில் என்னை - என் ஆத்தாளே
வாசிரிக்கச் சொன்னான்டி. 151

வாடைதனைக் காட்டியபடி மஞ்சள் இஞ்சி வையாமல்
ஆடை குலைத்து எமையும் - என் ஆத்தாளே
அலங்கோலஞ் செய்தான்டி. 152

கற்புக் கரசிஎன்ற காரப்பேர் விட்டுஅகலப்
பொற்புக் குலைத்து எமையும் - என் ஆத்தாளே
போதம் இழந்தனடி. 153

என்ன வினைவருமோ இன்னதெனக்கு என்றறியேன்
சொன்ன சொல்லெல்லாம் - என் ஆத்தாளே
சொல்லறவே வெந்ததடி. 154

கங்குல்பகல் அற்றிடத்தே காட்டிக் கொடுத்தான்டி
பங்கம் அழித்தான்டி - என் ஆத்தாளே
பாதகனைப் பார்த்திருந்தேன். 155

ஓதியுணர்ந்து எல்லாம் உள்ளபடி ஆச்சுதடி
சாதியில் கூட்டுவரோ - என் ஆத்தாளே
சமையத்தாற் குள்ளாமோ. 156

என்னகுற்றஞ் செய்தேனோ எல்லவருங் காணாமல்
அன்னை சுற்றமெல்லாம் - என் ஆத்தாளே
அறியாரோ அம்புவியில். 157

பொய்யான வாழ்வெனக்குப் போதமெனக் கண்டேன்டி
மெய்யான வாழ்வெனக்கு - என் ஆத்தாளே
வெறும்பாழாய் விட்டுதடி. 158

சொல்லானைச் சொல்லுதற்குச் சொல்லவாய் இல்லையென்று
எல்லாருங் கண்டிருந்தும் - என் ஆத்தாளே
இப்போது அறியார்கள். 159

**கன்மாயம் விட்டதடி கருத்தும் அழிந்தேன்டி**
**உன்மாயம் இட்டவனை - என் ஆத்தாளே**
**உருவழியக் கண்டேன்டி. 160**

**என்னசெய்யப் போறேன்நான் இருந்த அதிசயத்தைக்**
**கன்னி இளங்கமுகு - என் ஆத்தாளே**
**காரணமாய்க் காய்த்ததடி. 161**

**அந்தவிடம் அத்தனையும் அருளாய் இருந்துதடி**
**சொந்தம் இடமெல்லாம் - என் ஆத்தாளே**
**சுகமாய் மணக்குதடி. 162**

**இந்தமணம் எங்கும் இயற்கைமணம் என்றறிந்து**
**அந்தச் சுகாதீதம் - என் ஆத்தாளே**
**அருட்கடலில் மூழ்கினன்டி. 163**

**அத்திமதிசூடும் ஆனந்தப் பேரொளிதான்**
**சத்திசிவம் என்றறிந்தே - என் ஆத்தாளே**
**சச்சுபலங் கொண்டான்டி. 164**

**உள்ளத்தொளி யாகவடி ஓங்காரத்து உள்ளிருக்கும்**
**கள்ளப் புலன் அறுக்க - என் ஆத்தாளே**
**காரணமாய் வந்தான்டி. 165**

**கணக்கனார் வாசலது கதவுதான் தாள்திறந்து**
**பிணக்காத பிள்ளையென்று - என் ஆத்தாளே**
**பீடமிடம் பெற்றேன்டி. 166**

**மூன்று சுழிவழியே முன்னங்கால் தான்மடித்து**
**ஈன்று சுழிவழியே - என் ஆத்தாளே**
**இசைந்திருந்த மந்திரமும். 167**

**தோன்றாது தோன்றுமடி சுகதுக்கம் அற்றிடத்தே**
**மூன்றுவழி போகவடி - என் ஆத்தாளே**
**முதியமன ஆச்சுதடி. 168**

**சுத்த மத்தமற்றே தொண்டராய்த் தொண்டருடன்**
**அத்திவித்தின் போலே - என் ஆத்தாளே**
**அதிகம் அளித்தேன்டி. 169**

வித்துருவத் தோடே விநாயகனைத் தாள்தொழுது
அத்துருவம் நீக்கிபடி - என் ஆத்தாளே
அறிய அளித்தேன்டி. 170

மின்னார் விளக்கொளிபோல் மேவுமிதே யாமாகில்
என்னாலே சொல்லவென்றால் - என் ஆத்தாளே
எழும்புதில்லை என் நாவு. 171

அரூபமாய் நின்றானை அகண்டபரி பூரணத்தைச்
சொரூபமாய் நின்றிடத்தே - என் ஆத்தாளே
தோன்றிற்றுத் தோன்றுமடி. 172

அட்சரங்கள் ஆனதுவும் அகங்காரம் ஆனதுவும்
சட்சமையம் ஆனதுவும் - என் ஆத்தாளே
தணலாக வெந்ததடி. 173

சமையஞ் சமையமென்பார் தன்னைஅறியாதார்
நிமைக்குள் உளுபாயமென்பார் - என் ஆத்தாளே
நிலமை அறியாதார். 174

கோத்திரம் கோத்திரமென்பார் குருவை அறியாதார்
தோத்திரஞ் செய்வோமென்பார் - என் ஆத்தாளே
சொரூபம் அறியாதார். 175

உற்றார் நகைக்குமடி உறவர் பகைக்குமடி
பெற்றார் இணக்கமடி - என் ஆத்தாளே
பேரில் பிணக்கமடி. 176

தேய்ந்த இடத்திருக்கச் சிந்தைஅறியுமனம்
ஆய்ந்த இடமெல்லாம் - என் ஆத்தாளே
அவசமனம் வீசுதடி. 177

பேதிச்சு வாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கு இடமாச்சுதடி
சாதிஇவன் அன்றெனவே - என் ஆத்தாளே
சமையத்தார் ஏசுவரே. 178

நல்லோ ருடன்கூடி நாடறிய வந்ததெல்லாம்
சொல்லவாய் உள்ளவர்கள் - என் ஆத்தாளே
சொல்லி நகைப்பாரோ. 179

இன்பமுற்று வாழ்ந்ததடி என்மாயம் ஆச்சுதடி
தம்பறத் தள்ளிவிடி - என் ஆத்தாளே
தனம்போன மாயமடி. 180

வல்லான் வகுத்தவழி வகையறிய மாட்டாமல்
இல்லான் இருந்தவழி - என் ஆத்தாளே
இடம் அறியாது ஆனேன்டி. 181

கல்லாலே வேலிகட்டி கனமேல் ஒளிவுகட்டி
மல்லால் வெளிபுகட்டி - என் ஆத்தாளே
மலவாசல் மாண்டுதடி. 182

ஆசாபாசம் அறியா தன்பு பொருந்தினபேர்
ஏசாரோ கண்டவர்கள் - என் ஆத்தாளே
எவரும் நகையாரோ? 183

இன்பமுற்ற பேர்கடனை எல்லோரும் பேசுவரோ
துன்பமுற்ற பேர்கடனை - என் ஆத்தாளே
சொல்லி நகையாரோ? 184

விண்ணைஎட்டிப் பாராமல் விதத்தை உற்றுப்பாராமல்
மண்ணையெட்டிப் பார்த்தொருவர் - என் ஆத்தாளே
வலுப்பேசி ஏசுவரோ. 185

என்னையிவன் கொண்டான்டி இருவினையும் கண்டான்டி
சன்னைசொல்ல விண்டான்டி - என் ஆத்தாளே
சமையம்பிணக் கானேன்டி. 186

இந்நிலத்திற் கண்காண ஏகாத மானிடத்தே
கன்னி அழித்தாண்ட - என் ஆத்தாளே
கற்பைக் குலைத்தாண்டி. 187

சுத்தத்தார் பார்த்திருக்கச் சூதுபலபேசிப்
பத்தாவாய் வந்திருந்தான் - என் ஆத்தாளே
பாசமதைத் தாண்டி. 188

அண்டத்தைக் கட்டியடி ஆசையறுத்தான்டி
தொண்டராய்த் தொண்டருக்கு - என் ஆத்தாளே
தோற்றம் ஒடுக்கமடி. 189

கற்பனையும் மூன்றுவிதம் காரமாய்க் கொண்டேன்டி
ஒப்பனையும் அல்லவடி - என் ஆத்தாளே
ஒடுக்கம் அறியேன்டி. 190

பாருக்குள் மாயையடி பார்க்கவெள்ளை பூத்ததடி
மேருக்குள் வெண்ணெய்யைப்போல் - என் ஆத்தாளே
முழங்கிக் கலந்திடவே. 191

உண்மைப் பொருளடியோ ஓடுகின்ற பேர்களுக்கு
விண்ணிலே போச்சுதடி - என் ஆத்தாளே
வெகுபேரைப் பார்த்திருந்தேன். 192

இரும்பில்உறை நீர்போல் எனவிழுங்கிக் கொண்டான்டி
அரும்பில் உறை வாசமும்போல் - என் ஆத்தாளே
அன்றே இருந்தாண்டி. 193

அக்கினிகற் பூரத்தை அறவிழுங்கிக் கொண்டதுபோல்
மக்கனப் பட்டுள்ளே - என் ஆத்தாளே
மருவி இருந்தான்டி. 194

கங்குகரை இல்லான்டி கரைகாணாக் கப்பலடி
எங்கும்அள வில்லான்டி - என் ஆத்தாளே
ஏகமாய் நின்றான்டி. 195

தீவரம்போல் என்னைச் சேர்ந்தபர சின்மயங்காண்
பாவகம் ஒன் றில்லான்டி - என் ஆத்தாளே
பார்த்திட எல்லாம்பரங்காண். 196

உள்ளுக்குள் உள்ளான்டி ஊருமில்லான் பேருமில்லான்
கள்ளப் புலனறுக்க - என் ஆத்தாளே
காரணமாய் வந்தான்டி. 197

அப்பிறப்புக் கெல்லாம் அருளா அமர்ந்தான்காண்
மெய்ப்பொருட்கு மெய்ப்பொருளாய் - என் ஆத்தாளே
மேவி இருந்தான்டி. 198

நீரொளிபோல் எங்கும் நிறைந்த நிராமயங்காண்
பாரொளிபோல் எங்கும் - என் ஆத்தாளே
பரந்த பராபரன்காண். 199

**நூலால் உணர்வறியேன் நுண்ணிமையை யான்அறியேன்**
**பாலாறு சர்க்கரைதேன் - என் ஆத்தாளே**
**பார்த்தறிந்த பூரணன்காண். 200**

# 9. பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல்

துறவை மேற்கொண்ட பட்டினத்தார் உஞ்சேனை மாகாளபுரத்திற்குச் சென்று மாகாளேசுவரனை வணங்கி விட்டு ஊர்ப் புறத்திலுள்ள பிள்ளையார் கோவிலில் நிஷ்டையில் அமர்ந்தார். அப்போது அவ்வூர் மன்னர் பத்திரகிரியின் அரண்மனையில் ஆபரணங்களைக் கொள்ளையிட்டு வந்த திருடர்கள் அரண்மனைக் கொள்ளை வெற்றிகரமாக முடிந்ததால் பிள்ளையாரின் பங்காக ஒரு முத்து மாலையை அவரை நோக்கி வீசிச் சென்றனர்.

கொள்ளையர் வீசிய முத்துமாலை பட்டினத்தாரின் கழுத்தில் போய் விழுந்தது. மறுநாள் அரண்மனைக் கொள்ளையரைத் தேடிவந்த காவலர் பட்டினத்தாரைக் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர் என்று சந்தேகித்து மன்னரிடம் தெரிவித்தனர். மன்னரும் உடனே கோபத்துடன் 'கள்வனைக் கழுவேற்றுக' என்று கட்டளையிட்டார்.

கழுமரத்திற்குப் பட்டினத்தடிகள் கொண்டு செல்லப்பட்டார். அந்தக் கழு மரத்தை ஏறிட்டு நோக்கிய பட்டினத்தடிகள் 'விதியின் வலிமையை எண்ணி என் செயலாவதியா தொன்றுமில்லை. இனித் தெய்வமே உன் செயலேயென்று உணரப் பெற்றேன்' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடவே கழு மரம் தீப்பிடித்து எரிந்தது.

இதனைக்கண்டு அதிர்ச்சியடைந்த பத்திரகிரி மன்னர் தவத்தின் சக்தியை உணர்ந்து தம் மணிமுடி அரச

போகங்களை யெல்லாம் உதறி விட்டு, துறவு பூண்டு பட்டினத்தடிகளையே தம் ஞான குருவாகக் கொண்டு அவருடைய கட்டளைப்படியே திருவிடைமருதூருக்குச் சென்று சட்டியில் பிச்சை எடுத்துத் தம் குருவிற்கும் உண்பித்து சிவயோகத்தில் இருந்து வரலானார்.

ஒருநாள் பத்திரகிரியார் வழக்கம்போல திருவிடைமருதூர் ஆலய வாயிலில் பிச்சைச் சட்டியில் தம் குரு சாப்பிட்ட மிச்ச உணவைச் சாப்பிடும் போது ஒரு நாய்க்குட்டி அவரைப் பரிதாபமாக நோக்க அதற்கும் சிறிது சாதமிட்டார். அந்த நன்றிக்கு அந்நாய்க் குட்டியும் அவரையே சுற்றிச் சுற்றி வந்தது.

ஒருநாள் சித்தர் ஒருவர் பட்டினத்தடிகளிடம் போய்ப் பிச்சைக் கேட்டு நிற்க அவரோ, தம் சீடரான பத்திரகிரியார் ஒரு சட்டியும் நாய்க்குட்டியுமாக

இருப்பதை எண்ணி, 'நானோ கோவணம் தாங்குவதையே பாரமாகக் கருதும் சந்நியாசி, அதனால் என்னிடமொன்றுமில்லை. நீர் இப்படியே மேற்குக் கோபுர வாயில் செல்வீரானால் அங்கு சோற்றுச் சட்டியும் ஒரு நாயும் வைத்துக்கொண்டு ஒரு சம்சாரி ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். அவனிடம் போய் பிச்சை கேளுங்கள், ஏதாவது கிடைக்கும் என்றார்.

பட்டினத்தாரின் வார்த்தையைச் சித்தர் மூலம் கேட்ட பத்திரகிரியார், ஐயோ, சந்நியாசியான என்னை இந்தச் சோற்றுச் சட்டியும் நாய்க்குட்டியும் சம்சாரியாகிவிட்டனவே என்று வருந்திச் சோற்றுச் சட்டியை வீசியெறிந்தார். அந்தச் சட்டி நாயின் தலைமீது பட்டதால் நாய் செத்து விழுந்தது. ஞானியின் எச்சில் சாதத்தை உண்டதால் அது காசிராஜனுக்கு மகளாய்ப் பிறந்தது.

பத்திரகிரியார் சிவயோகத்தில் பூரணமாய் ஐக்கியமாயினர். காசிராஜனுக்குப் பெண்ணாகப் பிறந்த நாய் வளர்ந்து அழகான மங்கையாகக் காட்சியளித்தாள். அவளது பேரழகைக் கேள்விப்பட்ட அரசர்களெல்லாம் அவளை மணந்து கொள்ள நான், நீ என்று போட்டியிட ஆரம்பித்தனர். அதனால் தகுந்த வரன் தேடச் சுயம்வரத்தை ஏற்பாடு செய்தான் காசிராஜன்.

ஆனால், காசிராஜன் மகளோ, தான் யாருக்கும் உரியவள் இல்லை என்று கூறித் திருவிடைமருதூரில் மேற்குக் கோபுர வாசலில் தம் குரு தனக்காகக் காத்திருப்பதாகக் கூறித் தன்னை அவரிடம் சேர்ப்பித்துவிடும்படி விண்ணப்பித்தார்.

காசி அரசனும் திருவிடைமருதூருக்கு வந்து பத்திரகிரியாரை மகளுடன் சந்தித்தான். காசிராஜன் மகளும் பத்திரகிரியாரைக் கண்டு, என் குருவே, அடி நாய் மீண்டும் தங்கள் திருவடியை நாடி வந்திருக்கிறது என்றாள்.

தம் எதிரே வந்த காசிராஜன் மகளைப் பத்திரகிரியார் பட்டினத்தாரிடம் அழைத்துச் சென்று, என் குருவே, உங்களுடைய எச்சிலை உண்ட நாய்க்கு இப்படிப் பிறவி நோய் வரலாமா? நாயானது மறுபடியும் மங்கையாகப் பிறவி எடுத்து வந்திருக்கிறதே என்று விண்ணப்பித்தார்.

பட்டினத்தாரும், "அவன் செயலன்றி யாவதொன்றில்லை" என்று அருள்கூர்ந்து திருவருளை நினைத்தார். உடனே ஒரு பெருஞ்சோதி தோன்றி, அதில் அப்பெண்ணுடன் பத்திரகிரியார் கலந்து மறைந்து இருவரும் முக்தியடைந்தனர்.

இவரது பாடல்கள் சித்தர் பாடல் தொகுப்பில் மெய்ஞ்ஞானப் புலம்பல்களாகக் காணப்படுகின்றன.

இவரது மெய்ஞ்ஞானப் புலம்பல் முழுவதும் முக்தியை வேண்டி இன்னும் எத்தனை காலம்தான் காத்துக் கொண்டிருப்பது? இறைவா, இப்பொழுதே என்னை அழைத்து உன் திருவடியில் சேர்த்துக்கொள்ள மாட்டாயா? என்ற பாணியில் அமைந்துள்ளது.

தொடரும் பிறவிதனை ஒழித்துத் தம்மை ஆட்கொள்ளுமாறு இவர் வேண்டும் வேண்டுதலில் திருவாசகத்தினை மனதில் பதிய வைக்கிறார்.

“புல்லாய்; விலங்காய்ப் புழுவாய், நரவடி வாய்
எல்லாப் பிறப்பின் இருள் அகல்வது எக்காலம்” (49)

இது திருவாசக சிவபுராணத்தில்

“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்ல ஆ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்”

என்பதனை நினைவூட்டுகின்றது.

இவரது காலத்தில் போதைப் பொருட்களாக கஞ்சா, அபினி ஆகியவை இருந்தன என்பதை இவர் தம் பாட்டால் புலப்படுத்துகின்றார்.

“கஞ்சா அபினியுடன் கள்ளுண்டு வாடாமல்
பஞ்சா மிர்தம் பருகுவது எக்காலம்? (35)

நிலையாமை குறித்துப் பாடி உலக மக்கள் இதில் அழுந்திக் கரையும் நிலைக்கு வருந்தும் நிலையைத் தமது பாடல் அடிகளுள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

“இன்றுளோர் நாளை இருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவது எக்காலம்?” (34)

“ஆடுகின்ற சூத்திரம்தான் அறுமளவு மேதிரிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது எக்காலம்?” (38)

நான் இறந்துபோக இனி நாள்வருவது எக்காலம்? (88)

என்ற பாடல்கள் அவரது நிலையாமைக் கருத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய்த் தெரிகின்றன.

எல்லாச் சித்தரையும் போலவே பத்திரகிரியார் பெண்மையைப் பழிக்கின்றார்.

"வெட்டுண்ட புண்போல் விரிந்த அல்குல் பைதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவம் எக்காலம் (11)

ஆறாத புண்ணிலே அருந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது எக்காலம்? (12)

இப்படிக் கேட்பதால் இவர் பெண் எதிரியல்ல. பெண்ணைத் தாய்மையாக இவர் பாவிப்பது

'பெண்ணைத் தாய் போல் நினைத்துத் தவம் முடிப்பது எக்காலம்?' (8) என்று கேள்வி கேட்பதிலிருந்து பெண்ணைத் தாய்மையால் வெகு உயர்வாக நினைப்பது புலனாகிறது.

இறைவனிடம் இவர் பின்வருமாறு வேண்டிப் புலம்புகின்றார்.

"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைக் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம் பெற வேண்டும்
நீங்காச் சிவயோக நித்திரை கொண்டே இருந்து
தேங்காக் கருணை வெள்ளம் தேக்க வேண்டும்
அருவாய் உருவாகி, ஆதி அந்தம் ஆகின்ற
குருவாக வந்து எனை ஆட்கொண்டு அருள வேண்டும்"

என்று புலம்புகின்றார் பத்திரகிரியார்.

அறிமுகப் புலம்பலைத் தொடர்ந்து ஞானப் புலம்பலைத் தொடருவோமாக.

**முத்தி தரும்வேத மொழியாம் புலம்பல்சொல்ல**
**அத்தி முகவன் தன் அருள்பெறுவதெக் காலம். 1**

**ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்**
**தூங்காமற் றூங்கி சுகம் பெறுவ தெக்காலம். 2**

**நீங்காச் சிவயோக நித்திரை கொண்டே யிருந்து**
**தேங்காக்கருணை வெள்ளந் தேக்குவது மெக்காலம். 3**

**தேங்காக் கருணைவெள்ளந் தேக்கியிருந் துண்பதற்கு**
**வாங்காமல் விட்டகுறை வந்தடுப்ப தெக்காலம். 4**

**ஓயாக் கவலையினா லுள்ளுடைந்து வாடாமல்**
**மாயாப் பிறவி மயக்கறுப்ப தெக்காலம். 5**

**மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்**
**காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம். 6**

**காயா புரிக்கோட்டை கைவசமாய்க் கொள்வதற்கு**
**மாயா அனுபூதி வந்தடுப்ப தெக்காலம். 7**

**சேயாச் சமைந்து செவிடூமை போற்றிரிந்து**
**பேய்போ லிருந்துன் பிரமை கொள்வ தெக்காலம். 8**

**பேய்போற் றிரிந்து பிணம் போற்கிடந்து பெண்ணைத்**
**தாய்போ னினைத்துத் தவமுடிப்ப தெக்காலம். 9**

**கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகங்காட்டி**
**மால்காட்டும் மங்கையரை மறந்திருப்ப தெக்காலம். 10**

**பெண்ணினல்லா ராசைப் பிரமையினை விட்டொழிந்து**
**கண்ணிரண்டு மூடிக் கலந்திருப்ப தெக்காலம். 11**

**வெட்டுண்ட புண்போல் விரிந்தவல்குல் பைதனிலே**
**தட்டுண்டு நிற்கை தவிர்வதுவு மெக்காலம். 12**

**ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமற்**
**தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம். 13**

**தந்தைதாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே**
**சிந்தைதனிற் கண்டு திருக்கறுப் தெக்காலம். 14**

**மன்னுயிரைக் கொன்று வதைத்துண்டு ழலாமல்**
**தன்னுயிர்போலெண்ணித் தவமுடிப்ப தெக்காலம். 15**

**பாவியென்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்**
**ஆவியென்ற சூத்திரத்தை யறிவதினி யெக்காலம். 16**

**உளியிட்ட கல்லும் உருப்பிடித்த செஞ்சாந்தும்**
**புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம். 17**

வேடிக்கையுஞ் சொகுசும் மெய்ப்பக்கட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை யெல்லாம் மறந்திருப்ப தெக்காலம். 18

பட்டுடையும் பொற்பணியும் பாவனையுந் தீவினையும்
விட்டுவிட்டுன் பாதம் விரும்புவது மெக்காலம். 19

ஆமை வருமாட்கண் டைந்தடக்கஞ் செய்தாற்போல்
ஊமை யுருக்கொண் டொடுங்குவது மெக்காலம். 20

தண்டிகையுஞ் சாவடியுஞ் சாளிகையு மாளிகையுங்
கண்டு களிக்குங் கருத்தொழிவ தெக்காலம். 21

அத்தன் இருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதஞ்
செத்த சவம்போற் றிரிவதினி யெக்காலம். 22

ஒழிந்தகருத் தினைவைத் துள்ளெழும்புவெள் ளெலும்பாய்க்
கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம். 23

அற்ப சுகமறந்தே அறிவையறி வாலறிந்து
கெர்ப்பத்தில் வீழ்ந்து கொண்ட கோளறுப்ப தெக்காலம். 24

கருப்படுத்தி என்னையமன் கைப்பிடித்துக் கொள்ளாமுன்
உருப்படுத்தி யாள உடன்படுவ தெக்காலம். 25

தூண்டு விளக்கணையத் தொடர்ந்திருள் முன்சூழ்ந்தாற்போல்
மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம். 26

தூரியினில் மீன்போற் சுழன்று மனம்வாடாமல்
ஆரியனைத் தேடி அடிபணிவ தெக்காலம். 27

எண்ணூறு யுகமிருந்தும் எய்தாத வீடுபெற
வெண்ணீறு பூசி விளங்குவது மெக்காலம். 28

அவவேடம் பூண்டிங் கலைந்து திரியாமற்
சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம். 29

அண்டருக்கா நஞ்சருந்தி அம்பலத்தி லாடுசிவன்
தொண்டருக்குத் தொண்டனென தொண்டுசெய்வ தெக்காலம். 30

பன்றி வடிவெடுத்துப் பாரிடந்து மால்காணாக்
குன்றில் விளக்கொளியைக் கூறுவது மெக்காலம். 31

தித்திக்குந் தெள்ளமிர்தை சித்தாந்தத் துட்பொருளை
முத்திக்கு வித்தை முதனினைப்ப தெக்காலம். 32

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிஷ்டையிலே
ஏகாந்தமாக யிருப்பதினி யெக்காலம். 33

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம். 34

இன்றுளோர் நாளை யிருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம். 35

கஞ்சா அபினியுடன் கள்ளுண்டே வாடாமற்
பஞ்சாமிர்தத்தைப் பருகுவது மெக்காலம். 36

செஞ்சலத்தி னாற்றிரண்ட ஜெனனமோக்ஷம் பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம். 37

கும்பிக் கிரைத்தேடிக் கொடுப்பா ரிடந்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பதினி யெக்காலம். 38

ஆடுகின்ற சூத்திரந்தான் அறுமளவுமே திரிந்து
போடுன்றநாள்வருமுன் போற்றுவது மெக்காலம். 39

நவசூத் திரவீட்டை நானென் றலையாமல்
சிவசூத் திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம். 40

மறந்து மலசலங்கள் மாய்ப்புழுக் கூட்டைவிட்டுக்
கரந்துன் அடியினைக் கீழ்க் கலந்துநிற்ப தெக்காலம். 41

இம்மை தனிற்பாதகனாய் இருவினைக்கீ டாயெடுத்த
பொம்மை தனைப்போட்டுன்னைப் போற்றி நிற்ப தெக்காலம். 42

உப்பிட்ட பாண்டம் உடைந்துகருக் கொள்ளுமுன்னே
அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக்காலம். 44

சேவைபுரிந்து சிவரூப காட்சி கண்டு
பாதைதனைக் கழித்துப் பயனடைவ தெக்காலம். 45

காண்டத்தை வாங்கிக் கருமேகம் மீண்டதுபோல்
பாண்டத்தை நீக்கிப் பரமடைவ தெக்காலம். 46

சோற்றுத் துருத்திதனைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊத்தைச் சடம்போட் டுனையடைவ தெக்காலம். 47

தொடக்கைச் சதமெனவே சுமந்தலைந்து வாடாமல்
உடக்கைக் கழற்றி உனையறிவ தெக்காலம். 48

ஆசைவலைப்பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணி தீபத்தி லொன்றி நிற்ப தெக்காலம். 49

கூறறிய நால்வேதங் கூப்பிட்டுங் காணாத
பார ரகசியத்தைப் பார்த்திருப்ப தெக்காலம். 50

புல்லாய் விலங்காய்ப் புழுவாய் நரவடிவாய்
எல்லாப் பிறப்பி னிருளகல்வ தெக்காலம். 51

தக்கும் வகைக்கோர் பொருளும் சாராமலே நினைவில்
பக்குவம் வந்துன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம். 52

பருவத் தலைவரொடும் புல்கியின்பங் கொள்வதற்குத்
தெரிவைப் பருவம் வந்து சிக்குவது மெக்காலம். 53

தெரிவையுறும் பக்குவத்தின் சீராட்ட மெல்லாமறிந்து
குருவையறிந்தே நினைத்துக் கும்பிடுவ தெக்காலம். 54

வம்படிக்கும் மாதருடன் வாழ்ந்தாலும் மன்னுபுளி
யம்பழமும் ஓடும்போ லாவதினி யெக்காலம். 55

பற்றற்று நீரிற் படர்தாமரை யிலைபோல்
சுற்றத்தை நீங்கிமனந் தூரநிற்ப தெக்காலம். 56

சல்லாப லீலையிலே தன்மனைவி செய்தசுகம்
சொல்லாரக் கண்டெனக்குச் சொல்வதினி யெக்காலம். 57

மருவும் அயற்புருடன் வருநேரங் காணாமல்
உருகுமனம் போலெனுள்ளம் உருகுவது மெக்காலம். 58

தன்கணவன் தன்சுகத்திற் தன்மனம் வேறானதுபோல்
என்கருத்தி லுன்பதத்தை ஏற்றுவது மெக்காலம். 59

கூடிப் பிரிந்துவிட்ட கொம்பனையைக் காணாமல்
தேடித் தவிப்பவன்போல் சிந்தைவைப்ப தெக்காலம். **60**

எவ்வனத்தின் மோகம் எப்படியுண் டப்படிபோல்
கவ்வனத் தியானம் கருத்துவைப்ப தெக்காலம். **61**

கண்ணா லருவி கசிந்துமுத்துப் போலுதிரச்
சொன்னபரம்பொருளைத் தொகுத்தறிவ தெக்காலம். **62**

ஆக மிகவுருக வன்புருக யென்புருகப்
போக வநுபூதி பொருந்துவது மெக்காலம். **63**

நீரிற் குமிழிபோல் நிலையற்ற வாழ்வைவிட்டுன்
பேரின்பக் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம். **64**

அன்பை யுருக்கி அறிவையதன் மேற்புகட்டித்
துன்பவலைப் பாசத் தொடக்கறுப்ப தெக்காலம். **65**

கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்
அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம். **66**

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொரியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம். **67**

ஆதார மூலத் தடியில் கணபதியைப்
பாதார விந்தம் பணிந்துநிற்ப தெக்காலம். **68**

மண்வளைந்த நற்கீற்றில் வளைந்திருந்த வேதாவைக்
கண்வளர்த்துப் பார்த்துள்ளே கண்டிருப்ப தெக்காலம். **69**

அப்புப் பிறைநடுவே அமர்ந்திருந்த விட்டுணுவை
உப்புக் குடுக்கையுள்ளே உணர்ந்தறிவதெக்காலம். **70**

மூன்று வளையமிட்டு முளைத்தெழுந்த கோணத்தில்
தோன்றும் உருத்திரனைத் தொழுதுநிற்ப தெக்காலம். **71**

வாயுவறு கோணமதில் வாழும் மகேச்சுரனைத்
தோயும்வகை கேட்கத் தொடங்குவது மெக்காலம். **72**

வட்டவழிக் குள்ளே மருவுஞ் சதா சிவத்தைக்
கிட்டவழி தேடக் கிருபை செய்வ தெக்காலம். **73**

உச்சிக் கிடைநடுவே ஓங்கும் குருபதத்தை
நிச்சயித்துக் கொண்டிருந்து நேர்வதினி யெக்காலம். 74

பாராகிப் பார்மீதிற் பஞ்சவர்ணந்தானாகி
வேறாகி நீமுளைத்த வித்தறிவ தெக்காலம். 75

கட்டறுக்க வொண்ணாக் கருவிகர ணாதியெல்லாஞ்
சுட்டறுத்த நிட்டையிலே தூங்குவது மெக்காலம். 76

கள்ளக் கருத்தை யெல்லாங் கட்டோடு வேரறுத்திங்
குள்ளக் கருத்தை உணர்ந்திருப்ப தெக்காலம். 77

அட்டகாசஞ் செலுத்தும் அவத்தைச் சடலத்துடனே
பட்டபா டத்தனையும் பகுத்தறிவ தெக்காலம். 78

அறிவுக் கருவியுட னவத்தைப்படும் பாட்டை யெல்லாம்
பிரியமுடன் நிருத்திப் பெலப்படுவ தெக்காலம். 79

பூதம் பொறிகரணம் போந்தவிந்து நாதமுமாய்ப்
பேதம் பலவிதமும் பிரித்தறிவ தெக்காலம். 80

தோன்றாசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றாமல்
ஊன்றாசை வேரையடி யூடறுப்ப தெக்காலம். 81

புன்சனனம் போற்றுமுன்னே புரிவட்டம் போகிலினி
யென்சனன மீடேறு மென்றறிவ தெக்காலம். 82

நட்ட நடுவினின்று நற்றிரோ தாயியருள்
கிட்ட வழிகாட்டிக் கிருபைசெய்வ தெக்காலம். 83

நானேநா னென்றிருந்தேன் நடுவினின்ற கட்டழகி
தானே வெளிப்படுத்தித் தருவனென்ப தெக்காலம். 84

அடர்ந்த மனக்காட்டை அஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்து வெட்டிச் சுடுவதினி யெக்காலம். 85

ஐந்து பொறிவழிபோய் அலைத்துமிந்தப் பாழ்மனதை
வெந்து விழப்பார்த்து விழிப்பதினி யெக்காலம். 86

இனமாண்டு சேர்ந்திருந்தோ ரெல்வோருந் தான்மாண்டு
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம். 87

அமையா மனதமையும் ஆனந்த வீடுகண்டங்
கிமையாமல் நோக்கி யிருப்பதினி யெக்காலம். 88

கூண்டுவிழுஞ் சீவன் மெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்
மாண்டுவிழு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம். 89

ஊனிறைந்த காயமுயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம். 90

கெட்டு விடுமாந்தர் கெர்விதங்கள் பேசிவந்த
சுட்டுவிடு முன்னென்னைச் சுட்டிருப்ப தெக்காலம். 91

தோலேணி வைத்தேறித் தூரநடந் தெய்க்காமல்
நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம். 92

வாயோடு கண்மூடி மயக்கமுற்று நில்லாமல்
தாயோடு கண்மூடித் தழுவிநிற்ப தெக்காலம். 93

காசினியெ லாநடந்து காலோய்ந்து போகாமல்
வாசி தனிலேறி வருவதினி யெக்காலம். 94

ஒலிபடருங் குண்டலியை உன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் தாள் திறந்து தூண்டுவது மெக்காலம். 95

இடைபிங் கலைநடுவே இயங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சலித்திருப்ப தெக்காலம். 96

மூல நெருப்பைவிட்டு மூட்டிநிலா மண்டபத்தில்
பாலைஇறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம். 97

ஆக வெளிக்குள்ளே அடங்காப் புரவிசெல்ல
ஏக வெளியி லிருப்பதினி யெக்காலம். 98

பஞ்சரித்துப் பேசும் பலகலைக்கெட்டாப் பொருளில்
சஞ்சரித்து வாழ்ந்து தவம்பெறுவ தெக்காலம். 99

மலமுஞ் சலமுமற்று மாயையற்றுமானமற்று
நலமுங் குலமுமற்று நானிருப்ப தெக்காலம். 100

ஓடாமலோடி உலகைவலம் வந்து சுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம். 101

அஞ்ஞானம் விட்டே அருண்ஞானத் தெல்லைதொட்டு
மெய்ஞ்ஞான வீடுபெற்று வெளிப்படுவ தெக்காலம். 102

வெல்லும் மட்டும் பார்த்து வெகுளியெலாம் விட்டகன்று
சொல்லுமட்டுஞ் சிந்தை செலுத்துவது மெக்காலம். 103

மேலாம் பதந்தேடி மெய்ப்பொருளை யுள்ளிருத்தி
நாலாம் பதந்தேடி நான்பெறுவ தெக்காலம். 104

எண்ணாத தூர மெல்லா மெண்ணியெண்ணிப் பாராமல்
கண்ணாடிக்குள் ளொளிபோல் கண்டறிவ தெக்காலம். 105

என்னை அறிந்து கொண்டே எங்கோமா னோடிருக்கும்
தன்மை அறிந்து சமைந்திருப்ப தெக்காலம். 106

ஆறாதா ரங்கடந்த ஆனந்தப் பேரொளியை
வேறாகக் கண்டுநான் பெற்றிருப்ப தெக்காலம். 107

ஆணவ மாயத்தா லழிந்துடலம் போகாமுன்
காணுதலா லின்ப முற்றுக்கண்டறிவ தெக்காலம். 108

மும்முலமுஞ் சேர்த்து முளைத்தெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கண்டுவினை நீங்கியிருப்ப தெக்காலம். 109

முன்னை வினைகெடவே மூன்றுவகை காட்சியினால்
உன்னை வெளிப்படுத்தி உறுவதினி யெக்காலம். 110

கண்ணினொளி பாய்ந்ததுவுங் கருத்தறிந்து கொண்டதுவும்
விண்ணினொளி கண்டதுவும் வெளிப்படுவ தெக்காலம். 111

கனவுகண்டாற் போலெனக்குக் காட்டிமறைத் தேயிருக்க
நினைவைப் பரவெளிமேல் நிறுத்துவது மெக்காலம். 112

ஆரென்று கேட்டதுவும் அறிவுவந்து கண்டதுவும்
பாரென்று சொன்னதுவும் பகுத்தறிவ தெக்காலம். 113

நினைக்கும் நினைவுதொறும் நிறைந்த பரிபூரணத்தை
முனைக்கு மேற்கண்டுகண்ணில் முளைந்தெழுப்ப தெக்காலம். 114

முப்பாழும் பாழாய் முதற்பாழுஞ் சூனியமாய்
அப்பாழும் பாழா அன்புசெய்வ தெக்காலம். 115

சீயென் றெழுந்து தெளிந்த நின்றவான் பொருளை
நீயென்று கண்டு நிலைபெறுவ தெக்காலம். 116

வவ்வெழுத்து மவ்வெழுத்தும் வாளாகுஞ் சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தினுள்ளே யடங்கிநிற்ப தெக்காலம். 117

எழுத்தெல்லாம் மாண்டிறந்தே ஏகமாய் நின்றதிலே
அழுத்தமாய்ச் சிந்தைவைத் தன்புகொள்வ தெக்காலம். 118

அருவாய் உருவாகி ஆதியந்த மாகிநின்ற
குருவாகி வந்தெனையாட் கொண்டருள்வ தெக்காலம். 119

நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாந்
தானென்று நீயிருந்த தனையறிவ தெக்காலம். 120

என்மயமாய்க் கண்டதெல்லாம் எண்ணிஎண்ணிப் பார்த்தபின்பு
தன்மயமாய்க் கொண்டதிலே சார்ந்து நிற்ப தெக்காலம். 121

ஒளியி லொளியாம் உருப்பிறந்த வாறது போல்
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம். 122

ஒளியிட்ட மெய்ப்பொருளை யுள்வழியிலேயடைத்து
வெளியிட்டுச்சாத்திவைத்து வீடுறுவ தெக்காலம். 123

காந்தம் வலித்திரும்பை கரத்திழுத்துக் கொண்டதுபோல்
பாய்ந்து பிடித்திழுத்துன் பதத்தில் வைப்ப தெக்காலம். 124

பித்தாயங்கொண்டு பிரணவத்தை யூடறுத்துச்
செத்தாரைப்போலே திரிவதினி யெக்காலம். 125

ஒழிந்தகருத்தினை வைத் துள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினி யெக்காலம். 126

ஆதி கபிலர் சொன்ன ஆகமத்தின் சொற்படியே
சாதிவகை யில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம். 127

சூதுங் களவுந் தொடர்வினையுஞ் சுட்டிடக்காற்
றூதுந் துருத்தியைப் போட்டுனையடைவ தெக்காலம். 128

ஆசை வலைப்பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசை மணித்தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம். 129

கல்லாய் மரமாய் கயலாய் பறவைகளாய்
புல்லாய்ப் பிறந்த ஜென்மம் போதுமென்ப தெக்காலம். 130

தக்கும் வகைக்கோர் பொருளும் சாராமலே நினைவில்
பக்குவமாய் உன்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம். 131

தூரோ டிசைந்து சுழன்றுவருந் தத்துவத்தை
வேரோ டிசைந்து விளங்குவது மெக்காலம். 132

பாக நடுவேறிப் பயந்தெழுந்த சித்திரத்தை
ஏசநடுமூலத் திருத்துவது மெக்காலம். 133

ஓரின்பங் காட்டும் உயர்ஞான வீதிசென்று
பேரின்ப வீடுகண்டு பெற்றிருப்ப தெக்காலம். 134

காரணமாய் வந்தென் கருத்தில் உரைத்ததெல்லாம்
பூரணமாகக் கண்டு புகழ்ந்திருப்ப தெக்காலம். 135

ஆயுங் கலைகளெல்லாம் ஆராய்ந்து பார்த்ததற்பின்
நீயென்று மில்லா நிசங்காண்ப தெக்காலம். 136

குறியாகக் கொண்டு குலமளித்த நாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப தெக்காலம். 137

மத்தடுத்து நின்று மருளாடு வார்போல
பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம். 138

சாவாமல் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேகாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம். 139

என்னை யறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரநின்
தன்னை யறிந்து தவம் பெறுவ தெக்காலம். 140

உள்ள மறியா தொளித்திருந்த நாயகனைக்
கள்ள மனந் தெளிந்து காண்பதினி யெக்காலம். 141

வாசித்துங் காணாமல் வாய்விட்டும் போசாமல்
பூசித்துந் தோன்றாப் பொருள் காண்ப தெக்காலம். 142

பன்னிரண்டு காற்புரவி பாய்ந்துசில்லந் தப்பாமல்
பின்னிரண்டு சங்கிலிக்குட் பிணிப்பதினி யெக்காலம். 143

நாட்டுக்கா லிரண்டும் விட்டு நடுவுக்கா லூடேபோய்
ஆட்டுக்கா லிரண்டினுள்ளே அமர்ந்திருப்ப தெக்காலம். 144

பாற்பசுவைப் பூட்டிப் பதியில் வைத்துச் சீராட்டிக்
காற்பசுவை ஓட்டியதில் கட்டிவைப்ப தெக்காலம். 145

பலவிடத் தேமனதைப் பாயவிட்டுப் பாராமல்
நிலவரையி னூடேபோய் நேர்படுவ தெக்காலம். 146

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல் வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம். 147

உதயச் சுடர்மூன்றும் உள்வீட்டிலே கொளுத்தி
இதயத் திருநடன மினிகாண்ப தெக்காலம். 148

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுவிருப்ப தெக்காலம். 149

பட்டமற்றுக் காற்றிற் பறந்தாடும் சூத்திரம்போல்
விட்டு வெளியாக விசுவசித்த லெக்காலம். 150

அட்டாங்க யோகமதற் கப்பாலுக் கப்பாலாய்
கிட்டாப் பொருளதனைக் கிட்டுவது மெக்காலம். 151

ஒட்டாம லொட்டிநிற்கும் உடலுமுயிரும் பிரித்தே
எட்டாப் பழம்பதிக்கிங் கேணிவைப்ப தெக்காலம். 152

பாசத்தை நீக்கிப் பசுவைப்பதியில் விட்டு
நேசத்தி னுள்ளே நினைந்திருப்ப தெக்காலம். 153

ஆசார நேய அனுட்டானமும் மறந்து
பேசா மெய்ஞ் ஞானநிலைப் பெற்றிருப்ப தெக்காலம். 154

பல்லாயி ரங்கோடிப் பகிரண்ட மும்படைப்பே
அல்லாது வேறில்லையென்று அறிவதினி யெக்காலம். 155

ஆதிமுத லாகிநின்ற அரியென்ற வட்சரத்தை
ஓதி யறிந்துள்ளே யுணர்வதினி யெக்காலம். 156

சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு துயரறுப்ப தெக்காலம். 157

அல்லும் பகலுமென்றன் அறிவையறி வாலறிந்த
சொல்லும் முறைமறந்து தூங்குவது மெக்காலம். 158

இயங்குஞ் சராசரத்தில் எள்ளுமெண்ணெ யும்போல
முயங்குமந்த வேத முடிவறிவ தெக்காலம். 159

ஊனாகி யூனில் உயிராகி யெவ்வுலகுந்
தானாகி நின்ற தனையறியவ தெக்காலம். 160

என்னைவிட்டு நீங்காம என்னிடத்து நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம். 161

இன்னதென்று சொல்லவொண்ணா எல்லையற்றவான் பொருளைச்
சொன்ன தென்று நானறிந்து சொல்வதினி யெக்காலம். 162

மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை அம்பாக்கி எய்வதினி யெக்காலம். 163

என்னை இறக்கவெய்தே என்பதியை யீடழித்த
உன்னை வெளியில்வைத்தே ஒளித்துநிற்ப தெக்காலம். 164

கடத்துகின்ற தோணிதனைக் கழைகள் குத்தி விட்டாற்போல்
நடத்துகின்ற சித்திரத்தை நானறிவ தெக்காலம். 165

நின்றநிலை பேராமல் நினைவிலொன்றும் சாராமல்
சென்றநிலை முத்தியென்று சேர்ந்தறிவ தெக்காலம். 166

பொன்னும் வெள்ளியும் பூண்ட பொற்பதத்தை யுள்ளமைத்து
மின்னு மொளிவெளியே விட்டடைப்ப தெக்காலம். 167

கூட்டிலடைப் பட்டபுழு குளவியுருக் கொண்டதுபோல்
வீட்டிலடைப் பட்டருளை வேண்டுவது மெக்காலம். 168

கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலில் ஒளித்தசிவம் ஒளிசெய்வ தெக்காலம். 169

அருணப் பிரகாசம் அஇிண்டமெங்கும் போர்த்ததுபோல்
கருணைத் திருவடியில் கலந்துநிற்ப தெக்காலம். 170

பொன்னிற் பலவிதமாம் பூரணமுண் டானாது போல்
உன்னிற் பிறந்ததுன்னில் ஒடுங்குவது மெக்காலம். 171

நாயிற் கடைப்பிறப்பாய் நான்பிறந்த துன்பமற
வேயிற் கனலொளிபோல் விளங்குவது மெக்காலம். 172

சூரிய காந்தியொளி சூழ்ந்து பஞ்சைச் சுட்டதுபோல்
ஆரியன் தோற்றத் தருள்பெறுவ தெக்காலம். 173

இரும்பிற் கனல்மூட்டி இவ்வுருபோய் அவ்வுருவாய்க்
கரும்பிற் சுவைரசத்தைக் கண்டறிவ தெக்காலம். 174

கருக்கொண்ட முட்டைதனை கடலாமை தானினைக்க
உருக்கொண்டவாறதுபோல் உனையடைவ தெக்காலம். 175

வீடுவிட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறிவ தெக்காலம். 176

கடைந்த வெண்ணை மோரிற் கலவாத வாறதுபோல்
உடைந்து தமியேன் உனைக்காண்ப தெக்காலம். 177

இருளை ஒளிவிழுங்கி ஏகவுருக் கொண்டாற்போல்
அருளை விழுங்குமிருல் உகன்றுநிற்ப தெக்காலம். 178

மின்னெழுந்து மின்னொடுங்கி விண்ணில் உறைந்தாற்போல்
என்னுள்நின்றது என்னுள்ளே யானறிவ தெக்காலம். 179

கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்
கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம். 180

பூணுகின்ற பொன்னணிந்தாற் பொன்சுமக்குமோ வுடலை
காணுகின்ற என்கருத்திற் கண்டறிவ தெக்காலம். 181

செம்பிற் களிம்புபோற் சிவத்தை விழுங்குமிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறுசெய்வ தெக்காலம். 182

ஆவியுங் காயமும்போல் ஆத்துமத்து நின்றதனைப்
பாவி யறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம். 183

**ஊமைக் கனாக்கண் டுரைக்கறியா இன்பமதை**
**நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம்.** 184

**சாகாச் சிவனடியைத் தப்பாதார் எப்போதும்**
**போகா உடலகன்று போவதென்ப தெக்காலம்.** 185

**நிட்டை தனைவிட்டு நினைவறிவு தப்பவிட்டு**
**வெட்ட வெளியில் விரவிநிற்ப தெக்காலம்.** 186

**வெட்டவெளி தன்னில் விளைந்த வெம்பாதத்தை**
**திட்டமுடன் கண்டு தெளிவதினி யெக்காலம்.** 187

**எங்கும் பரவடிவாய் என்வடிவு நின்வடிவாய்க்**
**கங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம்.** 188

**உண்டதுவும் மாதருடன் கூடிச் சேர்ந்தின்பங்**
**கண்டதுவு நீயெனவே கண்டு கொள்வ தெக்காலம்.** 189

**ஈமென்று கேட்டதுவும் என்னுள்ளே நின்றதுவும்**
**ஓமென்று சொன்னதுவும் உற்றறிவ தெக்காலம்.** 190

**சத்தம் பிறந்தவிடந் தன்மயமாய் நின்றவிடஞ்**
**சித்தம் பிறந்தவிடந் தேர்ந்தறிவ தெக்காலம்.** 191

**போக்கு வரவும் புறம்புள்ளு மாகிநின்றும்**
**தாக்கு மொரு பொருளைச் சந்திப்ப தெக்காலம்.** 192

**நானெனவு நீயெனவு நாமிரண்டு மற்றொன்றும்**
**நீயெனவே சிந்தைதனி நேறபடுவ தெக்காலம்.** 193

**அறிவையறி வாலறிந்தே அறிவும் அறிவுதனில்**
**பிறிவுபட நில்லாமல் பிடிப்பதினி யெக்காலம்.** 194

**நீடும் புவனமெல்லாம் நிறைந்துசிந் தூரமதாய்**
**ஆடும் திருக்கூத்தை அறிவதினி யெக்காலம்.** 195

**தித்தியென்ற கூத்தும் திருச்சிலம்பி னோசைகளும்**
**பத்தியுடனே கேட்டுப் பணிவதினி யெக்காலம்.** 196

**நயனத் திடைவெளிபோய் நண்ணும் பரவெளியில்**
**சயனத் திருந்து தலைப்படுவ தெக்காலம்.** 197

அருவி மலைநடுவே ஆயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையா டற்கண்டு தெரிசிப்ப தெக்காலம். 198

மீனைமிக வுண்டு நக்கி விக்கிநின்ற கொக்கதுபோல்
தேனைமிக வுண்டு தெவிட்டிநிற்ப தெக்காலம். 199

பொல்லாத காயமதைப் போட்டு விடுக்குமுன்னே
கல்லாவின் பால்கறப்பக் கற்பதினி யெக்காலம். 200

வெட்டவெளிக் குள்ளே விளங்குஞ் சதாசிவத்தைக்
கிட்டிவரத் தேடிக் கிருபை செய்வ தெக்காலம். 201

பேரறிவி லேமனதை பேசாம லேயிருத்தி
ஓரறிவி லென்னாளும் ஊன்றிநிற்ப தெக்காலம். 202

அத்துவிதம் போலுமென்றன் ஆத்துமத்தினுள்ளிருந்து
முத்திதர நின்ற முறையறிவ தெக்காலம். 203

நானின்ற பாசமதில் நானிருந்து மாளாமல்
நீநின்ற கோலமதில் நிரவிநிற்ப தெக்காலம். 204

எள்ளும்கரும்பும் எழுமலரும் காயமும்போல்
உள்ளும் புறம்புநின்ற துற்றறிவ தெக்காலம். 205

அன்னம் புனலைவகுத் தமிர்தத்தை யுண்டதுபோல்
என்னைவகுத் துன்னை இனிக்காண்பதெக்காலம். 206

அந்தரத்தில் நீர் பூத் தலர்ந்தெழுந்த தாமரைபோல்
சிந்தைவைத்துக் கண்டு தெரிசிப்ப தெக்காலம். 207

பிறப்பும் இறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்பும் நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம். 208

மன்னும் பரவெளியை மனவெளியில் அடைத்தறிவை
என்னு ளொருநினைவை எழுப்பிநிற்ப தெக்காலம். 209

ஆசைகொண்டமாதர் அடைகனவு நீக்கியுன்மேல்
ஓசைகொண்டு நானும் ஒடுங்குவது மெக்காலம். 210

தன்னுயிரைக் கொண்டு தான்றிரிந்த வாறதுபோல்
உன்னுயிரைக் கொண்டிங் கொடுங்குவது மெக்காலம். 211

சேற்றிற் கிளைநாட்டுந் திடமாம் உடலையினிக்
காற்றிலுழல் சூத்திரமாய்க் காண்பதினி யெக்காலம். 212

என்வசமுங் கெட்டிங் கிருந்தவச மும்மழிந்து
தன்வசமுங் கெட்டருளைச் சார்ந்திருப்ப தெக்காலம். 213

தன்னை மறந்து தலத்து நிலைமறந்து
கன்மம் மறந்து கதி பெறவ தெக்காலம். 214

என்னை யென்னிலே மறைந்தே இருந்தபதி யும்மறந்து
தன்னையுந் தானேமறந்து தனித்திருப்ப தெக்காலம். 215

தன்னையுந் தானேமறந்து தலைவாசற் றாழ்போட்டே
உன்னைநினைந் துள்ளே யுறங்குவது மெக்காலம். 216

இணைபிரிந்த போதிலன்றி யின்பமுறும் அன்றிலைப்போல்
துணைபிரிந்த போதருள்நூல் தொடர்ந்து கொள்வ தெக்காலம். 217

ஆட்டம் ஒன்றுமில்லாமல் அசைவுசற்றுங் காணாமல்
தேட்டமற்ற வான்பொருளைத் தேடுவது மெக்காலம். 218

முன்னைவினை யாலறிவு முற்றாமற் பின்மறைந்தால்
அன்னை தனைத்தேடி அமுதுண்ப தெக்காலம். 219

கள்ளுண் டவன்போற் களிதருமா னந்தமதால்
தள்ளுண்டு நின்றாடித் தடைப்படுவ தெக்காலம். 220

தானென்ற ஆணவமுந் தத்துவமுங் கெட்டொழிந்தே
ஏனென்ற பேச்சுமிலா திலங்குவது மெக்காலம். 221

நானவனாய்க் காண்பதெல்லா ஞானவிழி யாலறிந்து
தானவனாய் நின்று சரணடைவ தெக்காலம். 222

தானந்த மில்லாத தற்பரத்தி னூடுருவி
ஆனந்தங் கண்டே அமர்ந்திருப்ப தெக்காலம். 223

உற்ற வெளிதனிலே உற்றுப்பார்த் தந்தரத்தே
மற்ற மறமாய்கை மாள்வதினி யெக்காலம். 224

ஏடலர்ந்த பங்கயமும் இருகருணை நேத்திரமுந்
தோடணிந்த குண்டலமுந் தோன்றுவது மெக்காலம். 225

ஐயாமும் ஆறு அகன்று வெறுவெளியில்
மையிருளில் நின்றமனம் மாள்வதினி யெக்காலம். 226

காட்டும் அருண்ஞானக் கடலிலன்புக் கப்பல்விட்டு
மூட்டுங்கரு ணைக்கடலில் மூழ்குவது மெக்காலம். 227

நானாரோ நீயாரோ நன்றாம் பரமான
தானோரோ வென்றுணர்ந்து தவமுடிப்ப தெக்காலம். 228

எவரவர்க ளெப்படிகண் டெந்தப்படி நினைத்தார்
அவரவர்க் கப்படிநின் றானென்ப தெக்காலம். 229

உற்றுற்றுப் பார்க்க வொளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி யெக்காலம். 230

விளங்குகின்ற தாரகையை வெய்யோன் மறைத்தாற்போல்
களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம். 231

என்னையே நானறியேன் இந்தவண்ணஞ் சொன்னதெல்லாம்
முன்னையோர் கைக்கொள்ள முன்பணிவ தெக்காலம். 232

மாயத்தை நீக்கி வருவினையைப் பாழாக்கிக்
காயத்தை வேறாக்கிக் காண்பதுனை எக்காலம் 233

ஐஞ்சு கரத்தானை அடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற் பொருந்தி நிலைபெறுவ தெக்காலம். 234

# 10. கொங்கணச் சித்தர் பாடல்

எழில் கொஞ்சும் கேரள நாட்டில் கொங்கண தேசத்தில் சித்திரை மாத உத்திர நட்சத்திரத்தில் புளிஞர் குடியில் கொங்கணர் பிறந்தார். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த குழந்தையின் மனதில் அம்பிகையின் அருள் நினைவே நிறைந்திருந்தது.

மாபெரும் சித்தராம் போகரைத் தரிசித்த கொங்கணர் அவர் கால்களில் விழுந்து வணங்கினார். போகர் அம்பிகையை வழிபடும் முறையையும் உரிய மந்திரத்தையும் உபதேசித்தார்.

அதன்பின் திருமூலர் போன்ற பல சித்தர்களைத் தரிசித்துப் பல்வேறு சித்திகள் கைவரப் பெற்றார் கொங்கணர்.

ஒருசமயம் இவர் நிஷ்டையில் இருந்தபோது இவர்மீது கொக்கொன்று எச்சமிட்டது. கோபத்தில் தலைநிமிர்ந்து கொக்கை விழித்துப் பார்த்தார். கொக்கு எரிந்து சாம்பலானது.

திருமூலரைப் போன்றே கொங்கணவரும் கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார் என கருவூரார் வாதகாவியம் தெரிவிக்கின்றது.

பல நூறு சீடர்களுக்கும் யோக ஞான சித்திகளை அருளிய கொங்கணர் இறுதியில் திருப்பதியில் சித்தி அடைந்தார்.

## வாலைக்கும்மி

### விநாயகர் துதி

### பின் முடுகு வெண்பா

1. **கல்விநிறை வாலைப்பெண் காதலியென் றோதுகின்ற**
**செல்வியின் மேற் கும்மிதனைச் செப்புதற்கே - நல்விசய**
**நாதனின்சொல் வேதனஞ்சு போதன்மிஞ்சி மானகஞ்ச**
**பாதம் வஞ்ச நெஞ்சினில்வைப் போம்.**

### கும்மி

2. **சத்தி சடாதரி வாலைப்பெண் ணாமந்த**
**உத்தமி மேற் கும்மிப் பாட்டுரைக்க**

வித்தைக் குதவிய வொற்றைக்கொம் பாம்வாலை
சித்தி விநாயகன் காப்பாமே.

## சரஸ்வதி துதி

3. சித்தர்கள் போற்றிய வாலைப் பெண் ணாமந்த
சத்தியின் மேற்கும்மிப் பாட்டுரைக்கத்
தத்தமி தோமென ஆடுஞ் சரஸ்வதி
பத்தினி பொற்பதங் காப்பாமே.

## சிவபெருமான் துதி

4. எங்கும் நிறைந்தவள் வாலைப்பெண் ணாம்மாலின்
தங்கையின் மேற்கும்மி பாடுதற்குக்
கங்கை யணிசிவ சம்புவாஞ் சற்குரு
பங்கயப் பொற்பதங் காப்பாமே.

## சுப்பிரமணியர் துதி

5. ஞானப்பெண் ணாமருள் சோதிப்பெண் ணாமாதி
வாலைப்பெண் மேற்கும்மி பாடுதற்கு
மானைப் பெண் ணாக்கிய வள்ளிக் கிசைந்திடும்
மால்முரு கேசனுங் காப்பாமே.

## விஷ்ணு துதி

6. ஆண்டிப்பெண் ணாம்ராச பாண்டிப்பெண் ணாம்வாலை
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குக்
காண்டீப னாம்பணி பூண்டவன் வைகுந்தம்
ஆண்டவன் பொற்பதங் காப்பாமே.

## நந்தீசர் துதி

7. அந்தரி சுந்தரி வாலைப்பெண் ணாமந்த
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குச்
சிந்தையில் முந்திநல் விந்தையாய் வந்திடும்
நந்தீசர் பொற்பதங் காப்பாமே.

## நூல்

8. தில்லையில் முல்லையி லெல்லையு ளாடிய
வல்லவள் வாலைப் பெண் மீதினிலே

சல்லாபக் கும்மித் தமிழ்பா டவரும்
தொல்லை வினை போக்கும் வாலைப் பெண்ணே!

9. மாதா பிதாகூட இல்லாம லேவெளி
மண்ணும் விண்ணுமுண்டு பண்ணவென்று
பேதைப்பெண் ணாமுதல் வாலைப்பெண் ணாளென்று
புகுந்தா ளிந்தப் புவியடக்கம்

10. வேதமும் பூதமுண் டானது வும்வெளி
விஞ்ஞான சாத்திர மானதுவும்
நாதமுங் கீதமுண் டானது வும்வழி
நான் சொல்லக் கேளடி வாலைப் பெண்ணே!

11. முந்தச் செகங்களுண் டானது வும்முதல்
தெய்வமுந் தேவருண் டானதுவும்
விந்தையாய் வாலையுண் டானது வும்ஞான
விளக்கம் பாரடி வாலைப் பெண்ணே!

12. அரிக்கு முந்தின தவ்வெழுத்தாம் பின்னும்
அரிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்

தரிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி
பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்.

13. ஆதியி லைத்தெழுத் தாயினாள் வாலைப்பெண்
ஐந்தெழுத் துமென்று பேரானாள்
நாதியி னூமை யெழுத்திவள் தானல்ல
ஞான வகையிவள் தானானாள்.

14. ஊமை யெழுத்தே யுடலாச்சு மற்றும்
ஓமென் றெழுத்தே யுயிராச்சு
ஆமிந் தெழுத்தை யறிந்துகொண் டுவிளை
யாடிக் கும்மி யடியுங்கடி.

15. செகம்ப டைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சீவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்
உகமு டிந்தது மஞ்செழுத் தாம்பின்னும்
உற்பன மானது மஞ்செழுத்தாம்.

16. சாத்திரம் பார்த்தாலுந் தானுமென்ன வேதந்
தானுமே பார்த்திருந் தாலுமென்ன?

சூத்திரம் பார்த்தல்லோ ஆளவேணு மஞ்சு
  சொல்லை யறிந்தல்லோ காணவேணும்

17. காணாது கிட்டாதே எட்டாதே அஞ்சில்
  காரிய மில்லையென் றேநினைத்தால்
காணாதுங் காணலா மஞ்செழுத் தாலதில்
  காரிய முண்டு தியானஞ் செய்தால்.

18. ஆயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயறி
  வாயனு மைந்தா மெழுத்துக்குள்ளே
வாயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயிந்த
  வாலையு மைந்தா மெழுத்துக்குள்ளே.

19. அஞ்செழுத் தானதும் எட்டெழுத் தாம்பின்னும்
  ஐம்பத்தோர் அட்சரந் தானாச்சு
நெஞ்செழுத் தாலே நினையா மலந்த
  நிசந்தெ ரியுமோ வாலைப் பெண்ணே

20. ஏய்க்கு தேய்க்கு தஞ்செழுத் துவகை
  எட்டிப் பிடித்துக் கொளிரண்டெழுத்தை
நோக்கிக்கொள் வாசியை மேலாக வாசி
  நிலையைப் பாரடி வாலைப் பெண்ணே!

21. சிதம்பர சக்கரந் தானறி வாரிந்தச்
  சீமையி லுள்ள பெரியோர்கள்
சிதம்பர சக்கர மென்றால் அதற்குள்ளே
  தெய்வத்தை யல்லோ அறியவேணும்.

22. மனமு மதியு மில்லாவி டில்வழி
  மாறுதல் சொல்லியே யென்ன செய்வாள்
மனமு றுதியும் வைக்கவே ணும் பின்னும்
  வாலை கிருபையுண் டாகவேணும்.

23. இனிவெ ளியினிற் சொல்லா தேயெழில்
  தீமட்டு திந்த வரி விழிக்கே
கனிமொ ழிச்சியீர் வாருங்கடி கொஞ்சங்
  கருவைச் சொல்லுவேன் கேளுங்கடி.

24. ஊத்தைச் சடலமென் றெண்ணா தேயிதை
  உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே;

பார்த்த பேருக்கே ஊத்தையில் லையிதைப்
  பார்த்துக்கொள் உன்ற னுடலுக்குள்ளே.

25. உச்சிக்கு நேராயுண் ணாவுக்கு மேல்நிதம்
  வைத்த விளக்கும் எரியுதடி;
அச்சுள்ள விளக்கு வாலையடிஅவி
  யாம லெரியுது வாலைப் பெண்ணே!

26. எரியு தேஅறு வீட்டினி லேயதில்
  எண்ணெயில் லையமிழ் தண்ணீரில்லை;
தெரியுது போக வழியுமில் லைபாதை
  சிக்குது சிக்குது வாலைப் பெண்ணே!

27. சிலம்பொ லியென்னக் கேட்டுமடிமெத்த
  சிக்குள்ள பாதை துடுக்கமடி;

வலம்புரி யச்சங்க மூது மடிமேலே
  வாசியைப் பாரடி வாலைப் பெண்ணே!

28. வாசிப் பழக்க மறியவே ணுமற்று
  மண்டல வீடுகள் கட்டவேணும்;
நாசி வழிக்கொண்டு யோகமம் வாசியும்
  நாட்டத்தைப் பாரடி வாலைப் பெண்ணே!

29. முச்சுட ரான விளக்கினுள் ளேமூல
  மண்டல வாசி வழக்கத்திலே
எச்சுடராகி யந்தச் சுடர்வாலை
  இவள் விட வேறில்லை வாலைப் பெண்ணே!

30. சூடாமல் வாலை யிருக்கிற தும்பரி
  சித்த சிவனுக்குள் ளானதால்
வீடாமல் வாசிப் பழக்கத்தைப் பாருநாம்
  மேல்வீடு காணலாம் வாலைப் பெண்ணே!

31. மேல்வீடு கண்டவன் பாணியடி விண்ணில்
  விளக்கில் நின்றவன் வாணியடி
தாய்வீடு கண்டவன் ஞானியடிபரி
  தாண்டிக் கொண்டான்பட் டாணியடி.

32. அத்தியி லேகரம் பத்தியி லேமனம்
  புத்தியி லேநடு மத்தியிலே

நெற்றி சதாசிவ மென்றுசொன் னேனுன்றன்
  நிலைமையைப் பாரடி வாலைப் பெண்ணே!

33. அழுத்தி லேசொல்லஞ் செழுத்தி லேநானும்
  வழுத்தி னேன்ஞானப் பழத்திலே
கழுத்தி லேமயேஸ் வரனு முண்டுகண்
  கண்டு பாரடி வாலைப் பெண்ணே!

34. அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சிய ரேநிதம்
  கொஞ்சி விளையாடும் வஞ்சியரே!
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப் பானவன்
  நேருட னாமடி வாலைப் பெண்ணே!

35. தொந்தியி லேநடுப் பந்தியி லேதிடச்
  சிந்தையிலே முந்தி யுன்றனுடன்
உந்தியில் விண்ணுவுந் தாமிருப் பாரிதை
  உண்மையாய்ப் பாரடி வாலைப் பெண்ணே!

36. ஆலத்தி லேயிந்த ஞாலத்தி லேவருங்
  காலத்தி லேயனு கூலத்திலே
மூலத்தி லேப்ரமன் தானிருந் துவாசி
  முடுக்கிறான் பிண்டம் பிடிக்கிறானே.

37. தேருமுண்டு ஐந்நூறும் ஆணியுண் டேஅதில்
  தேவரு முண்டுசங் கீதமுண்டே
ஆருண்டு பாரடி வாலைத் தெய் வம்மதில்
  அடக்கந் தானடி வாலைப் பெண்ணே!

38. ஒன்பது வாயில்கொள் கோட்டையுண் டேஅதில்
  உள்ளே நிலைக்கார ரஞ்சுபேராம்;
அன்புட னேபரி காரர்க ளாறுபேர்
  அடக்கந் தானடி வாலைப் பெண்ணே!

39. இந்த விதத்திலே தேகத்தி லேதெய்வம்
  இருக்கையில் புத்திக்க றிக்கையினால்
சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்
  சாகிறதேதடி வாலைப் பெண்ணே!

40. நகார திட்டிப்பே ஆன தினால் வீடு
  வான வகார நயமாச்சு;

உகார முச்சி சிரசாச் சேஇதை
உற்றுப் பாரடி வாலைப் பெண்ணே!

41. வகார மானதே ஓசையாச் சேஅந்த
மகார மானது கர்ப்பமாச்சே;
சிகார மானது மாய்கையாச் சேஇதைத்
தெளிந்து பாரடி வாலைப் பெண்ணே!

42. ஓமென்ற அட்சரந் தானுமுண் டதற்குள்
ஊமை யெழுத்து மிருக்குதடி;

நாமிந்தெ ழுத்தை யறிந்து கொண் டோம்வினை
நாடிப் பாரடி வாலைப் பெண்ணே!

43. கட்டாத காளையைக் கட்டவே ணுமாசை
வெட்டவே ணும்வாசி யொட்டவேணும்
எட்டாத கொம்பை வளைக்கவே ணுங்காய
மென்றைக்கி ருக்குமோ வாலைப் பெண்ணே!

44. இருந்த மார்க்கமாய்த் தானிருந்து வாசி
ஏற்காம லேதான டக்கவேணும்;
திரிந்தே ஓடி யலைந்துவெந் துதேகம்
இறந்து போச்சுதே வாலைப் பெண்ணே!

45. பூத்த மலராலே பிஞ்சுமுண்டே அதில்
பூவில்லாப் பிஞ்சும் அனேகமுண்டு
மூத்த மகனாலே வாழ்வுமுண் டுமற்ற
மூன்றுபே ராலே அழிவுமுண்டு!

46. கற்புள்ள மாதர் குலம் வாழ்க நின்ற
கற்பை யளித்தவ ரேவாழ்க!
சிற்பர னைப்போற்றிக் கும்மிய டிகுரு
தற்பர னைப்போற்றிக் கும்மியடி.

47. அஞ்சி னிலேரண்டழிந்ததில் லையஞ்
சாறிலே யுநாலொ ழிந்ததில்லை;
பிஞ்சிலே பூவிலே துஞ்சுவ தாம்அது
பேணிப் போடலாம் வாலைப் பெண்ணே!

48. கையில்லாக் குட்டையன் கட்டிக்கிட் டானிரு
காலில்லா நெட்டையன் முட்டிக் கிட்டான்;

ஈயில்லாத் தேனெடுத் துண்டுவிட் டானது
இனிக்கு தில்லையே வாலைப்பெண்ணே!

49. மேலூரு கோட்டைக்கே ஆதர வாய்நன்றாய்
விளங்கு கன்னனூர்ப் பாதையிலே
காலூரு வம்பலம் விட்டத னாலது
கடுந டையடி வாலைப் பெண்ணே!

50. தொண்டையுள் முக்கோணக் கோட்டையி லேயிதில்
தொத்திக் கொடிமரம் நாட்டையிலே
சண்டைசெய் துவந்தே ஓடிப்போ னாள்கோட்டை
வெந்து தணலாச்சு வாலைப் பெண்ணே!

51. ஆசை வலைக்குள் அகப்பட்ட தும்வீட
அப்போதே வெந்தே அழிந்திட்டதும்
பாச வலைவந்து மூடிய தும்வாலை
பாதத்தைப் போற்றடி வாலைப் பெண்ணே!

52. அன்ன மிருக்குது மண்டபத் தில்விளை
யாடித் திரிந்ததே ஆண்புலியும்
இன்ன மிருக்குமே யஞ்சுகி ளியவை
எட்டிப் பிடிக்குமே மூன்று கிளி;

53. தோப்பிலே மாங்குயில் கூப்பிடு தேபுது
மாப்பிள்ளை தான் வந்து சாப்பிடவும்
ஏய்க்கு மிப்படி யஞ்சா றாந்தை
இருந்து விழிப்பது பாருங்கடி.

54. மீனு மிருக்குது தூரணி யிலிதை
மேய்ந்து திரியுங் கலசா வல்;
தேனு மிருக்குது போரையிலே யுண்ணத்
தெவிட்டு தில்லையே வாலைப் பெண்ணே!

55. காகமிருக்குது கொம்பிலே தான்கத
சாவ லிருக்குது தெம்பிலேதான்;
பார்க்க வெகுதூர மில்லை யிதுஞானம்
பார்த்ததால் தெரியுமே வாலைப் பெண்ணே!

56. கும்பிக் குளத்திலே யம்பல மாமந்தக்
குளக்க ருவூரில் சேறு மெத்த;

தெம்பி லிடைக்காட்டுப் பாதைக ளாய் வந்து
சேர்ந் தாராய்ந்துபார் வாலைப் பெண்ணே!

57. பண்டுமே ஆழக் கிணற்றுக்குள் ளேரண்டு
கெண்டை யிருந்து பகட்டுதடி;

கண்டிருந் துமந்தக் காக்கையு மேயஞ்சி
கழுகு கொன்றது பாருங்கடி!

58. ஆற்றிலே யஞ்சு முதலைய டியரும்
புற்றிலே ரண்டு கரடியடி;
கூற்றனு மூன்று குருடன டிபாசங்
கொண்டு பிடிக்கிறான் வாலைப் பெண்ணே!

59. முட்டை யிடுகு தொருபற வைமுட்டை
மோசம் பண்ணு தொருபறவை;
வட்டமிட் டாரூர் கண் ணியிலி ரண்டு
மானுந் தவிக்குது வாலைப் பெண்ணே!

60. அட்டமா வின்வட்டம் பொட்டலி லேரண்டு
அம்புலி நிற்குது தேர்மேலே;
திட்டமாய் வந்து அடிக்குதில் லைதேகம்
செந்தண லானதே வாலைப் பெண்ணே!

61. முக்கோண வட்டக் கிணற்றுக்குள் ளேமூல
மண்டல வாசிப் பழக்கத்திலே
அக்கோண வட்டச் சக்கரத் தில்வாலை
அமர்ந்தி ருக்கிறாள் வாலைப் பெண்ணே!

62. இரண்டு காலாலொரு கோபுர மாம்நெடு
நாளா யிருந்தே அமிழ்ந்து போகும்;
கண்டபோ துகோபு ரமிருக் கும்வாலை
காணவு மெட்டாள் நிலைக்கவொட்டாள்.

63. அஞ்சு பூதத்தை யுண்டுபண் ணிக் கூட்டில்
ஆறா தாரத்தை யுண்டு பண்ணிக்
கொஞ்ச பெண்ணாசை யுண்டு பண்ணி வாலை
கூட்டுகிறாள் காலனை மாட்டுகிறாள்.

64. காலனைக் காலா லுதைத்த வளாம்வாலை
ஆலகா லவிட முண்டவளாம்;

மாளாச் செகத்தைப் படைத்தவ ளாமிந்த
மானுடன் கோட்டை இடித்தவளாம்.

65. மாதாவாய் வந்தே அமுதந்தந் தாள்மனை
யாட்டியாய் வந்து சுகங்கொடுத்தாள்
ஆதர வாகிய தங்கையா னாள்நமக்
காசைக் கொழுந்தியு மாமியானாள்.

66. சிரித்து மெல்லப் புரமெரித் தாள்வாலை
செங்காட்டுச் செட்டியைத்தா னுதைத்தாள்;
ஒருத்தியாகவே சூரர்த மைவென்றாள்
ஒற்றையாய்க் கஞ்சனைக் கொன்று விட்டாள்.

67. இப்படி யல்லோ இவள் தொழி லாமிந்த
ஈனா மலடி கொடுஞ்சூலி;
மைப்படுங் கண்ணியர் கேளுங்கடி அந்த
வயசு வாலை திரிசூலி.

68. கத்தி பெரியதோ யுறைபெரி தோவிவள்
கண்ணு பெரிதோ முகம் பெரிதோ?
சத்தி பெரிதோ சிவம் பெரிதோ நீதான்
சற்றே சொல்லடி வாலைப் பெண்ணே!

69. அன்னம் பெரிதல்லால் தண்ணீர் பெரிதல்ல
அப்படி வாலை பெரிதானால்
பொன்னு பெரிதல்லால் வெள்ளி பெரிதல்ல
பொய்யாது சொல்கிறேன் கேளுங்கடி

70. மாமிச மானா லெலும்புமுண் டுசதை
வாங்கி ஓடு கழன்றுவிடும்;
ஆமிச மிப்படிச் சத்தியென் றேவிளை
யாடிக் கும்மி அடியுங்கடி.

71. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் விளையாதென்று
கண்டுகொண் டுமுன்னே அவ்வைசொன் னாளது
வுண்டோ வில்லையோ வாலைப் பெண்ணே!

72. மண்ணுமில் லாமலே விண்ணுமில்லை கொஞ்சம்
வாசமில் லாமலே பூவுமில்லை;

பெண்ணுமில்லாமலே யாணுமில் லையிது
  பேணிப்பாரடி வாலைப் பெண்ணே!

73. நந்தவனத்திலே சோதியுண் டுநிலம்
  நித்திய பேருக்கு நெல்லுமுண்டு;
விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னாளில்
  விட்ட குறைவேணும் வாலைப் பெண்ணே!

74. வாலையைப் பூசிக்கச் சித்தரா னார்வாலைக்
  கொத்தாசை யாய்ச்சிவ கர்த்தரானார்;
வேலையைப் பார்த்தல்லோ கூலிவைத் தாரிந்த
  விதந்தெ ரியுமோ வாலைப் பெண்ணே!

75. வாலைக்கு மேலான தெய்வமில் லைமானங்
  காப்பது சேலைக்கு மேலுமில்லை;
பாலுக்கு மேலான பாக்கியமில் லைவாலைக்
  கும்மிக்கு மேலான பாடலில்லை.

76. நாட்டத்தை கண்டா லறியலா குமந்த
  நாலாறு வாசல் கடக்கலாகும்;
பூட்டைக் கதவைத் திறக்கலா கும்இது
  பொய்யல்ல மெய்யடி வாலைப் பெண்ணே!

77. ஆணும்பெண் ணும்கூடி யானதனாற் பிள்ளை
  ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்;
ஆணும்பெண் ணுங்கூடி யானதல் லோபேதம்
  அற்றொரு வித்தாச்சு வாலைப் பெண்ணே!

78. இன்றைக் கிருப்பதும் பொய்யல்ல வேவீடே
  என் வாழ்க்கை யென்பதும் பொய்யல்லவே;
அன்றைக் கெழுத்தின் படிமுடி யும்வாலை
  ஆத்தாளைப் போற்றடி வாலைப் பெண்ணே!

79. வீணாசை கொண்டு திரியா தேயிது
  மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்கூடு
காணாத வாலையைக் கண்டுகொண் டாற்காட்சி
  காணலா மாகாய மாளலாமே.

80. பெண்டாட்டி யாவதும் பொய்யல்ல வோபெற்ற
  பிள்ளைக ளாவதும் பொய்யல்லவோ?

கொண்டாட்ட மான தகப்பன்பொய் யேமுலை
  கொடுத்த தாயும் நிசமாமோ?

81. தாயும் பெண் டாட்டியுந் தான்சரி யேதன்யம்
  தாமே யிருவருந் தாங்கொடுத்தார்;
காயும் பழமுஞ் சரியா மோஉன்றன்
  கருத்தைப் பார்த்துக்கொள் வாலைப் பெண்ணே!

82. பெண்டாட்டி மந்தைமட்டும்வரு வாள்பெற்ற
  பிள்ளை மசானக் கரையின் மட்டும்;
தெண்டாட்டுத் தர்மம் நடுவினி லேவந்து
  சேர்ந்து பரகதி தான் கொடுக்கும்.

83. பாக்கிய மும்மகள் போக்கிய மும்ராச
  போக்கிய மும்வந்த தானாக்கால்
சீக்கிரந் தருமஞ் செய்யவேண் டுங்கொஞ்சத்
  திருப்ப ணிகள்மு டிக்கவேண்டும்.

84. திருப்பணி களைமு டித்தோ ருஞ்செத்துஞ்
  சாகாத பேரி லொருவரென்றும்
அருட்பொ லிந்திடும் வேதத்தி லேயவை
  அறிந்து சொன்னாளே வாலைப் பெண்ணே!

85. மெத்தை தனிலே படுத்திருந் துநாமும்
  மெல்லிய ரோடு சிரிக்கும்போது
யுத்தகா லன்வந்து தான்பிடித் தால்நாமும்
  செத்த சவமடி வாலைப் பெண்ணே!

86. ஏழை பனாதிக ளில்லையென் றாலவர்க்
  கிருந்தா லன்னங் கொடுக்க வேண்டும்;
நாளையென் றுசொல்ல லாகா தேயென்று
  நான்மறை வேத முழங்குதடி.

87. பஞ்சை பனாதி யடியாதே யந்தப்
  பாவந் தொலைய முடியாதே;
தஞ்சமென் றோரைக் கெடுக்கா தேயார்க்கும்
  வஞ்சனை செய்ய நினையாதே.

88. கண்டதுங் கேட்டதுஞ் சொல்லாதே கண்ணில்
  காணாத வுத்தரம் விள்ளாதே;

பெண்டாட்டிக் குற்றது சொல்லாதே பெற்ற
  பிள்ளைக் கிளப்பங் கொடுக்காதே.

89. சிவன்ற னடியாரை வேதிய ரைச்சில
  சீர்புல ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையா தேயவர்
  மனத்தை நோகவும் செய்யாதே.

90. வழக்க ழிவுகள் சொல்லா தேகற்பு
  மங்கையர் மேல்மனம் வையாதே;
பழக்க வாசியைப் பார்த்துக்கொண் டுவாலை
  பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே!

91. கூடிய பொய்களைச் சொல்லாதே பொல்லாக்
  கொலைக ளவுகள் செய்யாதே
ஆடிய பாம்பை யடியா தேயிது
  அறிவு தானடி வாலைப் பெண்ணே!

92. காரிய னாகினும் வீரியம் பேசவும்
  காணா தென்றவ்வை சொன்னாளே;
பாரினில் வம்புகள் செய்யா தேபுளிப்
  பழம்போ லுதிர்ந்து விழுந்தானே.

93. காசார் கள்பகை செய்யா தேநடுக்
  காட்டுப் புலிமுன்னே நில்லாதே;
தேசாந்த ரங்களுஞ் செல்லா தேமாய்கைத்
  தேவடி யாள்தனம் பண்ணாதே.

94. தன்வீ டிருக்க அசல்வீடு போகாதே
  தாயார் தகப்பனை வையாதே;
உன்வீட்டுக் குள்ளேயே யூக மிருக்கையில்
  ஓடித் திரிகிறாய் வாலைப் பெண்ணே!

95. சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்
  தானென் றொருவுடல் பேதமுண்டோ?
ஓதிய பாலதி லொன்றாகி யதிலே
  உற்பத்தி நெய்தயிர் மோராச்சு.

96. பாலோடு முண்டிடு பூனையு முண்டது
  மேலாக காணவுங் காண்பதில்லை;

மேலந்த வாசையைத் தள்ளிவிட் டுள்ளத்தில்
வேண்டிப் பூசையைச் செய்திடுங்கள்.

97. கோழிக் கறுகாலுண் டென்றுசொன் னேன்கிழக்
கூனிக்கு மூன்றுகா லென்று சொன்னேன்;
கூனிக்கி ரண்டெழுத் தென்றுசொன் னேன்முழுப்
பானைக்கு வாயில்லை யென்று சொன்னேன்.

98. ஆட்டுக் கிரண்டுகா லென்றுசொன் னேனம்
மானைக்குப் பானைக்கு நிற்குமேல் சூல்
மாட்டுக்குக் காலில்லை யென்றுசொன் னேன் கதை
வகையைச் சொல்லடி வாலைப் பெண்ணே!

99. கோயிலு மாடும் பறித்தவ னுங்கன்றிக்
கூற்று மேகற் றிருந்தவனும்
வாயில்லாக் குதிரை கண்டவ னுமாட்டு
வகைதெ ரியுமோ வாலைப் பெண்ணே!

100. இத்தனை சாத்திரந் தாம்படித் தோர்செத்தார்
என்றா லுலகத்தோர் தாம்சிரிப்பார்;
செத்துப்போய்க் கூடக் கலக்கவேண்டு மவன்
தேவர்க ளுடனே சேரவேண்டும்.

101. உற்றது சொன்னக்கா லற்றது பொருந்தும்
உண்டோ உலகத்தி லவ்வைசொன்னாள்;
அற்றது பொருந்து முற்றது சொன்னவன்
அவனே குருவடி வாலைப் பெண்ணே!

102. பூரண நிற்கும் நிலையறி யான்வெகு
பொய்சொல்வான் கோடிமந் திரஞ்சொல்வான்

காரண குருஅ வனுமல் லவிவன்
காரிய குருபொ ருள்பறிப்பான்.

103. எல்லா மறிந்தவ ரென்றுசொல் லயிந்தப்
பூமியி லேமுழு ஞானியென்று
உல்லாச மாக வயிறு பிழைக்கவே
ஓடித் திரிகிறார் வாலைப் பெண்ணே!

104. ஆதிவா லைபெரிதானா லும்அவள்
அக்காள் பெரிதோ சிவன்பெரிதோ!

நாதிவா லைபெரி தானா லும்அவள்
  நாயக னல்ல சிவம்பெரிது.

105. ஆயுசு கொடுப்பாள் நீரிழி வுமுதல்
  அண்டாது மற்ற வியாதியெல்லாம்
பேயும் பறந்திடும் பில்லிவினாடியில்
  பத்தினி வாலைப்பெண் பேரைச் சொன்னால்.

106. நித்திரை தன்னிலும் வீற்றிருப் பாளெந்த
  நேரத்தி லும்வாலை முன்னிருப்பாள்;
சத்துரு வந்தாலும் தள்ளிவைப் பாள்வாலை
  உற்றகா லனையுந் தானுதைப்பாள்.

107. பல்லாயி ரங்கோடி யண்டமு தல்பதி
  னான்கு புவனமும் மூர்த்திமுதல்
எல்லாந் தானாய்ப் படைத்தவ ளாம்வாலை
  எள்ளுக்கு ளெண்ணெய்போல் நின்றவளாம்.

108. தேசம் புகழ்ந்திடும் வாலைக்கும் மித்தமிழ்
  செய்ய எனக்குப தேசஞ்செய்தாள்
நேசவான் வீரப் பெருமாள் குருசாமி
  நீள் பதம் போற்றிக்கொண் டாடுங்கடி.

109. ஆறு படைப்புகள் வீடு கடைசூத்ர
  அஞ்செழுத் துக்கும் வகையறிந்து
கூறு முயர்வல வேந்த்ரன் துரைவள்ளல்
  கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி!

110. ஆடுங்கள் பெண்டுக ளெல்லோ ருமந்த
  அன்பான கொங்கணர் சொன்ன தமிழ்
பாடுங்கள் சித்தர்க ளெல்லோ ரும்வாலை
  பரத்தைப் போற்றிக்கொண் டாடுங்கடி

111. சித்தர்கள் வாழி சிவன்வா ழிமுனி
  தேவர்கள் வாழி ரிஷிவாழி
பத்தர்கள் வாழி பதம்வா ழிகுரு
  பாரதி வாலைப்பெண் வாழியவே!

## 11.சட்டை முனி ஞானம் - 4

பாலனாம் சிங்கள தேவதாசி
பாசமுடன் பயின்றெடுத்த புத்திரன்தான்
சீலமுடன் சட்டைமுனி என்று சொல்லி
சிறப்புடனே குவலயத்தில் பேருண் டாச்சு

போகர் ஏழாயிரம் 5875

இவர் ஆவணி மாதம் மிருகசீரிடம் மூன்றாம் பாதம் சிங்கள நாட்டு தேவதாசிக்கும் தமிழருக்கும் மகனாகப் பிறந்தவர். பிழைப்புத் தேடித் தமிழகம் வந்தனர். விவசாயக் கூலி வேலை செய்து வாழ்க்கை நடத்தினார். வேலையில்லா நாட்களில் சட்டைமுனி கோயில்களில் தட்டு ஏந்தி யாசகம் பெற்றும் தம் தாய் தந்தையர்க்கு உதவி வந்தார்.

உரிய வயது வந்ததும் சட்டை முனிக்குத் திருமணம் நடந்தது. ஆனால் அவர் மனம் இல்லறத்தில் லயிக்கவில்லை. ஒருநாள் கோயில் வாசலில் வடநாட்டிலிருந்து வந்த ஒரு சித்தரைத் தரிசித்தார். அவரிடமிருந்து அபூர்வ சக்தியை அறிந்த சட்டைமுனி அவருடன் சொல்லிக் கொள்ளாமலே கிளம்பி விட்டார்.

பின் போகரின் சீடராக வாழ்ந்தார். அப்போது கொங்கணர், கருவூரார் தொடர்பு கிட்டியது. பொதுவாகச் சித்தர்கள் தங்கள் கருத்துகளை மறைவாக பரிபாஷையிலே எழுதினர். ஆனால் சட்டை முனி அனைவரும் புரியும் வகையில் நேரடியாகவே எழுதினார்.

அடிக்கடி கயிலையங்கிரி சென்று சிவபிரானுடன் நட்புப் பூண்டிருந்தார். எனவே அங்குள்ள குளிரைத் தாங்கக் கம்பளிச் சட்டை அணிந்து கொண்டிருந்தார் என அகத்தியர் தம் பெருநூல் காவியத்தில் தெரிவிக்கிறார்.

சட்டை முனி ஸ்ரீரங்கத்தில் ஜீவ சமாதி அடைந்ததாக வைணவர்கள் கூறுகின்றனர். சைவர்கள் இவர் சீர்காழியில் ஜீவ சமாதி அடைந்ததாகக் கூறுகின்றனர். இதனை போகர் ஜனன சாகரம் கூறுகிறது.

### பூசை செய்யும் முறை

### எண்சீர் விருத்தம்

**1. காணப்பா பூசைசெய்யும் முறையைக் கேளாய்;**
**கைம்முறையாய்ச் சுவடிவைத்துப் பூசை செய்வார்**

பூணப்பா சிலபேர்தான் தீபம் வைத்துப்
புகழாகப் பூசைசெய்வார் பெண்ணை வைத்தும்;
நாளப்பா சக்கரத்தைப் பூசை செய்வார்
நம்முடைய பூசையென்ன மேருப் போலே
ஓதப்பா நாற்பத்துமுக் கோணம் வைத்தே
உத்தமனே! பூசைசெய்வார் சித்தர் தானே.

2. தானென்ற மேருவைத்தான் பூசை செய்வார்
சாபமிட்டால் அண்டரண்டம் தீயா வேகும்;
தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்;
சிறுபிள்ளை யாமொருவன் தீண்டப்போகா;
வானென்ற மேருவைத்தான் பூசை செய்தோர்
வாய்திறந்தே உபதேசம் சொன்னா ராகிற்
கோனென்ற வாதசித்தி கவன சித்தி
கொள்ளையிட்டான் அவன்சீடன் கூறி னானே.

3. கூறியதோர் வாலையின்மூன் றெழுத்தைக் கேளாய்;
குறியறிந்து பூசைசெய்து பின்பு கேளாய்;
மாறியதோர் திரிபுரையெட் டெழுத்தைக் கேளாய்;
மைந்தனே! இவளைநீ பூசை பண்ணத்
தேறியதோர் புவனைதனின் எழுத்தைக் கேளாய்;
திறமாகப் புவனையை நீ பூசை பண்ணு;
ஆறியதோர் யாமளையா றெழுத்தைக் கேளாய்;
அவளுடைய பதம்போற்றிப் பூசை பண்ணே.

4. பண்ணியபின் யாமளையைந் தெழுத்தைக் கேளாய்;
பண்பாகத் தீட்சையைந்தும் முடிந்தபின்பு
வண்ணியதோர் வாசியென்ற யோகத் துக்கு
மைந்தனே வைத்துப்ராணா யாமந் தீரும்;
கண்ணியதோர் இத்தனையும் அறிந்தி ருந்தாற்
காயசத்தி விக்கினங்கள் இல்லை யில்லை;
உண்ணியதோர் உலகமென்ன சித்த ரென்ன
உத்தமனே விட்டகுறை எடுக்கும் காணே!

தேடினா லைந்துதிரு வக்கரத்தைச் சென்றுவெளி
நாடினால் நெஞ்சே நலம்பெறலாம் - வாடியே
பொல்லாப் புவிகாணப் போகமதை நம்பாதே
எல்லாம் வெயில் மஞ்சளே. 32

மஞ்சனைய கூந்தல் மடவாரைக் கண்டுருகும்
பஞ்சமல நெஞ்சே பகரக்கேள் - மஞ்சள்
மயங்காணும் இந்தவுடல் மாயவாழ் வெல்லாம்
அயன் காணழி சூத்திரம். 33

சூத்திரத்தா லாடும் சுழுமுனையைத் தான்திறந்து
பார்த்திருந்தால் வாராது பாவமெல்லாம் - சூத்திரத்தைப்
பாராமலேயிருந்து பாவிமன மேபிறக்க
வாராம லேயிருக்க வா. 34

வாசி தனைப்பிடித்து வண்கனலோ டேசேர்த்துச்
சீசீ யெனவே திரியாமல் - மாசி
இருளா னதைச் சேர்த்து இருந்தாயே நெஞ்சே
பொருளா னதைமறந்து போட்டு. 35

போட்டுவிக்கும் பொல்லாப் புழுச்சொரியும் நாய்விடக்கே
கூட்டங் குலைந்து குலைந்திடுமுன் - காட்டிடில்

தாழ்வுறாய் நெஞ்சே தராதா மாயெங்கும்
மூழ்வா னதையுயிர்போம் முன். 36

முன்னே யயனெழுதும் மூன்றுவினை கண்டுழன்று
பின்னும் தெரியலையோ பேய்மனமே - தன்னை
அறியா திருந்தால் அவனறிவானோ
குறியான புத்தியென்றே கொள். 37

கொள்ளைக்குட் பட்டுக் குடிகேட ரோடிருந்து
கள்ளக் கருத்தால் கருதாதே - மெள்ளமெள்ள
அய்ந்தாய்ந்து பார்த்துநீ ஆறாறுக் கப்பாலே
தேர்ந்ததாய்ந்து பார்த்துத் தெளி. 38

தெளிந்தநீர் பட்டமுதம் சேர்ந்தால் தெளியா
தெளிந்தநீர் காட்டா தவைபோல் - தெளிந்தால்
சகலப் பொருள் தோற்றும் தாழ்வுறா தொன்றும்
பகலிர வில்லாத பதி. 39

பதிபசுபா சங்களையும் பற்றி யுருவப்
பதிதனிலே தங்கிப் பலரும் - கதிபெறவே
வீணாமோ நெஞ்சேகேள் வேதாந்தத் துட்பொருளை
காணா மலாமோ கணக்கு. 40

கணக்கறியா மாயக் கருவீகர ணாதிப்
பிணக்கறியா மற்பேதை நெஞ்சே - இணக்கம்
அறிந்திணங்க வேணும் அருள்வெளியி னுள்ளே
செறிந்தவிந்து நாதத்தைச் சேர். 41

சேராதே மாய்கைதனை சேர்ந்து கருக்குழியை
பாராதே நெஞ்சே பதையாதே - சீரான
சித்திரத்தைப் பார்த்து தினமே சித்திரத்தில்
உத்திரத்தைக் கொள்ளா உகந்து. 42

உகந்து உகந்து நெஞ்சமே ஓரெழுத்தி னாலே
அகந்தனையே சுத்தி பண்ணி பாய்ந்து - முகந்து
குடியாம லாமோ குலவுமல மான
மிடியா னதுதீர வேண்டி. 43

வேண்டுந் திரவியமும் மேலுயர்ந்து பள்ளியெல்லாம்
ஆண்ட திரைநாடு மம்பலமும் - மாண்டுபெருங்
காடுயர்ந்தா ரேமனமே கண்டாயோ மாயனயன்
தேடரிய ஈசன் செயல். 44

செயமகா நெஞ்சே திருட்டுமலக் கோட்டை
பயமறவே வெட்டிப் பரப்பி - நயமான
வாசியினால் சுட்டு மதிமயங்கக் கண்டிருப்போம்
பேசிய நாம் பேசாம லே. 45

பேசாத ஞானப் பெருமைக் கிடப்பதுதான்
ஆசாபா சங்களில்லா தார்க்கல்லோ - சுசாமல்
தேசமெல்லாம் ஓடித் திரிகின்றாயே மனமே
ஆசாபா சங்களும் நீ யாய். 46

பாசங் களைந்து பதியி லிருந்துகொண்டு
பேசரிய காலைப் பிடித்திருக்க - நேசமுடன்
நாமிருவ ருங்கூடி நாதாந்த ஞானத்தை
தாமொருவ னாயிருக்கத் தங்கு. 47

தங்கு நெடுவளையில் சகலங் களுங்கடந்து
எங்குநான் றானா யிருக்காமல் - மங்கு
கருவானாய் நெஞ்சே கரிக்கால தூதன்
வருவானே யென்ன வகை. 48

என்னவகை செய்வோம் எமதூதன் வந்தக்கால்
பின்னையென ஒட்டானே பேய்நெஞ்சே - சொன்ன
படியேகேள் தூதன் பரிந்துவரு முன்னே
அடிதேடிக் கொண்டே அமர். 49

அமரும் மனம்புத்தி யாங்கார மேசித்
தமரும் பொழுது வேறானோர் - அமரும்
கோவென் றுரைத்தநமன் கொண்டுபோம் போதறிவு
வாவென்றால் நெஞ்சே வாராது. 50

வாராது நெஞ்சே மயக்கம் வருமுன்னே
வேரா னதைப்பிடித்து மேலேறிப் - பாராமல்

பொய்யிலே நில்லாதே புத்திகெடா தேயிருந்தால்
மெய்யிலே நின்றறிவோம் மெய். 51

மெய்யாறு வீடுகளாய் மேலாம் படைவீடாய்
ஐயாறு மாதம் அறுபதாய் - மெய்யாகக்
கண்டதெல்லாம் நான்காண் காணா ததைத்தேடிக்
கண்டுருகி நெஞ்சே கனி. 52

கனியருந்த மாட்டாமல் காயருந்து கின்றாய்
கனிருசிபோ லாகுமோ காய்தான் - இனியதுகேள்
நானும் நீயும் கனிகாண் நடுவிருந்த தேருசிகாண்
தேனும் பாலும் போல் சிவன். 53

சிவதலங்க ளைத்தேடி சீயெழுத்த றுத்துச்
சிவதலங்க ளைத்தேடி சேரா - தவ தவங்கள்
பண்ணாதே நெஞ்சேகேள் பாரவினை வந்தக்கால்
எண்ணாதே அஞ்சியேங்கா தே. 54

ஏங்காதே நெஞ்சேகேள் எவ்வினைகள் வந்தாலும்
ஏங்காதே சற்றும் இளைக்காதே - தாங்காமல்
கொண்ட வனும் செத்தவனும் கூட்டத்தானும் வந்தான்
இன்றுகுறித் துண்மையிதென் றெண். 55

எண்ணரிய நெஞ்சே இனியநற் பாலதனை
அன்னந்தண் ணீர்நீக்கி யேயிருந்து - தன்மைபோல்
துன்பங் களைந்து தூயவெளி யூடுருவாய்
இன்பங் களைச்சேர்ந் திரு. **56**

சேர்ந்திருவோ ரும்பாலும் தேனும் போலே கலந்து
வார்ந்ததிலே யுள்ளூரிசி வாங்காமல் - போங்காலம்
வைத்தமறக் காலன் வருவானே வந்தக்கால்
ஏய்த்திடுவா னெஞ்சே எவன். **57**

எவனிருந்து நெஞ்சே எதிர்ப்பாரு முண்டோ
கவனமற நின்று கருதின் - புவனமெல்லாம்
வித்துயிரெல் லாங் கழண்டு விண்ணுடைந்த தேமனமே
மற்றுடலைஉண்கிறதே மண். **58**

மண்ணெழுந்தும் நீரெழுந்தும் வாய்வெழுந்தும் தீயெழுந்தும்
விண்ணெழுந்துங் கூடி ஒரு வீடாகி - நண்ணரிய
மாயமெல்லா முண்டாக்கி வைத்தான் காண்நெஞ்சேஇக்
காயமெல்லாம் நானாக் கரு? **59**

கருவழிந்தால் வித்தையில்லாக் காரணம் போல் நெஞ்சே
கருவழிந்த தெல்லாம் கண்டதெல்லாம் - கருதித்
திரியாதே நெஞ்சே சிவன் செயலே யல்லால்
மரியாரில் லாதக்கால் வந்து. **60**

வந்ததுவும் நாதாந்த வாதனைக்கண்டே வணங்கித்
தந்திரமாய்ச் சென்று தரியாமல் - அந்தரத்தில்
விட்டபட்டம் போலலைந்து வெவ்வினையி னால்மனமே
தட்டுகெட்டுப் போகாதே தான். **61**

தானந் தவமுயற்சி தாளாண்மை யோடுநெஞ்சே
வானம் பிளந்து வழிகூடின் - நானுமதில்
நீயு மொருநிழலில் நின்றங் கிளைப்பாறி
தோயுமதி தானே தொடங்கு. **62**

தொடங்கு வினையறுத்து சுற்றமெலா நீத்தே
அடங்கு மிடத்தில் அடங்காமல் - கிடந்து
பறந்தெடுத்த குஞ்சாய் பதைத்தாய் மனமே
அருஞ்சரத் தம்மத னடி. **63**

**மதனசரத் தால்மனமே வையம் மயங்கி**
**விதனத் துறலால் வேறில்லை - மதனாலே**
**தத்துச் சுகத்தை நத்தி தானலைய வேண்டாங்காண்**
**மெத்த சுகத்தை வெறுத்து.** **64**

**வெறுத்துவெருக் கொண்டதுபோல் வீணிலே நெஞ்சே**
**பொறுத்த மயக்கிற் போகாதே - குறித்தெடுத்து**
**தேடியே வாசிதனை சேர்ந்து கலந்தபொருள்**
**கூடினா லாமே குணம்.** **65**

**குணங்கள் பலவிதமாய் கொள்ளாதே நெஞ்சே**
**வணங்குங் குணமாக வந்து - வணங்கியே**

**மண்டல மெலாங் கடந்து மாவீட்டை நீதிறந்து**
**கண்டெடுத்துக் கொள்வாய் கனம்.** **66**

**கன தனத்து மாதர் கழிகாதல் கொண்டே**
**வினையார் நகைக்குருக வேண்டா - தினமனமே**
**சோதித்தா னல்லால் சுபகா ரியமாகப்**
**போதித்தால் கொள்விலையோ புத்தி.** **67**

**புத்திதரும் வித்தைதரும் பொல்லாப் பில்லாமல் நெஞ்சே**
**சித்திமுத்திபேரின்பம் சேர்ந்திடலாம் - நித்தநித்தம்**
**தானந்த மானதொரு சற்குருவோடே பழகி**
**ஆனந்த முண்டிருந்தக் கால்.** **68**

**கால்வழிச் சென்று கருபைக் குழிக்குக்கீழ்**
**மூலமற்ற நல்வழியே மூழ்கின்றி - மாலை**
**இருட்டறுத்துப் போடாமஎன்பாவி நெஞ்சே**
**திருட்டுவித்தை செய்கிறாய் சென்று.** **69**

**சென்று சிவனடியில் சேர்ந்த பெரும்பாம்பு**
**ஒன்றுமிக வாசியைத்தான் ஓட்டாமல் - நன்றாய்**
**நிலையாக நில்லா தலைவாய் மனமே**
**அலைவாயி னில்துரும்ப தாய்.** **70**

**தாய்தந்தை பெண்டுபிள்ளை தானென் றிரங்கிநித்தம்**
**காய்பறிக்கி றாயே கனியிருக்க - தாய்தந்தை**
**எத்தனை பேர் பெற்றாரோ என் மனமே நாமுந்தான்**
**எத்தனை பேரைப்பெற்றோம் இங்கு.** **71**

இங்குஅங்குமாய் மனமே ஈடழிய வேண்டாங்காண்
அங்கம் பொருளா அறிந்துகொண்டு - எங்குமெங்கும்
நாமேசிவமாக நாடினால் ஞானமொழி
தாமே அருளைத் தரும். 72

அருளில்லா தார்க்கும் அருளறிவங் காமோ
அருளறிவு தானே ஆனந்தம் - அருளறிவு
தேடுவதும் கூடுவதும் சிந்தையா னந்தமுடன்
நாவதும் தானறி வினால். 73

நாடிலெழுத்து ஆறும் நடுவெழுத் தீரைந்தும்
ஓடி னொருபதினா லாகுமோ - ஓடாய்நீ
ஓரெழுத்தைக் கண்டுறங்கி உன்னோடுறங்கி நெஞ்சே
ஓரெழுத்தி லேசென் றுரை. 74

உறைகலத்தினாய் போல உள்ளமல மெல்லாம்
அறுத்தடைந்து நெஞ்சே அறுதி - நிறைத்துப்
புளியம் பழத்தோடு போலிருக்க வேண்டும்
களியழியுங் காலத்துக் கே. 75

காலங் கழித்துக் கடைவாயில் பாலுறுமுன்
வேலங் கனைய விழிமடவார் - ஏலக்
குழியில்வைத்து மாரடித்து கூப்பிடுமுன் மாய்கைக்
கழியெடுத்துப் போடுமுன் கண்ணால். 76

கண்ணாலே ஞானம் கருதாமல் நெஞ்சேநீ
எண்ணாத மாய்கையெல்லாம் எண்ணுகிறாய் - நண்ணாய்
கேள்
பார்க்கவேண் டுந்தனையும் பத்தரை மாற்றுத்தங்கம்
ஆக்கப் போகாதோ உன்னால். 77

உன்னாலே நெஞ்சமே ஊழ்வினை வந்தாலும்
எந்நாளும் பாம்பின்வாய் தேரைபோல் - முன்னால்
அம்பிபட்டுப் போகாதே ஆனந்த மெய்விளக்கு
நம்பி துணைக்கு முற்றும் நம்பு. 78

நம்பினான் றன்னை நடுவணையி லேயிருந்து
கும்பிடா தார்க்குங் குறையுண்டோ - நம்பிப்
பளிங்கொளிபோல் நெஞ்சே பரந்திடாலா மெங்கும்
விளங்கனலோ டேசேருமே. 79

ஏமன்வரு முன்நெஞ்சே எவ்வினையுமே வென்று
சாம நடுவதனில் சார்ந்ததிலே - சேமமுடன்
காலனையும் வென்று சில காமனையும் வென்றுபின்பு,
பாலிக்க லாமதுநாம் பார். 80

பாரயனும் மாலும் பரவவரு ருத்திரனும்
காரனைய வாரணத்தை தான்கண்டு - சீராய

நக்கத் திடைநடுவே நற்க்கன பொற்பதியில்
சொற்கனகத் தற்பதியில் தோன்று. 81

தோன்றுமே யெல்லாச் சுகமுற்றதில் மனமே
தோன்றுமே ஆனந்தச் சுந்தரர்பின் - தோன்றுமே
அட்சரச் சுருக்கி னொடும் அக்கரப் பெருக்கமுடன்
உச்சரித்து ரைக்கிறவுண்மை. 82

உண்மை யிதுகாண் ஒளியிருந்த வீடுகாண்
உண்மை சிவனிருக்கும் ஊருகாண் - உண்மை
கருமை ஒளியேழ் கதியுள் பதங்கள்
மருவுதங்கி நீ வருந்து மாறு. 83

வருந்தும் பொழுதுகாண் மாயையாய் நெஞ்சே
வருந்தும் குணமாக வந்து - வருந்தும்
இருவினை தொடக்கறும் ஏழ்வகைப்பிறப்பாம்
கருமலத் திருக்கறுங் காண். 84

காண்மனமே சத்திசிவம் ஒன்றான காரணத்தை
காண்மனமே மாலயனுங் காணரிதை - காண்மனமே
செம்பொன்னி னம்பலத் துள் சேருஞ்செஞ் சொல்லென்றும்
அம்பலத்தில் ஆடுநட னம். 85

நடனமது பார்மனமே நயனத் திடையே
நடனமது நாலாம் பதங்காண் - நடனம்
பதிமதிவித் தாய் மனமே பலகதிவித் தாயெனவே
அதிவிதசித் தாந்த மாடும். 86

ஆடும் பதிமனமே அம்பலத்தைச் சுட்டுநடம்
ஆடும் பரமகுரு ஆனந்தம் - ஆடுகின்ற
கூத்தனை கூற்றிற்ற கூத்தபிரா னையசுத்தம்
நீத்தவனைச் சித்தம்வைத்து நில். 87

நில்லு நிலவறமாய் நேசமுடனே பதியில்
நில்லு பிறவியற நீநெஞ்சே - நில்லு
கனல்மதியும் கார்மிடறும் கதிரும் மதியும்
புனலொடு செஞ்சடையும் போற்றி. 88

போற்றித் தினமனமே பொல்லாக் குலங்கள் விட்டுக்
காற்றுங் கனலுங் கருத்துஒன்றாய்ப் - பார்த்தறிவால்
சுத்தமலப் பித்தையற்றுச் சுற்றஒழி சுற்றிலுற்றுச்
சத்தமறித் துற்றதிலே தங்கு. 89

தங்குநீ சென்று சதாசிவத்திலே மனமே
மங்குங் கருக்குழிக்குள் வாராமல் - தங்கும்
கருவும் புனலும் கதியும் கெதியும்
விதியும் திருத்தான வெளி. 90

வெளியில் வெளியாகி விண்ணவன் றானாய்
வெளியி லொளியா யிருக்க - வெளியிற்
கரியுரித்துப் போர்த்தவனைக் கார்மதிசென் றானைக்
கருவறுத்துப் பார்த்தலே காண். 91

காணு மனமே கரிகாலனை வதைத்துக்
காணு முலகமெல்லாம் காணுருவாய் - தானு
மனவிரக மானபுலி மன்றுள் நடனப்
பணவரவின் உற்ற பாதம். 92

பாதத்தான் அஞ்செழுத்தான் பரமன் சிங்க
நாதத்தா னென்று நெஞ்சே நன்றாகப் - போதத்தான்
ஆரணத்தி னோடடைந்து அண்டமெல்லாம் சுட்டதிரு
நீறணிந்து கொண்டிரு நித்தம். 93

நித்தனாய் நிர்மலனாய் நின்றுலகம் மூன்றுரைக்கும்
கர்த்தனாய் அஞ்செழுத்தின் காரணமாய்ப் - பெற்ற
குருவினிரு பாதங் குளிர நினைநீ
தருமதுபற் றாமனமே தான். 94

தானவனா காவிட்டால் சண்டாள னிற்றடிவான்
தானவனு மங்கே தரிக்கொட்டான் - மானார்
கலங்கும் கலவிக்கருத்திற்றால் தான் கொடுப்பான்
இலங்கும் அடிதேர் நெஞ்சே. 95

**நெஞ்சே உனக்கு நிலவறமாய்ச் சொன்னவெலாம்**
**எஞ்சாவென் சொல்லென் றிகழாதே - நெஞ்சே**

**கருத்திச்சை தள்ளி கருதென்று செப்பின்**
**கருத்திச்சை தள்ளு கருத்துள்.** **96**

**உள்ளிருந்து நெஞ்சே உலாவுஞ் சிவகுருவை**
**வெள்ளெருக்கின் பூச்சூடும் வேணியனை - உள்ளே**
**மனமுருகப் பார்த்தால் மலைசிலையாகச் சென்றால்**
**உனதறிவால் பார்த்து நீ ஓது.** **97**

**ஓதுநீ நெஞ்சேகேள் ஓரெழுத்து மந்திரத்தால்**
**ஆதியாய் எங்கும் அமர்ந்தானை - ஓதில்**
**கடிய மிடியும் கடிய பிணியும்**
**கடிய வணுகாமல் காக்கும்.** **98**

**காக்குந் தினமே கடியப் பிறப்பறுத்து**
**கார்க்கும் பலபிணிநோய் காட்டாமல் - நோக்குமந்தி**
**வந்து பகல்வெளியில் வாராத மன்மதனை**
**யுந்து மதையுணர்ந்தில் வாழ்.** **99**

**வாழுநீ நெஞ்சே மயங்கித் திரியாதே**
**ஏழெழுத்துக் கப்பா லிருப்பானை - ஏழை**
**வருத்தந்தீர்த் தன்பன்மனமதனில் தங்கு**
**பருத்தரத்தி னத்தைப் பணி.** **100**

**பணிந்து துதிமனமே பல்லுயிர்கட் கெல்லாம்**
**அணுவிலணு வாங்கியிருந் தானை - துணிவாய்ப்**
**பிறவா திருக்கவும் பேரின்ப வாழ்வைத்**
**திறமாக நம்பிச் செலுத்து.** **101**

## 20. கஞ்சமலைச் சித்தர் பாடல்

கஞ்சமலை என்னும் மலையில் வாழ்ந்தமையால் இவர் கஞ்சமலைச் சித்தர் என்று அழைக்கப்பட்டார் போலும். இயற் பெயர் தெரிந்திலது. எளிமையான சொல்லமைப்பில் காணப்படும் இச்சித்தரது பாடல் கலைக்கியானம் 23 மற்றும் பாடல் 25 ஆக சித்தர் பாடல் தொகுதியில் காணப்படுகிறது.

வந்தபொருளைத் தள்ளாதே - நீயும்
வாராததற்கு வீணாசை கொள்ளாதே

என்ற இவரது பாடல் வரிகள் பட்டினத்தடிகளின்

இருக்குமிடம் தேடி உருக்கமுடன் கொண்டுவந்தால்
உண்பேன் என் பசிக்கே

என்ற பாடல் வரிகளை நினைவுபடுத்துகின்றன. இவ்வரிகள் மட்டுமல்ல. ஏனைய அடிகளும் சந்த இசையோடு எதுகை மோனையுடன் நினைவுபடுத்துகின்றன.

கற்பனை யாகிய ஞாலம் - அந்த
  கரணங்களாலே விளைந்த விசாலம்
மூடருறவு பிடியாதே - நாரி
  மோக விசாரத்தால் நீ மடியாதே
ஆடம் பரம் படியாதே - ஞான
  அமுதமிருக்க விஷம் குடியாதே

பெண்களின் மோக ஆசை கூடாது. அப்படி தப்பித் தவறி அஃது ஏற்பட்டு விடுமானால் அவ்வளவு சீக்கிரத்தில் அதனை

விட்டுவிட இயலாது, அல்லது அது போகாது என்று கூறும் இவர் பிற்காலச் சித்தர் என்பது 'பாடானது', துற்கந்தம்' முதலான சொல்லாட்சிகளால் புலனாகிறது.

நாமசொரூபமே சித்தி - அதை
நாடித் தெளிந்து கொண்டாலல்லே முத்தி

என்று முத்திக்கான வழியைச் சொல்கின்றார்.

பரிபூர ணானந்த போதம் - சிவ
பரப்பிர்ம மான சதானந்த பாதம்

உரிதாம் பரம்பொருளை உள்ளு - மாயம்
உற்ற பிரபஞ்ச மயக்கத்தைத் தள்ளு
அரிதான சிவநாமம் விள்ளு - சிவன்
அடியார்கள் பணிவிடை அன்பாகக் கொள்ளு. 1

துச்சமு சாரவி சாரம் - அற்பச்
சுகமது துக்கமதாம் வெகு கோரம்
நிச்சய மானவி சாரம் - ஞான
நிர்மல வேதாந்த சாரமே சாரம். 2

கற்பனை யாகிய ஞாலம் - அந்தக்
கரணங்க ளாலே விளைந்த விசாலம்
சொற்பன மாம்இந்த்ர சாலம் - அன்று
தோன்றி விட்டாலது சூட்சானு கூலம். 3

அற்பம தானப்பிர பஞ்சம் - அது
அனுசரித்தாலே உனக்கிது கொஞ்சம்
நிற்பது அருள்மேவி நெஞ்சம் - அன்று
நிகரில்லை நிகரில்லை மெய்ஞ்ஞான பொஞ்சம். 4

ஆங்காரத் தால்வந்த கேடு-முதல்
ஆசையைக் கட்டோடே அப்பாலே போடு
தாங்காம லானந்த வீடு-அன்று
தாக்கும னோலயந் தானாகக் கூடு. 5

தத்துவக் குப்பைகள் ஏது-சித்தி
சாத்திர மான சடங்குகள் ஏது
பத்தி யுடன் மறவாது - குரு
பாதத்தைக் கண்டாற் தெரியும் அப்போது. 6

தூராதி தூரங்கள்இல்லை - அத்தைத்
தொட்டுப் பிடிக்க வென்றால் வெகு தொல்லை,
காரண தேசிகன் சொல்லை-நம்பிக்
கருத்தில் நிறுத்தியும் காணலாம் எல்லை. 7

ஆணவத் தால்வந்த காயம் - அதில்
ஐவரிருந்து தொழில்செய்யும் ஞாயம் 8

காணவ மாம்போகு மாயம்-நன்றாய்க்
  கைகண்ட சூத்திரம் சொன்னேன் உபாயம்.

மூடர் உறவு பிடியாதே-நாரி
  மோக விகாரத்தால் நீ மடியாதே
ஆடம் பரம் படியாதே-ஞான
  அமுதம் இருக்க விஷம் குடியாதே. 9

தான் என்று வாது கூறாதே-பேசி
  தர்க்கங்கள் இட்டுச் சள் என்று சீறாதே
ஊனென்ற பாசம் மாறாதே-போனால்
  உன்னாணை உன்மனஞ் செத்துந் தீராதே. 10

வந்த பொருளைத் தள்ளாதே-நீயும்
  வாராததற்கு வீணாசை கொள்ளாதே
சிந்தை வசமாய்த் துள்ளாதே - சும்மா
  சித்திரம் போலிருந்தது ஒன்றும் விள்ளாதே. 11

தேகபாச பவ பந்தம்-அப்பொருள்
  சிற்றின்ப மானது சிச்சீர்க்கந்தம்
பாகம தானவே தந்தம்-பொருள்
  பாவித்துப் பார்க்கில் உனக்கிது சொந்தம். 12

வஞ்சியர் ஆசை ஆகாதே-அந்த
  மயக்கமானாற் கொஞ்ச மட்டிற் போகாதே

அஞ்சி யமன்கைச் சாகாதே-கெட்ட
  ஆசா பாசமாம் நெருப்பில் வேகாதே. 13

கல்வி மயக்கங் கடந்து-எல்லாம்
  கற்றோ மென்று றெண்ணுங் கசட்டைத் தொலைந்து
சொல்வெப் பினாலே கிடந்து-இரு
  சூட்சாதி சூட்சத்தில் ஆசை படர்ந்து. 14

ஓடித் திரியும் கருத்து-அதை
  ஓடாமல் கூட்டிப் பிடித்துத் திருத்து
நாடிக் கொண்டம்பைப் பொருத்து - அந்த
  நாதாந்த வெட்டவெளிக் குள்இருத்து. 15

சாண்வயிற் றால்அலை யாதே-நிதம்
  சஞ்சலப்பட்டுக் கொண்டே மலையாதே 16

ஆணவத் தால்உலை யாதே-உனக்கு
  கானந்த முத்தி அது நிலையாதே.

அபிமானி யாகிய சீவன்-அவன்
  அஞ்ஞானத்தாலே அழிவுண்டு போவான்
தபம்நினைந்தால் போதம் சார்வான்-நிலை
  சார்ந்து கொண்டால் சத்தி ரூபமும் ஆவான். 17

நற்குரு சொன்னதே சொல்லு-தம்பம்
  நாட்ட மென்றால் வன்னி நிலையிலே நில்லு
தற்சம யங்களை விள்ளு-உண்டு
  தன்மயமாகவே தானே நீ கொள்ளு. 18

துன்ப இன்பங்களைத் தொட்டு-அந்தத்
  தொந்தங்கள் எல்லாந் துருசறச் சுட்டு
பின்பு பாசத்தைக் கைவிட்டு-ஒன்று
  பேசாம லந்தம் பெருமையை விட்டு. 19

பேச்சினால் என்னென்ன தோணும்-சும்மா
  பேசப்பேசப் பிழைஅல்லோ காணும்
வாச்சுத லால்அம்பு பூணும்-நல்ல
  மாசற்ற ஞான விசாரணை வேணும். 20

அநித்திய மானது தேகம்-அதில்
  ஆசையும் ஒன்றால் அடங்காது மோகம்
தனித்திருந் தால்அந்த போகம்-ஒன்று
  தானாகி நிற்பது வேசிவ யோகம். 21

விரும்பாசைக்கு இடங்கள் கொடாதே-காய
  வேதனைக் குள்ளேநீ கட்டுப்படாதே
திரும்பச் செனனம் எடாதே-குரு
  தேசிகர் பாதத்தில் அன்பு விடாதே. 22

கோடான கோடி தவங்கள்-அந்தக்
  கோவிலைச் சுற்றிச் செபிக்குஞ்செபங்கள்
பாடான தல்லோ பவங்கள்-இது
  பண்ணுமுன் நண்ணும் துன்ப அமலங்கள். 23

அந்தக் கரணவி லாசம்-அதை
  யாராலும் தள்ளக்கூ டாது பிரயாசம் 24

தொந்தித்து நிற்பதே பாசம்-அதிற்
  தோன்றாமற் தோன்றுஞ் சுயம்பிரகாசம்.

நாமசொ ரூபமே சித்தி-அதை
  நாடித் தெளிந்துகொண்டால் அல்லோ முத்தி
நேம சொரூபமே வித்து-எங்கும்
  நிச்சய மாகும் நிரந்தர வத்து. 25

## 21. கல்லுளிச் சித்தர் பாடல்

'கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடு
எல்லாம் தவிடு பொடி'

என்று ஒரு பழமொழி இந்தச் சித்தரைப் பற்றி வழங்குகிறது. இந்தச் சித்தரைக் கண்டால் மலைகளும்கூட குறுக்கே நில்லாது பயந்து வழிவிடும் என்பதால் இப்பழமொழி ஏற்பட்டதாகக் கூறுவர்.

இவர் பெயரால் கல்லுளிச் சித்தர் ஞானானந்த சூத்திரம் 16, கல்லுளிச் சித்தர் பாடல் ஆகியவை வழங்கப்படுகின்றன.

சித்தர் என்போர் யார்? என்பதற்கு இவர் பாடல்கள் விடையளிக்கின்றன.
பந்தங் கடந்தவனே சித்தன் - பாரில்
பஞ்சமா பாதகத்தை விட்டோனேபத்தன்
இந்தவிதந் தெரிந்தவனே சித்தன்
அதிலென் நிலைமை கண்டவனே சீவமுத்தன்

இப்படி சித்தனை இனங்காட்டிய கல்லுளிச் சித்தர் முதல் பகுதியில் என்ன என்ற வினாக்களைத் தொகுத்து இரண்டாம் பிற்பகுதியில் வேணும் வேணும் என்று வேண்டுமளவு ஞானத்தைக் கொட்டுகின்றார்.

கட்டி வராகன் இருந்தென்ன - அதைக்
காவல்கள் போட்டு நீ காத்திருந்தென்ன
நீரில்லா கிணறு இருந்தென்ன மனம்
நேராய் நடவாத பிள்ளை இருந்தென்ன

ஊரிலா ஆறிருந் தென்ன
நமக்கு உதவியில்லா மனிதர் உறவிருந்தென்ன

இவைகள் எல்லாம் இருந்தும் ஒன்றுதான் இல்லாமல் இருந்தும் ஒன்றுதான்.

உதவாக்கரைகளைப் பட்டியலிடுகின்றார்.

கொலைக் களவு நீக்கிவிட வேண்டும் உலகில்
கொடியோன் எனும் பேரைப் போக்கிடவேணும்
சோதியைக் கண்டறிய வேணும்

அட்ட கன்மந் தெரிய வேணும்
அதற்கு ஆதாரமான கலை தெரியவேணும்

என்று வேண்டுவனவற்றை தனிப்பட்டியல் இடுகின்றார். பாடல்கள் படிப்பதற்கு எளியனவாய், ஞான அமுதத்தைப் புகட்டுகின்றன.

**பிர்ம சொரூபத்தை நாடு உன்**
**கர்ம வினை ஓட வழிதனைத் தேடு**

**எட்டி பழுத்தாலும் என்ன? காசு**
**ஈயாத லோபிகள் வாழ்ந்தாலும் என்ன?**
**கட்டி வராகனிருந்து என்ன? அதைக்**
**காவல்கள் போட்டுநீ காத்திருந்து என்ன? 1**

**நீரிலாக் கிணறு இருந்தென்ன? மனம்**
**நேராய் நடவாத பிள்ளையிருந்து என்ன?**
**ஊரிலா ஆறிருந்து என்ன? நமக்கு**
**உதவி இல்லாது மனிதர் உறவிருந்து என்ன? 2**

**தவமது செய்தாலும் என்ன? நீ**
**சமத்தன் என்றேபே ரெடுத்தாலும் என்ன?**
**சிவபூசை செய்தாலும் என்ன? அரன்**
**சேவடியை மறவாமல் இருந்தாலும் என்ன? 3**

**காசிபோய் வந்தாலும் என்ன? பெரிய**
**கனக தண்டிகையேறித் திரிந்தாலும் என்ன?**
**வாசியைத் தெரிந்தாலும் என்ன? நாளும்**
**மகராசன் என்றுபேர் பெற்றாலும் என்ன? 4**

**புராணம் படித்தாலும் என்ன? இந்தப்**
**பூலோகம் தன்னில் மறைந்திருந்து என்ன?**
**திராசு நிலையாய் இருந்து என்ன? தினம்**
**சிவசிவா என்றே செபித்தாலும் என்ன? 5**

**வித்தைகள் பலபடித்து என்ன? நீ**
**மென்மேலுஞ் சாத்திரம் கற்றாலும் என்ன?**
**சித்துகள் தெரிந்தாலும் என்ன? நாளும்**
**சிறப்பாக வார்த்தை உரைத்தாலும் என்ன? 6**

**பெண்டாட்டி பிள்ளை இருந்து என்ன? முதிர்ந்த**
**பெரியோர்கள் பாதத்தைப் பூசித்தும் என்ன? 7**

துண்டாகப் போயிருந் தென்ன? நீ
துலையாத கற்கோட்டை கட்டியிருந்து என்ன?

மாடிமேல் வீடிருந்து என்ன? இந்த
வையகத் தோர்மெய்க்க வாழ்ந்தாலும் என்ன?
கூடிக் குலாவி இருந்த தென்ன? கையெடுத்துக்
கும்பிட்டுக் கூத்தாடித் திரிந்தாலும் என்ன? 8

தாய்தந்தை துணையிருந்து என்ன? உற்ற
சனங்களும் உபகார மாய் இருந்தென்ன?
நாய்போல் அலைந்தாலும் என்ன? வரும்
நமனுக்குத் தப்பி ஒழிந்தாலும் என்ன? 9

சரியை கடந்திடவும் வேணும் இந்தச்
சகத்தினுட மாயை ஒழித்திடவும் வேணும்.
கிரியையைப் பார்த்தறிய வேணும் மனவாக்குக்
கெட்டாத சொரூபத்தைத் தெரிந்திடவேணும் 10

யோகந் தெரிந்திட வேணும், உனக்
குண்டிமுதல் ஆனதைச் சுருக்கிடவேணும்,

பாகமது தெரியவே வேணும், குரு
பாதம் அதை மறவாமல் இருந்திடவேணும். 11

கொலைகளவு நீக்கிவிட வேணும் உலகில்
கொடியோன் எனும்பேரைப் போக்கிடவேணும்
புலைகளைத் தொலைத்து விடவேணும் இன்று
பொல்லாத மாயையை விலக்கிடவேணும். 12

சோதியைக் கண்டு அறிய வேணும் வேதச்
சுடரெனும் தீபத்தைப் பார்த்தறிய வேணும்
ஆதிம்பிர் மந்தெரிய வேணும் அதை
அன்புடன் சாத்திரத் தாற்தெரிய வேணும். 13

ஞானநிலை தெரியவே வேணும் இதில்
நால்வேத உண்மை தெரிந்திட வேணும்
மோன நிலைதெரியவே வேணும் யோக
முடிவான வத்துவை முன்தெரிய வேணும். 14

அட்ட கரு மம்தெரிய வேணும் அதற்
காதார மானஆலை தெரிய வேணும் 15

திட்டமாய் வாசிநிலை வேணும் இத
தெரிந்துகொண் டாற்சித்தன் ஆகவே வேணும்

பந்தங் கடந்தவனே சித்தன் பாரிலே
பஞ்சமா பாதகத்தை விட்டோனே பத்தன்
இந்தவிதந் தெரிந்தவனே சித்தன் அதில்
என்நிலைமை கண்டவனே சீவ முத்தன் 16

## ஆனந்தக் களிப்பு

பிர்ம சொரூபத்தை நாடு உன்
கர்ம வினையோட வழிதனைத் தேடு
மர்மந் தெரிவிக்கும் வீடு கண்டு
தர்ம நெறிமுறைதன்னில்நீ கூடு. 1

ஆதி பரம்பொருளைப் போற்றி என்தன்
ஆத்தாளின் பாதத்தை மனதினி லேற்றி
சோதிச் சுடரொளியை நோக்கி எங்கள்
தூயகுரு பதமலரைச் சிரமீது தாக்கி. 2

முத்தர்கள் தன்னைத் துதித்து மேலாம்
மோனத்தின் நிலையை மனத்தினில் ஏற்றி
சுத்த நிராமயங் கண்டு வேதச்
சுடரெனும் பொருளைஉன் னிதயத்துட்கொண்டு 3

ஞான நிலை அறிய வேண்டி இந்த
ஞாலத்தில் ஆபாச வழிதனைத் தாண்டி
மோன நிலையினில் சேர்த்து ஆதி
முச்சுடர் ஆகிய தீபத்தைப் பார்த்து. 4

நித்தியா னந்தமெனத் தேர்ந்து சதா
நில்மல மானதோர் பரவெளி சார்ந்து
பத்தியாய் வாழ்ந்திட வேணும் ஆசா
பாசத்தை நீக்கில்மெய்ஞ் ஞானமது தோணும். 5

தன்னையே தானறிந்தோன் சித்தன் வாசி
தனித்திருந் தேபழக்க முற்றோனே முத்தன்
உன்னைஉன் னாலறிவோன் சத்தன் ஞான
யோகநிலை தன்னையு மறிந்தோனே முத்தன். 6

பவுரணை நாளதனி லேதான் வாசிப்
பழக்கமது செய்யவா ரம்பிக்க வேதான்
நவநாதர் செய்முறைகள் இதுதான் கண்டு
நாட்டத்தைக் கொண்டு வழிபார்ப்பர் இதுதான். 7

வாசிப் பழக்கத்தை நாட்டு தீட்சை
மார்க்கப் படியே வழிகண்டு தீட்டு
பாசிப் பயறு அன்ன மூட்டுதினம்
பத்திய மாகவே காலத்தை ஓட்டு. 8

பெண்போகத் தாசை வை யாதே நல்ல
பிரணவ சொரூபத்தை நழுவ வி டாதே
மண்பொன்மேல் இச்சைகொள் ளாதே பொல்லா
மாயையில் அகப்பட்டு நீயுழ லாதே. 9

அட்டாங்க யோகமது செய்வாய் அதி
அனந்தநிலைகண்டு மோனத்தில் உய்வாய்
கட்டாக ஓர்நிலையில் நில்லு அந்தக்
கரணம் அடக்கிய மேலேறிச் செல்லு. 10

நந்திதன் கொலுவை விடாதே அந்த
நாட்டத்தை விட்டுநீ அலைந்து கெடாதே
அந்தணன் பீடத்தில் நீயே நின்று
ஆத்தாளைக் கண்டு பணிந்திடு வாயே. 11

தானாக மேலேஓர் வீடு கதவு
தான்சாத்தி இருக்கின்ற வழிதிறந் தோடு
மேனாட்டுக் கப்பலை ஓட்டு பாயை
விரித்துநீ மேற்தூக்கிச் சுக்கானைப் பூட்டு. 12

ஆதாரம் ஆறையும் பார்த்து உன்றன்
அறிவினுக்கு எட்டிய நங்கூரங் கோர்த்து
மாதா தெரிசனை அறிந்து அந்த
வழியிலே திட்டியின் வாசல் திறந்து. 13

ஆறுதல வீட்டையும் கண்டு அங்கே
அவரவர் வாசஞ்செய் அருமையை விண்டு
தேறுவதை நீ வெளிவி டாதே நல்ல
திருவான மேல்வாசல் கண்டுபின்னி டாதே. 14

பாதைவழி ஏறியே செல்லு மயிர்ப்
பாலத்தின் வழியேபோய்ப் பட்சமாய நில்லு
தாதை இருப்பிடம் பாரு யாரும்
சஞ்சாரம் இல்லாத தனித்திடஞ் சேரு 15

மூலதாரத்தையும் பார்த்து நல்ல
முச்சந்தி வீதியின் வாசியைச் சேர்ந்து
நாலா விதங்களும் தெரிந்து அங்கே
நவகோண சக்கரத்து உண்மை அறிந்து. 16

சங்குத் தொனிகேட்கில் ஆகும்
சத்தமுங் கேட்கப் பயம்விலகிப் போகும் அந்தச்

எங்கும் நிராமயமாய்த் தோணும் மேலும்
இயல்பாக நாதத் தொனியங்கே காணும். 17

சதுரகிரி உச்சிமீது ஏறி அதைத்
தானங்கே பார்த்துபிர மானந்த மீறி
இதுகயி லாசகிரி யென்று போற்றி
இனிமையாய் வழிதெரிந்து தவ்விடஞ் சென்று. 18

கருநெல்லிக் காட்டுக்குள் சென்றே உட்
கருவான தாமரைத் தடாகத்துள் நின்றே
பெருவாரித் தீர்த்தங்கள் ஆடி வாய்
பேசாமல் ஊமைபோல் மோனத்தை நாடி. 19

கருஞ்சாரை வெண்சாரை யோட அதைக்
கண்டு ஒடுங்கி வழிதனைத் தேடப்
பெரும்பாலும் அருவி செறிந்து வரப்
பிறங்கும்பிர மானந்த மிதுவென்று அறிந்து. 20

மூலக் கணேசனைக் கண்டு அவர்
முன்னின்று போற்றியே தெரிசித்துக் கொண்டு
கோலத் துடன் அங்கு இருந்தும் செல்லக்
குணமாயாய் ஆனந்தப் பரவெளி பொருந்தும். 21

சோதி சொரூபத்தைப் பார்த்து அதிற்
சொக்கியே நின்றிடத் தேகமும் வேர்த்து
ஆதி மகாலிங்கங் கண்டு அதில்
ஐம்புலன் ஒடுங்கியே ஆனந்தங் கொண்டு. 22

சுந்தர தெரிசனம் செய்து சிற்
சொரூப நிலையதனில் நின்று நான் உய்து
அந்தரத் தோர்களைப் போற்றி இது
ஆச்சரியம் என்றேதான் வாசியை ஏற்றி. 23

கண்டுகொண் டேன்சிற் பரத்தை ஞானக்
கண்கொண்டு பார்த்தறிந் தேன்அட் சரத்தை
விண்டுயான் சொல்லமுடி யாது இந்த
மேதினி யோர்க்குலெகு விற்கிடை யாது. 24

மனமானது தடங்கியே போச்சு இந்த
மாயையை விட்டுக் கரையேறல் ஆச்சு
சினமென்னுங் கோபம்அறுத் தாச்சு யோகம்
சித்திய தாகவே முத்தியும் ஆச்சு. 25

ஆசையை ஒருநாளும் வேண்டேன் மேல்
ஆறு தலத்திலும் கண்டதைப் பூண்டேன்
ஓசை ஒளிக்குளே நின்றேன் அதை
உற்றுற்றுப் பார்த்துப்பின் அங்கங்குச் சென்றேன் 26

ஆயிரத்து எட்டிதழும் கண்டேன் கண்டு
அந்தந்த நிலையையும் மனத்தினிற் கொண்டேன்
தாயின் சொரூபத்துள் ஆச்சு இன்னும்
சகலபுவ னங்களும் பிண்டத்தில் ஆச்சு. 27

அஞ்ஞானம் என்பதும் போச்சு பர
மானந்து மென்ப தது நிசப் பேச்சு
மெய்ஞ்ஞானம் என்பது பொய்யோ இந்த
மேதினி யோர்கள் அறியார்க ளையோ. 28

இல்லறம் உள்ளதும் நாமே அதி
ஏற்கையா யிருந்தோர்க்குச் சாதனமாமே
நல்லறம் தேடியலை யாதே மேலாம்
நாதாந்த வெட்டவெளி யாயிருக்கும் போதே. 29

மோன நிலைகண்டு தேறு பர
முத்திக்கு வித்தான கருத்தில் நின் றேறு
ஞான நிலையதுவும் கிட்டும் பூவில்
நாடி இருக்கலாம் வெகுகால மட்டும். 30

சுழிமுனை திறக்கும்வழி பாரு அந்தச்
சூட்சாதி சூட்சத்தைக் கண்டதின் சீரு
வழியுடன் சுந்தரர் நூறே சொல்லும்
மார்க்கத்தின் வழியாகச் சென்றுநீ தேறே. 31

மச்சரும் எண்ணூறிற் சதமாய்க் கொஞ்சம்
வாய்விண்டு சொல்லினர் தெரியவே பதமாய்

இச்சை ஒழித்து நீ பாரு அதனால்
இகபர இரண்டையும் காணவெகு சீரு. 32

தீட்சையின் மார்க்கமும் தெரிய குரு
தேசிகன் இருநூறில் வழிதுறை அரிய
மாட்சிமை யாக உரைத்தார் அதை
வாங்கித் திருமூலர் குகைக்குள் மறைந்தார். 33

சட்டமுனி கற்பவிதி நூறு அதனைத்
தான்பார்த்து நல்ல வழியினில் தேறு
வெட்டவெளி யாகவே தோணும் ரோமர்
விரித்துச்சொன் னாரந்த ஐஞ்ஞூறிற் காணும். 34

செய்பாக மானதுவும் முன்னே கருவைத்
தெரிந்துகுரு முறையாகச்செய்வாய்நீ பின்னே
கைபாகத் துடன் செய்தால் ஞானம் கிட்டுங்
கடைத்தேறல் ஆமிந்தத் திடத்துடன் மோனம். 35

பத்திய பாகங்கள் ஆக முறையாய்ப்
பாங்குடன் தானுண்பாய் நரைதிரை போக
முத்தி வழியைத் திறந்து பார்த்து
மோசங்கள் வாராமற் செய்வாய் சிறந்து. 36

பூலோக ஆசையைத் தள்ளு ஞானம்
போதிக்குங் குருகண்டு அடுத்துநீ கொள்ளு
சாலோக பதவியது கிட்டும் வேறே
சம்பத்து வேண்டுமோ இதுவந்த மட்டும். 37

யோக முறை கை விடாதே விட்டுவிட்டு
ஒன்றுந் தெரியாமல் நீயும் கெடாதே
பாகம தாகவே செய்வாய் பய
பத்தியா எப்போதுஞ் சரத்தினில் உய்வாய். 38

ஞான வழிகண்டு கூடு வரும்
நலமான முத்தி வழிதனைத் தேடு
மோன நிலையிலே நில்லு குரு
முத்திக்கு கிடமான வழியிலே செல்லு. 39

வாழ்நாளை வீணில்வி டாதே கெட்ட
மாய வலைஅகப் பட்டுழ லாதே
பாழ் போகில் எதுவும்வா ராதே பரி
பக்குவ மாகிடில் நீ பின்னி டாதே. 40

தூக்கத்தில் ஆசைவை யாதே இது
சுகமெனக்காண்பித்து மயக்குமப் போதே
ஊக்கத் துடனிருப் பாயே தூங்கி
உலகோர் சிரிக்கவு டம்பெடுப் பாயே. 41

மீறித் திரிவதும் வீணே பரியாச
மேசெயும் வார்த்தைக்கு இடமது காணே
தேறித் தெளிவது பாரம் உன்றன்
சித்தம் மடக்கித் திரிவது சாரம். 42

ஆணவத் தால் வருங் கேடு அதை
அறியாமல் நடப்பது சுனைகெட்ட மாடு
தாணுவின் பாதத்தை நாடு என்றும்
தன்தேகம் போகாமல் கற்பங்கள் தேடு. 43

ஆசை மயக்கில் செல் லாதே நீ
அன்புடன் தெரிந்ததை வெளியில் சொல் லாதே
பாசத்து அகப்படாது நீயே ஞான
பரிபூர ணானந்த பதம்அடை வாயே. 44

பார்த்துத் தெரிந்து கொள் என்றே எனக்குப்
பட்சமாய்ப் போகருஞ் சொல்லினார் என்றே
ஆத்தும சத்தியாய் நானே அவரை
அன்புடன் போற்றிப் பணிந்துகொண் டேனே. 45

குருநாதன் என்னை மதித்துப் பேர்
கொடுத்தாரே கல்லுளி யென்றே விதித்து
திருநாமம் பெற்றபின் நானே அவரைத்
தெரிசித்து யோகத்தின் சித்திபெற் றேனே. 46

கல்லுளிச் சித்தனென் றேதான்
கனிந்துமே கூப்பிட்டார் சித்தர்க ளேதான் வாயாற்

சொல்லிய படியென்னைத் தானே எவரும்
சுட்டி அழைத்திடில் நேரில் வரு வேனே. 47

என்னூலும் மறுபதோ டாறு நானும்
இயம்பினேன் சக்கரத் தியல்பதின் கூறு
முன்னூலும் பின்னூலு மாய்ந்தே நீ
முக்கியம் இன்னதென மனதுக்குள் வாய்ந்தே. 48

சாத்திர மெத்தனையோ கோடி சித்தர்
தான்சொன்ன வாத வயித்தியந் தேடி
சூத்திரம் பத்தொன்ப தாக யானும்
சொல்லிய நூல்தனை வழிதுறை யாக. 49

பார்த்துத் தெளிந்தவனே சித்தன் பரி
பக்குவ மாக அறிந்தோனே பத்தன்
நேர்த்தியாய் என்னூல்கற் றோனே அவன்
நீடூழி காலம்வரை யோகம் பெற் றோனே. 50

## 22. சங்கிலிச் சித்தர் பாடல்

சங்கிலிச் சித்தரின் உண்மைப் பெயர் 'மதங்க நாதர்' என்பது தவிர, வேறு எந்தத் தகவல்களும் உண்மையை உரைப்பவை ஆகா. இவர் காலம் 15ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலம் என்று பாடல்களில் வழங்கும் சொல் வழக்காறுகள் காட்டுகின்றன.

சங்கிலிச் சித்தர் பாடல்கள் 'கும்மி' மெட்டில் அமைந்தவை. 36 பாடல்களும் முக்காலத்தின் உண்மைகளை முன்வைக்கின்றன. மனிதர்கள் வாழப் பிறந்தவர்கள். பொய் மாயையை நம்ப வேண்டாம். வாழ்க்கை வாழ்வதற்கே. வாழ்வில் பொருந்து என்று கூறுகிறார். மனம் அடக்கும் கலையே வாழ்வு. மற்றவை வீழ்வு என்பது இவர் கொள்கை. வைதீகச் சமயத்தின் வைரியாக விளங்கும் இவர், வாழ்வின் பேரின்பத்திற்கு வழி வகுக்கிறார்.

### கும்மி

**மூலக்க ணேசன் அடிபோற்றி எங்கும்**
**முச்சுட ராகிய சிற்பரத்தில்**
**வாலை திரிபுரை அம்பிகை பாதத்தை**
**மனத்திற் கொள்வாய் ஆனந்தப் பெண்ணே. 1**

**எங்கள் குருவாம் திருமூலர் பாதம்**
**எப்போதும் போற்றித் துதித்தோன்**
**சங்கைகள் அற்றமா சித்தர்கு ழாங்களின்**
**தாளைப் பணிவாய் ஆனந்தப் பெண்ணே. 2**

**ஓங்கார வட்டம் உடலாச்சு பின்னும்**
**ஊமை எழுத்தே உயிராச்சு**
**ரீங்காரம் ஸ்ரீங்கார மான வகையதை**
**நீதா னறிவாய் ஆனந்தப் பெண்ணே 3**

**அகாரம் உகாரத் துடன்பொருந்த அது**
**யகார மானது அறிந்துகொண்டு**
**சிகார மான தெளிவினி லேநின்று**
**தேர்ந்து கொள்வாய் ஆனந்தப் பெண்ணே 4**

பஞ்ச பூ தங்களைக் கண்டறிந்தோர் இகப்
பற்றினைச் சற்றும் நினைப்பாரோ
சஞ்சலம் இல்லாது யோக வழியதைத்
தானறிந்துய்வாயா ஆனந்தப் பெண்ணே 5

தவ நிலையை அறிந்தோர்க்கு ஞானந்
தன்னால் தெரியும் எனவேதான்
நவசித் தாதிகள் கண்டு தெளிந்ததை
நன்றாய் அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 6

வாசி நிலையை அறிந்துகொண்டால் தவம்
வாச்சுது என்றே மனது கந்து
தேசி எனும்பரி மீதேறி நாட்டம்
செய்தது அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 7

நந்தி கொலுவைத் தெரிந்தோர்கள் வாசி
நாட்டம் விடார்கள் ஒருக்காலும்
உந்திக் கமலத்தில் அந்தணன் பீடத்தை
உற்றறிந் துய்வாய் ஆனந்தப் பெண்ணே. 8

மாலுந் திருவும் வசித்திருக்கும் இடம்
வணங்கி இப்பால் செல்லும்போது
மேலும் உருத்திரன் ருத்திரி சேவையை
மேவியே காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 9

எந்தெந்தப் பூசை புரிந்தாலும் பரம்
ஏகம் என்றே கண்டு அறிந்தாலும்

சிந்தையும் அடங்கு உபாயம் சதாசிவன்
சீர்பாதம் அல்லோவா ஆனந்தப் பெண்ணே. 10

தானே தானாக நிறைந்து நின்ற சிவ
தற்பரம் ஆகிய உற்பணத்தை
நானே நான் என்று அறிந் துக்கொண்டு பர
நாட்டம் அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 11

வஞ்சப் பிறப்பும் இறப்புக்கு மேகு முன்
வாசனை என்றே அறிந்துகொண்டு
சஞ்சல மற்றுப்பி ராணாயஞ் செய்திடில்
தற்பர மாவாய் ஆனந்தப் பெண்ணே. 12

சரியை கிரியை கடந்தாலும் யோகம்
சாதித்து நின்றருள் பெற்றாலும்
உரிய ஞானவி சர்க்கம் இலாவிடில்
ஒன்றும் பயனின்று ஆனந்தப் பெண்ணே. 13

தன்னைஇன் னானெனத் தான்தெரிந்தால் பின்னும்
தற்பர னைப் பார்க்க வேணுமோதான்
அன்னையும் அப்பனும் போதித்த மந்திரம்
அறிந்தவன் ஞானி ஆனந்தப் பெண்ணே. 14

எண்சாண் உடம்பும் இதுதாண்டி எழில்
ஏற்கும் நவவாசல் உள்ளதடி
தண்மை அறிந்து நடப்போர்க்கு எட்டுத்
தலங்கள் தோணும் ஆனந்தப் பெண்ணே. 15

அஞ்சுபேர் கூடி அரசாள ஒரு
ஆனந்தக் கட்டடங்கட்டி வைத்த
செஞ்சிக் கோட்டையைக் கண்டிதுதானெனத்
தெரிந்துக் கொள்வாய் ஆனந்தப் பெண்ணே. 16

ஊத்தைச் சடலம் இதுதாண்டி நீ
உப்பிட்ட பாண்டம் இதுதாண்டி
பீத்தத் துருத்தி இதுதாண்டி நன்றாய்ப்
பேணித் தெளிவாய் ஆனந்தப் பெண்ணே. 17

ஆத்தாள் எந்தனைப் பெற்றுவிட்டாள் என்தன்
ஆப்பனும் என்னை வளர்த்துவிட்டார்
வேத்தாள் என்று நினையாமல் இதன்
விபரங் கேட்பாய் ஆனந்தப் பெண்ணே. 18

இந்தச் சடலம் பெரிதென எண்ணியான்
இருந்து வீண்காலந் தான்கழித்துச்
சொந்தச் சடலம் எதுவெனப் பார்த்திடில்
சுத்தமாய்க் காணோம் ஆனந்தப் பெண்ணே. 19

மணக்கோலம் கண்டு மகிழ்ந்த பெண் ணோடுபின்
மக்களைப் பெற்று வளர்த்து எடுத்துப்
பிணக்கோலம் ஆவது அறியாமல் வீணே
பிதற்றுவது ஏதுக்கு ஆனந்தப் பெண்ணே. 20

எல்லா பொருள்களும் எங்கிருந்து வந்த
என்றுநான் உற்றிதைப் பார்க்கையிலே
நல்லதோர் மண்ணினில் உற்பத்தி என்றுபின்
நன்றாய்த் தோணுதே ஆனந்தப் பெண்ணே 21

செத்தபின் கொண்டே சமாதிசெய்து அப்பால்
சிலநாள்கள் கழித்தந்த மண்ணெடுத்து
உய்த்தோர் பாண்டம் ஆகச் சுட்டுப்பின்
உலகோர்க்குதவு ஆனந்தப் பெண்ணே. 22

சகல பொருள்களும் மண்ணாய் இருப்பதைச்
சற்று நிதானித்துப் பார்க்கையிலே
பகவான் அங்கங்குளள் ளெண்ணெய்யைப் போலவே
பற்றி இருப்பார் ஆனந்தப் பெண்ணே. 23

மண்ணில் பிறந்தது அழிந்துவிடும் பார்த்து
வைத்த பொருளும் அழிந்துவிடும்
கண்ணினில் காண்பது அழிந்து விடுமென்று
கண்டறிந்து கொள் ஆனந்தப் பெண்ணே. 24

பெற்ற தாய் தந்தை சதமாமோ? உடல்
பிறப்புச் சுற்றஞ் சதமாமோ?

மற்றுஉள் ளோர்கள் சதமாமோ கொண்ட
மனைவி சதமாமோவாய் ஆனந்தப் பெண்ணே. 25

யாரார் இருந்துஞ் சதமலவே நம
ஆத்துமா கூடுவிட்டு போகும்போது
ஊரார் ஒருவர் சதமிலை என்பதை
உற்றுநீ காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 26

இந்த வழியைத் தெரிந்துகொண்டே இவ்
இகத்தும் பரத்துமாய் சித்தன் என்றே
சொந்தம தாகஎன் பாட்டன் போகரிஷி
சொல்லை அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 27

வழி தெரியாது அலைந்தோர்கள் இந்த
மாநிலந் தன்னில் கோடானகோடி
சுழிமுனை தன்னைத்தெரிந்து கொண்டால்பின்
சுகவழி கண்டோர் ஆனந்தப் பெண்ணே. 28

ஆசைஒ ழிந்தருள் ஞானம்கண்டு வீண்
ஆண்மையைத் தான்சுட் டறுத்து த்தள்ளி
பாசத்தை விட்டுநீ யோகத்தைச் செய்திந்தப்
பாரினில் வாழ்வாய் ஆனந்தப் பெண்ணே. 29

இரவைப் பகலாய் இருத்தித் தெரிந்து நீ
ஏக வெளியையும் கண்டறிந்த
விரைவாய் இந்த விதத்தெரிந்தால் இம்
மேதினி போற்றும் ஆனந்தப் பெண்ணே 30

பெற்றதாய் தந்தை இருந்தால் என் கொண்ட
பெண்டீர் பிள்ளை இருந்தால் என்
நற்தவஞ் செய்யாது இருக்கில் நமனுக்கு
நாம்சொந்தம் காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 31

தீர்த்தம் ஆடிக் குளித்தாலும் பல
தேவா லயம் சுற்றி வந்தாலும்
மூர்த்தி தரிசனஞ் செய்தாலும் நாலாம்
மோனம் உண் டோசொல் ஆனந்தப் பெண்ணே. 32

காடு மலைகள் அலைந்தாலும்
கன்மானுட் டானம் புரிந்தாலும்
ஓடுஞ்சித் தத்தை நிறுத்தார்க்குப் பர
உற்பனம் வாய்க்காது ஆனந்தப் பெண்ணே. 33

மாயா உலக மயக்கத்தையும் நல்ல
வஞ்சியர் மீதுற்ற மோகத்தையும்
தீயா மாந்தர் ஒருக்காலும் வீடு
சேருவது இல்லை ஆனந்தப் பெண்ணே. 34

நாலாவகைக் கலைகள் அறிந்தாலும்
ஞான வழிகள் தெரிந்தாலும்
மேலான மோனம் அறிந்தவரே துஞ்சா
வீடுறு வார்கள் ஆனந்தப் பெண்ணே. 35

சங்கிலி கண்டத்து அணிந்துகொண்டு நற்
தவயோகஞ் செய்துஅங்கு இருக்கையிலே
சங்கிலிச் சித்தனென்று என்பாட்டன் வந்து
சாற்றைத்தெரியும் ஆனந்தப் பெண்ணே. 36

## 23. சத்திய நாதர் என்ற ஞானச் சித்தர் பாடல் 35

நவநாத சித்தர்களுள் ஒருவரான சத்தியநாதரே ஞான சித்தராக, சித்தர் இலக்கியங்களில் குறிப்பிடப் பெறுகின்றார். 35 கண்ணிகள் கொண்ட இவரது ஞான சித்தர் பாடல் மனோண்மணி துதியாகக் காணப்படுவதால் இவர் சக்தி வழிபாட்டில் மனம் செலுத்தியவரென்பது புலனாகிறது.

நிலையில்லாப் பொய்க்கூட்டை நிச்சயங் கொண்டாசை
வலையிலகப் பட்டுழன்று வாடித்திரி கிறண்டி

என்ற கண்ணியில் உலக மாயையின் தத்துவம் விவரிக்கப் படுகின்றது. இந்த உடல் அழகானதா? அழியாததா? வலிமையானதா? இல்லையே. அப்படியிருக்க இதனை நித்தியமென்று கருதி என்னவெல்லாம் ஆட்டம் போடுகிறது? யாரை யாரையெல்லாம் மாய்த்துத் தள்ளுகிறது? கண்ணதாசன் சொல்வாரே, இன்றைக்கு செத்த பிணத்திற்காக நாளைக்கு சாகும் பிணங்கள் அழகின்றனவே என்று. அதுபோல மற்றவை அழிவில் அவரது அழிவும் உண்டு என்று ஏன் எண்ணிப் பார்க்க மறந்து விடுகின்றனர்.

நீரிற் குமிழியைப் போல் நில்லாமல் மறைந்து விடுகின்ற இந்த உடம்பினை ஒருகாலத்தில் மெய்யென்று எண்ணியிருந்தேன். பிறகு ஒருநாள் தீர விசாரிக்கையில் அஃது பொய்யென்று உணர்ந்து கொண்டேன். அடடா, நான்

எத்தனை பெரிய அறிவீலி என்று என்னை நானே நொந்து கொள்கிறேன் என்று 19வது கண்ணியில் வருந்துகின்றார்.

இந்த ஞான சித்தர் மனோண்மணி அம்பிகையை வழிபட்டபின் உண்மை ஞானம் கைவரப் பெற்றவராய் மாறியதைத் தம் கண்ணியில் தெளிவாக்குகின்றார்.

தாயே பகவதியே தற்பரையே அற்புதமே
நேயமுடன் ஞான நெறியையறி விப்பாயே

என்று வேண்டியதற்கு அவள் அருள் புரிந்தமையை

சத்ததிதி னுள்ளே சதாசிவத்தைத் தானறிய
உத்தமியே நின்னருளென் றோர்த்தறிந்து கொண்டேண்டி

என்று உண்மை நிலையை உணர்ந்து கொண்டமையை உணர்த்துகின்றார் ஞான சித்தர்.

## கண்ணிகள்

**ஆதி பராபரையே அம்பிகை மனோன்மணியே**
**சோதிச் சுடரொளியே சுத்த நிராமயமே.** 1

**தாயே பகவதியே தற்பரையே அற்புதமே**
**நேயமுடன் ஞான நெறியைஅறி விப்பாயே.** 2

**முடிநடுவும் மூலமுமாய் முச்சுடராய் முப்பொருளாய்**
**மடிவில்லா மெய்ஞ்ஞான மார்க்கத் தகோசரமாய்.** 3

**அஞ்ஞானக் காடு கடந் தாங்குவழி யேதொடர்ந்து**
**மெய்ஞ்ஞானங் காணநின்னை வேண்டிஅலைகிறண்டி** 4

**நிலையில்லாப் பொய்கூட்டை நிச்சயங் கொண்டாசை**
**வலையில் அகப் பட்டுஉழன்று வாடித் திரிகிறண்டி** 5

**தன்னைஅறி யாமல் தலமெட்டுங் காணாமல்**
**அன்னை அன்னை என்று அலறித் திரிகிறண்டி** 6

**தவநிலையில் தேறாமல் உன்னை உணராமல்**
**பவநிலையில் புக்கி அகப் பட்டுஉழன்று வாடுறண்டி.** 7

**பொல்லாக் கொலையும் புலைஅவா விட்டு உன்றன்**
**வல்லபதம் காண மயங்கித் திரிகிறண்டி.** 8

**துன்பமெல்லாம் போக்கிச் சுகானந்த மானநின்தாள்**
**இன்பம் அனுபவிக்க ஏங்கித் தவிக்கிறண்டி.** 9

**வஞ்சகம்பொய் சூதுகொலை மானார் மயக்கமெனும்**
**சஞ்சலதை நீங்கித் தனித்திருக்கத் தேடுறண்டி.** 10

**ஆசைப் பெருக்காறதில்வீழாது உன்பந்த**
**பூசைப் புரியப் புலம்பித் தவிக்கிறண்டி** 11

ஊணுறக்கம் இன்பதுன்பத் துஉற்றவினை யைஒழித்துக்
காணுதற்கு எட்டாப்பொருளைக் கண்டு மகிழ்ந்தனடி 12

பஞ்சபூதாதிப் பகுப்புகள்பொய் யென்றுணர்ந்துன்
செஞ்சரணக் கஞ்சம் அதைத் தேடி அலைகிறண்டி 13

ஆசை ஒழிந்தும் அருள்ஞானம் கண்டு அறிந்தும்
பேசத் தெரியாமல் பேய்போல் அலைகிறண்டி. 14

ஆங்காரம் விட்டு அருள்வெளியைக் கண்டு அடுத்து
நீங்காப்பே ரின்ப நிலையறித் தேடுறண்டி? 15

சருவம் பிரமம் எனத் தான்தெரியுந் தன்மை
மருமம் கா ணாமல் மயங்கித் திரிக்கிறண்டி. 16

ஐங்காயக் கோட்டை அதுமெய்யென்று உன்பாத
பங்கயம்போற் றாமல் பரிதவித்து நிற்குறண்டி. 17

பச்சைப்பாண் டத்தைப் போலநாள் இருக்குமென
நிச்சயமாய் எண்ணி நிலைதவறி வாடுறண்டி. 18

நீரிற் குமிழியைப்போல் நில்லா உடம்பினைவி
சாரிக்கப் பொய் என்றே தானறிந்து வாடுறண்டி. 19

நானென்ற கர்வம் நசித்ததனைச் சுட்டறுத்துத்
தான் என்ற அமிர்மந் தனைஅறிய வேண்டுறண்டி. 20

யோகந் தெரிந்ததன்றன் னுண்மை யறிவதற்குப்
பாகமுண ராமற் பதறி யலைகுறண்டி. 21

மவுனத்தை உச்சரித்து மந்திரபீ டத்தேறிக்
கெவுன மறிந்து கிலேசம்அதை விட்டேண்டி. 22

கற்பஞ்சாப் பிட்டே கனத்தவஞ் செய்ததினால்
விற்பனன் என்று பேர் விதித்தார் பெரியோர்கள் 23

காயசித்தி யோகசித்தி கண்டதனில் ஒண்டினதால்
மாயசித்தி யாலே மயங்காது இருக்கிறண்டி. 24

ஓமென்ற அக்கரத்தின் உட்பொருளைக் கண்டுவந்தும்
தாமென்ற ஆணவத்தால் தன்னை மறந்தேண்டி. 25

பிரணவமும் தானறிந்து பேச்சடங்கி நின்ற
சொருபந் தெரிந்தத் துலக்கத்தில் நிற்குறண்டி. 26

நந்தி கொலுவிருப்பை நான் அறிந்து கண்டுகொண்ட
சத்தி தெரிந்து தவியாது இருந்தண்டி. 27

அட்டகரு மம்தெரிந்தும் ஐவர் நிலை அறிந்தும்
இட்ட மதிற்சற்றும் இல்லாது இருக்குறண்டி. 28

நானென்னும் ஆணவங்கள் அணுகாது நான் எனலும்
தான் எனலும் அற்றுத் தனியே திரிகுறண்டி. 29

எட்டாச் சுழிமுனையி லேயிருந்து என்மனதுக்கு
எட்டாப் பொருளதனை எட்டிப் பிடித்தேண்டி. 30

சாகாக்கால் இன்னதெனத் தானறிந்து கொண்டதன் பின்
வேகாத் தலையும் விரைவில் அறிந்தேண்டி. 31

மோகாந்த காமெனும் மோகம் தவிர்ந்தன்பின்
வேகாத் தலையும் விரைவில் அறிந்தேண்டி. 32

சரியைகிரி யையோகந் தாண்டியபின் ஞான
புரிக்கோட்டைக் குள்ளே புகுந்து திரிகுறண்டி. 33

மந்திரமுந் தந்திரமும் மாய விசர்க்கமெலாம்
உந்திரம் என்று எண்ணி உறுதியது கொண்டேண்டி. 34

சத்தத்தின் உள்ளே சதாசிவத்தைத் தானறிய
உத்தமியே நின்னுரு என்று ஓர்ந்தறிந்து கொண்டேண்டி. 35

## 24. திரிகோணச் சித்தர் பாடல்

திரிகோணச் சித்தரின் உண்மையான பெயர் தெரியவில்லை. இவர் யாழ்ப்பாணத் தமிழ்ச் சித்தர் என்பாரும் உளர். வேறு பல சித்தர்கள் இசையையும் எண்ணத்தையும் இணைக்கும்போது இவர் கலிவெண்பா யாப்பில் உயர்ந்த சிறந்த எண்ணங்களைப் பாவில் இணைப்பதால் இவர் யாழ்ப்பாணத்தவர் என்பதற்கு ஒரு சான்றாகும்.

காரணம் ஈழத் தமிழ்நாடு போராட்டம் தொடங்குவதற்கு முன் வரையிலும் ஈழத்தமிழ் நாட்டில் பார்ப்பனர் பெரிதும் இல்லையாதலால் யாப்பின் மரபு அறாமல் நூல்கள் இங்கு எழுந்து வந்தன. வாழ்கின்றன. எனவே இம் முடிவு, இவர் 92 கண்ணிகளில் யோகம், ஞானம் பற்றி அனைத்தையும் சீர்திருத்தச் சிந்தனையோடும், பகுத்தறிவுப் பாங்கோடும் அணுகும் முறை மிகமிக மேலானதாக உள்ளது. இவர் காலம் 17ஆம் நூற்றாண்டின் முற்காலப் பகுதியாக இருக்கலாம்.

### கலிவெண்பா

**சிவனே பரமகுரு தேசிகனே பாதம்**
**அவனே அனுதினமும் ஆகும் நவநீத** 1

**பொன்பூத்த நீலப் புயல்வண்ண னும் பொறிவாய்**
**மின்பூத்த நான்முகனும் வேதாவும் தென்பூத்த** 2

**செக்கச் சடையானும் தேசுபெற வேயுருவாய்**
**ஒக்கத் தனிவந்து உதித்தபிரான் தர்க்கமிடும்** 3

**வேதமுஞ் சாத்திரமும் வேண்டும் பலசமயம்**
**பேதமும் காணாப் பெருஞ்சமயம் நாதத்தில்** 4

**ஓசை அடங்க ஒளியம் பரமனையில்**
**ஆசை அடங்க அனுபவிப்போன் பூசைபுரி** 5

**தொண்டர் இதயச் சுனைமடலில் வேரூன்றி**
**விண்ட நறைக்கமல மெல்லடியான் எண்டிக்கும்** 6

**சாதியான் தோன்றும் சமரச மாயிருந்து**
**பேதியான் வஞ்சம் இலாப் பேதமையான் ஆதி** 7

முதலாய் நடுவாய் முடிவாய் முடிந்து
சிதலாய் வெளியொளியாஞ் சென்மம் சதகோடி 8

சத்தியும் மந்திரமும் தானாகப் பாவித்து
முத்தி கொடுக்கும் முழுமுதல்வன் சுத்திய 9

செஞ்சடையான் யோகநிலை தேர்ந்து தனைக்குறியார்
நெஞ்சடையான் பிஞ்சு நிலாச்சுடையான் நஞ்சார்ந்த 10

கண்டத்தான் தேடரிய காட்சியான் பல்கோடி
அண்டத்தான் சோதி அருவுருவான் முண்டகச்செம் 11

போதம் கடலும் பொருப்பும் விருப்பாகிச்
சூதுபுரி மூன்று தொழிலுடையோன் ஓதும் 12

சரியை கிரியை தவயோக ஞானம்
தெரிய அமைத்த சிவசித்தன் துரியத்தில் 13

தோத்தி அணுவாய்த் துகழாய்ச் சுடரொளியாய்த்
தேத்தியுரு வாகவந்து சென்மிப்போன் சாத்தரிய 14

முக்குணமும் ஐம்பொறியும் மும்மலமு முண்டாகி
எக்குணமுந் தானாய் இருந்தருள்வோன் அக்கரமாம் 15

அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோ அட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய் எங்கும் பிரணவமாய்க் கொஞ்சப் 16

பொருளாய் மருளாய்ப் புரையாய் உரையாய்
அருளாய்ந் தனியிருந்த ஆனந்தன் இருளாத 17

காட்சியான் கண்டவர்க்குக் காணாத பேர்க்குருவும்
சூட்சியாய் நின்ற தொழிலாளி ஆட்சி 18

இடைபிங் கலைசுழியினை எட்டாமல் மூலக்
கடையில் நடக்கும் கடலுடையோன் விடையேறும் 19

பாசன் குடிலைப் பராசத்தி வீட்டிலுறை
ஏகன் பிறப்புறப்பு ஒன்று இல்லாதான் யோகன் 20

சிறியன் பெரியன் சிவப்பன் கறுப்பன்
குறியன் நெடியன் எனக் கூறாதான் பொறிகலந்த 21

பாசத்தான் பாசக் கட்டை அறுத்தவர்க்கு
மாசத்தான் சோதிமணி மண்டத்தான் நேசத்தான் 22

பொய்யர்க்குப் பொய்யன் பொருந்தி யுளந்தோறும்
மெய்யர்க்கு மெய்யாய் வெளிநின்றோன் ஐயன் 23

உருவும் அருவும் ஒளியும் வெளியும்
கருவும் கடந்த கன மாயன் குருவாகித் 24

தோத்திப் பழவடியார் சூழ்வினையை நீக்கியுரு
மாத்தித் தனது வசம் ஆக்கியே சாத்தரிய 25

மானிடச் சட்டை வடிவெடுத்த மாயோகி
யானிடப முந்தும் அருள் ஆனந்தன் தேனடர்ந்த 26

செங்கமலத் தோற்கரிய தேவன் அடியவர்கள்
அங்கலமத் தேயுறையும் ஆனந்தன் எங்கள் குரு 27

நேசிக்கும் அன்பர்துயர் நீக்கி நிலைபெறவே
யாசிக்கு மெங்கள்குரு ஆனந்தன் பூசிக்கும் 28

பொன்மலைக்கும் வெள்ளிப் பொருப்புக்கும் பொற்புடைய
கன்மலைக்குந் தானே கடவுளாய் பன்மலைக்கும் 29

எட்டாய்ச் சிகரம் எழுத்துக் கொழுந்தோட
மட்டான ஓங்கார வன்மலையான் கட்டாகத் 30

தேடும் அடியார்கள் சின்னம் துகளறவே
ஆடுஞ் சிவகருணை ஆற்றினான் நாடுதவம் 31

பண்ணும் அடியார் பழவினைபோய்ப் பாதமலர்
நண்ணும் மொழியிற் பேரின்பம் நாட்டினான் எண்ணும்நிறை 32

கற்புடையான் என்னக் கலங்காத நெஞ்சுகொண்ட
பொற்புடைய காயா புரிநகரான் அற்பவிசை 33

வண்டு தொடாமல் மதுஒழுகி வாய்ந்தாறைக்
கொண்டு மணத்த குண்மலையான் துண்டத் 34

துரமே கரமாய் ஒருநாளும் ஓயாச்
சரமே முழங்கும் தவத்தோன் கரமெடுக்கும் 35

தொண்டர் பலபகையைச் சூறைகொள வேணும் எனக்
கொண்டதவ வேடக் கொடியினான் சண்டமிகும் 37

சமையப் பகைதுடைத்துச் சாதிமுறை எல்லாம்
குமைய மிதித்துக் குளப்பி அமையாத 38

ஆணவத்தை வேரோடு அறுத்து விழுத்தாட்டி
நாணமுற்ற பாகம் நறுக்கியே காணத் 39

துடர்ந்த கிளைநிகழச் சூரைபட வீசி
அடர்ந்தமக வாகைக்கு அடங்காப் படர்ந்ததெரு 40

வீதியும் அம்பலமும் மிக்கதொரு சாதிகட்குப்
பூதிப் பொடி அணிந்து பொய்மிதித்துக் காதிச் 41

சினக்குறும்பை வாரிச் சிதறித் திரட்டி
மனக்குறும்பைப் பற்றி வனைத்து உனக்கென்கென் 42

ஓது குறும்பை உழக்கி எமராசன்
தூதனைப் பாய்ந்து துரத்தியே தாதுசெறி 43

அஞ்ஞான மோகம் அறுக்கு அனுபோக
மெய்ஞ்ஞான மோனமத வேளத்தான் பைநாகம் 44

நெட்டுடலை மாறி நெருக்கிப் பரிபடுத்திக்
கட்டும் இசைக்கும் கடிவாளந் தொட்டுத் 45

திசைவாயு என்னுஞ் சின்னூல் அகப்பட்டுக்
குசையால் இறுக்கிக் குணப்படுத்தி அசையா 46

மனம் என்னுங் கல்லணையை வைத்திறுக்கி வாய்ந்த
சினமென்னும் அங்கவடி சேர்த்துக் கனமான 47

நாகபந்தஞ் சாரி நடைதுலுக்குத் தூவான
மாகமுற விட்டுள் ளடக்கியே சோகப் 48

புரியட்ட காயப் பொருப்பைத் தகர்த்துச்
சரியுட்ட ஐம்பொறியைத் தாண்டித் துரியத்தில் 49

ஓடிவிந்து நாதமெனும் உட்கோட்டை யும்கூத்து
வாடியிடும் நாடி வரம்பு அழித்து ஆடியிடும் 50

தொண்டுபுரி அன்பர் தொடநரகில் வீழாமல்
மண்டுசினம் கொண்டெழுந்த வாசியான் கண்டுதொழும் 51

தன்னாணை தானே தனக்காணை யாவதன்றிப்
பின்னாணை இல்லாத பெற்றியான் எந்நாளும் 52

மாறாத கீர்த்திமது மாலையான் வாய்திறந்து
சீறாத மோனச் சிவயோகி நேராக 53

ஆண்டகுரு சிற்றம் பலவன் அடிஅருளும்
வேண்டி வளர்த்த இருபதத்தான் பூண்டசிவ 54

வேடத்தான் ஓங்கி விளங்கும் செழுங்கமல
பீடத்தான் ஞானப் பிரகாசன் ஆடில் 55

பரியான் உரியான் பசியான் பொசியான்
பெரியான் அரியான்பேர் இல்லான் துரியா 56

தீதம் கடந்து திகழும் பரங்கடந்து
போதம் கடந்துநின்ற பொற்பதத்தான் சீதம் 57

கருணை ஆனந்தமுனி கண்டுதொழ வந்த
வருணன் ஆனந்த மழைமேகம் அருணப் 58

பிரகாசம் கொண்டுநின்ற பேரொளிபோல் மாயைப்
பிரகாசம் மாற்றும் பெருமையான் இறவாத 59

மெய்ப்பொருளைக் காட்டி விரும்பும் அடியாரைக்
கைபொருளாய்க் கொண்ட கருணையான் துய்க்கும் 60

உடல்பொருள் ஆவி யுதகத்தாற் கொண்டு
சடவினையை மாற்றும் சமனன் இடைபிங் 61

கலைசுழினைக்கு எட்டாத காட்சியான் காமம்
கொலை களவு தீர்த்தகு டோரி அலையாமல் 62

ஆட்கொண்ட சித்தம் பலவ அடிக்கமலத்
தாட்கொண்ட தொண்டர்தனக்கு அடியேன் ஆட்கொண்ட 63

தூர்த்தன் இவ னென்பர் சொல்லத் துயருழைந்து
பார்த்தவிடம் எல்லாம் பகையாகி வேர்த்துக் 64

கலங்கி விதிவிதித்துக் கண்ணீர்ஒழுக
மலங்கிக் குருநாட்டில் வந்தேன் துலங்குமெனக் 65

காயா புரிநகரைக் கண்ணுற்றேன் அவ் ஊரில்
போய் ஆதரித்துப் பொருந்தினேன் மாயாத 66

மாது சிவானந்த வல்லி எனப் பேரிட்டாள்
ஓதுதிரி கோணவல்லி யூதார் ஆதரவாய் 67

கொஞ்சி வளர்த்த குடிலை மகள்தனையே
மிஞ்சுசிலம் பத்தொழிற்கு விட்டாளே ரஞ்சிதமாய் 68

கால்மாறி யாடக் கலாதி கரணவித
மேல்மாறிச் சுத்தி விளையாட நூல்மாறிக் 69

கைலாகு பாயக் கலந்து பலசமய
மெய்லாகு தாவிஅதன் மேல்மிதிக்கப் பையப் 70

பரதத் தொழிலும் பலகோடி வேத
கரதத் தொழிலும் தொகுத்து விரதவுரை 71

தென்னூல் வடநூலைத் தேர்ந்து பலகோடி
முந்நூனூறுந் தானே மொழிந்திட்டாள் இந்நிலத்தில் 72

ஆடப் பதுமைதனை ஆட்டிவிக்க அப்பதுமை
பாடத் தொழிலும் பலகற்றாள் நாடறிந்த 73

வம்பி திரிகோண வல்லி வடகிரியைக்
கெம்பீரம் எல்லாங் கிரிகித்தேன் அம்புவியில் 74

மின்னே எரிந்தெழுந்த மேகம்போல் மெய்குளிர்ந்து
தன்னை அறிந்த தளதளத்தாள். பொன்னனையாள் 75

பக்குவத்தை நோக்கிமுகம் பார்த்துப் பரிமளிக்க
முக்குணமும் கற்ற முதுகிழவி தொக்கறுத்து 76

மின்னே அமுதம் விளைந்த மனக்கமலப்
பொன்னே உறுதியுள்ள புத்திகேள் பன்னரிய 77

வேத புராணர் வெறும்பிலுக்காய் உன்கமலப்
பாதம் பணிவர்முகம் பாராதே நாதத் 78

துரியமணி வாசலிலே தோன்றிமுகம் சத்தே
தெரியநின்று பின்னை உள்ளே சென்று அரிதாகச் 79

சாற்றுஞ் சரியைச் சளுக்கர் உனைத்தழுவப்
போற்றுவார் அங்கவர்பின் போகாதே ஏற்றும் 80

அவலக் கிரியை அசடர் உருனை மேவக்
கவலைப் படுவார் கடத்திச் சிவயோக 81

ஆதியர்கள் வந்துன் மலரடியைத் தெண்டனிட்டால்
பேதியாது உள்ளழைத்துப் பேசிக்கொள் ஆதி 82

தவஞான மோனத் தனக்காரர் வந்தால்
அவமானம் பண்ணாது அழைத்துச் சிவபொருளைத் 83

தேடாத மூடரிடம் சிக்காதே சிந்தையிலே
நாடாத வஞ்சரிடம் நத்தாதே கோடாத 84

சாத்திரத் தூரித்தர்தமைச் சாராதே தக்கமிடும்
கோத்திரப் பஞ்சியளைக் கூடாதே சூத்திரப் 85

பொய்வீணர் ஆசை பொருந்தாதே புத்தகப்பேய்
மெய்வீணர் ஆசை விரும்பாதே கையோகக் 86

காமத்துக்கு ஆன கலாதிவேள் நூல்கற்ற
வாமத்தார் பால்மனது வையாதே நாமமிட்டுப் 87

பஞ்சரிக்கும் பாசிப் பதப்பிலுக்கர் வந்தக்கால்
நெஞ்செரியத் தள்ளிவிடு நில்லாமல் 88

சித்தக் கெருவியிடம் செல்லாதே சீலமதக்
கொத்தவன்தன் னாசை குறியாதே பற்றற்ற 89

மோனக் குறும்பரசர் மோகித்தால் நீஅவருக்கு
ஆன படியே அழைத்துவிடு ஞானப் 90

பொருள்தேடும் வல்லாரைப் போற்றிப் பொருந்தி
அருளோடு நீசென்றிடு 91

## 25. மச்சேந்திர நாதர் என்ற நொண்டிச் சித்தர் பாடல்

நொண்டிச் சித்தரின் உண்மைப் பெயர் தெரியவில்லை. ஊரும் தெரியவில்லை. காலமும் தெளிவாகப் புலப்பட வில்லை. சங்க காலத்தில் ஐயூர் முடவனார் போல் இவரும் கால் ஊனம் உற்றவர் போலும். எனவே காரணப் பெயராகவே நொண்டிச் சித்தர் என்று அழைத்தனர் போலும். ஆனால் பாடல்கள் எவையும் கால் முறிந்த சிந்தனையாகத் தெரியவில்லை. எல்லாம் முழு நிறை மாந்த வடிவத்தின் நெடிய சிந்தனையையே கொடுமுடியாய்க் கொண்டுள்ளன.

நொண்டிச் சித்தர் சக்தி உபாசகர். தம் பாட்டிலேயே தாம் நொண்டி என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

ஆங்காரமும் ஒழிந்தேன் - உண்மைநிலை
அறிந்திடும் நொண்டி எனச் சிறந்திழித்தேன்
பாங்காம் நிலை தெரிந்தேன் - குரு சொன்ன
பரபிரம்ம சொரூபத்தின் தெளிவறிந்தேன்

என்கிறார்.

சக்தி வழிபாட்டிற்கே உரிய நெறிமுறைகள், வழி முறைகள் இவர் பாடல்களில் பாலும் நிறமும் போலப் பிணைந்துள்ளன. இவர் திருமூலரின் சக்தி வழிபாட்டிலும், நந்தீசர் என்ற சித்தரின் நெறியிலும் செல்பவர் என்பது இவர் பாடல்களில் அங்கும் இங்குமாகப் பற்பல குறிப்புகளால் காணப்படுகின்றன.

தாம் சித்தர்கள் வழிவந்தவர் என்பதையும், இவர் மிக மிகப் பிற்காலத்தவர் என்பதையும் தம் பாடலில் தெரிவிக்கின்றார்.

கவன குளிகை கொண்டு - அதனாலே
ககன மார்க்கம் தனிலே அகனமாய் சென்று
தவமொருமா சித்தர்கள் வாழ்கின்ற
சதுர கிரிக்குப் போய் குதூகளித்தேன்.

என்றும், மேலும்

தன்னையும்தான் உணர்ந்தேன் - எட்டுத்
 தலங்கலும் ஒன்பது வாசல் உணர்ந்தேன்
பின்னுக் அக் கதவடைத்தேன் - மேலாம்
 பெருவழி ஊடுசென்று திருவடைந்தேன்

என்கிறார். இனி, அவர் பாடிய பாடல்களைப் பார்ப்போம்.

## நொண்டிச் சிந்து

**ஆதி பராபரையாள் சிவசத்தி**
**அம்பிகையின் பாதமதைக் கும்பிட்டு நித்தம்**
**கோதிலாச் சுடரொளியில் திரிகோணக்**
**குஞ்சரத்தின் பாதமலர் தஞ்சமாய்க் கொண்டு** 1

**திருமூலர் காலாங்கி போகர்**
**தென்பொதிகைக் குருமுனி தன்வந்திரியர்**
**கருவூரார் இடைக்காடர் அத்திரி**
**கலைக்கோடார் மச்சமுனி புலத்தியரே.** 2

**சுந்தரா னந்தர் கபிலர் கொங்கணர்**
**சூதமுனி கோசிகர் வேதமுனிவர்**
**நந்தீசர் சட்டைமுனிவர் தன்னை**
**நான்தொழு தேனடி தாள்பணிந்தேன்.** 3

**அஞ்சுபுலக் கதவறிந்து பிரம**
**மந்திரத்தின் உண்மைவழி விந்தை தெரிந்து**
**சஞ்சலந் தனைப்பிரிந்து சித்தாதிகள்**
**தாள்பணிந் தேன் நான் துணிந்தே.** 4

**சரியையுங் கிரியையும் விட்டு அப்பாற்**
**சாதனாமா யோகமதின் பாதம் அதைத்தொட**
**உரியா தீதம்வெளிப்பட் டங்கு**
**சும்மாயிருந் ததைச்சொல்ல எம்மாலாகுமோ.** 5

**பராபர வெளிகைக்கொண்டு மனம்ஒன்றிப்**
**பற்றிடவே சிற்பரத்தின் உற்பனங் கண்டு**
**நிராதர மான பண்டு**
**நீங்கா ஆனந்தரசம் பாங்கதாய் உண்டு.** 6

**அடிநடு முடிவு கண்டேன் மோனநிலை**
**அறிந்து கொண்டேன் ஞானந் தெரிந்துகொண்டேன்** 7

முடிவில்லாப் பரப்பிரம சொரூபத்தை
முற்றும் கண்டேன் இகப்பற்றும் விண்டேன்.

சுத்தப் பரவெளியே ஒளியாகத்
தோன்றிட மெய்ஞ்ஞானச் சுகமடைந்தேன்
சத்துச்சித் தானந்தத்தைத் தெரிசிக்கச்
சகலமும் பிரமமயம் புகலரிதே. 8

நாசிமுனை நடுவில் விளங்கிய
நயனத்திடை ஒளியாம் பரவெளியில்
தேசிகன்திருக் கூத்தை
தெரிசித்தே மோனநிலை பரிசமுத்தே. 9

நினைவே கனவெனவும் தெளிந்தந்த
நினைவையும் மறந்தெழு கலைமறந்தே
தனதெனும் தனைமறந்தே சுத்த
சாகரத்தில் உழலாத பாகந் துறந்தே. 10

ஓமென்ற பிரணவத்தை இன்னதென
உண்மைகண்ட பின்புவெகு நன்மையும் பெற்றேன்
நாமெனும் அகங்காரந் தனைவிட்டு
நாட்டந் தெரிந்து கொண்டேன் தேட்டமுடனே 11

ஆசையை விட்டுஒளிந்து விரிந்தோடும்
ஐம்புலனைத் தான் அறுக்குந் தெம்பை அளித்துப்
பாசந் தனைக்கடந்து குருசொல்
படிதவ றாமல்அப் படிநடந்து. 12

கவனக் குளிகை கொண்டு அதனாலே
ககனமார்க்கந் தனிலே அகனமாய்ச்சென்று
தவமுறு மா சித்தர்கள் வாழ்கின்ற
சதுரகிரிக்குப் போய் குதூகலித்தேன். 13

தவசுப் பாரையின்மேல் இருக்கிற
சாமிபர ஞானநவ சித்தருடனே
சிவசொரூ பம்தெரிந்தேன் மனதினில்
தீபவொளி கண்டபின்பு ஆவலும் விண்டேன். 14

மூலாதாரந் தெரிந்தேன் தெரிந்ததந்த
முச்சுடரின் தீபவொளி கண்டுமகிழ்ந்தேன் 15

நாலா கலையறிந்தேன் என்பாட்டன்
நந்தீசர் கிருபையால் சந்தோடம் கொண்டேன்.

யோகாம் அனுபவமறிந்தே மணிபூரகம்
உத்தமர்க்குச் சித்தியென மெத்தவுங் கண்டேன்
சாகா திருந்திடவே விசுத்திநிலை
தன்னில் இருந் தன்னிலையே நன்னிலையதாய். 16

கண்டதே அங்கு நின்றேன் சிவசத்தி
கற்பனையது தென்றுமகிழ்ந் தப்புறஞ்சென்றேன்.
பண்டுஅன்னைஉமையகட்கு அருளிய
பாதைகண்டு ரசபான போதையும் உண்டேன். 17

ஆரும் அறிய ஒண்ணாப் பூரணத்து
ஆச்சரியங் கண்டபின்பு பேச்சடங்கினேன்.
சீருஞ் சிறப்பும் மிக்க மனோன்மணி
தேவிஅருளால் அறிந்து மேவிக்கொண்டேன். 18

காமியங் கடந்தவிடம் தினந்தினம்
கண்டறிந்து கொண்டேன்முனி அண்டர்புகழும்

வாமியிவள் எனப்பேர் நன்றாக
வாங்கிக் கொண்டேன்பரத் தோங்கிக் கொண்டேன். 19

நாதாந்த மோனமெனும் நிலைகண்டு
நானிருந்தேன் உறக்கமுனு மற்றேன்.
வேதாந்த வழியறிந்தேன் அஞ்ஞான
வீட்டைக் கடந்துமேலாம் வீட்டையுங்கண்டேன். 20

சாத்திரம் பலபடித்தேன் பொல்லாச்
சண்டாளர் சவகாசந் தன்னை மறந்தேன்
பாத்திரம் அறிந்து கொண்டேன் அவருடன்
பத்தியொடு சேர்க்கைசெய்து முத்தியைக்கண்டேன். 21

உப்பிட்ட பாண்டமிது வந்தவழி வந்தவழி
உண்மைதெரி யாதமாந்தர் நன்மையீதென்று
செப்புக் குயமானார் ஆசைகொண்டு
தேசமதிலே அலைந்து பாசத்து உழல்வார். 22

நிலையிலாப் பொய்க்கூடு இத்தேகம்
நிச்சயம தற்றதென் அச்சமதோடு 23

மலைகுகை தனில் ஏகி சிவஞான
மார்க்கம் தெரிந்ததின் நேர்க்கையாகி.

ஆங்காரமும் ஒழித்தேன் உண்மைநிலை
அறிந்திடும் நொண்டியெனச் சிறந்திழித்தேன்
பாங்காம் நிலைதெரிந்தேன் குருசொன்ன
பரப்பிரம சொரூபத்தின் தெளிவறிந்தேன். 24

தன்னையும் தானுணர்ந்தேன் எட்டுத்
தலங்களும் ஒன்பது வாசல் உணர்ந்தேன்
பின்னுமக் கதவடைந்தேன் மேலாம்
பெருவழி .ஊடுசென்று திருவடைந்தேன். 25

மாதா மனோன்மணியாள் பீடமதில்
மணிச்சத்தத் தொனியது கணகணன
நாதகீ தங்கேட்டுச் சிவதிரு
நடனக்கண் காட்சியை உடனே கண்டேன். 26

மந்திரந் தனைத் தெரிந்தேன் ஓங்கார
வட்டமதைத் திட்டமதாஎட்டிஅறிந்தேன்
இந்திர பீடம்முணர்ந்தேன் மோனநிலை
இன்னதென்று கண்டுமனம் நன்னயங்கொண்டேன். 27

அழியாப் பொருளிதுதான் என்றுதொழுது
அகமகிழ்ந்தேன் ஞானச் சுகமடைந்தேன்
வழியாய் உணர்ந்தவர்க்கு மோட்சநிலை
வாய்க்குமென்று பேய்க்குணத்தைப் போக்கிப்புகழ்ந்தேன். 28

வேத முடிவுணர்ந்தேன் எங்கும்
விளங்கும் பொருளைக்கொண்டு உளங்குளிர்ந்தேன்
நாத வெளியில் உற்றேன் இந்த
நானிலத்தோர் புகழவே ஞானிபேர் பெற்றேன். 29

வெட்ட வெளிதானே யாமிது
வென்றறிந்துக் கொண்டவர்வே றொன்றையுமுன்னார்
பட்டப் பகலதனை இருளாகப்
பார்த்தவருக்குக் காணஞான நேத்திரமுண்டோ? 30

மூல முதலி மொள்ளே என்றுமுன்னாள்
மொழிந்தார் நமதுகுரு மூலரன்றே 31

சாலவே மறைநான்கும் சொன்னதோர்
  சங்கைதெளிந் தானந்தம் பொங்கித் ததும்ப.

தான் நான் என அற்று குருவருள்
  தன்னைமற வாமல் என்னை என்னாலறிந்தேன்
ஊனுடல் அழியாமல் நிட்டைதனில்
  உற்றவிழி துயிலாத பெற்றிலிருந்தேன். 32

ஒருபொருள் விரிவாலே கண்டறிந்த
  உற்பனமெல் லாம்விழலாங் கற்பனையென்றே
அறிவால் அறிந்து கொண்டு சிதம்பரத்து
  ஆடல்கண்டு ஆனந்தப் பாடல் விண்டேன். 33

## 26. ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர் பாடல்

இவர் பிற்கால அகத்தியரின் மாணாக்கர் என்று கருதப்படுகிறார். அகத்தியர் பலர். அவருள் எந்த அகத்தியரின் மாணாக்கர் இவர் என்று அறிய முடியவில்லை. ஆனால், இவருடைய இயற்பெயர் 'ஏகநாதர்' என்று தெரிகிறது.

இவர் தொண்டை மண்டலத்தைச் சார்ந்த காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இவர் தம் பாடல்களில் ஆதி சிவனை மெய்ப்பொருள் என்றும், பூரணம் என்றும், காலையும் மாலையும் கண்டது கொண்டு கற்பூர தீபமுடன் மாதொரு பாகனைத் தொழவேண்டும் என்கிறார்.

இவர் பாடல்களில் ஞானமும் யோகமும் பெரிதும் பேசப்படுகின்றன. 34 கண்ணிகள் கொண்ட பாடல்கள் எண்ணி எண்ணி மகிழத்தக்கன.

**காரண மான கணபதி**
**சற்குரு கர்த்தனுங் காப்பாமே**
**நாரணன் நான்முகன் நல்ல**
**குருமுனி நாதனுங் காப்பாமே. 1**

**முன்கலை யான முடிவான**
**சோதியின் முற்றிலும் தானறிந்தே**
**பின்கலை யான பிரமாண்ட**
**சோதியைப்பேணித் துதிப்பேனே. 2**

**புத்தியும் வித்தையுந் தந்தருள்**
**பாதனைப் போத மயமாக்கி**
**சித்தியும் பத்தியும் கண்டந்த**
**நாதனைத் தேகல யத்துள்வைத்து. 3**

**சித்தம் பலத்திலச் சிதம்பர**
**வித்தையைத் தேறித் தெளிந்தேதான்**
**சத்தம் பிறந்திட வாசி**
**அறிந்து தானும் நடந்தேனே. 4**

**நத்தும் உலகத்தோர் சித்தை**
**அறிந்திட நல்ல ததியெனவே 5**

தத்துவ மான எழுத்தஞ்சு
  னாலேதான்வரை கீறினனே.

அங்கி பொருந்தின வீட்டுக்கோர்
  அஞ்சு அஞ்சுக்கும் அஞ்சாக
தங்கி இருந்திடு மந்திர
  விஞ்சையைத் தான்கண்டு பேறும்பெற்றேன். 6

அங்கங்கே மாறினால் அட்டகர்
  மத்தொழில் ஆடும் இதுதானும்
சங்கை யுடனே துகையைப்
  பெருக்கித் தான்வரை கீறிடுவாய். 7

தானாயிருக்கும் பிரமத்தின்
  தன்செயல் தன்னை அறிந்தாக்கால்
வானாகி நின்று மறைபொருள்
  ஆனதை வாய்கொண்டு சொல்லுவாரோ? 8

அருவு முருவும் திருவும்
  பலவுமாய் ஆதிசி தம்பரத்தைக்
கருவும் குருவும் கண்டறிந்
  தோர்கள் கையா லெழுதுவரோ? 9

தானந்த மான தத்துவங்
  கண்டோர்கள் தானேதா னெவ்வுயிர்க்கும்

ஆனந்த மாகி யறிவை
  அறிந்தவர் அட்சரம் தானறிவார். 10

ஏக வெளியில் இருக்கின்ற
  சக்கரம் ஏது மறியார்கள்
சாகாக்கால் என்றும் வேகாத்
  தலையையென்றும் தானே அறிவாரோ. 11

வாதங்கள் செய்வது வேறொன்றும்
  இல்லை வாசி அறிந்தோர்க்கு
நாதம் பிறந்திடக் கண்டறிந்
  தோர்கள் நான் என்று சொல்லுவரோ? 12

யோகமும் ஞான முகந்து
  அறிந்தோர்கள் உண்மை அறிவார்கள் 13

தாகமும் பசியும் கோபமும்
வந்தவர் தாமும் அறிவாரோ?

தானென்ற தத்துவ மாயை
அறுத்தவர் தன்னை அறிந்தோர்கள்
ஊனென்ற ஊமை எழுத்தை
அறிந்தவர் உற்பனந் தானறிவார். 14

சூட்சாதி சூட்சங்கள் என்று
மௌனத்தின் சொல்லும் பொருளறிந்தால்
பேச்சோடே பேச்சாகப் பேசி
இருப்பரைப் பெரியோர் தாமறிவார். 15

பேசாது இருந்த மௌனங்கள்
என்பது பேசத் தெரிந்தோர்கள்
ஆசான் உரைத்த உபதேசம்
என்று அறிவுள்ளோர் தானறிவார். 16

வாதமும் ஞானமும் ஒன்றென்று
சொல்வதும் வையகத் தோர்அறிய
சூதகங் கெந்தியும் தாளகம்
வங்கமும் சொல்லும்நா தங்களல்லோ? 17

ஆடுஞ் சரக்கு அறுபத்தி
னாலும் அவரவர் தாமறிவார்
காடு மலையுஞ் செடியுஞ்
சரக்கென்பர் காணாதார் காணுவரோ? 18

தானே அறிவது சித்தி
இதுவென தத்துவந் தானறிந்தோர்
வீணே அலைந்து திரிந்துநம்
வேதத்தை விரும்பித் தேடுவரோ? 19

தங்க ளிடத்தில் இருக்கும்
பொருள்தனைத் தாங்களே தானறிந்தால்
எங்கே இருக்கு தெனச்சொல்லித்
தேடி ஏங்கி அலைவாரோ. 20

பண்டு பழுத்த கனியைப்
பொசிக்கப் பறிக்கப் பொருள் அறிந்தால் 21

உண்டு சுகித்து உடம்பை
  வளர்த்து உறங்கித் திறிவாரோ.

இத்தனை சித்தையும் கண்டு
  தெளிந்தவர் ஏது மறியார்போல்
பித்தனைப் போலவே வத்துவைத்
  தேடிப் பேசா திருப்பாரோ? 22

தாங்காமல் விட்ட குறையாளர்க்கு
  எய்திடும் தத்துவத் தைநினைக்க
பாங்கான ஐவரும் கட்டின
  வீட்டில் பரம சுகம்பெறுவார். 23

ஓங்காமல் ஓங்கும் பிரம
  சொரூபத்தின் உண்மை தனையறிந்தால்
நீங்காத செல்வம் நிலைபெற்ற
  மாதவம் நின்ற பொருளறிவார். 24

எங்கெங்கு பார்த்தாலும்
  எங்குங்குருநாதன் இருப்பிடந்தானறிந்தோர்

பங்கமாய் உள்ள பரம
  சுகத்தையே பார்த்துத் திரிவாரோ? 25

அற்பமாய் எண்ணியே கற்பங்கள்
  தேடி அலைவர் வெகுகோடி
சொற்பங்க ளல்ல சுருதி
  முடிவல்லோ சொன்னது கற்பங்கள்தான். 26

வாசம் பொருந்தும் சதுர
  கிரியின் மகத்துவங் கண்டோர்கள்
தேசங்கள் தோறுங் கற்பங்கள்
  தேடித் திரிவரோ தானறிந்தோர். 27

கண்டதை விண்டிலர் அண்டர்களானாலும்
  கருத்தைச் சொல்லார்கள்
விண்டிலர் கண்டிலர் வேணது
  சொல்லுவர் வேத முடிவறியார். 28

பாசம் பொருந்தும் கருநெல்லிவெண்சாரை
  பார்த்தோர்க்கு தான்தெரியும் 29

பேசப் படாதென்று சித்தர்கள்
  சொல்லுவர் பேசத் தெரியார்போல்.

நீந்தின செந்தூரம் நேரான
  பூரணம் நின்ற நிலையறிந்தால்
சாத்திரம் ஏதுக்குத் தானறி
  யாருக்குச் சகலமும் வேணுமென்பார். 30

வீட்டுக்குள் வாசலின் பூட்டுக்குள்
  பூட்டது வேணது உண்டுஇங்கே
பூட்டக்கமின்னதெனத்தெரிந்தோர் சாவி
  போட்டுத் திறந்திடுவார். 31

கண்டபேர் கொண்டதை விண்டுதான்
  பேசுவர் காரியா காரியமாய்
கண்டு மறிந்து மறியாதார்
  போலவே காணாதார் போலிருப்பர். 32

நித்திய பூசையும் நேமாநுட்
  டானமும் நேரான பூரணத்தைப்
புத்தியு டனறிந் தேயனு
  போகமாய் பூசைகள் செய்திடலாம். 33

காலையு மாலையுங் கண்டது
  கொண்டு கற்பூர தீபமுடன்
மாலை மனோன்மணி தாய்பதம்
  போற்றி வணங்கியே வாழ்ந்திடலாம். 34

## 27. புண்ணாக்குச் சித்தர் பாடல்

இவரைப் பிண்ணாக்கீசர் என்றும் குறிப்பிடுவர். பாம்பாட்டிச் சித்தரின் சீடரான இவர், கன்னடத்துக்காரர் எனப் போகர் குறிப்பிடுகின்றார். ஓர் ஆத்தி மரமே இவரின் வசிப்பிடமாக இருந்தது என்றும், தீவிர வைணவ பக்தர் என்றும் கூறுவர். இவருக்குப் பசி எடுத்தால் 'கோபாலா' என்று அழுவாராம். மற்றபடி மௌனம்தான். தாம் அடைக்கலமாயிருந்த ஆத்தி மரத்திலேயே சமாதியானதாகக் கூறப்படுகிறது. இவருக்குப் பிண்ணாக்கீசர் அல்லது புண்ணாக்குச் சித்தர் என்று பெயர் வந்ததற்கான காரணம் புலப்படவில்லை.

இவரது பாடல்கள் ஞானம்மா என்பவரை முன்னிறுத்திப்பாடப்பட்டவை. இவர் இப்படி முன்னிறுத்திய ஞானம்மா யாரென்பதைத் தம் முதல் பாட்டிலேயே தெரிவிக்கின்றார்.

'தேவி மனோன்மணியாள் திருப்பாதங்
காணவென்று தவித்திருந்தேனே'

என்று கூறுவதன் மூலம் மனோண்மணியம்மையை இவர் ஞானம்மா என்று குறிப்பிடுவது புலனாகிறது.

அஞ்ஞானத்தைக் கடந்து அறிவை மிகச் செலுத்தி மெய்ஞ்ஞானம் கண்டு கொண்டால் அதுதான் விலையில்லாத ரத்தினமாகும் என்று கூறுகின்றார்.

'காயமே இது பொய்யடா, வெறும் காற்றடைத்த பையடா' என்றும், 'ஊத்தைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி' என்றும் கூறும் சித்தர் வாக்கியத்தை,

"காத்தடைத்து வந்ததிது கசமாலப் பாண்டமிது ஞானம்மா
ஊத்தச் சடலமிது
உப்பிலாப் பொய்க்கூடு

இப்பாடல் 'கசமாலம்' என்ற சென்னைத் தமிழ் வழங்குவதிலிருந்து இவர் சென்னைப் பகுதியில் நடமாடிய பிற்காலச் சித்தராய் இருக்கலாமோ என்றும் எண்ணத் தோன்றுகிறது. அல்லது போகர் குறிப்பிடும் பிண்ணாக் கீசரிலும் இவர் மாறுபட்ட வேறு சித்தராய் இருத்தல் வேண்டும்.

20 கண்ணிகள் ஒரு பாடலும், 45 பாடல்களில் ஒரு முப்பூச் சுண்ணச் செயநீர் பாடலும் இவர் இயற்றியதாகக் காணப்படுகிறது. ஆயினும், இரண்டின் நடையையும் ஒப்புநோக்கக் கால வேறுபாடு தெள்ளெனப் புலப்படும்.

ஆகவே, முப்பூச் சுண்ணச் செயநீர் பாடிய புண்ணாக்குச் சித்தரும், மனோன்மணியாளைப் பாடிய புண்ணாக்குச் சித்தரும் வேறு வேறானவர் என்பது ஏற்பதற்குரியது. இப்பாடல் தொகுதி பிற்காலப் புண்ணாக்குச் சித்தருடையது.

**தேவிமனோன்மணியாள் திருப்பாதம் காணஎன்று**
**தாவித்திரந்தேனே - ஞானம்மா**
**சரணம் சரணம் என்றே.** 1

**அஞ்ஞானமும்கடந்து அறிவை மிகச்செலுத்தி**
**மெய்ஞ்ஞானம் கண்டுகொண்டால் - ஞானம்மா**
**விலையிலா ரத்தினமடி** 2

**முட்டையினுள்ளே முழுக்குஞ்சு இருப்பதுபோல்**
**சட்டையாம் தேகத்துள்ளே - ஞானம்மா**
**தானுயிரு நிற்பதடி.** 3

**விட்டகுறைவாராமல் மெய்ஞ்ஞானம் தேராமல்**
**தொட்டகுறை ஆனதினால் - ஞானம்மா**
**தோன்றுமெய்ஞ் ஞானமடி.** 4

**தம்முளம் அறியாமல் சரத்தைத்தெரியாமல்**
**சம்சாரம் மெய்யென்று - ஞானம்மா**
**சாகரத்திலே உழல்வார்.** 5

**இட்டர்க்கு உபதேசம் எந்நாளும் சொல்லிடலாம்**
**துட்டர்க்கு உபதேசம் - ஞானம்மா**
**சொன்னால் வருமோசம்.** 6

**முத்தி பெறுவதற்கும் முதலாய் நினைத்தவர்க்கும்**
**நித்திரையும்விட்டு - ஞானம்மா**
**நினைவோடு இருக்கணுமே.** 7

**நினைவைக் கனவாக நீயெண்ணியே பார்க்கில்**
**சினமாய்வரும் எமனும் - ஞானம்மா**
**தெண்டநிட்டுப் போவானே.** 8

**யோக விளக்கொளியால் உண்மை தெரியாமல்**
**மோகம் எனும் குழியில் - ஞானம்மா**
**மூழ்கியேபோவார்கள்.** 9

சாத்திரம் கற்றறியாத சாமியார் தானாகி
ஆத்திதேட நினைத்து - ஞானம்மா
அலைவார் வெகுகோடி. 10

பூச்சும்வெறும்பேச்சும் பூசையும் கைவீச்சும்
ஏச்சுக்கு இடந்தானே - ஞானம்மா
ஏதொன்றும் இல்லையடி. 11

கலத்தை அலங்கரித்துப் பெண்கள் தலைவிரித்து
கணக்கைத் தெரியாமல் - ஞானம்மா
கலங்கி அழுதாரடி. 12

மேளங்கள் போடுவதும் வெகுபேர்கள் கூடுவதும்
நாளை எண்ணாமலல்லோ - ஞானம்மா
நலிந்தே அழுவாரடி. 13

கோவணமும் இரவல் கொண்டதூலம் இரவல்
தேவமாதா இரவல் - ஞானம்மா
தெரியாதே அலைவாரே. 14

செத்தவரை மயானம் சேர்க்கும்வரையில் ஞானம்
உத்தமர்போலப் பேசி - ஞானம்மா
உலகில் திரிவாரடி. 15

காட்டில் இருந்தாலுங் கனகதவஞ் செய்தாலும்
காட்டில் குருவில்லாமல் - ஞானம்மா
கண்டறிதல் ஆகாதே. 16

நல்ல வெளிச்சமது ஞான வெளிச்சமது
இல்லாவெளிச்சமது - ஞானம்மா
ஈனவெளிச்சமடி. 17

சம்சாரமென்றும் சாகரமாமென்றும்
இம்சையடைவோர்கள் - ஞானம்மா
இருந்து பயன் ஆவதென்ன. 18

காத்தடைத்து வந்ததிது கசமாலப் பாண்டமிது
ஊத்தச் சடலமிது - ஞானம்மா
உப்பிலாப் பொய்க்கூடு. 19

**அஞ்சுபேர்கூடி அரசாளவே தேடி**
**சஞ்சாரஞ் செய்ய - ஞானம்மா**
**தானமைத்த பொய்க்கூடே. 20**

# 28. வகுளிநாதரென்னும் மௌனச்சித்தர் பாடல்

இவரைப்பற்றி எந்த ஒரு செய்தியும் எங்கும் கிடைக்கவில்லை. இவர் பாடல்களை வைத்துப் பார்க்கையில் இவருக்கு முன் இருந்த பல சித்தர்களைப் பின்பற்றி 12 பாடல்களைப் பாடியிருப்பது மட்டும் தெரிகிறது. இவருடைய இயற்பெயர் 'வகுளிநாதர்' என்று ஒரு நூல் குறிப்பிடுகிறது.

## குறவஞ்சிப்பா

**ஆதிபெருஞ் சோதிதனை அனுதினமும் நாடி**
**ஐயர்பதந் தேடிக்கொண்டு அருள்பெறவே பாடிச்**
**சோதியெனும் மனோன்மணியாள் அருளதனைப் பெற்றுச்**
**சுகருடைய பாதமதை மனந்தனிலே உற்று.** 1

**ஆங்காரம் தனையடக்கி அருள்நிலையை நோக்கி**
**அரியபுவ னங்களெல்லாம் அறிய மனதாக்கி**
**பாங்காகப் பெரியோர்கள் பாதமதுபணிவோம்**
**பத்தியொடு யோகநிட்டை நித்தியமும் புரிவோம்.** 2

**பேய்க்குணத்தைச் சுட்டல்லவோ பிரமநிலை கண்டோம்**
**பிரமபதி தான்கடந்து சுழிமுனையுள் கொண்டோம்**
**நாய்போலே அலையாமல் நாமிருந்தோம் தவசில்**
**நல்லதொரு ஆங்காரம் அடக்கிமிகப் பவுசாய்.** 3

**வஞ்சகமாம் வாழ்வைநம்பிச் சஞ்சலங்கள் அடையோம்**
**மகத்தான மகரிடிகள் பதங்காணச் சடையோம்**
**பஞ்சமா பாதகரை ஒருநாளும் பாரோம்**
**பாவவினை பற்றறுத்தோர் சிநேகிதங்கள் மறவோம்.** 4

**ஆயிரம்பேர் சித்தருடன் அனுதினமும் பாடி**
**ஆனந்தத் திருநடனம் ஆடுவோமே கூடி**

**தாயிஉமை மனோன்மணியாள் எனக்கு சொன்னசித்தைத்**
**தானறிந்து நடந்து கொள்வோம் பெரியோரை அடுத்தே.** 5

**நிலையைக்கண்டு கொள்வதற்கு நினைந்துஉருகி வாடி**
**நிர்மலமாம் ஐயன்பதம் தினந்தினமுந் தேடி** 6

**கலைஅறிந்து வாசியையும் கட்டுடனே பிடித்தோம்**
**கனல் எழுப்பி மூலமதைச் சுகமுடனேபடித்தோம்.**

**ஊணுறக்கம் நீக்கியல்லோ யோகநிட்டை புரிந்தோம்**
**உற்றாரைப் பற்றறுத்து மலைக்குகையில் இருந்தோம்**
**காணுதற்கும் எட்டாத பரவெளியைக் கண்டோம்**
**கற்பமது சாப்பிட்டு உடல்வளர்த்துக் கொண்டோம்** **7**

**தந்தைதாயார் சுற்றமொடு தளர்ந்துஉற வாடோம்**
**தவநிலையைப் பெற்றுணராச் செய்கையைத் தேடோம்**
**விந்தையுடன் ஞானமதை மேன்பாடாய்த் தெரிந்தோம்**
**மேலான பரவெளியின் அருளதனை அறிந்தோம்.** **8**

**நாசிநுனி வழியதனில் நாட்டமதைத் தெரிந்தோம்**
**நல்லதொரு மூலவட்டம் சுழியை அறிந்தோம்**
**வாசியேற்ற வகையறிந்து ஆசைகளை அறுப்போம்**
**வையகத்தின் செய்கைதன்னை வழுவாமல் மறுப்போம்.** **9**

**சக்திசக்ர பீடமேறிச் சுத்தவெளியைக் கண்டோம்**
**சகலமும்பரவெளி என்று எண்ணி மனமதனில் கொண்டோம்**
**சித்திபெற்ற முத்தர்களை எத்தினமும் அறிவோம்**
**சீவகலை இன்னதென்று நாட்டமுடன் தெரிவோம்.** **10**

**தொண்ணுத்தாறு தத்துவத்து உரைத்தனங்களைக் கொண்டோம்**
**தய்யபர வெளிதனிலே அய்யர்பதம் கண்டோம்**
**விண்ணுலகு இன்னதென்று அறிந்து கொண்டேன் யானே**
**மேலான பரவெளியின் ஒளிவைக்கண்டுதானே.** **11**

**நானென்ற ஆணவத்தை நயந்தறுத்து விடுத்தேன்**
**நன்மைபெற்றுக் குகைதனிலே வாழ்ந்திருக்க அடுத்தேன்**
**தானென்ற கருவமதைத் தணித்து விட்டு வந்தோம்**
**தவமேதான் கதி என்று சரவழியில் உகந்தோம்.** **12**

## 29. கடேந்திர நாதர் என்ற விளையாட்டுச் சித்தர் பாடல்

வாழ்க்கையில் எல்லாவற்றையுமே விளையாட்டாய் எடுத்துக்கொள்ள வேண்டுமேயல்லாது எதனையும் தீவிரமாய் எடுத்துக்கொள்ளக் கூடாது என்று கூறும் இந்த விளையாட்டுச் சித்தரின் இயற்பெயர் கடேந்திர நாதர் என்பதாகும்.

“நானென்று சொல்வதும் விளையாட்டே - இந்த
நானிலத் திருப்பதுவும் விளையாட்டே”

“தாய் தந்தை கூடுவதும் விளையாட்டே”

“பெற்ற பிள்ளை யென்றதுவும் விளையாட்டே - தந்தை
பேரிட்ட ழைத்ததுவும் விளையாட்டே”

“மாடிமனை வீடுவாசல் விளையாட்டே - என்றன்
மனைவிமக்க ளென்பதுவும் விளையாட்டே”

“கூடுவிட்டுப் போகும் உயிர் விளையாட்டே!”

“பிணமா யிருப்பதுவும் விளையாட்டே - அதைப்
பெற்றோர் கண்டு அழுவதுவும் விளையாட்டே”

செத்தோர்க்கு அழுவதுவும் விளையாட்டே - சுடலை
சேரும்வரை யழுவதுவும் விளையாட்டே!

இப்படி வாழ்க்கையில் எல்லா நிலைகளையும் விளையாட்டாய் எடுத்துக் கொள்ளும் இந்த விளையாட்டுச்

சித்தர் தமது அடுத்த கண்ணியில் சற்று தீவிரமாகவே உபதேசம் செய்கின்றார்.

இரண்டாவது பாட்டுத் தொகுதி முழுவதும் பழமொழிகளாகவே காணப்படுகின்றது. புதுச்சேரியில் சிறுபிள்ளைகள் கபடி விளையாடும் போது பாடும் பாட்டு.

உத்தி உத்தி கம்பந்தட்டு
வீட்டை பிரிச்சுக் கட்டு
காசுக்கு ரெண்டு கட்டு

கருணை கிழங்கடா
தோலை உரியடா
தொண்டையிலே வையடா
வையடா வையடா வையடா!

இந்தப் பாட்டின் ஒலியிலே இந்த இரண்டாவது பாடல் இருப்பதால் இவர் புதுச்சேரிக்காரரோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

சுக்குச் சுக்கு வெள்ளைக்கல்
சுண்ணாம்பு வெள்ளைக்கல்
காசுக் கிரண்டுகல்
கருணைக் கிழங்கடா கருணைக் கிழங்கடா

பாட்டைப் பாடிப் பாருங்கள். ஒற்றுமையும் கருத்துக் கோர்வையும் புலப்படும்.

முதல் பதினெட்டில் உலக வாழ்க்கை நிலையையும் வாசி சுழுமுனையில் செல்லும் மார்க்கத்தையும், குண்டலினியையும் விவரிக்கின்றார். இதில் யோகம், தவநிலை ஆகியவற்றை விளையாட்டாகவே விளங்க வைக்க முயற்சி செய்கின்றார்.

இரண்டாவது கண்ணியில் ஆதிசிவத்தையும் பிரபஞ்சத்துள் இடம், பொருள், ஏவல் முதலியவை பற்றிய

மெய்ப்பொருள் அனைத்தையும் விளக்க முற்படுகின்றார். மூன்றாவது 17ம் பாடல் தொகுதியில் வாதக்குருடு விபரங்களையும், சுண்ணம் முடிக்கும் விபரங்களையும், அதன் சூட்சங்களையும் விவரிக்கின்றார்.

பாடல் முழுவதும் கிறுகிறுப்புதான். படித்துப் பார்த்தால் உண்மை நிலை விளங்கும்.

## கண்ணிகள்

**ஆதிசிவ மானகுரு விளையாட்டை - யான்**
**அறிந்துரைக்க வல்லவனோ விளையாட்டை**
**சோதிமய மானசத்தி யென்னாத்தாள் - சுய**
**சொரூபத் தடங்கிநின்ற விளையாட்டை** **1**

**பார்தனி லுள்ளவர்க்கு விளையாட்டாய் - ஞானம்**
**பற்றும்வழி யின்னதெனச் சொன்னதினால்** **2**

சீர்பெறுஞ் சித்தர்களு மென்னைவினை - யாட்டுச்
சித்தனென்றே அழைத்தார்க ளிவ்வுலகில்.

இகபர மிரண்டுக்குஞ் சரியாகும் - இதை
இன்பமுடன் சொல்லுகிறேன் தெம்புடனே
சகலமும் விளையாட்டாய் பிரமமுனி - முன்பு
சாற்றினா ரெந்தனுக்கீ துண்மையுடன் 3

நானென்று சொல்வதும் விளையாட்டே - இந்த
நானிலத் திருப்பதுவும் விளையாட்டே
தானென் றறிவதுவும் விளையாட்டே - பெற்ற
தாயென் றுரைப்பதுவும் விளையாட்டே. 4

தாய்தந்தை கூடுவதும் விளையாட்டே - பூவிற்
தநயனாய் வந்ததுவும் விளையாட்டே
மாயையாய் வளர்ந்ததும் விளையாட்டே - பத்து
வயது தெரிந்ததுவும் விளையாட்டே. 5

பெற்றபிள்ளை என்றதுவும் விளையாட்டே - தந்தை
பேரிட் டழைத்ததுவும் விளையாட்டே
மற்றதை யுணர்வதுவும் விளையாட்டே - இந்த
வையகத் திருப்பதுவும் விளையாட்டே. 6

பெண்டுபிள்ளை யென்பதுவும் விளையாட்டே - எங்கும்
பேரோங்க வாழ்வதும் விளையாட்டே
கண்டுபொருள் தேடுவதும் விளையாட்டே - பணம்
காசுவட்டி போடுவதும் விளையாட்டே. 7

மாடிமனை வீடுவாசல் விளையாட்டே - என்றன்
மனைவிமக்க ளென்பதுவும் விளையாட்டே
தேடிவைத்த பொருளெல்லாம் விளையாட்டே - இச்
செகத்திற் திரிவதுவும் விளையாட்டே. 8

ஆடுமாடு தேடுவதும் விளையாட்டே - சதுர்வே
தாகமநூ லாய்வதுவும் விளையாட்டே
கூடுவிட்டுப் போகுமுயிர் விளையாட்டே - உற்றார்
கூடிமகிழப் பேசுவதும் விளையாட்டே. 9

பிணமா யிருப்பதுவும் விளையாட்டே - அதைப்
பெற்றோர்கண் டழுவதும் விளையாட்டே 10

குணமாய்க் கழுவியதும் விளையாட்டே - ஈமங்
  கொண்டுபோய்ச் சுட்டதுவும் விளையாட்டே.

செத்தோர்க் கழுவதுவும் விளையாட்டே - சுடலை
  சேரும்வரை அழுவதும் விளையாட்டே
மெத்தஞானம் பேசுவதுவும் விளையாட்டே - குளித்து
  வீடுவந்து மறப்பதும் விளையாட்டே. 11

வீணாட் கழிவதுவும் விளையாட்டே - சுடலை
  சேரும்வரை அழுவதும் விளையாட்டே
மெத்தஞானம் பேசுவதும் விளையாட்டே - குளித்து
  வீடுவந்து மறப்பதுவும் விளையாட்டே. 12

கனவுநினை வெண்பதுவும் விளையாட்டே - இக்
  காசினியோ ருழல்வதும் விளையாட்டே
நினவாய்ச்சேய் வஞ்சகமும் விளையாட்டே - மிக்க
  நிதிநிலம் பெண்ணென்பதும் விளையாட்டே. 13

பெண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - அவர்
  பின்னாற் திரிவதுவும் விளையாட்டே
மண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - நல்ல
  வயல்தோட்டம் புஞ்சையெல்லாம் விளையாட்டே. 14

சீராக வாழ்வதுவும் விளையாட்டே - செம்பொன்
  சேகரித்து வைப்பதுவும் விளையாட்டே
நேராய்ப்பொய் சொல்வதுவும் விளையாட்டே - நெஞ்சில்
  நினைக்காமற் செய்வதுவும் விளையாட்டே. 15

பந்துசன மென்பதெல்லாம் விளையாட்டே - லோகப்
  பற்றுடனே வாழ்வதுவும் விளையாட்டே
சொந்தநிதி தேடுவதும் விளையாட்டே - இதைச்
  சொற்பனம்போ லெண்ணாததும் விளையாட்டே. 16

யோகம்வந்து மகிழ்வதும் விளையாட்டே - அதன்
  உண்மைதெரி யாததுவும் விளையாட்டே
சாகசஞ் செய்வதுவும் விளையாட்டே - ஒருவர்
  தஞ்சமென்று நினைப்பதுவும் விளையாட்டே. 17

கோடிபணந் தேடுவதும் விளையாட்டே - அதைக்
  குழிவெட்டிப் புதைப்பதுவும் விளையாட்டே 18

தேடியலைவதும் விளையாட்டே - மனந்
  தேறுதலாய் திரிவதும் விளையாட்டே.

கற்பனையுங் கபடமும் விளையாட்டே - அதைக்
  காணாமல் மறைப்பதுவும் விளையாட்டே
சற்பங்க ளாட்டுவதும் விளையாட்டே - ஒரே
  சாதனையாய்ப் பேசுவதும் விளையாட்டே. 19

நம்பினோருக் காசைசொல்லல் விளையாட்டே - பின்பு
  நாட்டாற்றில் போகவிடுதல் விளையாட்டே
கும்பிக் கிறைதேடுதல் விளையாட்டே - கடன்
  கொடுத்தாரைக் கெடுத்தலும் விளையாட்டே. 20

இச்சையால் மயங்குவதும் விளையாட்டே - அதை
  இயல்பாய் மதிப்பதுவும் விளையாட்டே
பிச்சையெடுத் துண்பதுவும் விளையாட்டே - பொல்லாப்
  பேய்போ லலைவதுவும் விளையாட்டே. 21

முத்தி யறியாததும் விளையாட்டே - மேலாம்
  மோட்சங் கருதாததும் விளையாட்டே
பத்திகொள் ளாததுவும் விளையாட்டே - மனம்
  பாழிற் செலுத்தினதும் விளையாட்டே. 22

கேடு வருவதுவும் விளையாட்டே - எதற்கும்
  கெம்பீரம் பேசுவதும் விளையாட்டே
பாடு வருவதுவும் விளையாட்டே - மனப்
  பற்றுதலாய் நிற்காததும் விளையாட்டே. 23

பாசவினை போக்காததும் விளையாட்டே - பெண்
  பாவாயென் றழைப்பதும் விளையாட்டே
நேசமாய்த் தேடுவதுவும் விளையாட்டே - காணாமல்
  நிமிடநேர மென்பதுவும் விளையாட்டே. 24

நித்திரையிற் சொக்குவதும் விளையாட்டே - அதில்
  நினைவுதடு மாறுவதுவும் விளையாட்டே
சித்தியடை யாததுவும் விளையாட்டே - ஞானம்
  சிந்தியா திருப்பதுவும் விளையாட்டே. 25

சொற்பனமுண் டாவதுவும் விளையாட்டே - மனம்
  சொக்கா திருப்பதுவும் விளையாட்டே 26

விற்பனங்கண் டறிவதும் விளையாட்டே - வந்த
விதமறி யாததுவும் விளையாட்டே.

பகலிர வென்பதுவும் விளையாட்டே - இகப்
பயனடைந் திருத்தலும் விளையாட்டே
சகவாழ்விற் சிக்குவதும் விளையாட்டே - யோக
சாதன மறியாததும் விளையாட்டே. 27

புத்திமா னென்பதுவும் விளையாட்டே - இப்
பூதலத்தோ ரேத்துவதும் விளையாட்டே
வெற்றி யடைவதுவும் விளையாட்டே - நான்
வீரனென்று சொல்வதுவும் விளையாட்டே. 28

தவநிலை தோணாததும் விளையாட்டே - ஞான
தத்துவந் தெரியாததும் விளையாட்டே
பவமது போக்காததும் விளையாட்டே - ஏக
பரவெளி காணாததும் விளையாட்டே. 29

யோகந் தெரியாததும் விளையாட்டே - அதன்
உண்மைதனைக் காணாததும் விளையாட்டே
பாகம் அறியாததும் விளையாட்டே - இகப்
பற்றுக்காது இருப்பதுவும் விளையாட்டே. 30

பெரியோரைக் காணாததும் விளையாட்டே - கண்டு
பேரின்பஞ் சாராததும் விளையாட்டே
தெரியா திருந்ததுவும் விளையாட்டே - சிவ
தேகநிலை பாராததும் விளையாட்டே. 31

அஞ்ஞானமுட் கொண்டதுவும் விளையாட்டே - பே
ரறிவாற் றெரியாததும் விளையாட்டே
மெய்ஞ்ஞானங் காணாததும் விளையாட்டே - இந்த
மேதினியே போதுமெனல் விளையாட்டே. 32

## கண்ணிகள்

ஆதியான மூலத்தில்
அமர்ந்திருந்த சோதிதான்
வாதியானோன் கண்டறிய
வாய்குமிது மந்திரம். 33

சுக்குச்சுக்கு வெள்ளக்கல்
சுண்ணாம்பு வெள்ளைக்கல்
காசுக் கிரண்டுகல்
கருணைக்கிழங்கடா கருணைக்கிழங்கடா. 34

குடுகுடு வானைக்கல்
கோமான்கும் பானைக்கல்
தேசதேச வாசக்கல்
தெக்குநல்ல சீமைக்கல். 35

பக்குவ மாகாமுன்
பார்த்தெடுத்துக் கொண்டபின்
சுக்குச்சுண் ணாம்புக்கல்
சோதிக்கல் சோதிக்கல் 36

வாகடதோகட மதுரக்கல்
வைப்புச்சுண் ணாம்புக்கல்
பாகுடன் செய்தால்
பசுமைக்கல் பசுமைக்கல் 37

மேலாஞ் சாதி பாரடா
வெட்டவெளியைத் தேரடா
நாலாஞ்சாதி யாகாது
நமக்குப் பருப்பு வேகாது. 38

தாய்போலு மாகுமே
தங்கைபோலு மாகுமே
சேய்போலு மாகுமே
திரும்பப் பெண்டீ ராகுமே. 39

வாலையான சிறுபெண்ணாம்
வயதுவந்த தோர்பெண்ணாம்
பாலைமங்கை தானடா
பருவம்வந்த வழலைதான். 40

வழலைவாங்கிக் கொள்ளடா
மருந்துசூடன் போடடா
குழவியர்க்கு உணர்வதாகக்
கொடுத்ததைநீ வாங்கடா. 41

வாங்கின மூலத்தையே
  மருந்துபோட்டு வைப்பையே
தூங்கிடாமற் சேநீர்கொண்டு
  சுருக்கினிலுப் பாக்கடா. **42**

நீறுநீ ரெடுத்துமே
  இரண்டையுமொன் றாக்கியே
சீறுடனே காய்ச்சியே
  செய்ததொரு உப்படா. **43**

கோவானூர் தன்னிலே
  கொழுந்துபோல் முளைத்ததை
ஏகாளிகள் போகுமுன்
  னெடுத்துவந்து காய்ச்சடா. **44**

காய்ச்சியும் பெருத்துநீ
  கஞ்சியுப்பு சேர்த்துநீ
மாட்சிமையாய் மல்லிகை
  மலர்ந்தது போலாமடா. **45**

ஆதியுப்பு மந்தவுப்பும்
  இந்தவுப் பெடுத்துநீ
சோதியுப்பு மாச்சடா
  சுருக்கமிது தானடா. **46**

கண்டறிந்து கொள்ளடா
  கணக்கறிந்து விள்ளடா
கொண்டறிந்து தள்ளடா
  குருவறிந்து கொள்ளடா. **47**

சூதங்கட்ட லாகுமே
  சொர்ணஉப்பு மாகுமே
வாதம் வாத மென்றறிந்த
  வாதியேநீ பாரடா. **48**

விட்டகுறை யானவன்
  மேதினியில் வந்தவன்
தொட்டகுறைக் காரனுக்குத்
  தோற்றமே மெய்ஞ் ஞானமே. **49**

## வேறு

ஏகாந்தம் பழம்பழம்
 எழுத்தில்லாதவன் தலைச்சுமை
பெண்டில்லாதவன் பெருவழி
 பிள்ளையில்லாதவன் கைவீச்சு. **50**

காய்த்தவாழை பூப்பூக்கும்
 காயாதவாழை தானுமில்லை
பாய்ச்சின பயறு தலையெடுக்கும்
 பாய்ச்சாத பயறு தானுமில்லை. **51**

இறைத்தகிணறு தானூறும்
 இறையாக்கிணறு தானுமில்லை
விதைவிதைத்தால் முளைதேறும்
 விதையாநிலத்தி லொன்றுமில்லை **52**

அழுதபிள்ளை பால்குடிக்கும்
 அழுகாதபிள்ளைக் கேதுமில்லை
உழுதநிலந்தான் பயிரேறும்
 உழுகாதநிலத்தி லொன்றுமில்லை **53**

ஆசையுளானுக்கு ரோசமில்லை
 ஆசையிலானுக் கொன்றுமில்லை

# 30. ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர் பாடல்

இவருடைய இயற்பெயர் 'ஆதி நாதர்' என்பது. வேதங்களின் முடிவை உபநிடதங்கள் என்பர். அந்த உபநிடதங்கள் பல. ஒரு சிலவே வாழ்வின் உண்மையை உணர்த்துவன. இவர் வடமொழியை அறிந்தவர். ஆதலின் உபநிடதக் கருத்துகளை தம் 32 பாடல்களில் முத்தாக அமைத்துள்ளார். அவை கிளிக்கண்ணி மெட்டுடையனவாகும்.

## கண்ணிகள்

**ஆதிமத் யாந்தமதைக் கிளியே**
**அன்பாய் அறிவதற்குச்**
**சோதிச் சுடரொளியைச் கிளியே**
**தோத்திரம் செய்துகொள்ளே. 1**

**வாசாம கோசரத்தின் கிளியே**
**மார்க்கம் அறிந்துகொண்டு**
**நேசாவனுபவத்தில் கிளியே**
**நின்று தெளிவாயே. 2**

**அசல மூலமதிற் கிளியே**
**அந்தம் அறிவாயோ**
**விசன மற்றவிடம் கிளியே**
**மேவித் தெளிந்துகொள்ளே. 3**

**சுத்தபிர மத்தில் ஏகில்கிளியே கிளியே**
**தோன்றிய சத்திதன்னில்**

**வித்தாரம் உண்டான கிளியே**
**விபரம் அறிந்துகொள்ளே. 4**

**சத்தாதி வாக்காதி கிளியே**
**தனுகர ணங்கட்கெல்லாம்**
**வித்தான மூலமதைக் கிளியே**
**மேவித் தெளிந்துகொள்ளே. 5**

சத்தியில் உண்டான கிளியே
சதாசிவ மானதென்று
நித்தியம் நீ அறிந்து கிளியே
நின்று தெளிவாயே. 6

அச்சிவ மானதிலே கிளியே
அண்டபிண் டங்களெல்லாம்
உச்சித மாய் உதித்தே கிளியே
உண்மை அறிந்துகொள்ளே. 7

நாலு வகையோனி கிளியே
ஏழுவகைத் தோற்றத்
தாலு மகரசரம் கிளியே
தத்துவம் உற்றதடி. 8

அகாரம் உகாரம் ரெண்டும் கிளியே
யகாரம் உருவாச்சு
சிகாரம் வந்தவிதம் கிளியே
தேறித் தெளிவாயே. 9

சத்துச்சித் தானந்தம் கிளியே
தத்துவஞ் சொல்லுகிறேன்
நித்தியா னந்தமதை கிளியே
வித்தாரம் செய்யுகிறேன். 10

சாமி அருள்வேணும் கிளியே
சாதனை நால்வேணும்
வாமி தயைவேணும் கிளியே
வத்தவனாக வேணும். 11

அஞ்சு புஞ்சகோசம் கிளியே
ஆராய்ந்து பார்க்கவேணும்
நெஞ்சந்தெளிய வேணும் கிளியே
நீயேநா னாகவேணும். 12

ஆசாபா சங்களையே கிளியே
லேசமும் எண்ணாதே
வாசனை மூன்றினாலே கிளியே
மோசமும் போகாதே. 13

மானாபி மானமற்று கிளியே
  தானென்று அகமும்அற்று
நானப்பிர பஞ்சமற்று கிளியே
  நாதமயத் தைப்பற்ற 14

பத்தரை மாற்றுத்தங்கம் கிளியே
  சுத்த வெளியாகும்
எத்திசை பார்த்தாலும் கிளியே
  தத்துவ மாயிருக்கும். 15

மூலா தாரமுண்டு கிளியே
  முக்கோண வட்டமுண்டு
வாலை கணேசனுண்டு கிளியே
  வல்லபை சத்தியுண்டு. 16

சுவாதிட் டானமுண்டு கிளியே
  சுத்தபிரமாவுமுண்டு
உவாதினி வாதிக்கெல்லாம் கிளியே
  உற்றவர் கண்டுகொள்ளே. 17

மேலே மணிபூரகம் கிளியே
  விட்டுணுக் குற்றவிடம்
காலா தீதத்துக்கும் கிளியே
  கருத்த ரவர்தாமே. 18

பாரு மனாகிதத்தில் கிளியே
  பார்வதி நாதரங்கே

சேருந் தலம் இதென்று கிளியே
  தெரிசித்துக் கொள்வாயே. 19

கண்டம் விசுத்தியல்லோ கிளியே
  கஞ்சம் பதினாறு
அண்டபிண் டங்களெல்லாம் கிளியே
  ஆஞ்ஞை மகேசனுக்கு. 20

இரண்டு கண்நடுவே கிளியே
  இருக்கும் மயேசுரனை
திரண்ட சிந்தையினால் கிளியே
  தேறித் தெளிந்துகொள்ளே. 21

ஆயிரத்து எட்டிதழில் கிளியே
அமர்ந்த சதாசிவத்தை
நேயம தாகவேதான் கிளியே
நிதம்பணிந்து
ஏற்றிக்கொள்ளே. 22

ஈதோர் குணமாச்சு கிளியே
இரண்டாம் குணந்தனையும்
மூதோர் மொழியெனவே கிளியே
முற்றிலும் எண்ணுவையே. 23

சாதனம் நாலுவகை கிளியே
சற்று நிதானமாய்
போத மிகுதியினால் கிளியே
புத்திஎன் றேஉணர்வாய். 24

சமாதி ஆறுகுணம் கிளியே
சாமா வகய மலவே
உமாம கேசனுக்கே கிளியே
உற்றதுஎன்றே தெளிவாய். 25

உற்ற சமந்தானும் கிளியே
ஒன்றிவைக் கும்பின்னும்
மற்றுள தமகுணத்தை கிளியே
மாற்றல் அரிதலவே. 26

விடல் சகித்தல்தனை கிளியே
மேன்மைய தாகக்கொண்டு
தொடர்ச மாதானம் கிளியே
தொந்தம் நமக்காமே. 27

சிரத்தை எப்பொருட்டும் கிளியே
தீவிரம் ஆகுமதே
பரத்தை தானடைய கிளியே
பற்றொன்றும் இல்லைகண்டாய். 28

பத்தியை விட்டுவிட்டுக் கிளியே
பாவனையைக் கடந்து
அத்துவி தானத்தைக் கிளியே
அனுபவித்து உய்வாயே. 29

**பெண்ணாசை பொன்னாசை கிளியே**
**பூமியின் மீதாசை**
**மண்ணாசை எண்ணாதே கிளியே**
**வாசிஎன் னால்அறியே 30**

**தேகம் தேகிரெண்டு கிளியே**
**தேகம்பொய் தேகிமெய்யே**
**மோகாந்தம் விட்டாக்கால் கிளியே**
**முத்தி யடைவாயே. 31**

**பாவ அபானமற்று கிளியே**
**பரத்தினுடன் பொருந்திச்**
**சுவானுப வந்தனிலே கிளியே**
**சொக்கிநீ வாழ்வாயே. 32**

# 31. சதோக நாதர் என்ற யோகச் சித்தர் பாடல்

நவநாத சித்தர்களில் இரண்டாவதாக வைத்துப் போற்றப்படுபவரான சதோகநாதர் கி.பி. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவராகக் கருதப்படுகின்றார். இவர் யோக ஞானம் பற்றி அதிகம் பாடியதால் 'யோக சித்தர்' என்றும் குறிக்கப்படுகின்றார்.

நாற்பத்திரண்டு கண்ணிகள் கொண்ட இவரது பாடல் தொகுப்பில் காப்பு செய்யுளாக இவர்,

"அக்கரங்கள் தோன்ற அருள்கொடுக்கும் பூரணியென்
பக்க மிருந்து பலகலையுஞ் சொல்வாளே"

"வாலை யபிராமி மாரிதிரி சூலியருட்
பாலை யெனக்கருளும் பார்வதியின் தாள்போற்றி"

"அம்பிகை மால் சோதரி யென்னாத்தாள் திருப்பாதம்
கும்பிட்டு ஞானக் குயிற்கண்ணி கூறுவனே"

என்று அம்பிகை வணக்கம் கூறுவதால் இவர் சக்தி வழிபாட்டினர் என்பதை உணரலாம்.

அஞ்செழுத்தைக் கண்டு அதன் உண்மை தெரிந்து வஞ்சகங்கள் அற்று மகிழ்ந்திருந்தேன். மாங்குயிலே என்பதனால் இவர் 'சிவயநம' சிவ வழிபாட்டிற்கு மந்திரம் உரைக்கும் சைவர் என்பது உறுதிப்படுகின்றது.

'ஊமை யெழுத்தாலே தான் ஓங்காரமாகினதைச் சீமையிலுள்ளோர்கள் தெளிவரோ மாங்குயிலே' என்று கேள்வி கேட்டு அதற்கு விடையாக, 'அட்டாங்க யோக மறிந்து தெரிந்த பின்பு வெட்டவெளி உண்மை விளங்கும்' என்று உணர்த்துகின்றார்.

அண்டத்துக்குள்ளே அனாதி பரவெளியைக் கண்டறிந்து கொண்டேன், கவலையை விட்டேன் என்று தாமறிந்த இன்பத்தைப் பாடலாக வடித்துள்ளார்.

## கண்ணிகள்

**அக்கரங்கள் தோன்ற அருள்கொடுக்கும் பூரணிஎன்**
**பக்கம் இருந்து பலகலையும் சொல்வாளே.** 1

வாலை அபிராமி மாரிதிரி சூலிஅருட்
பாலை எனக்கருளும் பார்வதியின் தாள்போற்றி 2

அம்பிகையால் சோதரி என்னாத்தாள் திருப்பாதம்
கும்பிட்டு ஞானக் குயிற்கண்ணி கூறுவனே. 3

ஓங்கார வட்டமதின் உட்பொருள்கண் ஓர்ந்ததற்பின்
நீங்காத ஆசை நிலைக்குமோ மாங்குயிலே. 4

இயம்பும் இடைகலைக்கும் இன்பதாம் பிங்கலைக்கும்
சுயமாம் சுழிமுனையுந் தோற்றுமடி மாங்குயிலே. 5

ஆன்மா பரத்தோடு அமருந் திருக்கூத்தை
நான்வாயி னாலே நவில்வனோ மாங்குயிலே. 6

அஞ்செழுத்தைக் கண்டு அதன் உண்மை யும்தெரிந்து
வஞ்சகங்கள் அற்று மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே. 7

சூரியனும் சந்திரனும் தோன்றும் இடைநின்றே
பூரித்து னந்த போகமுற்றேன் மாங்குயிலே. 8

ஊமையெழுத் தாலேதான் ஓங்கார மாகினதைச்
சீமையிலுள் ளோர்கள் தெரிவரோ மாங்குயிலே. 9

முப்பாழும் தாண்டி முடிவின் இடந்தாண்டி
அப்பாழும் தாண்டின் அறிவுளதோ மாங்குயிலே. 10

அட்டாங்க யோக மறிந்து தெரிந்தபின்பு
வெட்டவெளி யுண்மை விளங்குமே மாங்குயிலே 11

ஆறாதா ரத்தில் அறிவை மிகச்செலுத்திச்
சீராய்த் தவசிலிருந்து சிக்கறுத்தோம் மாங்குயிலே. 12

துர்க்குணத்தைச் சுட்டறுத்துச் சூட்ம நிலைதெரிந்து
நற்குணத்தோடு எண்டியங்கு நானிருந்தேன் மாங்குயிலே. 13

அல்லலெல்லம் நீக்கி அறிவைஅறிவால் அறிந்து
வல்லசித்தன் என்றே மகிழ்வுற்றேன் மாங்குயிலே. 14

ஆனந்தம் பொங்கி அறிவே மயமான
ஞானம் அறிந்து நலமுற்றேன் மாங்குயிலே. 15

**மெய்பொருளைக் கண்டுடனே வேதாந்தவீடடைந்த**
**வைப்பதனில் ஒன்றி மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே.** **16**

**நாதாந்த உண்மை நடுவறியா மாந்தருக்கு**
**வேதாந்தப் பேச்சதுவும் வேண்டுமோ மாங்குயிலே.** **17**

**நித்திரையும் விட்டு நினைவைஅறிவிற்செலுத்தி**
**சித்தியெலாம் பெற்றுத் தெளிவுற்றேன் மாங்குயிலே.** **18**

**பேச்சொடுங்கி நின்ற பிரமநிலையைஅறிந்தோர்**
**ஏச்சுக்கு இடமற்று இருப்பார்காண் மாங்குயிலே.** **19**

**காணாப் பொருளதனைக் கண்டுபிரமானந்தமுற்று**
**வீணாள் ஒழித்துமுத்தி வீடடைந்தேன் மாங்குயிலே** **20**

**அருள்வெளியி னுட்பொருளை ஆராயமோனக்**
**குருமொழியை அன்றியில்லை கோதையெனும் மாங்குயிலே** **21**

**அத்துவிதம் தன்னை அதுவதுவாய்க்காண்பதற்குத்**
**தத்பதத்தைக் காட்டித் தருவாயே மாங்குயிலே.** **22**

**நம்பி உனைப்பணிந்து நாடோறும்பூசிப்பதற்குத்**
**தொம்பத்தை என்று துலக்குவாய் மாங்குயிலே.** **23**

**நிசிபகலென் றெண்ணாது ஞேயஞா னத்தால்**
**அசிபதத்தை நீயென் றருள்செய்வாய் மாங்குயிலே.** **24**

**நித்தநித்தம் என்னுளத்தில் நீஇருப்பதுஉண்மை எனில்**
**தத்துவம் சிற்பொருளைத் தந்தருள்செய் மாங்குயிலே.** **25**

**சுத்த நிராமயத்தின் தோற்றத்தினால்உதித்த**
**வத்துவெலாஞ் சுத்தமயம் அன்றோ மாங்குயிலே.** **26**

**தேறாப் பொருள் அனைத்துந் தேறித்தெளிவதற்கு**
**மாறா நின் இன்பமது வாய்க்குமோ மாங்குயிலே.** **27**

**அசரசரத்தின் உற்ற அண்டபிண்டம் பல்லுயிரும்**
**நசிதம் எனக் கண்டறிந்து நின்றேன் நான் மாங்குயிலே.** **28**

பாசபந்தம் விட்டுப் பரகதிஎன் றேயிருந்தால்
பேசஒண்ணாப் பிரமம் பிறக்குமே மாங்குயிலே. 29

அந்தக்கர ணத்தை அடக்கிப் பரவெளியைச்
சொந்தமென நம்பித் துதிப்பாய்நீ மாங்குயிலே. 30

சுத்தப் பிர மத்தின் தொடர்புவழி யேகாணில்
முத்தியைத் தேட முழிப்பாயோ மாங்குயிலே. 31

எக்கனியை யும்பரித்து ஏக்கமறச் சாப்பிடலாம்
கைகனியே பிரமமெனக் கண்டுதேர் மாங்குயிலே. 32

துர்க்கந்தத் தால் எடுத்த தூலமிது பொய்யென நீ
நற்கந்த மானசுக ஞானம் அறி மாங்குயிலே. 33

வெட்டவெளியதனில் மெய்ப்பொருளைக் கண்டபின்பு
பட்டப் பகற்தீபப் பார்வையேன் மாங்குயிலே? 34

எங்கும் நிறைத்துநின்ற ஏகபர வத்துவினை
அங்கைநெல் லிக்கனிபோல் யானறிந்தேன் மாங்குயிலே. 35

சத்தாகிச் சித்தாகித் தாபரமுந் தானாகி
வித்தாகி வந்த விதம்தெரிவாய் மாங்குயிலே. 36

அருவாய் உருவாகி அண்டர் அண்டந்தானாய்க்
கருவாகி வந்த கணக்கறிவாய் மாங்குயிலே. 37

ஆதிசகத் தென்றும் அனாதி மகத்தென்றும்
சோதிச் சுயவடிவாய்த் தோன்றுமே மாங்குயிலே. 38

பார்க்குள் ஆகாயமதைப் பார்த்துப்பார்த்து எல்லைகண்டு
யார்க்கும் சொல்எளிதே ஆய்ந்திடுவாய் மாங்குயிலே. 39

அண்டத்துக்குள்ளே அனாதி பரவெளியைக்
கண்டறிந்து கொண்டேன் கவலைவிட்டேன் மாங்குயிலே. 40

அணுவுக்கு அணுவாய் அருட்சோதி என்றகுரு
மணியாய் விளங்கும் மகிமைஅறி மாங்குயிலே. 41

பற்றற்று நின்றே பரவெளியைக் கண்டேன்நான்
வற்றற்றல் ஆசை மறந்திருந்தேன் மாங்குயிலே. 42

# 32. காரைச் சித்தர் பாடல்கள்

## கனக வைப்பு

மாளாத சக்தியடா மனிதன் சக்தி
  மலிவாகக் கிடைக்குதடா கணத்துக் குள்ளே
மீளாத மார்க்கமடா மின்னாத் தாளை
  மேவியுனக் குட்காணும் வேதை மார்க்கம்
ஆளாக வென்றேனு மெப்போ தேனும்
  அனைவர்க்கும் கிட்டுமடா ஞானப் பேறு
தூளாகக் காமத்தைத் துரத்தி விட்டே
  துணையாகக் கம்பத்தே தூங்கு வாயே. 1

தூங்குவாய்ச் சாமததே விழித்துக் கொள்ளு
  தூங்காமல் தூங்கிவெறுந் தூக்கம் தள்ளு
நீங்காமமல் நியமித்தே நிறைந்து நில்லு
  நிலமான சாமத்தைச் சுத்தம் செய்தே
ஆங்காரச் சாதியெலா மகற்றிப் போடு
  அன்பாக வாதித்தே விரட்டிப் போடு
பாங்காக ஆதித்தன் துணையாய் நிற்பான்
  பண்பாகப் போதித்தேன் சாதிப்பாயே. 2

குப்பையிலே பூத்திருப்பாள் மின்மி னுக்கி
  கோலத்தே பொன்மேனி கொண்டு நிற்பாள்
தர்ப்பையிலே சிவப்பான தழலைப் போல்வாள்
  தனக்குள்ளே சர்ப்பந்தான் சரண்புக் காடும்
அர்ப்பையடா சகவாசம் அணைந்து தொட்டால்
  அனைத்தையுமே யெரித்திடுவாள் சலித்துக்கொள்வாள்
கர்ப்பையிலே தான்பிரித்துக் கண்ணி வைத்தே
  கணவாதம் செய்திட்டார் சித்தர் பல்லோர். 3

சித்தர்மனம் மலர்ந்திட்டா லதுவே போதும்
  வெத்துவெறும் விளையாட்டும் சித்தி யாகும்
துத்தியெனும் பணத்துத்தி யிலையின் சாற்றில்
  துரிசறுத்துத் தவஞ்செய்வார் தவத்தின் போக்கில்
வித்திதெனும் விந்துவூடன் நாதங்கூட்டி
  வேதமுழங் கிடஞான வீறு கொண்டே
துத்தமறத் தானொடுங்கத் தூய்மை பெற்ற
  துப்புறவே சித்திக்காம் துறவு கோலே. 4

பயனில்லாச் சொல்லகற்றிப் பயனே கூறல்
  பயனதையு மினிதான பழமாய்ச் செப்பல்
நயனில்லாக் கடுவழிக ளவைவிட் டோடல்
  நாட்டமெலா மருள்நாட்ட மாகக் கொள்ளல்
அயனில்லா தெவையுந்தா னாகக் காணல்
  அத்துவிதத் தாலின்பச் சித்தம் பேணல்
இவையெல்லா மருங்குணமா மீசற் கன்பாம்
  இடர்நீக்கிச் சுடர்காட்டும் நியமந் தானே. 5

சித்தரெலாம் உண்மைதனை மறைத்தா ரென்றே
  செப்பிமனப் பால்குடிக்க வேண்டாம் சொன்னேன்
சித்தர்மொழி நூலதனைத் தொட்டபோதே
  சித்தரெலா மொற்றரெனச் சேர்ந்து நிற்பார்
சித்தமுறுங் குணநிறைவில் நாட்டம் கொள்வார்
  சிறிதழுக்கைக் கண்டாலும் விலகிப் போவார்
சித்தநிறை வுள்ளவர்க்கே சித்தி தோன்றும்
  சித்தமிலார் வித்தையெலாம் சிரிப்பே கண்டீர்! 6

தேவாரம் வாசகந்தான் திகழக் கூட்டித்
  திருவாயின் மொழியெல்லா முருவாய்ச் சேர்த்து
போவாரைப் போகாரைப் புலம்ப வைத்து
  போக்கற்றார் தமக்குமொரு போக்குக் காட்டி
கோவாரம் பூவாரம் கொழிக்க விட்டு
  கோலமுறச் செய்தாலும் குவல யத்தின்
பூபாரம் குறைத்திடுமோ குறைக்கொண்ணாது
  புகன்றிட்டே னவள் போக்கைப் புகன்றிட்டேனே! 7

ஊறுசுவை யொளிநாற்றம் ஒளியே யென்ன
  உலகத்திலே திரிந்து கடலிற் புக்கு
வீதிதிரை நுரைகுமழி விளையாட் டார்ந்து
  வினைவிதிகள் வினைவெறிகள் வேகந் தேய்ந்து
ஆறுவரக் குருவருளை யணைந்து பொங்கி
  அண்டாண்ட சாரத்தை யறிந்து கொண்டே
சாறுகொள்ளச் சிந்தனையுங் குவிந்து நிற்கும்
  சகஜநிலை யேயோகசமாதி கண்டீர். 8

சிந்தித்தா லதுபாவம் சிணுங்கி னாலோ
  சேருவது காமமடா தங்கி தங்கிச்
சந்தித்தால் சங்கமடா சங்கமத்தில்
  சாருமடா சங்கடங்கள் சங்கி பங்கி
வந்தித்தால் வாதமடா வீண்வி வாதம் 9

வாகான மோகமடா மங்கிப் பொங்கி
நிந்தித்தால் நாசமடா நினைவுப் புந்தி
நிலையமடா மாயையதான் மயக்குத்தானே.

வருத்தித்தான் சொல்வதிலென் வலுவுண் டாமோ
வருத்துவதாற் பலங்குறையும் மௌனம் போகும்
அருந்தித்தான் பருகிடுவான் ருசியைக் காணான்
அமுதப்பால் குடித்தவனே அமர னாவான்
துருந்தித்தான் பசியறிவான் வாணி யானை
சோபையுறுஞ் சேணியனை விலக்கி யப்பால்
பொருந்தித்தான் திருந்தினவன் பொருந்தி நிற்கும்
பொக்கமதே யாசனமாம் யோகங் கண்டீர். 10

பாருலகி லான்மாவின் ஞானம் தேடப்
பலநூல்கள் கற்றறிந்தும் தெளிவில் லாமல்
நேரியலும் நதியதன் நீர் குளியார் தேத்து
நெட்டிநீர் கசிந்திடுவார் நெறியைக் காணார்
சீரியலும் பற்றற்ற நீரைக் காணார்
தேக்கி வந்து சிதறியநீர்த் தேக்க முண்பார்
ஆரறிவார் அடடாடா அடடா டாடா
அடயோகத் தவநிலைநிலை யதனைத் தானே. 11

இல்லறமே நல்லறமா மென்று சொன்னால்
இன்பமெனப் பள்ளியறைக் குள்ளாகாதே
தொல்லறமே துறவறமே தனது வண்ணம்
துறந்திட்டா பற்றறவே துறந்தி டாமல்
சொல்லறமே யுலகமெல்லாம் கண்ணின் ரூபம்
சொர்ணமய மாம்சொர்க்கம் சுகவை போகம்
கல்லறமே கனகமணிப் பூஷ ணங்கள்
கமலத்தைக் காத்திடுவான் பத்ம யோகி. 12

பெற்றவர்கள் தங்கடனைத் தீர்க்க வேண்டும்
உற்றவர்கள் உறுகதியைப் பார்க்க வேண்டும்
பற்றுவர வத்தனையு முடிக்க வேண்டும்
பற்றில்லாப் பாமரைக் காக்க வேண்டும்
செற்றபுலன் பொறியடக்கிச்சேர வேண்டும்
சித்தமுறச் சிவபூஜை செய்யத் தானே.
கற்றவர்க்கே பலயோகம கனியும் பாரே.
கல்லாதவர் யோகமெல்லாம் பொல்லா யோகம். 13

யுகமாறிப் போச்சுதடா கலியுகத்தில்
  யோகியவன் நிலைமாறிப் புரண்டு போவான்
சகமாறிப் போச்சுதடா சகத்தி லுள்ளோர்
  தமைமறந்தார் பொருள் நினைத்தே தவிக்க லுற்றார்
அகமாறிப் போச்சுதடா காமம் கோபம்
  அறுவகையாம் பேய்க்குணங்க ளதிக மாச்சே
புகழ்மாறிப் போச்சுதடா மனிதற் குள்ளே
  பூரணர்கள் மறைந்துள்ள ரவரைக் காணே. 14

காலநெறி யாதுரைப்பேன் கேளாய் கேளாய்
  காணவரு மாயிரமா வருடத் துள்ளே
பாலமடா வானத்துக கேற்ப பாதை
  பகனவெடி சுகனவெடி பண்ணு வார்கள்
சீலமுறும் வர்ணதர்மம் சிதைந்து போகும்
  சீச்சீச்சீ வரன்முறைகள் மாறிப் போகும்
கோலமுறுங் குவலயமே சட்ட திட்டம்
  கூறுமடா கொதிக்குமடா கோபம் தாபம். 15

தீராத புயல்களெல்லாம் தினமுண்டாகும்
  தீக்கங்கு எரிமலைகள் சிரிப்புக் கூடும்
தேராத நோய்களெலாம் தின முண்டாகும்
  திசைகலங்கும் பூகம்பத் திறமே சாடும்
நேரான நெறியெல்லாம் நடுங்கி யோடும்
  நெறியில்லா நெறியெல்லாம் நிறைந்தா டாடும்
போராகக் குருதிகொப் பளித்துப் பொங்கும்
  புகையாகப் புவனவளம் புதைந்து போகும். 16

தெய்வமெலாம் விண்ணாடிப் போகும் போகும்
  தீமையெலாம் மண்ணகத்தின் தெருக்கூத் தாகும்
உய்யுமுண்மை யுளத்துண்மை யோடிப் போகும்
  உலகவுண்மை விஞ்ஞானம் கூடிவேகும்
ஐயமில்லை யெனவகங்கா ரந்தான் துள்ளும்
  ஐயையோ அகிலமெலாம் கள்ளம் கள்ளம்
துய்யநெறி காட்டிநின்றார் சித்தர் சித்தர்
  தூலநெறி காட்டுகின்றா ரெத்தர் ரெத்தர். 17

விஞ்ஞான விதியெல்லாம் வேகம் வேகம்
  வேகமினல் தாமத்தின் வித்தை வித்தை
அஞ்ஞான விதியெல்லாம் போகம் போகம்
  அடடாடா கயிறறுந்த பொம்ம லாட்டம்
செய்ஞ்ஞானக் கதியெல்லா மரண வத்தின் 18

செயலன்றி வேறில்லை சென்மம் சென்மம்
மெய்யான விதியெல்லாம் யோகம் யோகம்
மின்னான சக்தியுடன் சாகம் சோகம்.

வித்தென்பான் முனையென்பான் மின்வீச் சென்பான்
வெப்பென்பான் காந்தத்தின் கப்பே யென்பான்
வித்தையடா விண்ணெல்லாம் சுழலும் மார்க்கம்
விந்தையடா ஆகர்ஷண வியப்பே யென்பான்
வெத்தறிவாம் கனியறியான் மேற்றோ லுண்பான்
விஞ்ஞானி யவனறிவைப் பழிக்க வில்லை
சித்தறிவான் சத்தறிவான் சித்தன் சித்தன்
சித்தத் திலேசிருட்டிச் சித்தங் காண்பான். 19

அடடாடா விஞ்ஞானி யறையக் கேளாய்
யாவைக்கும் காரணத்தை அறிவா யோநீ
அடடாடா வகிலாண்டக் கவர்ச்சி யேனோ?
அணுவுக்குள் மின்காந்த மமைந்த தேனோ?
கெடடாடா நேர்நிரையான் வின்க ளேனோ?
குவிந்திணைந்து பிரிந்தரனா யனமு மேனோ?
விடடா யிவையெல்லாம் மென்னே யென்னே!
விளக்கிடுவாய்க் களக்கமறச் சொன்னேன். 20

வெத்துலக விதியெல்லாம் வெப்பம் தட்பம்
விஞ்ஞான விதியெல்லாம் சேர்ப்பும் கூர்ப்பும்
செத்துலக விதியெல்லாம் யாதம் கூதம்
சீவனுடல் விதியெல்லாம் காமம் கோபம்
சத்துலக விதியெல்லாம் சகசம் சாந்தம்
தான்தானாத் தன்மயமாத் தழைவே தாந்தம்
சித்துலக விதிசத்தி னோடு சித்தாய்ச்
சேரனந்தத் தானந்தச் சீராம் வேராம. 21

வேரறியா வினைவறியும் விஞ்ஞானந்தான்
வேரறிந்தே விளையாடும் மெய்ஞ்ஞானந்தான்
சார்பறியுஞ் செயலறியும் விஞ்ஞானந்தான்
சார்ப்புதஞ் சாரமதே மெய்ஞ்ஞானந்தான்
ஈரறியு மீர்மையெலாம் விஞ்ஞானந்தான்
இருமையெலா மொருமையுறல் மெய்ஞ்ஞானந்தான்
பாரறியும் பேதநெறி விஞ்ஞானந்தான்
பரமறியும் போதநெறி மெய்ஞ்ஞானந்தான். 22

காமத்தை விட்டிடடா கலகத்தை வெட்டிடடா
  கருநொச்சிக் கவசத்தில் காமினியைக் கட்டிடடா
ஊமைக்கும் அத்தையடா உலகோர்க்கு நத்தையடா
  உரையெல்லாம் மித்தையடா உனக்கவளே வித்தையடா
சாமத்தைக் கண்டிடடா சர்மத்தை வென்றிடடா
  சகலத்தை யுந்தழுவும் சத்தியத்தில் நின்றிடடா
வாமத்தி யருளாலே வாதத்தி லேவெற்றி
  மண்ணேல்லாம் பொன்னாகும் மார்க்கத்தைக் கண்டிடடா. 23

மூலத்தின் கனலதனை மூட்டி மூட்டி
  மூதண்ட முப்பூவின் பாத்திரத்தில்
கீலத்தின் கீழ்நெல்லிச் சாற்றைக் காய்ச்சிக்
  கிறிகொண்ட சூதத்தில் நாதம் வாங்கிச்
சாலத்தான் நீர்மேலே நெருப்பைப் போட்டே
  சாரத்தான் மலைதாங்கிக் குள்ளே யோட்டி
ஆலத்தா னமுதைத்தான் விழுதை நாட்டி
  ஆறத்தா னமரத்தா னனைத்து மாமே. 24

வெப்பெல்லாம் தீர்ந்துவிடும் வித்தை கண்டாய்
  வினையெல்லாம் போக்கிவிடும் விறலே கண்டாய்
அப்பப்பா நவகோடி லிங்கம் தோன்றும்
  அவற்றின்மே லாடுகின்றா ளன்னை யன்னை
துப்பெல்லாம் துரிசெல்லாம் சுத்தி சுத்தி
  சொக்குமடா கைலாசச் சொர்க்க லிங்கம்
கப்பெல்லாம் நீங்குமடா காம தேனு
  கறக்குமடா காயத்ரிக் கனிவாம் க்ஷீரம். 25

திருவான சேறையடா பஞ்ச சாரம்
  திகழ்தெய் வமுஞ் சாரம் தேவிசாரம்
உருவான க்ஷேத்திரமும் சாரம் சாரம்
  உற்றதொரு புஷ்கரணி யதுவும் சாரம்
கருவான மானமதுவும் சாரம் சாரம்
  கண்ணான சாரமதைக் கண்டேன் கண்டேன்
குருவான பலசாரக் கோப்பும் கண்டேன்
  கோக்கனக மாஞ்சாரக் கொதிப்புங் கண்டேன். 26

சாரைக்கோட் டைக்குள்ளே சாரம் சாரம்
  சார்ந்தநவி சாரக்கற் பூரம் பூரம்
கூரைக்கோட் டைக்குள்ளே கோரம் கோரம்
  கொள்ளாமற் சிவயோனிக் குள்ளாம் வீரம்
வீரைக்கோட் டைக்குள்ளே விந்துப் பூவை 27

**வேதாந்த முப்பூவாய் விண்ணாம் தீரம்**
**காரைக்கோட் டைக்குள்ளே வந்த சித்தன்**
**கரையாட யண்டாண்டம் பூண்ட பத்தன்.**

**பத்தனடா சித்தனடா பரம யோகி**
**பார்பிழைக்க வேயிந்நூல் பகருகிறேன்**
**பித்தனடா பித்தியவள் சித்தத்தாலே**
**பேயன்யான் பேத்தலிவைப் பேணிப் பார்ப்பீர்**
**வித்தனடா வேதனடா வேதாந்தத்தின்**
**வித்தையுறும் வேதையெலாம் விரிவாச் சொன்னேன்**
**இத்ததையி லிந்நூலைப் போலே யில்லை**
**இதுகண்டார் வாதமுடன் வேதை கண்டார்.** **28**

# 33. தடங்கண் சித்தர் பாடல்கள்

### தங்கப் பா

அதிவெடி முழக்கி முரசுகள் முடுக்கி
  அலறிடும் உடுக்கைகள் துடிப்ப
விதிர்விதிர் குரலால் வெற்றுரை அலப்பி
  வீணிலோர் கல்லினைச் சுமந்தே
குதிகுதி என்று தெருவெலாம் குதிப்பார்
  குனிந்துவீழ்ந் துருகுவர் மாக்கள்
இதுகொலோ சமயம்? இதுகொலோ சமயம்?
  எண்ணவும் வெள்குமென் நெஞ்சே! 1

அருவருப் பூட்டும் ஐந்தலை, நாற்கை
  ஆனைபோல் வயிறுமுன் துருத்தும்
உருவினை இறைவன் எனப்பெயர் கூறி
  உருள் பெருந் தோனில் அமர்த்தி
இருபது நூறு மூடர்கள் கூடி
  இழுப்பதும் தரைவிழுந் தெழலும்
தெருவெலாம் நிகழும்; அது கொலோ சமயம்?
  தீங்குகண் டுழலுமென் நெஞ்சே! 2

எண்ணெயால், நீரால், பிசுபிசுக் கேறி
  இருண்டுபுன் ளாற்றமே விளைக்கும்
திண்ணிய கற்குத் திகழ்நகை பூட்டித்
  தெரியல்கள் பலப்பல சார்த்திக்
கண்ணினைக் கரிக்கும் கரும்புகை கிளப்பிக்
  கருமனப் பார்ப்புசெய் விரகுக்கு
எண்ணிலா மாக்கள் அடி, மிதி படுவர்
  இதுகொலோ, இதுகொலோ சமயம்? 3

அழகிய உடல்மேல் சாம்பலைப் பூசி
  அருவருப் பாக்கலும், மகளிர்
கொழுவிய குழலை மொட்டையாய் மழித்துக்
  குரங்கெனத் தோன்றலும், அறியா

மழலையர் கையிலுட் காவடி கொடுத்து
  மலையின் மேல் ஏற்றலும், இவைதாம்
வழிபடு முறையோ? இதுகொலோ சமயம்?
  மடமைகண் டிரங்குமென் நெஞ்சே. 4

நீட்டிய பல்லும் சினமடி வாயும்
  நிலைத்தவோர் கல்லுரு முன்னே
கூட்டமாய் மோதிக் குடிவெறித் தவர்போல்
  குதிப்பர் தீ வளர்த்ததில் மிதிப்பார்
ஆட்டினைத் துடிக்க வெட்டிவீழ்த் திடுவார்
  ஆங்கதன் உதிரமும் குடிப்பார்
காட்டில் வாழ் காலக் கூத்துகொல் சமயம்?
  கண்ணிலார்க் கிரங்குமென் நெஞ்சே! 5

உடுக்கையை அடித்தே ஒருவன்முன் செல்வான்
  ஒருவன்தீச் சட்டியும் கொள்வான்
எடுத்ததோர் தட்டில் பாம்புருத் தாங்கி
  இல்தொறும் சென்றுமுன் நிற்பார்
நடுக்கொடும் தொழுவார் நங்கையர், சிறுவர்,
  நல்குவர் காணிக்கை பலவும்
கொடுத்தநீ றணிவார் இதுகொலோ சமயம்?
  குருடருக் கிரங்குமென் நெஞ்சே! 6

வேப்பிலைக் கொத்தும், விரிதலை மயிரும்
  வெவ்விதின் மடித்திடு வாயும்
கூப்பிய கையும் கொண்டவள் ஒருத்தி
  குரங்கென ஆடுவள் குதிப்பாள்
நாற்புறம் நின்றே வணங்குவர் மாக்கள்
  நற்குறி கேட்டிட நிற்பார்
காப்பதோ வாழ்வை? இதுகொலோ சமயம்?
  கண்ணில்லார்க் கிரங்குமென் நெஞ்சே! 7

தாய்மொழி பேணார்; நாட்டினை நினையார்
  தம்கிளை, நண்பருக் கிரங்கார்
தூய்நல் அன்பால் உயிர்க்கெலாம் நெகிழார்
  துடிப்புறும் ஏழையர்க் கருளார்

போய்மலை ஏறி வெறுங்கருங் கற்கே
  பொன்முடி, முத்தணி புனைவார்
ஏய்ந்தபுன் மடமை இதுகொலோ சமயம்?
  ஏழையர்க் கிரங்குமென் நெஞ்சே? 8

பாலிலாச் சேய்கள், பசி, பணியாளர்
  பல்துயர் பெருமிந் நாட்டில்
பாலொடு தயிர், நெய், கனி, சுவைப் பாகு 9

பருப்பு நல் அடிசிலின் திரளை
நூலணி வார்தம் நொய்யையே நிரப்ப
நுழைத்தகல் உருவின் முன் படைத்தே
சாலவும் மகிழ்வார் இதுகொலோ சமயம்?
சழக்கினுக் கழலுமென் நெஞ்சே!

அன்பிலார் உயிர்கட் களியிலார்; தூய்மை
அகத்திலார்; ஒழுக்கமுமில்லார்
வன்பினால் பிறரை வருததுவர்; எனினும்
வகைபெற உடம்பெலாம் பூசி
முன்தொழுகையர்; முறைகளில் தவறார்
முழுகுவார் துறைதொறும் சென்றே!
நன்றுகொல் முரண்பாடு! இதுகொலோ சமயம்?
நடலையர்க் குடையுமென் நெஞ்சே! 10

மெய்யுணர் வெய்தித் தனைமுதல் உணர்ந்து
மெய்ம்மைகள் விளங்குதல் வேண்டும்
பொய்மிகு புலன்கள் கடந்து பேருண்மை
புரிதலே இறையுணர் வன்றோ!
செய்கையால், வழக்கால், அச்சத்தால், மடத்தால்
செய்பொருள் இறைஎனத் தொழுவார்?
உய்வரோ இவர்தாம்? இதுகொலோ சமயம்?
உணர்விலார்க் குழலுமென் நெஞ்சே! 11

## 34.காயக்கப்பல்

வெறும் கட்டாந்தரையிலே நின்றிருக்கும் கப்பலால் ஏதும் பயனுண்டா? அ∴து நீரில் இறங்கி மிதந்தால் அல்லவோ அதனுள் பயணம் செய்யும் பயன் கிடைக்கும்.

பஞ்சபூதப் பலகையைக் கப்பலாய்ச் சேர்ந்து கொடிக் கம்பத்தில் பாய்மரம் கட்டி நெஞ்சு, மனம், புத்தி, ஆங்காரச் சித்தம் இவைகளைக் கயிறாகச் சேர்த்து, ஐந்தெழுத்தை 'சிவாயநம' பாயாக விரித்து ஐம்புலன்களைச் சுக்கானாகக் கொண்டு இந்த உடலாகிய அகண்ட ரதம் போகுதடா பயலே! இதை நீர் கருணைக்கடலிலே தள்ளு; பரிபூரணம் எனும் சுக்கானால் வலி; திக்கு திசையெங்கும் களைப்புத் தெரியாமல் திருமந்திரம் சொல்லித் தள்ளு.

தந்தை, தாய், சுற்றம் முதலான சகலமும் துறந்து, பந்த பாசம் மறந்து, பதினாறு லோகமும் மறந்து, இந்தியர்கள் இரட்சித்த கப்பலிலே ஏகாந்தக் கடலிலே அந்திரமான அருளானந்த வெள்ளத்திலே காயக்கப்பலைத் தள்ளிப் பயணம் செய்து இறைவனைச் சந்திப்பாயாக என்று 'காயக்கப்பல்' பாடல் தெரிவிக்கின்றது.

சித்தர் பாடல் தொகுப்பிலே காணப்படும் இந்த அபூர்வ பாடல் தொகுப்பு யார் பாடியது என்பது தெரியவில்லை. ஒருசில நூல்கள் இதனைத் திருவள்ளுவ நாயனார் இயற்றியது என்று யூகமாகக் கூறினாலும் இது பிற்காலத்துச் சித்தர் பாடல் என்பது இதன் சொற்பொருள், நடையைக் கூர்ந்து நோக்கின் புலனாகும்.

சித்தர் பெயர் தெரியாவிடினும் சித்தர் பாடல் காயதத்துவம் உணர்த்துகின்றது.

ஏலேலோ ஏகரதம் சர்வரதம்
பிரமரதம் ஏலேலோ ஏலலிலோ.

பஞ்சபூதப் பலகை கப்பலாய்ச் சேர்த்து
பாங்கான ஓங்குமரம் பாய்மரம் கட்டி
நெஞ்சு மனம்புத்தி ஆங்காரஞ்சித்தம்
மானாபிமானங் கயிறாகச் சேர்த்து

ஐந்தெழத்தைக் கட்டி சாக்காகயேற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கானிருத்தி

நெஞ்சு கடாட்சத்தால் சீனிப்பாய் தூக்கி
சிவனுடைய திருப்பொருளை சிந்தையில் நினைந்து

தஞ்சலான வெள்ளத்தில் தானே அகண்டரதம் போகுதடா
ஏலேலோ ஏலேலோ.
களவையுங் கேள்வையுந் தள்ளுடா தள்ளு-
கருணைக்கடலிலே தள்ளுடா கப்பல்

நிற்குணந்தன்னிலே தள்ளுடா தள்ளு-
நிறைந்த பரிபூரணத்தால் தள்ளுடா கப்பல்
மூக்கணைமுன்றையுந் தள்ளுடா தள்ளு-
முப்பாழுக்கப்பாலே தள்ளுடா கப்பல்

திக்குதிசையெங்கும் தள்ளுடா தள்ளு
திருமந்திரஞ் சொல்லி தள்ளுடா கப்பல்
பக்கமுடன் கீழ்மேலும் தள்ளுடா தள்ளு-
பரவெளிக்கப்பாலே போகுதடா கப்பல் ஏலேலோ (ஏலேலோ)

தந்தை தாய் சுற்றமும் சகலமுமறந்து-
தாரம் சகோதரம் தானதும் மறந்து-
பந்தமும் நேசமும் பாசமும் மறந்து
பதினாலு லோகமும் தனையும் மறந்து-

இந்திரியர்கள் இரட்சித்த கப்பலிலேறி-
ஏகாந்தமான தொரு கடலிலே தள்ளி
அந்திரமான வெளி அருளானந்த வெள்ளத்தில்-
அழுந்து தையோ கப்பல் ஏலேலோ ஏலேலோ.